# பதினெண் கீழ்க்கணக்கு

பதிப்பு—ஆசிரியக் குழுவினரால்
பல பிரதிகளை ஒப்புநோக்கி, பரிசோதித்து
வெளியிடப் பெற்றது.




வெளியிடுவோர்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்,
சென்னை-600 098.

முதற் பதிப்பு — 1957

இரண்டாம் பதிப்பு—1981



## இப்பதிப்பு—

ஐம்பதாம் ஆண்டுகளின் இறுதிப் பகுதியில் திருவாளர் மர்ரே எஸ். ராஜம் அவர்களால் வெளியிடப் பெற்ற தொல் காப்பியம், பத்துப்பாட்டு, எட்டுத் தொகை நூல்கள், பதினெண் கீழ்க் கணக்கு, பாட்டும் தொகையும் ஆகிய நூல்களை சங்க இலக்கியங்கள் என்னும் தலைப்பில் பன்னிரெண்டு பாகங் கள் கொண்ட தொகுதியாக "ஆஃப் செட்" அச்சமைப்பில் வெளியிடுகிறோம்.

தமிழில் பெரும் புலமை பெற்ற அறிஞர்களால் ஒப்புநோக்கி, மிகுந்த கவனத்துடன் பிழையற்ற முறையில் பதிப்பிக்கப் பெற்றவை இந்நூல்கள்.

உரையின் துணையின்றியே விளங்கிக் கொள்ளும் வகையில் பாடல்கள் சந்தி பிரித்துக் கொடுத்திருப்பதும், அவற்றில் நிறுத்தற் குறியீடுகளை மேற்கொண்டி ருப்பதும் இப்பதிப்புகளின் சிறப்பு. இருப்பினும், இத்தொகுதியின் பன்னி ரெண்டாவது பகுதியான "பாட்டும் தொகையும்" என்னும் நூலில் அரிய சொற்களுக்குப் பொருளும் தரப்பட் டுள்ளது.

—நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்

அச்சிட்டோர் :

நியூ செஞ்சுரி பிரிண்டர்ஸ்,

சென்னை-600 098.

# உள்ளுறை


| | | |
|---|---|---|
| பதிப்புரை | ... | 5-12 |
| திருக்குறள் | ... | 13-112 |
| நாலடியார் | ... | 113-168 |
| பழமொழி | ... | 169-224 |
| நான்மணிக்கடிகை | ... | 225-240 |
| திரிகடுகம் | ... | 241-256 |
| சிறுபஞ்சமூலம் | ... | 257-272 |
| ஆசாரக்கோவை | ... | 273-286 |
| ஏலாதி | ... | 287-300 |
| இன்னா நாற்பது | ... | 301-308 |
| இனியவை நாற்பது | ... | 309-316 |
| முதுமொழிக் காஞ்சி | ... | 317-322 |
| திணைமாலை நூற்றைம்பது | ... | 323-350 |
| ஐந்திணை எழுபது | ... | 351-362 |
| ஐந்திணை ஐம்பது | ... | 363-374 |
| திணைமொழி ஐம்பது | ... | 375-384 |
| கைந்நிலை | ... | 385-396 |
| கார் நாற்பது | ... | 397-404 |
| களவழி நாற்பது | ... | 405-416 |
| பாடல் முதற் குறிப்பு அகராதி | ... | 417-451 |

# பதினெண் கீழ்க்கணக்கு

## பதிப்புரை

பண்டை இலக்கியங்களாகிய பாட்டு தொகைகளை அடுத்து வைத்துப் போற்றப் பெறும் நூல்கள் பதினெண் கீழ்க்கணக்கு. தமிழ்விடு தூது,

—மூத்தோர்கள்
பாடியருள் பத்துப் பாட்டும், எட்டுத் தொகையும்,
கேடு இல் பதினெட்டுக் கீழ்க்கணக்கும் *(56)*

என்று இம் மூன்று தொகுதி நூல்களையும் அடைவே குறித்துள்ளது. பதினெண் கீழ்க்கணக்கு என்னும் வழக்கினை மயிலைநாதரும் (நன். 387), பேராசிரியரும் (தொல். செய். 470, 547), நச்சினார்க்கினியரும் (தொல். செய். 235), தத்தம் உரை நூல்களில் குறித்துள்ளனர். என் குறிப்பிடாது, 'கீழ்க்கணக்கு' என்றும் நச்சினார்க்கினியர் ஒரு சில இடங்களில் சுட்டியுள்ளார். (தொல். செய்யு. 149, 158). எனவே, கீழ்க் கணக்கு, பதினெண் கீழ்க்கணக்கு என்னும் வழக்குக்கள் பழமையானவை என்பதும் சுமார் கி.பி. 13, 14-ஆம் நூற்றாண்டு முதற்கொண்டே பெருவழக்காய் உள்ளன என்பதும் புலனாம்.

கீழ்க்கணக்கு என்பது தமிழகத்தில் வழங்கிய ஒரு வகைக் கணக்கு முறையைக் குறித்ததாதல் வேண்டும். கீழ் என்பது கொண்டு சிறு கணக்கு, கைக்கணக்கு என்று இதனைக் குறிக்கலாம். திருநாவுக்கரசர்,

தொழுது தூ மலர் தூவித் துதித்துநின்று
அழுது காமுற்று அரற்றுகின்றாரையும்,
பொழுது போக்கிப் புறக்கணிப்பாரையும்,
எழுதும் கீழ்க்கணக்கு இன்னம்பர் ஈசனே *(5, 21, 8)*

என்று கூறுவது கொண்டு, கீழ்க்கணக்கின் தன்மையை ஒருவாறு ஊகிக்கலாம்.

பன்னிரு பாட்டியலில் கீழ்க்கணக்கு நூலின் இலக்கணம் பற்றி இரண்டு சூத்திரங்கள் உள்ளன. அவை வருமாறு:

அகவலும் கலிப்பாவும் பரிபாடலும்
பதிற்றைந்து ஆதி பதிற்றைம்பது ஈறாக
மிகுத்துடன் தொகுப்பன மேற்கணக்கு எனவும்,
வெள்ளைத் தொகையும் அவ்வகை எண் பெறின்
எள்ளறு கீழ்க்கணக்கு எனவும் கொளலே. *(346)*

அடி நிமிர்வு இல்லாச் செய்யுள்-தொகுதி
அறம் பொருள் இன்பம் அடுக்கி அவ்வத்
திறம்பட வருவது கீழ்க்கணக்கு ஆகும். *(348)*

இவற்றிலிருந்து, அடி நிமிர்வு இல்லாத வெண்பாக்களினால், அறம் பொருள் இன்பம் பற்றி, ஐம்பது முதல் ஐந்நூறு ஈறாகப் பாடப் பெறுவன கீழ்க்கணக்கு எனப் பெயர் பெறுதற்குரியனவாம் என்பது புலப்படும். ஐம்பது, ஐந்நூறு என்னும் சிற்றெல்லை பேரெல்லைகளில் பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் அனைத்தும் அடங்கா. எனினும், அடி நிமிர்தல் இன்றிக் கீழ்ப்பட்ட கணக்கில் வெண்பாவினால் பாடப் பெறுதலினால் கீழ்க்கணக்கு என்று கொள்ளப்படுகின்றன என்பது கீழ்க்கணக்கு நூல்களின் இயல் புக்கு ஏற்றதாகும்.

கீழ்க்கணக்கு நூல்களைத் தொல்காப்பியர் கூறும் 'அம்மை' என்னும் வனப்பின் பாற்பட்டனவாகப் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் காட்டியுள்ளனர்.

> சின்மென் மொழியால் தாய பனுவலின்
> அம்மை தானே அடி நிமிர்பு இன்றே (தொல். செய். 235)

என்பது அம்மை வனப்பின் இலக்கணம். சில எழுத்துக்களான் வந்த என்னுஞ் சுருங்கிய சொற்களால், அடி நிமிர்வு இல்லாததாய்த் தாய பனுவலின் இலக்கணத் தோடு அமைந்தது அம்மையாகும் என்பது இதன் பொருள். 'தாய பனுவலின்' என்பதற்கு விளக்கம் தர வந்த இடத்து, நச்சினார்க்கினியரும் பேராசிரியரும் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களை உதாரணம் காட்டி எழுதியுள்ள விளக்கத்தாலும் கீழ்க்கணக்கு நூல்களின் இயல்புகள் புலப்படுகின்றன.

பதினெண் கீழ்க்கணக்கில் அடங்கிய பதினெட்டு நூல்களையும்,

> நாலடி, நான்மணி, நானாற்பது, ஐந்திணை, முப்-
> பால், கடுகம், கோவை, பழமொழி, மாமூலம்,
> இன்னிலைய காஞ்சியுடன், ஏலாதி, என்பவும்,
> கைந்நிலையும், ஆம் கீழ்க்கணக்கு

என வரும் தனிப்பாடல் தெரிவிக்கின்றது. இப் பாடல்ல் அடங்கிய நூல்களைக் குறித்து, 1885-ஆம் ஆண்டு தொடங்கி, சி.வை. தாமோதரம் பிள்ளை, கோ. ஸ்ரீநிவாஸ ராகவாசாரியார், முதலியோர் ஆராய்ந்து எழுதியதன் பயனாக இப்பொழுது தெளிவு ஏற்பட்டுள்ளது. முப்பால் என்பது திருக்குறளைக் குறித்தது என்பதும், இன்னிலை என்ற பெயரில் வெளிவந்துள்ள நூல் பதினெண் கீழ்க்கணக்கைச் சார்ந்தது அன்று என்பதும், ஐந்திணை நூல்களுள் ஒன்றாகக் கைந்நிலை என்ற நூல் உள்ளது என்பதும். ஆராய்ச்சியாளர்களால் துணியப்பட்ட முடிவுகள்.

வேம்பத்தூர் முத்து. வேங்கடசுப்ப பாரதியார் சகம் 1771-இல்(கி.பி. 1849)தாம் இயற்றிய பிரபந்த தீபிகை என்னும் நூலில் பதினெட்டு நூல்களின் பெயரையும், அவற்றுள் அடங்கியுள்ள பாடல்-தொகையையும் குறித்துள்ளார். அது வருமாறு:

> ஈர்-ஒன்பதின் கீழ்க் கணக்கினுட் படும் வகை—
> இயம்பு நாலடி நானூறும்;
> இன்னாமை நாற்பது; நான்மணிக்கடிகை சதம்;
> இனிய நாற்பான்; கார் அதே;
> ஆரு களவழி நாற்பது; ஐந்திணையும் ஐம்பதும்,
> ஐம்பதுடன் இருபானும் ஆம்;
> அலகு இல் ஆசாரக்கோவை சதம்; திரிகடுகம்
> ஐ-இருபது ஆகும் என்பர்;
> சீருறும் பழமொழிகள் நானூறு; நூறதாம்
> சிறுபஞ்ச மூலம்; நூறு
> சேர் முதுமொழிக்காஞ்சி; ஏலாதி என்பதாம்;
> சிறு கைந்நிலை அறுபது ஆகும்;
> வாரி திணைமாலை நூற்றைம்பதாம்; திணைமொழி
> வழுத்து ஐம்பதாம்; வள்ளுவ
> மாலை;—ஈர்-ஒன்பதாய்ச் சாற்று பிரபந்தம்
> வழுத்துவர்கள் புலவோர்களே.

இப்பாடலிலிருந்து திருக்குறள் 'வள்ளுவமாலை' எனவும் வழங்கப்பட்டிருக்கிறது என்பது தெரிகிறது. எல்லா நூல்களுக்கும் பாடல்-தொகை கூறியவர் திருக்குறளுக்கு மட்டும் கூறாது விடுத்தது அது யாவர்க்கும் தெரிந்த நூலாய் எங்கும் பெருக வழங்கியமை பற்றிப் போலும்!

இப் பாடலில் சுட்டியுள்ள பாடல்-தொகை கீழ்க்கணக்குப் பழைய ஏடு ஒன்றின் இறுதியிலுள்ள குறிப்பினாலும் உண்மையாதல் தெளியலாம். சேது ஸம்ஸ்தான மகா வித்துவான் ரா. இராகவையங்கார் பதிப்பித்த திணைமாலை நூற்றைம்பதின் முகவுரையில் தந்துள்ள இந்த ஏட்டுப் பிரதிக் குறிப்பு வருமாறு:

பதினெண் கீழ்க்கணக்கும் ஆகப் பாட்டு ௩௨௫0.

இத் தொகைக்கு வகை வருமாறு:

| | | |
|---|---|---|
| ௧. | சைந முநிவர் நாலடி | ௪00 |
| ௨. | விளம்பி நாகனார் நான்மணி | ௧00 |
| ௩. | கபிலர் இன்னா | ௪0 |
| ௪. | பூதஞ்சேந்தனார் இனியவை | ௪0 |
| ௫. | மதுரைக் கண்ணங் கூத்தனார் கார் | ௪0 |
| ௬. | பொய்கையார் களவழி | ௪0 |
| ௭. | மாறன் பொறையனார் ஐந்திணை | ௫0 |
| ௮. | மூவாதியார் ஐந்திணை | ௭0 |
| ௯. | சாத்தந்தையார் மகனார் கண்ணம்பூதனார் திணைமொழி | ௫0 |
| ௧0. | மதுரைத் தமிழாசிரியர் மாக்காயனார் மாணாக்கர் கணிமேதாவியார் திணைமாலை | ௧௫0 |
| ௧௧. | திருவள்ளுவர் முப்பால் | ௧௩௩0 |
| ௧௨. | நல்லாதனார் திரிகடுகம் | ௧00 |
| ௧௩. | பெருவாயின் முள்ளியார் ஆசாரக்கோவை | ௧00 |
| ௧௪. | முன்றுறையரையனார் பழமொழி | ௪00 |
| ௧௫. | மாக்காரியாசான் சிறுபஞ்சமூலம் | ௧00 |
| ௧௬. | மதுரைக் கூடலூர் கிழார் முதுமொழிக் காஞ்சி | ௧00 |
| ௧௭. | மதுரைத் தமிழாசிரியர் மாக்காயனார் மாணாக்கர் கணிமேதாவியார் ஏலாதி | ௮0 |
| ௧௮. | மாறோக்கத்து முள்ளி நாட்டு நல்லூர்க் காவிதியார் மகனார் புல்லங்காடனார் கைந்நிலை | ௬0 |
| | | ௩௨௫0 |

இக் குறிப்புக்களின்படி பதினெண் கீழ்க்கணக்கு 3250 பாடல்களை உடையது என்பது விளங்கும். இங்ஙனமாகவும், நான்மணிக்கடிகை, சிறுபஞ்சமூலம், திணைமாலை நூற்றைம்பது, களவழி நாற்பது, பழமொழி நூல்களில் குறித்த அளவினும் மிகுதியான பாடல்கள் உள. பழமொழி, களவழி முதலிய சில நூல்களில் பிரதிகளில் காணப் பெறாத பாடல்கள் இந் நூற் பெயர்களோடு புறத்திரட்டில் தரப் பெற்றுள்ளன. இவ்வாறு கண்ட மிகுதிப் பாடல்கள், சில நூல்களுக்கு உரிய சிறப்புப் பாயிரம் போன்ற தனிப் பாடல்கள் முதலியவற்றை அந்தந்த நூல்களின் பின்-இணைப்பில் காணலாம்.

மேலே காட்டப் பெற்ற தொகைக் குறிப்பில் திருக்குறளைத் தவிர ஏனையவற்றிற்குக் கடவுள் வாழ்த்துப் பாடல்கள் சேர்க்கப் பெறவில்லை. நாலடியார், நான்மணிக் கடிகை, திரிகடுகம், சிறுபஞ்சமூலம், ஏலாதி, இன்னா நாற்பது, இனியவை நாற்பது, ஐந்திணை எழுபது நூல்களுக்குக் கடவுள் வாழ்த்துப் பாடல்கள் உள்ளன. ஐந்திணை நூல்களில் ஐந்திணை எழுபதிற்கு மட்டும் கடவுள் வாழ்த்து அமைந்திருத்தலும், அதுவும்

விநாயகரைக் குறித்த வணக்கமாயிருத்தலும் ஐயுறற்கு ஏதுவாயுள்ளன. நீதி பற்றிய நூல்களில் பழமொழி, ஆசாரக்கோவை, முதுமொழிக் காஞ்சி ஒழிந்த ஏனைய நூல்களுக்குக் கடவுள் வாழ்த்து உள்ளமையும் சிந்தித்தற்குரியது.

திணைமாலை நூற்றைம்பது முகவுரையில் காணும் ஏட்டுக் குறிப்பில், 'நாலடி நான்மணி' எனத் தொடங்கும் தனிப்பாட்டில் காணும் அடைவிலேயே நூற் பெயர்கள் தரப்பெற்றுள்ளன. ஆனால், பிரபந்த தீபிகைச் செய்யுளில் நூல்களின் வரிசை மாறு பட்டுள்ளது. பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை கீழ்க்கணக்கு நூல்களின் காலத்தை ஒருவாறு அறுதியிட்டு, உத்தேசமாகக் கால அடைவில் ஒரு வரிசை முறையைத் தந்துள்ளார். அது வருமாறு:

| | | |
|---|---|---|
| கி.பி. 600 | முப்பால் | |
| கி.பி.700-750 | நாலடியார்<br>திரிகடுகம் | நான்மணிக்கடிகை<br>பழமொழி |
| கி.பி. 750-800 | இன்னா நாற்பது<br>ஐந்திணை ஐம்பது<br>ஐந்திணை எழுபது | |
| கி.பி. 800-850 | திணைமொழி ஐம்பது<br>கார் நாற்பது<br>சிறுபஞ்சமூலம்<br>ஏலாதி<br>திணைமாலை நூற்றைம்பது | கைந்நிலை<br>இனியவை நாற்பது<br>களவழி நாற்பது<br>முதுமொழிக் காஞ்சி<br>ஆசாரக்கோவை |

எனவே, தனிப் பாடலில் குறித்த வரிசை முறை நூல்களின் தோற்றம் பற்றியோ அல்லது பிற ஏதுக்கள் பற்றியோ அமைந்த வரிசை முறை அன்று என்பதும், நினைவில் வைத்துக்கொள்ளுதற்குச் சாதகமாகப் பாடப்பெற்ற ஒரு பாடலே என்பதும், விளங்கும். இங்ஙனமாகவே, பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் எந்த வரிசை முறையில் அமைந்தன என்று துணியக்கூடவில்லை. இப் பதிப்புக்குப் பயன்படுத்தப் பெற்ற மிகப் பல ஏடுகளில் ஒன்றேனும் இப் பதினெட்டு நூல்களையும் ஒன்றாகப் பெற்றிருக்க வில்லை.

இந்தப் பதிப்பில், பதினெட்டு நூல்களும் பொருள் பற்றி நீதி, அகம், புறம், என மூன்று கூறாகப் பகுக்கப்பெற்று, ஒவ்வொரு பகுதியிலும் மிகுதியான பாடல்களை யுடைய நூல் முதலிற் கொள்ளப்பட்டு, ஏனையவும் தொகை எண்களின் இறங்கு வரிசையில் அமைத்துக்கொள்ளப் பெற்றன. ஒரே எண் தொகை பெற்ற நூல்கள் அவற்றின் தகுதி, பொருள் இயைபு, முதலியன பற்றி முன்பின்னாகக் கொள்ளப் பெற்றன. பதினெண் கீழ்க்கணக்கில் நீதி நூல்கள் பதினொன்று; அகப் பொருள் பற்றிய நூல்கள் ஆறு; புறப் பொருள் பற்றிய நூல் களவழி நாற்பது ஒன்றே.

நீதி நூல்களுள் திருக்குறள் பாடல்-தொகையில் பேரெல்லை உடைத்தா யிருத்தலோடு அவற்றுள் தலைசிறந்தும் விளங்குவது ஆதலின், முதற்கண் அமைக்கப் பெற்றது. நாலடியாரும் பழமொழியும் நானூறு பாடல்களை உடையன. இவற்றுள் நாலடியார் திருக்குறளோடு மிக நெருங்கிய தொடர்புடையது ஆதலின், திருக்குறளை அடுத்து நாலடியாரும், அதன் பின்னர்ப் பழமொழியும் மேற் கொள்ளப் பெற்றன. நூறு செய்யுட்களையுடைய நூல்கள் நான்மணிக்கடிகை, திரிகடுகம், சிறுபஞ்சமூலம், ஆசாரக்கோவை என்ற நான்குமாம். இவற்றுள் பாடல் தோறும் நான்கு பொருள்களை உரைக்கும் நான்மணி நாலடியாரோடு பெயர் ஒற்றுமை யுடைமையானும், நூறு பாடல்களையுடைய ஏனைய மூன்று நூல்களினும் சிறந்த முறையில் நீதிகளை வகுத்துள்ளமையினாலும் நான்மணிக்கடிகை முதலில் தரப்

பெற்றது. இதன்பின், திரிகடுகம், சிறுபஞ்சமூலம் என்ற இரண்டும் கொள்ளப் பெற்றன; இவை மருந்தின் பெயர்களைப் பெற்றுள்ளதோடு, திரிகடுகம் மூன்று பொருளும் சிறுபஞ்சமூலம் ஐந்து பொருளும் பாடல்தோறும் கூறுகின்றன. அறங்களை எடுத்துரைக்கும் வகையில் இரண்டினும் திரிகடுகப் பாடல்கள் சிறந்த அமைப்பு முறையை மேற்கொண்டுள்ளன. ஆசாரக்கோவை ஒரு மொழிபெயர்ப்பு நூல் என்று கூறத்தக்க வகையில் வடமொழி ஸ்மிருதிக் கருத்துக்களைப் பின்பற்றி அமைந்தது ஆதலின், நூறு பாடல்களைக் கொண்ட கீழ்க்கணக்கு நூல்களில் இறுதியாக வைக்கப் பெற்றது. அடுத்து வரும் ஏலாதி பெயரினாலும் நூல் அமைப்பினாலும் சிறுபஞ்ச மூலத்தோடு இயைபுடையதாயினும், எண்பது பாடல்களை உடைமையால், நூறு பாடல்களைக் கொண்ட நூல்களின் பின் அடைவுபடுத்தப் பெற்றது. இதன் பின்னர் நாற்பது பாடல்களை உடைய இன்னா நாற்பது, இனியவை நாற்பது இரண்டும் கொள்ளப் பெற்றன. இவ்விரண்டினும் இன்னா நாற்பது இனியவை நாற்பதிற்கு முன் தோன்றியது என்பது ஆராய்ச்சியாளர் துணிபு. நீதி நூல் வரிசையில் இறுதியாக அமைந்துள்ளது முதுமொழிக் காஞ்சி. இது நூறு முதுமொழிகளை உள்ளடக்கிய போதிலும், அவை பத்துப்பத்தாக வகுக்கப் பெற்றுள்ளமையாலும், பப்பத்து முதுமொழிகள் ஒரே வகையான முடிவைப் பெறுதலினாலும், 'முதுமொழிக் காஞ்சிப் பத்து' என்றே இந் நூற் பெயர் சில பிரதிகளில் உள்ளமையினாலும், இந் நூல் இறுதியாக அமைக்கப்பெற்றது.

நீதி நூல்களை அடுத்து அகப்பொருள் நூல்கள் ஆறும் அமைந்துள்ளன. இந் நூல்களும் பாடல்-தொகை அளவு கொண்டு முறைப்படுத்தப் பெற்றன. முதலில் முறையே நூற்றைம்பது, எழுபது, பாடல்களையுடைய திணைமாலை நூற்றைம்பதும், ஐந்திணை எழுபதும்; அவற்றின் பின்னர், ஐம்பது ஐம்பது பாடல்களையுடைய ஐந்திணை ஐம்பதும் திணைமொழி ஐம்பதும் கொள்ளப்பெற்றன. ஐம்பது பாடல்களையுடைய இந்த இரண்டு நூல்களில் ஐந்திணை ஐம்பது ஐந்திணை எழுபதோடு நெருங்கிய பெயர் ஒற்றுமையுடைமையின் முதலில் கொள்ளப்பெற்றது. அடுத்து அமைக்கப் பெற்ற கைந்நிலை அறுபது பாடல்களை உடைமையினால் ஐந்திணை எழுபதினை அடுத்து வர வேண்டுவதாயினும், இந் நூலில் இப்பொழுது சிதைவின்றிக் கிடைப்பன 42 பாடல் களேயாதலின், சிதைவு பட்டுள்ள இந் நூல் ஐந்திணை நூல்களின் வரிசையில் இறுதியாக அமைக்கப் பெற்றது. இதன் பின்னர் வரும் கார் நாற்பது முல்லைத் திணைக்குரிய கார்காலம் பற்றிப் பாடப் பெறுவதனாலும், நாற்பது பாடல்கள் அடங்கியுள்ளமையி னாலும் ஐந்திணை ஒழுக்கம் பற்றிய அகப் பொருள் நூல் வரிசையில் இறுதியாக இணைக்கப்பெற்றது. கீழ்க்கணக்கு நூல்களுள் இறுதியாக, அமைக்கப் பெற்றது களவழி நாற்பது. இது புறப்பொருள் பற்றிய நூலாதல் அன்றியும், காலம் பற்றித் தோன்றிய கார் நாற்பதோடு நெருங்கிய தொடர்புமுடையது. எனவே, அகப் பொருள் பற்றிய நூல்களின் பின்னர், புறப்பொருள் பற்றிய இந் நூல் இடம் பெறுவ தாயிற்று.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் சிலவற்றைச் சங்கம் மருவிய நூல்கள் என அந் நூல்களின் அச்சுப் பிரதிகளில் குறித்துள்ளனா. கீழ்க்கணக்கு ஏடு ஒன்றில் காணும்,

> மாப்புலவர் எல்லாரும் மாக்கூடற்கண் இருந்து,
> பாற்படுத்த தென்தமிழின் பாநான்கின்—வாய்ப்புடைத்தாய்ப்
> பண்பு ஆய்ந்து உரைத்த பதினெட்டுக் கீழ்க்கணக்கும்
> வெண்பாவின்பால் உரைத்தார் மிக்கு

என வரும் தனிப்பாடலும் மதுரையில் இருந்த புலவர்களால் ஆக்கப் பெற்றவை கீழ்க்கணக்கு நூல்கள் என்பதைச் சுட்டுகின்றது.

திரிகடுகம் என்னும் திகழ் தமிழ்ச் சங்கம்
மருவு நல்லாதன் மருந்து

என்று திரிகடுக நூலின் பாயிரப்பாட்டு கூறுகிறது. இப் பாடல்களில் சுட்டப்பெறும் சங்கம் பாட்டும் தொகையும் தொகுக்கப் பெற்ற சங்கம் என்று கூறுவதற்கு இல்லை.

பொதுவாக நோக்குமிடத்து, பாட்டு தொகைகள் தோன்றிய சூழ்நிலையும், அந் நூல்களில் காணப்பெறும் பழக்க வழக்கங்களும் பதினெண் கீழ்க்கணக்கினும் வேறுபட்டவை. முக்கியமாகச் சங்கப் பாடல்களில் மிகுதியாகப் பேசப்பெறுகின்ற ஊனுண்டல், கள்ளுண்டல், பரத்தையருடன் கூடி வாழ்தல், முதலியவற்றைக் கீழ்க்கணக்கு நூல்கள் கடிந்து உரைக்கின்றன. எனவே, கீழ்க்கணக்கு நூல்கள் தோன்றிய காலத்துச் சமுதாயச் சூழ்நிலை சங்க காலத்திற்குப் பெரிதும் வேறுபட்டது என்பது போதரும்.

சங்கப் புலவர் பெயர்களில் கபிலர், பொய்கையார் என்னும் இருவர் பெயர் தளே கீழ்க்கணக்கு நூல்களில் வந்துள்ளன. இவ் இருவரும் சங்கப் புலவரினும் வேறு பட்டவர் என்பதை இவர்கள் பாடிய இன்னு நாற்பது, களவழி நாற்பது நூல்களுக் குரிய முகவுரைப் பகுதியில் காணலாம்.

பதினெண் கீழ்க்கணக்கு நூல் ஆசிரியர்களைப் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் 'பிற் சான்றோர்' என்று குறிப்பிடுகின்றனர் (தொல். செய்யு. 158). 'ஒன்றே மற்றும் செவிலிக்குரித்தே' (தொல் செய்யு. 175) என்ற செய்யுளியல் சூத்திர உரையில், நச்சினார்க்கினியர், 'செம் முகச் செவிலியர் பொய்ந் நொடி பகர. . . . முகத்தவை மொழியவும் ஒல்லாள்' (நெடுநல். 153-156) என வரும் நெடுநல் வாடை அடிகளை எடுத்துக்காட்டி, 'என்றார் பாட்டினுள்' என்று கூறி, 'பிற் சான்றோரும் செம்முகச் செவிலியர் பொய்ந் நொடி பகர என்றார்' என்றும் எழுதுகின்றார். இதனால், பிற் சான்றோர் பாட்டு தொகைகளைப் பாடியோருக்குப் பிற்பட்டவர் என்பது தெளிவாம்.

சங்க நூற கருத்துக்களைக் கீழ்க்கணக்கு நூல்களில் எடுத்தாளுகின்றனர். அன்றியும், இதில் வரும் ஐந்திணை நூல்கள் எல்லாம் சங்கத்துச் சான்றோரின் அகப்பாடல்களில் தோய்ந்த அனுபவ முதிர்ச்சியினால் எழுந்தனவேயாம். இந் நூல்களுக்கு வித்தாய் விளங்குவன சங்கப் பெரு நூல்களே. பழமொழி நூல் பாரி, பேகன் முதலியோரைப் பற்றிய செய்திகளைப் பண்டு நிகழ்ந்தனவாக எடுத்து மொழிகின்றது.

மேலும், சங்க காலத்தில் நால் வகைப் பா வழக்கு இருந்த போதிலும், நூல் வழக்கில் ஆசிரியப்பா, வஞ்சிப்பா, கலிப்பா, பரிபாடல் என்பனவே பெரிதும் மேற் கொள்ளப்பெற்றன. வெண்பா யாப்பு நூல் வழக்கில் சற்றுப் பிற்பட்டே பிரபலம் அடைந்திருக்கக்கூடும். பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் எல்லாம் வெண்பா யாப்பில் உள்ளன. அன்றியும், சொல்லாட்சி, இலக்கண மரபுகள் முதலியவற்றிலும் கீழ்க் கணக்கு நூல்கள் சங்க நூல்களினும் வளர்ச்சி பெற்ற ஒரு காலப் பகுதியைச் சார்ந்தன வாகவே எண்ண இடமுண்டு. வடசொல் ஆட்சி கீழ்க்கணக்கு நூல் களில் மிகுதியா யிருத்தலும் சிந்தித்தற்குரியது.

கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றாகிய நாலடியாரில் குறிக்கப்பெறும் முத்தரையர் என்பார் கி.பி. 7-ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டவர் என்பது ஆராய்ச்சியாளர் துணிபு. கீழ்க்கணக்கு நூல்கள் சிலவற்றிற்கும் சிலப்பதிகாரம், மணிமேகலை, சிந்தா மணி, பெருங்கதை நூல்களுக்கும் சிற்சில இயைபுகள் உள்ளன. கீழ்க்கணக்கு நூல்களில் பயின்றுவரும் சொற்கள், வேறு சில மரபுகள் முதலியவற்றை மேற்குறித்த காவியங்களில் காணலாம். எனவே, கீழ்க்கணக்கு நூல்கள் சங்க காலத்திற்குப் பின்னும் காவிய காலத்திற்கு முன்னும் உள்ள காலப் பகுதியில் தோன்றியனவாகலாம். இவற்றுள் காலத்தால் முந்தி வைத்து எண்ணுதற்குரியது திருக்குறள். எல்லா

வற்றிற்கும் இறுதியாகத் தோன்றிய நூல் ஆசாரக் கோவையாக இருக்கலாம். ஏனைய வெல்லாம், இவ் இரண்டிற்கும் இடைப்பட்டன ஆகலாம்.

கீழ்க்கணக்கு நூல்களுள் சாதி சமய வேறுபாடு இன்றிப் போற்றப் பெற்று வந்துள்ள நூல் திருக்குறள் ஒன்றே. இதன் சொல்லையும், தொடரையும், பொருளையும் எடுத்தாளாதவர் இடைக்காலத்திலும் பிற்காலத்திலும் எவரும் இல்லை என்னலாம். பல குறள் மணிகளைத் தம் பாடல்களோடு ஒன்ற வைத்து இழைத்துப் பொதிந்து கொண்டவரும் பலரே. இதற்கு அடுத்தபடியாக நாலடியார், பழமொழி, திரிகடுகம், நான்மணிக்கடிகை ஆகியவற்றை அதிகமாகப் போற்றியுள்ளனர் என்று கூறலாம். புறத்திரட்டு என்னும் நூலைத் தொகுத்தவர், பழமொழி (319), நாலடியார் (212), திரிகடுகம் (53), நான்மணிக்கடிகை (45), சிறுபஞ்சமூலம் (37), ஆசாரக் கோவை (27), ஏலாதி (21), களவழி நாற்பது (10), இன்னா நாற்பது (5), இனியவை நாற்பது (2) என்னும் நூல்களிலிருந்து பாடல்களைத் தேர்ந்தெடுத்துள்ளனர். இவர் பழமொழி யில் 319-பாடல்களும் நாலடியாரில் 212-பாடல்களும் தேர்ந்துள்ளமை கவனிக்கத் தக்கது. தொல்காப்பிய உரைகாரர்களாகிய இளம்பூரணர், நச்சினார்க்கினியர், பேராசிரியர் முதலியோரும், நன்னூலின் பழைய உரைகாரராகிய மயிலைநாதரும், வீரசோழியம், யாப்பருங்கலம் முதலிய நூல்களின் உரையாசிரியர்களும் கீழ்க்கணக்குப் பாடல்களை மேற்கோளாக அங்கங்கே எடுத்தாண்டுள்ளனர். ஆகவே, கீழ்க்கணக்கு நூல்கள் புலவர் பெருமக்களாலும், உரையாசிரியர்களாலும் போற்றப்பெற்றுப் பெருஞ் சிறப்பு எய்தி விளங்கியமை புலனும்.

இந் நூல்களுக்கு உரை வகுக்கும் முயற்சியிலும் அறிஞர் பலர் ஈடுபட்டு வந்துள் ளனர். திருக்குறளுக்குத் தருமர் முதலிய பதின்மர் உரை வகுத்தனர் என்பர். அவற்றுள் இறந்துபட்டன போக, மணக்குடவர், காளிங்கர், பரிப்பெருமாள், பரிதியார், பரிமேலழகர் ஆகியோரது உரைகள் அச்சிடப் பெற்றுள்ளன. இவற்றுள் பரிமேலழகர் உரையே கற்றோராலும் மற்றோராலும் விரும்பிக் கற்கப்பட்டு வருதலினால், அதற்குப் பற்பல பதிப்புக்கள் வெளிவந்துள்ளன. நாலடியாருக்குத் தருமர், பதுமனார் முதலியோரின் உரைகள் உள்ளன. இந் நூலுக்கு இப்பொழுது கிடைத்துள்ள மூன்று பழைய உரைகளை 'நாலடியார் உரை வளம்' என்னும் பெயரில் அச்சிட்டுத் தஞ்சை ஸரஸ்வதி மஹால் வெளியிட்டுள்ளது. பழமொழி நூலுக்கும் தெளிவான பொழிப்புரை அமைந்துள்ளது. இங்ஙனமே, நான்மணிக்கடிகை, திரிகடுகம் முதலிய எல்லா நூல்களுக்கும் பழைய உரை உள்ளது. அவ் வுரையாசிரியர்களைப் பற்றிய விவரம் ஒன்றும் தெரியவில்லை.

நீதி நூல்கள் பதினொன்றில் ஏலாதி நீங்கலாக உள்ள பத்திற்கும் பழைய உரைகள் சிதைவின்றிக் கிடைத்துள்ளன. ஏலாதியின் சிற்சில பாடல்களுக்குப் பழைய உரை கிடைக்கவில்லை. அகப்பொருள் நூல்களில் ஐந்திணை ஐம்பது, திணைமொழி ஐம்பது, இரண்டிற்கு மட்டுமே பழைய உரை பூர்த்தியாக உள்ளது. திணைமாலை நூற்றைம்ப தில் 127-ஆம் பாட்டிற்குமேல் உரை இல்லை. ஐந்திணை எழுபதில் முதல் 24 பாடல் களுக்கே உரை கிடைத்துள்ளது. கைந்நிலை நூல் சிதைவுற்றுள்ளமை போலவே உரையும் அங்கங்கே சிதைவுற்றுள்ளது. கார் நாற்பதில் 23 முதல் 38 வரையுள்ள பாடல்களுக்குப் பழைய உரை கிடைக்கவில்லை. களவழி நாற்பதில் நூல் முழுமைக் கும் பழைய உரை கிடைத்துள்ளது. இப் பழைய உரைகள் எல்லாம் பொழிப்புரை யாக அமைந்து, சுருக்கமும் தெளிவும் உடையனவாய், பண்டைய மரபுகளுக்கு ஏற்ப அமைந்த செவ்விய உரைகளாகும். இவை நூலோடு ஒத்த பெருமை உடையன.

பழைய உரையுடன் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் பெரும்பாலனவும் பதிப்பிக்கப் பெற்றுள்ளன. ஏலாதி, கார் நாற்பது, முதலிய ஒரு சில நூல்கள் பழைய உரையுடன் நன்கு பதிப்பிக்கப் பெறவில்லை. திருக்குறள் மூலமாகவும், உரையுடனும், பலருடைய உரைகளை ஒன்றாய் இணைத்தும் பல வேறு வகையில் வெளியிடப் பெற்றுள்

ளது. இதற்கு அடுத்தபடியாக நாலடியார், பழமொழி நூல்களைக் குறிப்பிடலாம். மூலமாகவும் உரையுடனும் வெளி வந்த எஞ்சிய நூல்களின் பதிப்புக்கள் சிலவே. பழைய உரையுடன் வெளியிட்டோரும், பழைய உரையுடன் தங்கள் விளக்கத்தையும் சேர்த்துப் பதிப்பித்தோரும், பழைய உரையை விடுத்துப் புத்துரை கண்டு வெளி யிட்டோரும், சிற்சிலர் உளர். பிற்பதிப்புக்கள் பலவும் முற்பதிப்புக்களை அப்படியே பின்பற்றி வந்துள்ளன. பிற்பதிப்புக்களில் ஏடுகளின் துணைகொண்டு மீண்டும் நன்கு பரிசோதித்து வெளியிட்டோர் ஒருசிலரே.

இந்தப் பதிப்பில் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களின் பழைய பதிப்புக்கள் பலவும் ஒப்பு நோக்கி ஆராயப் பெற்றன. தவிரவும், அடையாற்றிலுள்ள மகாமகோபாத் தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலயத்தில் உள்ள சுவடிகளும், சென்னை அரசாங்கச் சுவடி நிலயத்திலுள்ள சுவடிகளும் ஒப்பு நோக்கப் பெற்றன. இங்ஙனம் ஏடுகளை ஒப்புநோக்கியதனால் பல இடங்களில் திருத்தமான பாடங்கள் கிடைத்துள்ளன. பழைய உரைகளும் பாடங்களின் தெளிவுக்கு உறுதுணையாய் அமைந்தன. புறத்திரட்டும், சென்ற நூற்றாண்டிலும் இந்த நூற்றாண்டிலும் தோன்றிய பன்னூற்றிரட்டு, செய்யுட் கலம்பகம், முதலிய நூல்களும் பயன் படுத்தப் பெற்றன. இங்ஙனம் பல வகையாலும் ஆராய்ந்து செப்பஞ் செய்யப்பெற்று வெளிவருகிறது இப் பதிப்பு.

இப் பதிப்பில் பாடல்கள் சந்தி பிரித்துக் கொடுத்திருப்பதும், அவற்றில் நிறுத்தற் குறியீடுகளை மேற்கொண்டிருப்பதும் முக்கியமாகக் குறிப்பிடத் தக்கவை. இவற்றால் நீதிக் கருத்துக்கள் முதலியன எல்லாம் உரையின் துணையின்றியே தெளிவுற்று விளங் கும் வகையில் பாடல்கள் அமைந்துள்ளன. ஒவ்வொரு நூலையும் குறித்துத் தனித் தனி முகவுரைகள் அவ்வந்நூல்களின் முகப்பில் சேர்க்கப்பெற்றுள்ளன.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களைத் திருவாளர்கள் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை, வி. மு. சுப்பிரமணியம், மு. சன்முகம், ஆகிய மூவரும் பிரதிகளுடன் ஒப்புநோக்கி ஆராய்ந்து அழகுறப் பதிப்பித்துள்ளார்கள். திருவாளர்கள் பெ. நா. அப்புஸ்வாமி, பேராசிரியர் ரா. பி. சேதுப் பிள்ளை, பேராசிரியர் தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், பன்மொழிப் புலவர் வே. வேங்கடராஜுலு ரெட்டியார், கி. வா. ஜகந் நாதன், அ. ச. ஞானசம்பந்தன், சா. கணேசன், ஆகியோர் இப் பதிப்பு சம்பந்தமாகப் பற்பல ஆலோசனைகள் கூறியதோடு வேறு பல உதவிகளும் புரிந்தனர். இங்ஙனமாக, செவ்விய முறையில் இப் பதிப்பு வெளி வர உதவி புரிந்த அன்பர்கள் யாவர்க்கும் எங்கள் உளம் கனிந்த நன்றி உரியதாகுக.

மர்ரே அண்டு கம்பெனி<br>
சென்னை—30-10-'59

வெளியிடுவோர்

# திருக்குறள்

தமிழ் இலக்கிய உலகில் தனிப் பெருஞ் சிறப்புடன் விளங்குவது திருக்குறள். இதனை இளைஞர் முதல் முதியோர் ஈறாக, அனைவரும், சாதி, மத, பால், வேறுபாடு இன்றிப் போற்றிக் கற்று வருகின்றனர். பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் பாடல் அளவினாலும், பொருளின் நுட்பத்தாலும் இந் நூல் தலைசிறந்து விளங்குகிறது.

இதனைக் 'குறள்' என்றும், 'திரு' என்னும் அடை மொழி சேர்த்துத் 'திருக் குறள்' என்றும், இப்பொழுது வழங்கிவருகின்றனர். 'முப்பால்' என்று குறிப்பிடும் வழக்குப் பல தனிப்பாடல்களில் மிகுதியாய்க் காணப்பெறுகிறது. ஆனால், நச்சினார்க் கினியர், குணசாகரர் முதலிய உரையாசிரியர்கள் இதனைத் 'திருவள்ளுவப்பயன்' என்றே குறிப்பிட்டுள்ளனர் (தொல். புறத். 76; யாப். காரிகை, பக். 161; வீர சோழியம், பக். 171.) ஏடுகள் பலவற்றில் இந் நூலின் பெயர் 'திருவள்ளுவர்' என்றும், 'திருவள்ளுவப்பயன்' என்றும் காணப்படுகின்றது. ஒரு சில ஏடுகளில் 'திருவள்ளுவ நாயனார் குறள்' என்றும் பெயர் குறிக்கப்பட்டுள்ளது. இப் பெயர்களே அன்றி, உத்தரவேதம், பொய்யாமொழி, வாயுறைவாழ்த்து, தெய்வநூல், பொது மறை, தமிழ்மறை, என்று வேறு பல பெயர்களும் இந் நூலுக்கு உள்ளன.

இந் நூலை இயற்றியவர் திருவள்ளுவர் என்று குறிக்கப்பெறுகின்றார். இவரைத் தெய்வப் புலவர் என்றும், திருவள்ளுவ நாயனார் என்றும் போற்றுகின்றனர். சிறப்புப் பெயருடன் இயற்பெயரைப் பின்னால் இணைத்து வழங்குதலுக்கு எடுத்துக்காட்டாக, இளம்பூரணர் முதலியோர், 'தெய்வப்புலவன் திருவள்ளுவன்' என்று குறித்துள்ளனர். அன்றியும், தேவர், செந்நாப்புலவர், செந்நாப்போதார், பெருநாவலர், முதற் பாவலர், மாதானுபங்கி, நான்முகனார், என்ற பெயர்களாலும் சில பழம்பாடல்கள் இவரைச் சுட்டியுள்ளன.

சீவக சிந்தாமணி உரையில், நச்சினார்க்கினியர் வள்ளுவர் குறளை மேற்கோளாக எடுத்தாளுமிடத்து, இரண்டு இடங்களில், 'என்றார் தேவரும்' (1891) என்றும், 'தேவரும் கூறினார்' (1927-8) என்றும், சுட்டியுள்ளார். நல்வழியின் நாற்பதாம் பாடலில் 'தேவர் குறளும்' என்பது காண்கிறது. இவற்றால் வள்ளுவரைத் 'தேவர்' என அக்காலத்துப் பெருக வழங்கினர் என்று எண்ணலாம். பல சமயத்தார் பெயர் களுடன் தேவர் என்பது வழங்கப்பெற்றாலும், திருத்தக்கதேவர், தோலாமொழித் தேவர், உதீசித்தேவர் என்று இவ்வாறு சமண சமயப் புலவர்களைத் தேவர் என்ற பெயருடன் இணைத்து வழங்குதல் பெருவழக்காக உள்ளமையும் சிந்தித்தற்கு உரியது. நீலகேசியின் உரைகாரராகிய சமயதிவாகரவாமன முனிவர் திருக்குறளை மேற்கோள் காட்டி, 'இது எம் ஒத்து ஆதலின்' (326, 353 உரை) என்று குறிப்பிடுகின்றார். இதனால், திருக்குறள் சமண சமயத்தவரால் 'வேதம்' எனக் கொண்டாடப் பெற்றமை விளங்கும்.

திருவள்ளுவர் மயிலையில் பிறந்தார் என்பது கன்னபரம்பரைக் கதை. சிலர் இவர் ஊர் மதுரை என்பர். இவ்வாறாக, இவரைப் பற்றி வழங்கும் வாழ்க்கைச் செய்தி கள் அனைத்தும் பல்வேறு மாறுபாடுகளுடன் வழங்குதலின், எது உண்மை என்பது துணியக்கூடவில்லை.

இவர் வாழ்ந்த காலம் பற்றி மாறுபட்ட கருத்துக்களை ஆராய்ச்சியாளர் கூறி வருகின்றனர். கி.மு. முதல் நூற்றாண்டிலிருந்து கி.பி. 6-ஆம் நூற்றாண்டு வரையில், பல காலங்களைப் பலரும் கூறியுள்ளனர்.

சங்க காலப் பழக்க வழக்கம், சமுதாய நிலை, நாகரிகம் முதலியவற்றிற்கும், குறளாசிரியர் வகுத்துக் காட்டும் சமுதாயத்திற்கும் வேறுபாடுகள் மிக்கு உள்ளன. நாகரிக நிலையில் நன்கு வளர்ச்சி பெற்ற ஒரு சமுதாயத்தை வள்ளுவர் தம் நூலுள் வரையறுத்துக் காட்டுகின்றார். சங்க நூல்கள் பெரும்பாலும் ஆசிரியப் பாக்களினாலே அமைந்திருக்க, குறள் முதலிய கீழ்க்கணக்கு நூல்கள் வெண்பா யாப்பினால் அமைந்துள்ளமையும் சிந்தித்தற்கு உரிய ஒன்றாம். திருக்குறள் நூலகத்துச் சங்க காலத்து வழங்காத புதுப்புதுச் சொற்களும், புதுமை வழக்குக்களும், புதிய வினை வடிவங்களும் உள்ளன. அன்றியும், வடசொல் ஆட்சி சங்கப் பாடல்களினும் குறளில் மிகுந்தே காணப்பெறுகின்றது. தொல்காப்பிய உரைகாரராகிய பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் திருக்குறள் முதலிய கீழ்க்கணக்கு நூல்களை இயற்றியவர்களைப் 'பிற்சான்றோர்' என்றே குறிப்பிடுகின்றனர். இவற்றால், திருக்குறள் சங்க காலத்திற்கும், காவிய காலத்திற்கும் இடைப்பட்டதோர் காலப்பகுதியில் தோன்றியிருத்தல் கூடும் என்பதை ஊகிக்கலாம்.

திருக்குறள் பால், இயல், அதிகாரங்களாக வகுக்கப் பெற்று, அதிகாரத்திற்குப் பப்பத்துப் பாடல்களையும் கொண்டிருக்கிறது; *1330* குறள் வெண்பாக்கள் இதில் உள்ளன. இயல் பாகுபாட்டை உரைகாரர் வெவ்வேறு வகையில் செய்துள்ளனர். ஆனால், பால் அதிகாரப் பதிப்புக்களில் உரைகாரர்களிடையே வேறுபாடு இல்லை. அதனால், இந்த இரு பகுப்புக்களும் ஆசிரியர் தாமே வகுத்த பாகுபாடு என்று கொள்ளலாம். ஆனால், அதிகாரங்களில் அமைந்த பத்துப் பாடல்களின் வரிசை முறையில் உரைகாரர் மாறுபடுகின்றனர். மணக்குடவர், காளிங்கர், பரிமேலழகர் உரைகளை நோக்கின், இவ்வேறுபாடு தெரியவரும். காமத்துப்பாலில் மட்டும், மூன்று இடங்களில், ஏனையோர் ஓர் அதிகாரத்துக்கு உரியதாகக் கொண்ட பாடலை, காலிங்கர் தமது உரையில் வேறு ஓர் அதிகாரத்துக்கு உரியதாகக் கொண்டுள்ளார். ஏனையோர் உரைகளில் அதிகாரத்தில் அமைந்துள்ள பாடல்களில் பிறழ்ச்சி காணப்பெறவில்லை. இதனால், அதிகாரங்களிலுள்ள பத்துப் பாடல்களையும் வள்ளுவர் எந்த வரிசையில் அமைத்திருந்தார் என்று துணிய இயலவில்லை.

> தருமர், மணக்குடவர், தாமத்தர், நச்சர்,
> பரிமேலழகர், பருதி, திருமலையர்,
> மல்லர், பரிப்பெருமாள், காளிங்கர், வள்ளுவர் நூற்கு
> எல்லை உரை செய்தார் இவர் (பெருந். 1538)

என்ற தனிப்பாட்டு, பதின்மர் குறளுக்கு உரை வகுத்ததாகத் தெரிவிக்கின்றது. இவர்களில் மணக்குடவர், காளிங்கர், பரிப்பெருமாள், பரிதியார், பரிமேலழகர் ஆகியோர் செய்த உரைகளே இப்பொழுது நமக்குக் கிடைத்துள்ளன. இவர்களில் பரிமேலழகர் எல்லா உரையாசிரியர்களுக்கும் பின்னர் வந்தவர் என்பது பழம்பாடல்களிலிருந்து தெரியவருகிறது. கிடைத்துள்ள உரைகளிலும் பரிமேலழகர் உரையே மிக விரிந்ததாயும், குறளின் பொருளைத் தெளிவாக விளக்குவதாயும் காண்கிறது. இது பற்றியே புலவர் ஒருவர், 'நூலில் பரித்த உரை எல்லாம் பரிமேலழகன் தெரித்த உரையாமோ? தெளி' என்று போற்றிப் புகழ்கின்றார்.

திருக்குறள் நூலையும் ஆசிரியர் திருவள்ளுவரையும் சிறப்பித்துக் கூறும் 'திருவள்ளுவ மாலை' என்ற தனிப்பாடல் தொகுதியில் 53 பாடல்கள் காணப்பெறு கின்றன. இதில் சங்கப்புலவர் பலர் பாடியதாகக் குறிப்புக் காண்கிறது. திருக்குற ளுக்கு உரை வகுத்த ஆசிரியர்கள் இதற்கு உரை செய்யாமையோடு இதைப்பற்றி ஓர் இடத்திற் கூடக் குறிப்பிடவும் இல்லை. திருவள்ளுவமாலை தனி ஏடாகக் காணப் பெறுகின்றதேயன்றி, திருக்குறள் ஏடுகளுடன் இணைந்து காணப்பெறவே இல்லை. முதலில் திருக்குறளைப் பதிப்பித்தவர்கள் குறளுடன் இம்மாலையை இணைக்கவும் இல்லை. எனவே, இப்பதிப்பில் திருவள்ளுவமாலை சேர்க்கப்பெறவில்லை.

முதலாவது

# அறத்துப் பால்

## பாயிரம்

### 1. கடவுள் வாழ்த்து

அகரம் முதல, எழுத்து எல்லாம்;—ஆதி-
பகவன் முதற்றே, உலகு. 1

கற்றதனால் ஆய பயன் என்கொல்—வால்-அறிவன்
நல் தாள் தொழாஅர் எனின்? 2

மலர்மிசை ஏகினான் மாண் அடி சேர்ந்தார்
நிலமிசை நீடு வாழ்வார். 3

வேண்டுதல் வேண்டாமை இல்லான் அடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல. 4

இருள் சேர் இரு வினையும் சேரா, இறைவன்
பொருள் சேர் புகழ் புரிந்தார்மாட்டு. 5

பொறி வாயில் ஐந்து அவித்தான் பொய் தீர் ஒழுக்க
நெறி நின்றார் நீடு வாழ்வார். 6

தனக்கு உவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க்கு அல்லால்,
மனக் கவலை மாற்றல் அரிது. 7

அற ஆழி அந்தணன் தாள் சேர்ந்தார்க்கு அல்லால்,
பிற ஆழி நீந்தல் அரிது. 8

கோள் இல் பொறியின் குணம் இலவே—எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை. 9

பிறவிப் பெருங் கடல் நீந்துவர்; நீந்தார்,
இறைவன் அடி சேராதார். 10

## 2. வான் சிறப்பு

வான் நின்று உலகம் வழங்கி வருதலான்,
தான் அமிழ்தம் என்று உணரல் பாற்று. 1

துப்பார்க்குத் துப்பு ஆய துப்பு ஆக்கி, துப்பார்க்குத்
துப்பு ஆயதூஉம் மழை. 2

விண் இன்று பொய்ப்பின், விரிநீர் வியன் உலகத்து-
உள் நின்று உடற்றும் பசி. 3

ஏரின் உழாஅர் உழவர், புயல் என்னும்
வாரி வளம் குன்றிக்கால். 4

கெடுப்பதூஉம், கெட்டார்க்குச் சார்வாய் மற்று ஆங்கே
எடுப்பதூஉம், எல்லாம் மழை. 5

விசும்பின் துளி வீழின் அல்லால், மற்று ஆங்கே
பசும் புல் தலை காண்பு அரிது. 6

நெடுங் கடலும் தன் நீர்மை குன்றும், தடிந்து எழிலி-
தான் நல்காது ஆகிவிடின். 7

சிறப்பொடு பூசனை செல்லாது— வானம்
வறக்குமேல், வானோர்க்கும், ஈண்டு. 8

தானம் தவம் இரண்டும் தங்கா, வியன் உலகம்
வானம் வழங்காதுஎனின். 9

நீர் இன்று அமையாது உலகுஎனின், யார்யார்க்கும்
வான் இன்று அமையாது ஒழுக்கு. 10

## 3. நீத்தார் பெருமை

ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும்—பனுவல் துணிவு. 1

துறந்தார் பெருமை துணைக் கூறின், வையத்து
இறந்தாரை எண்ணிக்கொண்டற்று. 2

இருமை வகை தெரிந்து ஈண்டு அறம் பூண்டார்
பெருமை பிறங்கிற்று, உலகு. 3

உரன் என்னும் தோட்டியான், ஓர் ஐந்தும் காப்பான்
வரன் என்னும் வைப்பிற்கு ஓர் வித்து. 4

ஐந்து அவித்தான் ஆற்றல், அகல் விசும்புளார் கோமான்
இந்திரனே சாலும், கரி. 5

செயற்கு அரிய செய்வார் பெரியர்; சிறியர்
செயற்கு அரிய செய்கலாதார். 6

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம், என்று ஐந்தின்
வகை தெரிவான்கட்டே—உலகு. 7

நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டிவிடும். 8

குணம் என்னும் குன்று ஏறி நின்றார் வெகுளி
கணம் ஏயும், காத்தல் அரிது. 9

அந்தணர் என்போர் அறவோர்—மற்று எவ் உயிர்க்கும்
செந் தண்மை பூண்டு ஒழுகலான். 10

## 4. அறன் வலியுறுத்தல்

சிறப்பு ஈனும்; செல்வமும் ஈனும்; அறத்தின் ஊஉங்கு
ஆக்கம் எவனோ, உயிர்க்கு? 1

அறத்தின் ஊஉங்கு ஆக்கமும் இல்லை; அதனை
மறத்தலின் ஊங்கு இல்லை கேடு. 2

ஒல்லும் வகையான், அறவினை, ஓவாதே,
செல்லும்வாய் எல்லாம் செயல். 3

மனத்துக்கண் மாசு இலன் ஆதல்; அனைத்து அறன்;
ஆகுல நீர, பிற. 4

அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச் சொல், நான்கும்
இழுக்கா இயன்றது—அறம். 5

'அன்று அறிவாம்' என்னாது, அறம் செய்க; மற்று அது
பொன்றுங்கால் பொன்றாத் துணை. 6

'அறத்து ஆறு இது' என வேண்டா; சிவிகை
பொறுத்தானொடு ஊர்ந்தானிடை. 7

வீழ் நாள் படாஅமை நன்று ஆற்றின், அஃது ஒருவன்
வாழ் நாள் வழி அடைக்கும் கல். 8

அறத்தான் வருவதே இன்பம்; மற்று எல்லாம்
புறத்த; புகழும் இல. 9

செயற்பாலது ஓரும் அறனே; ஒருவற்கு
உயற்பாலது ஓரும் பழி. 10

# 1. இல்லற இயல்

## 5. இல்வாழ்க்கை

இல்வாழ்வான் என்பான் இயல்பு உடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை. 1

துறந்தார்க்கும், துவ்வாதவர்க்கும், இறந்தார்க்கும்,
இல்வாழ்வான் என்பான் துணை. 2

தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல், தான், என்று ஆங்கு
ஐம்புலத்து ஆறு ஓம்பல் தலை. 3

பழி அஞ்சிப் பாத்து ஊண் உடைத்தாயின், வாழ்க்கை
வழி எஞ்சல், எஞ்ஞான்றும், இல். 4

அன்பும் அறனும் உடைத்துஆயின், இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது. 5

அறத்து ஆற்றின் இல்வாழ்க்கை ஆற்றின், புறத்து ஆற்றில்
போஒய்ப் பெறுவது எவன்? 6

இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
முயல்வாருள் எல்லாம் தலை. 7

ஆற்றின் ஒழுக்கி, அறன் இழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை உடைத்து. 8

அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை; அஃதும்
பிறன் பழிப்பது இல்ஆயின் நன்று. 9

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான் உறையும்
தெய்வத்துள் வைக்கப்படும். 10

## 6. வாழ்க்கைத்துணை நலம்

மனைத் தக்க மாண்பு உடையள் ஆகி, தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத்துணை. 1

மனை மாட்சி இல்லாள்கண் இல்ஆயின், வாழ்க்கை
எனைமாட்சித்து ஆயினும், இல். 2

இல்லது என், இல்லவள் மாண்புஆனால்? உள்ளது என்,
இல்லவள் மாணாக்கடை? 3

பெண்ணின் பெருந்தக்க யா உள—கற்பு என்னும்
திண்மை உண்டாகப்பெறின்? 4

தெய்வம் தொழாஅள், கொழுநன்-தொழுது எழுவாள்,
'பெய்' என, பெய்யும், மழை. 5

தற்காத்து, தற் கொண்டாற் பேணி, தகை சான்ற
சொற்காத்து, சோர்வு இலாள்—பெண். 6

சிறை காக்கும் காப்பு எவன் செய்யும்? மகளிர்
நிறை காக்கும் காப்பே தலை. 7

பெற்றாற் பெறின் பெறுவர், பெண்டிர், பெருஞ் சிறப்புப்
புத்தேளிர் வாழும் உலகு. 8

புகழ் புரிந்த இல் இலோர்க்கு இல்லை—இகழ்வார்முன்
ஏறுபோல் பீடு நடை. 9

'மங்கலம்' என்ப, மனைமாட்சி; மற்று அதன்
நன்கலம் நன் மக்கட் பேறு. 10

## 7. புதல்வரைப் பெறுதல்

பெறுமவற்றுள் யாம் அறிவது இல்லை—அறிவு அறிந்த
மக்கட்பேறு அல்ல பிற. 1

எழுபிறப்பும் தீயவை தீண்டா—பழி பிறங்காப்
பண்புடை மக்கட் பெறின். 2

தம் பொருள் என்ப தம் மக்கள்; அவர் பொருள்
தம்தம் வினையான் வரும். 3

அமிழ்தினும் ஆற்ற இனிதே—தம் மக்கள்
சிறு கை அளாவிய கூழ். 4

மக்கள் மெய் தீண்டல் உடற்கு இன்பம்; மற்று அவர்
சொல் கேட்டல் இன்பம், செவிக்கு. 5

'குழல் இனிது; யாழ் இனிது' என்ப—தம் மக்கள்
மழலைச் சொல் கேளாதவர். 6

தந்தை மகற்கு ஆற்றும் நன்றி அவையத்து
முந்தி இருப்பச் செயல். 7

தம்மின், தம் மக்கள் அறிவுடைமை மா நிலத்து
மன் உயிர்க்கு எல்லாம், இனிது. 8

ஈன்ற பொழுதின் பெரிது உவக்கும்—தன் மகனைச்
சான்றோன் எனக் கேட்ட தாய். 9

மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி, 'இவன் தந்தை
என் நோற்றான்கொல்!' எனும் சொல். 10

## 8. அன்பு உடைமை

அன்பிற்கும் உண்டோ, அடைக்கும் தாழ்? ஆர்வலர்
புன் கணீர் பூசல் தரும். 1

அன்பு இலார் எல்லாம் தமக்கு உரியர்; அன்பு உடையார்
என்பும் உரியர், பிறர்க்கு. 2

'அன்போடு இயைந்த வழக்கு' என்ப—'ஆர் உயிர்க்கு
என்போடு இயைந்த தொடர்பு.' 3

அன்பு ஈனும், ஆர்வம் உடைமை; அது ஈனும்,
'நண்பு' என்னும் நாடாச் சிறப்பு. 4

'அன்புற்று அமர்ந்த வழக்கு' என்ப—'வையகத்து
இன்புற்றார் எய்தும் சிறப்பு.' 5

'அறத்திற்கே அன்பு சார்பு' என்ப, அறியார்;
மறத்திற்கும் அஃதே துணை. 6

என்பு இலதனை வெயில் போலக் காயுமே—
அன்பு இலதனை அறம். 7

அன்பு அகத்து இல்லா உயிர் வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல்மரம் தளிர்த்தற்று. 8

புறத்து உறுப்பு எல்லாம் எவன் செய்யும்—யாக்கை
அகத்து உறுப்பு அன்பு இலவர்க்கு? 9

அன்பின் வழியது உயிர்நிலை; அஃது இலார்க்கு,
என்பு தோல் போர்த்த, உடம்பு. 10

## 9. விருந்து ஓம்பல்

இருந்து ஓம்பி இல் வாழ்வது எல்லாம் விருந்து ஓம்பி,
வேளாண்மை செய்தற்பொருட்டு. 1

விருந்து புறத்ததாத் தான் உண்டல், சாவா
மருந்து எனினும், வேண்டற்பாற்று அன்று. 2

வரு விருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை
பருவந்து, பாழ்படுதல் இன்று. 3

அகன் அமர்ந்து செய்யாள் உறையும்— முகன் அமர்ந்து
நல் விருந்து ஓம்புவான் இல். 4

வித்தும் இடல்வேண்டும் கொல்லோ—விருந்து ஓம்பி,
மிச்சில் மிசைவான் புலம்? 5

செல் விருந்து ஓம்பி, வரு விருந்து பார்த்திருப்பான்
நல் விருந்து, வானத்தவர்க்கு. 6

இனைத் துணைத்து என்பது ஒன்று இல்லை; விருந்தின்
துணைத் துணை—வேள்விப் பயன். 7

'பரிந்து ஓம்பி, பற்று அற்றேம்' என்பர்—விருந்து ஓம்பி
வேள்வி தலைப்படாதார். 8

உடைமையுள் இன்மை விருந்து ஓம்பல் ஓம்பா
மடமை; மடவார்கண் உண்டு. 9

மோப்பக் குழையும், அனிச்சம்;—முகம் திரிந்து
நோக்கக் குழையும், விருந்து. 10

## 10. இனியவை கூறல்

இன் சொல்—ஆல் ஈரம் அளைஇ, படிறு இலஆம்
செம்பொருள் கண்டார் வாய்ச் சொல். 1

அகன் அமர்ந்து ஈதலின் நன்றே—முகன் அமர்ந்து
இன்சொலன் ஆகப்பெறின். 2

முகத்தான் அமர்ந்து, இனிது நோக்கி, அகத்தான் ஆம்
இன் சொலினதே—அறம். 3

துன்புறூஉம் துவ்வாமை இல்லாகும்—யார்மாட்டும்
இன்புறூஉம் இன்சொலவர்க்கு. 4

பணிவு உடையன், இன் சொலன் ஆதல் ஒருவற்கு
அணி; அல்ல, மற்றுப் பிற. 5

அல்லவை தேய அறம் பெருகும்—நல்லவை
நாடி, இனிய சொலின். 6

நயன் ஈன்று நன்றி பயக்கும்—பயன் ஈன்று
பண்பின் தலைப்பிரியாச் சொல். 7

சிறுமையுள் நீங்கிய இன்சொல், மறுமையும்
இம்மையும், இன்பம் தரும். 8

இன் சொல் இனிது ஈன்றல் காண்பான், எவன்கொலோ—
வன் சொல் வழங்குவது? 9

இனிய உளவாக இன்னாத கூறல்—
கனி இருப்ப, காய் கவர்ந்தற்று. 10

## 11. செய்ந்நன்றி அறிதல்

செய்யாமல் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது. 1

காலத்தினால் செய்த நன்றி சிறிது எனினும்,
ஞாலத்தின் மாணப் பெரிது. 2

பயன் தூக்கார் செய்த உதவி நயன் தூக்கின்,
நன்மை கடலின் பெரிது. 3

தினைத் துணை நன்றி செயினும், பனைத் துணையாக்
கொள்வர்—பயன் தெரிவார். 4

உதவி வரைத்து அன்று, உதவி; உதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து. 5

மறவற்க, மாசு அற்றார் கேண்மை! துறவற்க,
துன்பத்துள் துப்பு ஆயார் நட்பு! 6

எழுமை எழு பிறப்பும் உள்ளுவர்—தம்கண்
விழுமம் துடைத்தவர் நட்பு. 7

நன்றி மறப்பது நன்று அன்று; நன்று அல்லது
அன்றே மறப்பது நன்று. 8

கொன்றன்ன இன்னா செயினும், அவர் செய்த
ஒன்றும் நன்று உள்ள, கெடும். 9

எந் நன்றி கொன்றார்க்கும் உய்வு உண்டாம்; உய்வு இல்லை,
செய்ந்நன்றி கொன்ற மகற்கு. 10

## 12. நடுவு நிலைமை

தகுதி என ஒன்றும் நன்றே—பகுதியான்
பாற்பட்டு ஒழுகப்பெறின். 1

செப்பம் உடையவன் ஆக்கம் சிதைவு இன்றி,
எச்சத்திற்கு ஏமாப்பு உடைத்து. 2

நன்றே தரினும், நடுவு இகந்து ஆம் ஆக்கத்தை
அன்றே ஒழியவிடல்! 3

தக்கார் தகவு இலர் என்பது அவர் அவர்
எச்சத்தால் காணப்படும். 4

கேடும் பெருக்கமும் இல் அல்ல; நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க்கு அணி. 5

கெடுவல் யான்' என்பது அறிக—தன் நெஞ்சம்
நடுவு ஒரீஇ, அல்ல செயின். 6

கெடுவாக வையாது உலகம்—நடுவாக
நன்றிக்கண் தங்கியான் தாழ்வு. 7

சமன் செய்து சீர் தூக்கும் கோல்போல் அமைந்து, ஒருபால்
கோடாமை—சான்றோர்க்கு அணி. 8

சொற் கோட்டம் இல்லது, செப்பம்—ஒருதலையா
உட் கோட்டம் இன்மை பெறின். 9

வாணிகம் செய்வார்க்கு வாணிகம்—பேணிப்
பிறவும் தமபோல் செயின். 10

## 13. அடக்கம் உடைமை

அடக்கம் அமரருள் உய்க்கும்; அடங்காமை
ஆர் இருள் உய்த்துவிடும். 1

காக்க, பொருளா அடக்கத்தை—ஆக்கம்
அதனின் ஊங்கு இல்லை, உயிர்க்கு! 2

செறிவு அறிந்து சீர்மை பயக்கும்—அறிவு அறிந்து
ஆற்றின் அடங்கப்பெறின். 3

நிலையின் திரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது. 4

எல்லார்க்கும் நன்று ஆம், பணிதல்; அவருள்ளும்
செல்வர்க்கே செல்வம் தகைத்து. 5

ஒருமையுள், ஆமைபோல், ஐந்து அடக்கல் ஆற்றின்,
எழுமையும் ஏமாப்பு உடைத்து. 6

யா காவார்ஆயினும், நா காக்க; காவாக்கால்,
சோகாப்பர், சொல் இழுக்குப் பட்டு. 7

ஒன்றானும் தீச்சொற் பொருட் பயன் உண்டாயின்,
நன்று ஆகாது ஆகிவிடும். 8

தீயினால் சுட்ட புண் உள் ஆறும்;—ஆறாதே,
நாவினால் சுட்ட வடு. 9

கதம் காத்து, கற்று, அடங்கல் ஆற்றுவான் செவ்வி
அறம் பார்க்கும், ஆற்றின் நுழைந்து. 10

## 14. ஒழுக்கம் உடைமை

ஒழுக்கம் விழுப்பம் தரலான், ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப்படும். 1

பரிந்து ஓம்பிக் காக்க, ஒழுக்கம்—தெரிந்து ஓம்பித்
தேரினும், அஃதே துணை! 2

ஒழுக்கம் உடைமை குடிமை; இழுக்கம்
இழிந்த பிறப்பாய்விடும். 3

மறப்பினும், ஓத்துக் கொளல்ஆகும்; பார்ப்பான்
பிறப்பு ஒழுக்கம் குன்றக் கெடும். 4

அழுக்காறு உடையான்கண் ஆக்கம் போன்று இல்லை—
ஒழுக்கம் இலான்கண் உயர்வு. 5

ஒழுக்கத்தின் ஒல்கார் உரவோர்—இழுக்கத்தின்
ஏதம் படுபாக்கு அறிந்து. 6

ஒழுக்கத்தின் எய்துவர், மேன்மை; இழுக்கத்தின்
எய்துவர், எய்தாப் பழி. 7

நன்றிக்கு வித்து ஆகும், நல் ஒழுக்கம்; தீ ஒழுக்கம்
என்றும் இடும்பை தரும். 8

ஒழுக்கம் உடையவர்க்கு ஒல்லாவே—தீய
வழுக்கியும், வாயால் சொலல். 9

உலகத்தோடு ஒட்ட ஒழுகல், பல கற்றும்,
கல்லார் அறிவிலாதார். 10

## 15. பிறன் இல் விழையாமை

பிறன்பொருளாள்-பெட்டு ஒழுகும் பேதைமை ஞாலத்து
அறம், பொருள், கண்டார்கண் இல். 1

அறன்கடை நின்றாருள் எல்லாம், பிறன்கடை
நின்றாரின், பேதையார் இல். 2

விளிந்தாரின் வேறு அல்லர் மன்ற—தெளிந்தார் இல்
தீமை புரிந்து ஒழுகுவார். 3

எனைத் துணையர் ஆயினும் என்னாம்—தினைத் துணையும்
தேரான், பிறன் இல் புகல்? 4

'எளிது' என இல் இறப்பான் எய்தும்—எஞ்ஞான்றும்
விளியாது நிற்கும் பழி. 5

பகை, பாவம், அச்சம், பழி, என நான்கும்
இகவாஆம்—இல் இறப்பான்கண். 6

அறன் இயலான் இல்வாழ்வான் என்பான்—பிறன் இயலாள்
பெண்மை நயவாதவன். 7

பிறன் மனை நோக்காத பேர் ஆண்மை, சான்றோர்க்கு
அறன் ஒன்றோ? ஆன்ற ஒழுக்கு. 8

'நலக்கு உரியார் யார்?' எனின், நாம நீர் வைப்பில்
பிறற்கு உரியாள் தோள் தோயாதார். 9

அறன் வரையான், அல்ல செயினும், பிறன் வரையாள்
பெண்மை நயவாமை நன்று. 10

## 16. பொறை உடைமை

அகழ்வாரைத் தாங்கும் நிலம் போல, தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை. 1

பொறுத்தல், இறப்பினை என்றும்; அதனை
மறத்தல் அதனினும் நன்று. 2

இன்மையுள் இன்மை விருந்து ஒரால்; வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை. 3

நிறை உடைமை நீங்காமை வேண்டின், பொறை உடைமை
போற்றி ஒழுகப்படும். 4

ஒறுத்தாரை ஒன்றாக வையாரே; வைப்பார்,
பொறுத்தாரைப் பொன்போல் பொதிந்து. 5

ஒறுத்தார்க்கு ஒரு நாளை இன்பம்; பொறுத்தார்க்குப்
பொன்றும் துணையும் புகழ். 6

திறன் அல்ல தன்-பிறர் செய்யினும், நோ நொந்து,
அறன் அல்ல செய்யாமை நன்று. 7

மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம் தம்
தகுதியான் வென்றுவிடல்! 8

துறந்தாரின் தூய்மை உடையர்—இறந்தார்வாய்
இன்னாச் சொல் நோற்கிற்பவர். 9

உண்ணாது நோற்பார் பெரியர்—பிறர் சொல்லும்
இன்னாச் சொல் நோற்பாரின் பின். 10

## 17. அழுக்காறாமை

ஒழுக்கு ஆறுக் கொள்க—ஒருவன் தன் நெஞ்சத்து
அழுக்காறு இலாத இயல்பு! 1

விழுப் பேற்றின் அஃது ஒப்பது இல்லை—யார்மாட்டும்
அழுக்காற்றின் அன்மை பெறின். 2

அறன், ஆக்கம், வேண்டாதான் என்பான் பிறன் ஆக்கம்
பேணாது அழுக்கறுப்பான். 3

அழுக்காற்றின் அல்லவை செய்யார்—இழுக்கு ஆற்றின்
ஏதம் படுபாக்கு அறிந்து. 4

அழுக்காறு உடையார்க்கு அது சாலும்—ஒன்னார்
வழுக்கியும் கேடு ஈன்பது. 5

கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும். 6

அவ்வித்து அழுக்காறு உடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும். 7

அழுக்காறு என ஒரு பாவி திருச் செற்று,
தீயுழி உய்த்துவிடும். 8

அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும், செவ்வியான்
கேடும், நினைக்கப்படும். 9

அழுக்கற்று அகன்றாரும் இல்லை; அஃது இல்லார்
பெருக்கத்தின் தீர்ந்தாரும் இல். 10

## 18. வெஃகாமை

நடுவு இன்றி நன் பொருள் வெஃகின், குடி பொன்றி,
குற்றமும் ஆங்கே தரும். 1

படு பயன் வெஃகி, பழிப்படுவ செய்யார்—
நடுவு அன்மை நாணுபவர். 2

சிற்றின்பம் வெஃகி, அறன் அல்ல செய்யாரே—
மற்று இன்பம் வேண்டுபவர். 3

'இலம்' என்று வெஃகுதல் செய்யார்—புலம் வென்ற
புன்மை இல் காட்சியவர். 4

அஃகி அகன்ற அறிவு என் ஆம்—யார்மாட்டும்
வெஃகி, வெறிய செயின்? 5

அருள் வெஃகி, ஆற்றின்கண் நின்றான், பொருள் வெஃகிப்
பொல்லாத சூழ, கெடும். 6

வேண்டற்க, வெஃகி ஆம் ஆக்கம்—விளைவயின்
மாண்டற்கு அரிது ஆம் பயன்! 7

'அஃகாமை செல்வத்திற்கு யாது?' எனின், வெஃகாமை
வேண்டும் பிறன் கைப் பொருள். 8

அறன் அறிந்து வெஃகா அறிவு உடையார்ச் சேரும்—
திறன் அறிந்து ஆங்கே திரு. 9

இறல் ஈனும், எண்ணாது வெஃகின்; விறல் ஈனும்,
வேண்டாமை என்னும் செருக்கு. 10

## 19. புறம் கூறாமை

அறம் கூறான், அல்ல செயினும், ஒருவன்
புறம் கூறான் என்றல் இனிது. 1

அறன் அழீஇ அல்லவை செய்தலின் தீதே—
புறன் அழீஇப் பொய்த்து நகை. 2

புறம் கூறி, பொய்த்து, உயிர் வாழ்தலின், சாதல்
அறம் கூறும் ஆக்கம் தரும். 3

கண் நின்று, கண் அறச் சொல்லினும், சொல்லற்க—
முன் இன்று பின் நோக்காச் சொல். 4

அறம் சொல்லும் நெஞ்சத்தான் அன்மை புறம் சொல்லும்
புன்மையால் காணப்படும். 5

பிறன் பழி கூறுவான் தன் பழியுள்ளும்
திறன் தெரிந்து கூறப்படும். 6

பகச் சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர்—நகச் சொல்லி
நட்பு ஆடல் தேற்றாதவர். 7

துன்னியார் குற்றமும் தூற்றும் மரபினார்,
என்னைகொல், ஏதிலார்மாட்டு? 8

அறன் நோக்கி ஆற்றும்கொல் வையம்—புறன் நோக்கிப்
புன் சொல் உரைப்பான் பொறை? 9

ஏதிலார் குற்றம்போல் தம் குற்றம் காண்கிற்பின்,
தீது உண்டோ, மன்னும் உயிர்க்கு? 10

## 20. பயன் இல சொல்லாமை

பல்லார் முனியப் பயன் இல சொல்லுவான்
எல்லாரும் எள்ளப்படும். 1

பயன் இல பல்லார்முன் சொல்லல், நயன் இல
நட்டார்கண் செய்தலின், தீது. 2

நயன் இலன் என்பது சொல்லும்—பயன் இல
பாரித்து உரைக்கும் உரை. 3

நயன் சாரா நன்மையின் நீக்கும்—பயன் சாராப்
பண்பு இல் சொல் பல்லாரகத்து. 4

சீர்மை சிறப்பொடு நீங்கும்—பயன் இல
நீர்மை உடையார் சொலின். 5

பயன் இல் சொல் பாராட்டுவானை மகன் எனல்!
மக்கட் பதடி எனல்! 6

நயன் இல சொல்லினும் சொல்லுக! சான்றோர்
பயன் இல சொல்லாமை நன்று. 7

அரும் பயன் ஆயும் அறிவினர் சொல்லார்—
பெரும் பயன் இல்லாத சொல். 8

பொருள் தீர்ந்த பொச்சாந்தும் சொல்லார்—மருள் தீர்ந்த
மாசு அறு காட்சியவர். 9

சொல்லுக, சொல்லில் பயன் உடைய! சொல்லற்க,
சொல்லில் பயன் இலாச் சொல்! 10

## 21. தீவினை அச்சம்

தீவினையார் அஞ்சார்; விழுமியார் அஞ்சுவர்—
தீவினை என்னும் செருக்கு. 1

தீயவை தீய பயத்தலான், தீயவை
தீயினும் அஞ்சப்படும். 2

அறிவினுள் எல்லாம் தலை என்ப—தீய
செறுவார்க்கும் செய்யா விடல். 3

மறந்தும் பிறன் கேடு சூழற்க! சூழின்,
அறம் சூழும், சூழ்ந்தவன் கேடு. 4

'இலன்' என்று தீயவை செய்யற்க! செய்யின்,
இலன் ஆகும், மற்றும் பெயர்த்து. 5

தீப் பால தான் பிறர்கண் செய்யற்க—நோய்ப் பால
தன்னை அடல் வேண்டாதான்! 6

எனைப் பகை உற்றாரும் உய்வர்; வினைப் பகை
வீயாது, பின் சென்று, அடும். 7

தீயவை செய்தார் கெடுதல் நிழல் தன்னை
வீயாது அடி உறைந்தற்று. 8

தன்னைத் தான் காதலன்ஆயின், எனைத்து ஒன்றும்
துன்னற்க, தீவினைப் பால்! 9

அருங் கேடன் என்பது அறிக—மருங்கு ஓடித்
தீவினை செய்யான்எனின்! 10

## 22. ஒப்புரவு அறிதல்

கைம்மாறு வேண்டா கடப்பாடு; மாரிமாட்டு
என் ஆற்றும் கொல்லோ, உலகு? 1

தாள் ஆற்றித் தந்த பொருள் எல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற்பொருட்டு. 2

புத்தேள் உலகத்தும், ஈண்டும், பெறல் அரிதே—
ஒப்புரவின் நல்ல பிற. 3

ஒத்தது அறிவான் உயிர் வாழ்வான்; மற்றையான்
செத்தாருள் வைக்கப்படும். 4

ஊருணி நீர் நிறைந்தற்றே—உலகு அவாம்
பேர் அறிவாளன் திரு. 5

பயன் மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால்—செல்வம்
நயன் உடையான்கண் படின். 6

மருந்து ஆகித் தப்பா மரத்தற்றால்—செல்வம்
பெருந்தகையான்கண் படின். 7

இடன் இல் பருவத்தும், ஒப்புரவிற்கு ஒல்கார்—
கடன் அறி காட்சியவர். 8

நயன் உடையான் நல்கூர்ந்தான் ஆதல் செயும் நீர
செய்யாது அமைகலா ஆறு. 9

'ஒப்புரவினால் வரும், கேடு' எனின், அஃது ஒருவன்
விற்றுக் கோள் தக்கது உடைத்து. 10

## 23. ஈகை

வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை; மற்று எல்லாம்
குறியெதிர்ப்பை நீரது உடைத்து. 1

'நல்லாறு' எனினும், கொளல் தீது; 'மேல் உலகம்
இல்' எனினும், ஈதலே நன்று. 2

'இலன்' என்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலன் உடையான்கண்ணே உள. 3

இன்னாது, இரக்கப்படுதல்—இரந்தவர்
இன் முகம் காணும் அளவு. 4

ஆற்றுவார் ஆற்றல் பசி ஆற்றல்; அப் பசியை
மாற்றுவார் ஆற்றலின் பின். 5

அற்றார் அழி பசி தீர்த்தல்! அஃது ஒருவன்
பெற்றான் பொருள் வைப்பு உழி. 6

பாத்து ஊண் மரீஇயவனைப் பசி என்னும்
தீப் பிணி தீண்டல் அரிது. 7

ஈத்து உவக்கும் இன்பம் அறியார்கொல்—தாம் உடைமை
வைத்து இழக்கும் வன்கணவர்? 8

இரத்தலின் இன்னாது மன்ற—நிரப்பிய
தாமே தமியர் உணல். 9

சாதலின் இன்னாதது இல்லை; இனிது, அதூஉம்
ஈதல் இயையாக்கடை. 10

## 24. புகழ்

ஈதல்! இசைபட வாழ்தல்! அது அல்லது
ஊதியம் இல்லை, உயிர்க்கு. 1

உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க்கு ஒன்று
ஈவார்மேல் நிற்கும் புகழ். 2

ஒன்றா உலகத்து உயர்ந்த புகழ் அல்லால்,
பொன்றாது நிற்பது ஒன்று இல். 3

நில வரை நீள் புகழ் ஆற்றின், புலவரைப்
போற்றாது, புத்தேள் உலகு. 4

நத்தம்போல் கேடும், உளதாகும் சாக்காடும்,
வித்தகர்க்கு அல்லால் அரிது. 5

தோன்றின், புகழொடு தோன்றுக! அஃது இலார்
தோன்றலின் தோன்றுமை நன்று. 6

புகழ்பட வாழாதார் தம் நோவார், தம்மை
இகழ்வாரை நோவது எவன்? 7

'வசை' என்ப, வையத்தார்க்கு எல்லாம்—'இசை' என்னும்
எச்சம் பெறுஅவிடின். 8

வசை இலா வண் பயன் குன்றும்—இசை இலா
யாக்கை பொறுத்த நிலம். 9

வசை ஒழிய வாழ்வாரே வாழ்வார்; இசை ஒழிய
வாழ்வாரே வாழாதவர். 10

## 2. துறவற இயல்

### 25. அருள் உடைமை

அருட் செல்வம், செல்வத்துள் செல்வம்; பொருட் செல்வம்
பூரியார்கண்ணும் உள. 1

நல் ஆற்றுன் நாடி அருள் ஆள்க! பல் ஆற்றுன்
தேரினும் அஃதே துணை. 2

அருள் சேர்ந்த நெஞ்சினுர்க்கு இல்லை—இருள் சேர்ந்த
இன்னு உலகம் புகல். 3

'மன் உயிர் ஓம்பி, அருள் ஆள்வாற்கு இல்' என்ப—
'தன் உயிர் அஞ்சும் வினை.' 4

அல்லல், அருள் ஆள்வார்க்கு இல்லை; வளி வழங்கும்
மல்லல் மா ஞாலம் கரி. 5

'பொருள் நீங்கிப் பொச்சாந்தார்' என்பர்—'அருள் நீங்கி
அல்லவை செய்து ஒழுகுவார்.' 6

அருள் இல்லார்க்கு அவ் உலகம் இல்லை—பொருள் இல்லார்க்கு
இவ் உலகம் இல்லாகியாங்கு. 7

பொருள் அற்றுர் பூப்பர் ஒருகால்; அருள் அற்றுர்
அற்றுர்; மற்று ஆதல் அரிது. 8

தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றுல்—தேரின்,
அருளாதான் செய்யும் அறம். 9

வலியார்முன் தன்னை நினைக்க—தான் தன்னின்
மெலியார்மேல் செல்லும் இடத்து. 10

## 26. புலால் மறுத்தல்

தன் ஊன் பெருக்கற்குத் தான் பிறிது ஊன் உண்பான்
எங்ஙனம் ஆளும் அருள்? 1

பொருள் ஆட்சி போற்றாதார்க்கு இல்லை; அருள் ஆட்சி
ஆங்கு இல்லை, ஊன் தின்பவர்க்கு. 2

படை கொண்டார் நெஞ்சம்போல் நன்று ஊக்காது—ஒன்றன்
உடல் சுவை உண்டார் மனம். 3

'அருள், அல்லது, யாது?' எனின்,—கொல்லாமை, கோறல்:
பொருள் அல்லது, அவ் ஊன் தினல். 4

உண்ணாமை உள்ளது உயிர்நிலை; ஊன் உண்ண,
அண்ணாத்தல் செய்யாது, அளறு. 5

தினற்பொருட்டால் கொல்லாது உலகு எனின், யாரும்
விலைப்பொருட்டால் ஊன் தருவார் இல். 6

உண்ணாமை வேண்டும், புலாஅல்—பிறிது ஒன்றன்
புண்; அது உணர்வார்ப் பெறின். 7

செயிரின் தலைப்பிரிந்த காட்சியார் உண்ணார்,
உயிரின் தலைப்பிரிந்த ஊன். 8

அவி சொரிந்து ஆயிரம் வேட்டலின், ஒன்றன்
உயிர் செகுத்து உண்ணாமை நன்று. 9

கொல்லான், புலாலை மறுத்தானைக் கைகூப்பி,
எல்லா உயிரும் தொழும். 10

## 27. தவம்

உற்ற நோய் நோன்றல், உயிர்க்கு உறுகண் செய்யாமை,
அற்றே—தவத்திற்கு உரு. 1

தவமும் தவம் உடையார்க்கு ஆகும்; அவம், அதனை
அஃது இலார் மேற்கொள்வது. 2

துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி, மறந்தார்கொல்—
மற்றையவர்கள், தவம்! 3

ஒன்னார்த் தெறலும், உவந்தாரை ஆக்கலும்,
எண்ணின், தவத்தான் வரும். 4

வேண்டிய வேண்டியாங்கு எய்தலான், செய் தவம்
ஈண்டு முயலப்படும். 5

தவம் செய்வார் தம் கருமம் செய்வார்; மற்று அல்லார்
அவம் செய்வார், ஆசையுள் பட்டு. 6

சுடச் சுடரும் பொன்போல் ஒளிவிடும்—துன்பம்
சுடச்சுட நோற்கிற்பவர்க்கு. 7

தன் உயிர் தான் அறப் பெற்றானை ஏனைய
மன் உயிர் எல்லாம் தொழும். 8

கூற்றம் குதித்தலும் கைகூடும்—நோற்றலின்
ஆற்றல் தலைப்பட்டவர்க்கு. 9

இலர் பலர் ஆகிய காரணம்—நோற்பார்
சிலர்; பலர் நோலாதவர். 10

## 28. கூடா ஒழுக்கம்

வஞ்ச மனத்தான் படிற்று ஒழுக்கம் பூதங்கள்
ஐந்தும் அகத்தே நகும். 1

வான் உயர் தோற்றம் எவன்செய்யும்—தன் நெஞ்சம்
தான் அறி குற்றப்படின்? 2

வலி இல் நிலைமையான் வல் உருவம் பெற்றம்
புலியின் தோல் போர்த்து மேய்ந்தற்று. 3

தவம் மறைந்து, அல்லவை செய்தல்—புதல்மறைந்து
வேட்டுவன் புள் சிமிழ்த்தற்று. 4

'பற்று அற்றேம்' என்பார் படிற்று ஒழுக்கம், 'எற்று! எற்று!' என்று
ஏதம் பலவும் தரும். 5

நெஞ்சின் துறவார், துறந்தார்போல் வஞ்சித்து,
வாழ்வாரின் வன்கணார் இல். 6

புறம் குன்றி கண்டனையரேனும், அகம் குன்றி
மூக்கின் கரியார் உடைத்து. 7

மனத்தது மாசு ஆக, மாண்டார் நீர் ஆடி,
மறைந்து ஒழுகும் மாந்தர் பலர். 8

கணை கொடிது; யாழ் கோடு செவ்விது; ஆங்கு அன்ன
வினைபடு பாலால் கொளல். 9

மழித்தலும் நீட்டலும் வேண்டா—உலகம்
பழித்தது ஒழித்துவிடின். 10

## 29. கள்ளாமை

எள்ளாமை வேண்டுவான் என்பான் எனைத்து ஒன்றும்
கள்ளாமை காக்க, தன் நெஞ்சு! 1

உள்ளத்தால் உள்ளலும் தீதே; 'பிறன் பொருளைக்
கள்ளத்தால் கள்வேம்' எனல்! 2

களவினால் ஆகிய ஆக்கம், அளவு இறந்து,
ஆவது போல, கெடும். 3

களவின்கண் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமம் தரும். 4

அருள் கருதி அன்புடையர் ஆதல் பொருள் கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார்கண் இல். 5

அளவின்கண் நின்று ஒழுகலாற்றார்—களவின்கண்
கன்றிய காதலவர். 6

களவு என்னும் கார் அறிவு ஆண்மை அளவு என்னும்
ஆற்றல் புரிந்தார்கண் இல். 7

அளவு அறிந்தார் நெஞ்சத்து அறம்போல, நிற்கும்,
களவு அறிந்தார் நெஞ்சில் கரவு. 8

அளவு அல்ல செய்து, ஆங்கே வீவர்—களவு அல்ல
மற்றைய தேற்றாதவர். 9

கள்வார்க்குத் தள்ளும், உயிர்நிலை; கள்ளார்க்குத்
தள்ளாது, புத்தேள் உலகு. 10

## 30. வாய்மை

'வாய்மை எனப்படுவது யாது?' எனின், யாது ஒன்றும்
தீமை இலாத சொலல். 1

பொய்ம்மையும் வாய்மை இடத்த—புரை தீர்ந்த
நன்மை பயக்கும் எனின். 2

தன் நெஞ்சு அறிவது பொய்யற்க; பொய்த்தபின்.
தன் நெஞ்சே தன்னைச் சுடும். 3

உள்ளத்தால் பொய்யாது ஒழுகின், உலகத்தார்
உள்ளத்துள் எல்லாம் உளன். 4

மனத்தொடு வாய்மை மொழியின், தவத்தொடு
தானம் செய்வாரின் தலை. 5

பொய்யாமை அன்ன புகழ் இல்லை; எய்யாமை,
எல்லா அறமும் தரும். 6

பொய்யாமை பொய்யாமை ஆற்றின், அறம் பிற
செய்யாமை செய்யாமை நன்று. 7

புறம் தூய்மை நீரான் அமையும்;—அகம் தூய்மை
வாய்மையான் காணப்படும். 8

எல்லா விளக்கும் விளக்கு அல்ல; சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு. 9

யாம் மெய்யாக் கண்டவற்றுள், இல்லை—எனைத்து ஒன்றும்
வாய்மையின் நல்ல பிற. 10

## 31. வெகுளாமை

செல் இடத்துக் காப்பான் சினம் காப்பான்; அல் இடத்து,
காக்கின் என்? காவாக்கால் என்? 1

செல்லா இடத்துச் சினம் தீது; செல் இடத்தும்,
இல், அதனின் தீய பிற. 2

மறத்தல், வெகுளியை யார்மாட்டும்—தீய
பிறத்தல் அதனான் வரும்! 3

நகையும் உவகையும் கொல்லும் சினத்தின்
பகையும் உளவோ, பிற? 4

தன்னைத் தான் காக்கின், சினம் காக்க! காவாக்கால்,
தன்னையே கொல்லும், சினம். 5

சினம் என்னும் சேர்ந்தாரைக்கொல்லி இனம் என்னும்
ஏமப் புணையைச் சுடும். 6

சினத்தைப் பொருள் என்று கொண்டவன் கேடு
நிலத்து அறைந்தான் கை பிழையாதற்று. 7

இணர் எரி தோய்வன்ன இன்னா செயினும்,
புணரின் வெகுளாமை நன்று. 8

உள்ளிய எல்லாம் உடன் எய்தும்—உள்ளத்தால்
உள்ளான் வெகுளி எனின். 9

இறந்தார் இறந்தார் அனையர்; சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை. 10

## 32. இன்னா செய்யாமை

சிறப்பு ஈனும் செல்வம் பெறினும், பிறர்க்கு இன்னா
செய்யாமை மாசு அற்றார் கோள். 1

கறுத்து இன்னா செய்த அக்கண்ணும், மறுத்து இன்னா
செய்யாமை மாசு அற்றார் கோள். 2

செய்யாமல் செற்றார்க்கும் இன்னாத செய்தபின்,
உய்யா விழுமம் தரும். 3

இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர் நாண
நல் நயம் செய்து, விடல். 4

அறிவினான் ஆகுவது உண்டோ—பிறிதின் நோய்
தம் நோய்போல் போற்றாக்கடை? 5

இன்னா எனத் தான் உணர்ந்தவை, துன்னாமை
வேண்டும், பிறன்கண் செயல். 6

எனைத்தானும், எஞ்ஞான்றும், யார்க்கும், மனத்தான் ஆம்
மாணா செய்யாமை தலை. 7

தன் உயிர்க்கு இன்னாமை தான் அறிவான், என்கொலோ,
மன் உயிர்க்கு இன்னா செயல்? 8

பிறர்க்கு இன்னா முற்பகல் செய்யின், தமக்கு இன்னா
பிற்பகல் தாமே வரும். 9

நோய் எல்லாம் நோய் செய்தார் மேலவாம்; நோய் செய்யார்,
நோய் இன்மை வேண்டுபவர். 10

## 33. கொல்லாமை

'அறவினை யாது?' எனின், கொல்லாமை; கோறல்
பிற வினை எல்லாம் தரும். 1

பகுத்து உண்டு, பல் உயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை. 2

ஒன்றாக நல்லது கொல்லாமை; மற்று அதன்
பின்சாரப் பொய்யாமை நன்று. 3

'நல்லாறு எனப்படுவது யாது?' எனின், யாது ஒன்றும்
கொல்லாமை சூழும் நெறி. 4

நிலை அஞ்சி நீத்தாருள் எல்லாம், கொலை அஞ்சிக்
கொல்லாமை சூழ்வான், தலை. 5

கொல்லாமை மேற்கொண்டு ஒழுகுவான் வாழ்நாள்மேல்
செல்லாது, உயிர் உண்ணும் கூற்று. 6

தன் உயிர் நீப்பினும் செய்யற்க—தான் பிறிது
இன் உயிர் நீக்கும் வினை! 7

நன்று ஆகும் ஆக்கம் பெரிது எனினும், சான்றோர்க்குக்
கொன்று ஆகும் ஆக்கம் கடை. 8

கொலை வினையர் ஆகிய மாக்கள் புலை வினையர்,
புன்மை தெரிவார் அகத்து. 9

'உயிர் உடம்பின் நீக்கியார்' என்ப—'செயிர் உடம்பின்
செல்லாத் தீ வாழ்க்கையவர்.' 10

## 34. நிலையாமை

நில்லாதவற்றை நிலையின என்று உணரும்
புல்லறிவு ஆண்மை கடை. 1

கூத்தாட்டு அவைக்குழாத்தற்றே, பெருஞ் செல்வம்;
போக்கும், அது விளிந்தற்று. 2

அற்கா இயல்பிற்றுச் செல்வம்; அது பெற்றால்,
அற்குப ஆங்கே செயல்! 3

நாள் என ஒன்றுபோல் காட்டி, உயிர், ஈரும்
வாளது—உணர்வார்ப் பெறின். 4

நாச் செற்று, விக்குள் மேல்வாராமுன், நல் வினை
மேற்சென்று செய்யப்படும். 5

'நெருநல் உளன், ஒருவன்; இன்று இல்லை!' என்னும்
பெருமை உடைத்து, இவ் உலகு. 6

ஒருபொழுதும் வாழ்வது அறியார், கருதுப—
கோடியும் அல்ல, பல. 7

குடம்பை தனித்து ஒழியப் புள் பறந்தற்றே—
உடம்பொடு உயிரிடை நட்பு. 8

உறங்குவது போலும், சாக்காடு; உறங்கி
விழிப்பது போலும், பிறப்பு. 9

புக்கில் அமைந்தின்றுகொல்லோ—உடம்பினுள்
துச்சில் இருந்த உயிர்க்கு! 10

## 35. துறவு

யாதனின் யாதனின் நீங்கியான், நோதல்
அதனின் அதனின் இலன். 1

வேண்டின், உண்டாகத் துறக்க; துறந்தபின்,
ஈண்டு இயற்பால பல. 2

அடல் வேண்டும், ஐந்தன் புலத்தை; விடல் வேண்டும்,
வேண்டிய எல்லாம் ஒருங்கு. 3

இயல்பு ஆகும், நோன்பிற்கு ஒன்று இன்மை; உடைமை
மயல் ஆகும், மற்றும் பெயர்த்து. 4

மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல்? பிறப்பு அறுக்கல்
உற்ருர்க்கு உடம்பும் மிகை. 5

'யான்', 'எனது', என்னும் செருக்கு அறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும். 6

பற்றி விடாஅ, இடும்பைகள்—பற்றினைப்
பற்றி, விடாஅதவர்க்கு. 7

தலைப்பட்டார், தீரத் துறந்தார்; மயங்கி
வலைப்பட்டார், மற்றையவர். 8

பற்று அற்றகண்ணே பிறப்பு அறுக்கும்; மற்றும்
நிலையாமை காணப்படும். 9

பற்றுக, பற்றுஅற்ருன் பற்றினை! அப் பற்றைப்
பற்றுக, பற்று விடற்கு! 10

## 36. மெய் உணர்தல்

பொருள் அல்லவற்றைப் பொருள் என்று உணரும்
மருளான் ஆம், மாணுப் பிறப்பு. 1

இருள் நீங்கி இன்பம் பயக்கும்—மருள் நீங்கி
மாசு அறு காட்சியவர்க்கு. 2

ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணியது உடைத்து. 3

ஐஉணர்வு எய்தியக் கண்ணும் பயம் இன்றே—
மெய் உணர்வு இல்லாதவர்க்கு. 4

எப் பொருள் எத் தன்மைத்துஆயினும், அப் பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு. 5

கற்று ஈண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்,
மற்று ஈண்டு வாரா நெறி. 6

ஓர்த்து உள்ளம் உள்ளது உணரின் ஒருதலையா,
பேர்த்து உள்ளவேண்டா பிறப்பு. 7

பிறப்பு என்னும் பேதைமை நீங்க, சிறப்பு என்னும்
செம்பொருள் காண்பது அறிவு. 8

சார்பு உணர்ந்து, சார்பு கெட ஒழுகின், மற்று அழித்துச்
சார்தரா, சார்தரும் நோய். 9

காமம், வெகுளி, மயக்கம், இவை மூன்றன்
நாமம் கெட, கெடும் நோய். 10

## 37. அவா அறுத்தல்

'அவா' என்ப—'எல்லா உயிர்க்கும், எஞ் ஞான்றும்,
தவாஅப் பிறப்பு ஈனும் வித்து.' 1

வேண்டுங்கால், வேண்டும் பிறவாமை; மற்று அது
வேண்டாமை வேண்ட, வரும். 2

வேண்டாமை அன்ன விழுச் செல்வம் ஈண்டு இல்லை;
யாண்டும் அஃது ஒப்பது இல். 3

தூஉய்மை என்பது அவா இன்மை; மற்று அது
வாஅய்மை வேண்ட, வரும். 4

அற்றவர் என்பார் அவா அற்றார்; மற்றையார்
அற்று ஆக அற்றது இலர். 5

அஞ்சுவது ஓரும் அறனே; ஒருவனை
வஞ்சிப்பது ஓரும் அவா. 6

அவாவினை ஆற்ற அறுப்பின், தவா வினை
தான்வேண்டும் ஆற்றான் வரும். 7

அவா இல்லார்க்கு இல்லாகும் துன்பம்; அஃது உண்டேல்,
தவாஅது மேன்மேல் வரும். 8

இன்பம் இடையறாது, ஈண்டும்—அவா என்னும்
துன்பத்துள் துன்பம் கெடின். 9

ஆரா இயற்கை அவா நீப்பின், அந் நிலையே
பேரா இயற்கை தரும். 10

## 38. ஊழ்

ஆகு ஊழால் தோன்றும், அசைவு இன்மை; கைப்பொருள்
போகு ஊழால் தோன்றும், மடி. 1

பேதைப் படுக்கும், இழவு ஊழ்; அறிவு அகற்றும்,
ஆகல் ஊழ் உற்றக்கடை. 2

நுண்ணிய நூல் பல கற்பினும், மற்றும் தன்
உண்மை அறிவே மிகும். 3

இரு வேறு, உலகத்து இயற்கை: திரு வேறு;
தெள்ளியர் ஆதலும் வேறு. 4

நல்லவை எல்லாஅம் தீய ஆம்; தீயவும்
நல்ல ஆம்;—செல்வம் செயற்கு. 5

பரியினும் ஆகாவாம், பால் அல்ல; உய்த்துச்
சொரியினும் போகா, தம. 6

வகுத்தான் வகுத்த வகை அல்லால், கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது. 7

துறப்பார்மன், துப்புரவு இல்லார்—உறற்பால
ஊட்டா கழியும் எனின். 8

நன்று ஆம் கால் நல்லவாக் காண்பவர், அன்று ஆம் கால்,
அல்லற்படுவது எவன்? 9

ஊழின் பெருவலி யா உள—மற்று ஒன்று
சூழினும், தான் முந்துறும்? 10

இரண்டாவது

# பொருட் பால்

## 1. அரசு இயல்

### 39. இறை மாட்சி

படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண், ஆறும்
உடையான் அரசருள் ஏறு. 1

அஞ்சாமை, ஈகை, அறிவு, ஊக்கம், இந் நான்கும்
எஞ்சாமை—வேந்தற்கு இயல்பு. 2

தூங்காமை, கல்வி, துணிவுடைமை, இம் மூன்றும்
நீங்கா—நிலன் ஆள்பவற்கு. 3

அறன் இழுக்காது, அல்லவை நீக்கி, மறன் இழுக்கா
மானம் உடையது—அரசு. 4

இயற்றலும், ஈட்டலும், காத்தலும், காத்த
வகுத்தலும், வல்லது—அரசு. 5

காட்சிக்கு எளியன், கடுஞ் சொல்லன் அல்லனேல்,
மீக்கூறும், மன்னன் நிலம். 6

இன் சொலால் ஈத்து, அளிக்க வல்லாற்குத் தன் சொலால்
தான் கண்டனைத்து, இவ் உலகு. 7

முறை செய்து காப்பாற்றும் மன்னவன், 'மக்கட்கு
இறை' என்று வைக்கப்படும். 8

செவி கைப்பச் சொற் பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கும், உலகு. 9

கொடை, அளி, செங்கோல், குடி-ஓம்பல், நான்கும்
உடையான் ஆம், வேந்தர்க்கு ஒளி. 10

## 40. கல்வி

கற்க, கசடு அற, கற்பவை! கற்றபின்,
நிற்க, அதற்குத் தக! 1

'எண்' என்ப, ஏனை 'எழுத்து' என்ப, இவ் இரண்டும்
'கண்' என்ப, வாழும் உயிர்க்கு. 2

கண் உடையர் என்பவர் கற்றோர்; முகத்து இரண்டு
புண் உடையர், கல்லாதவர். 3

உவப்பத் தலைக்கூடி, உள்ளப் பிரிதல்
அனைத்தே—புலவர் தொழில். 4

உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார்;
கடையரே, கல்லாதவர். 5

தொட்டனைத்து ஊறும், மணற் கேணி;—மாந்தர்க்குக்
கற்றனைத்து ஊறும், அறிவு. 6

யாதானும் நாடு ஆமால்; ஊர் ஆமால்; என், ஒருவன்
சாம் துணையும் கல்லாதவாறு? 7

ஒருமைக்கண் தான் கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப்பு உடைத்து. 8

தாம் இன்புறுவது உலகு இன்புறக் கண்டு,
காமுறுவர், கற்று அறிந்தார். 9

கேடு இல் விழுச் செல்வம் கல்வி; ஒருவற்கு
மாடு அல்ல, மற்றையவை. 10

## 41. கல்லாமை

அரங்கு இன்றி வட்டு ஆடியற்றே—நிரம்பிய
நூல் இன்றிக் கோட்டி கொளல். 1

கல்லாதான் சொல் காமுறுதல், முலை இரண்டும்
இல்லாதாள் பெண் காமுற்றற்று. 2

கல்லாதவரும் நனி நல்லர்—கற்றார்முன்
சொல்லாது இருக்கப்பெறின். 3

கல்லாதான் ஒட்பம் கழிய நன்று ஆயினும்,
கொள்ளார், அறிவு உடையார். 4

கல்லா ஒருவன் தகைமை, தலைப்பெய்து
சொல்லாட, சோர்வுபடும். 5

உளர் என்னும் மாத்திரையர் அல்லால், பயவாக்
களர் அனையர்—கல்லாதவர். 6

நுண் மாண் நுழை புலம் இல்லான் எழில் நலம்
மண் மாண் புனை பாவை அற்று. 7

நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாதே—
கல்லார்கண் பட்ட திரு. 8

மேற்பிறந்தார் ஆயினும் கல்லாதார், கீழ்ப்பிறந்தும்
கற்றார் அனைத்து இலர் பாடு. 9

விலங்கொடு மக்கள் அனையர்—இலங்கு நூல்
கற்றாரொடு ஏனையவர். 10

## 42. கேள்வி

செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம்; அச் செல்வம்
செல்வத்துள் எல்லாம் தலை. 1

செவிக்கு உணவு இல்லாத போழ்து, சிறிது,
வயிற்றுக்கும் ஈயப்படும். 2

செவியுணவின் கேள்வி உடையார், அவியுணவின்
ஆன்றாரொடு ஒப்பர், நிலத்து. 3

கற்றிலன் ஆயினும் கேட்க; அஃது ஒருவற்கு
ஒற்கத்தின் ஊற்று ஆம் துணை. 4

இழுக்கல் உடை உழி ஊற்றுக்கோல் அற்றே—
ஒழுக்கம் உடையார் வாய்ச் சொல். 5

எனைத்தானும் நல்லவை கேட்க! அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும். 6

பிழைத்து உணர்ந்தும் பேதைமை சொல்லார்—இழைத்து உணர்ந்து
ஈண்டிய கேள்வியவர். 7

கேட்பினும் கேளாத் தகையவே—கேள்வியால்
தோட்கப் படாத செவி. 8

நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய
வாயினர் ஆதல் அரிது. 9

செவியின் சுவை உணரா, வாய் உணர்வின், மாக்கள்
அவியினும் வாழினும் என்? 10

## 43. அறிவு உடைமை

அறிவு, அற்றம் காக்கும் கருவி; செறுவார்க்கும்
உள் அழிக்கல் ஆகா அரண். 1

சென்ற இடத்தால் செலவிடா, தீது ஒரீஇ,
நன்றின்பால் உய்ப்பது—அறிவு. 2

எப் பொருள் யார் யார் வாய்க் கேட்பினும், அப் பொருள்
மெய்ப் பொருள் காண்பது—அறிவு. 3

எண் பொருளவாகச் செலச் சொல்லி, தான் பிறர்வாய்
நுண் பொருள் காண்பது—அறிவு. 4

உலகம் தழீஇயது ஒட்பம்; மலர்தலும்
கூம்பலும் இல்லது—அறிவு. 5

எவ்வது உறைவது உலகம், உலகத்தொடு
அவ்வது உறைவது—அறிவு. 6

அறிவு உடையார் ஆவது அறிவார்; அறிவு இலார்
அஃது அறிகல்லாதவர். 7

அஞ்சுவது அஞ்சாமை பேதைமை; அஞ்சுவது
அஞ்சல், அறிவார் தொழில். 8

எதிரதாக் காக்கும் அறிவினார்க்கு இல்லை—
அதிர வருவதோர் நோய். 9

அறிவு உடையார் எல்லாம் உடையார்; அறிவு இலார்
என் உடையரேனும் இலர். 10

## 44. குற்றம் கடிதல்

செருக்கும், சினமும், சிறுமையும், இல்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து. 1

இவறலும், மாண்பு இறந்த மானமும், மாணா
உவகையும்,—ஏதம், இறைக்கு. 2

தினைத் துணையாம் குற்றம் வரினும், பனைத் துணையாக்
கொள்வர், பழி நாணுவார். 3

குற்றமே காக்க, பொருளாக—குற்றமே,
அற்றம் தரூஉம் பகை! 4

வரும் முன்னர்க் காவாதான் வாழ்க்கை, எரி முன்னர்
வைத்தூறு போல, கெடும். 5

தன் குற்றம் நீக்கி, பிறர் குற்றம் காண்கிற்பின்,
என் குற்றம் ஆகும் இறைக்கு? 6

செயற்பால செய்யாது இவறியான் செல்வம்
உயற்பாலது அன்றிக் கெடும். 7

பற்று உள்ளம் என்னும் இவறன்மை, எற்றுள்ளும்
எண்ணப்படுவது ஒன்று அன்று. 8

வியவற்க, எஞ்ஞான்றும் தன்னை! நயவற்க,
நன்றி பயவா வினை! 9

காதல காதல் அறியாமை உய்க்கிற்பின்,
ஏதில, ஏதிலார் நூல். 10

## 45. பெரியாரைத் துணைக்கோடல்

அறன் அறிந்து மூத்த அறிவு உடையார் கேண்மை,
திறன் அறிந்து, தேர்ந்து, கொளல். 1

உற்ற நோய் நீக்கி, உறுஅமை முன் காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல். 2

அரியவற்றுள் எல்லாம் அரிதே — பெரியாரைப்
பேணித் தமராக் கொளல். 3

தம்மின் பெரியார் தமரா ஒழுகுதல்,
வன்மையுள் எல்லாம் தலை. 4

சூழ்வார் கண் ஆக ஒழுகலான், மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல். 5

தக்கார் இனத்தனாய், தான் ஒழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்தது இல். 6

இடிக்கும் துணையாரை ஆள்வாரை, யாரே,
கெடுக்கும் தகைமையவர்? 7

இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்,
கெடுப்பார் இலானும், கெடும். 8

முதல் இலார்க்கு ஊதியம் இல்லை;—மதலை ஆம்
சார்பு இலார்க்கு இல்லை, நிலை. 9

பல்லார் பகை கொளலின் பத்து அடுத்த தீமைத்தே —
நல்லார் தொடர் கைவிடல். 10

## 46. சிற்றினம் சேராமை

சிற்றினம் அஞ்சும், பெருமை; சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்துவிடும். 1

நிலத்து இயல்பான் நீர் திரிந்து, அற்று ஆகும்;—மாந்தர்க்கு
இனத்து இயல்பது ஆகும், அறிவு. 2

மனத்தான் ஆம், மாந்தர்க்கு உணர்ச்சி; இனத்தான் ஆம்,
'இன்னான்' எனப்படும் சொல். 3

மனத்து உளது போலக் காட்டி, ஒருவற்கு
இனத்து உளது ஆகும்—அறிவு. 4

மனம் தூய்மை, செய்வினை தூய்மை, இரண்டும்
இனம் தூய்மை தூவா வரும். 5

மனம் தூயார்க்கு எச்சம் நன்று ஆகும்; இனம் தூயார்க்கு
இல்லை, நன்று ஆகா வினை. 6

மன நலம் மன் உயிர்க்கு ஆக்கம்; இன நலம்
எல்லாப் புகழும் தரும். 7

மன நலம் நன்கு உடையர் ஆயினும், சான்றோர்க்கு
இன நலம் ஏமாப்பு உடைத்து. 8

மன நலத்தின் ஆகும், மறுமை; மற்று அஃதும்
இன நலத்தின் ஏமாப்பு உடைத்து. 9

நல் இனத்தின் ஊங்கும் துணை இல்லை; தீ இனத்தின்
அல்லற்படுப்பதூஉம் இல். 10

## 47. தெரிந்து செயல் வகை

அழிவதூஉம் ஆவதூஉம் ஆகி, வழிபயக்கும்
ஊதியமும் சூழ்ந்து, செயல்! 1

தெரிந்த இனத்தொடு தேர்ந்து எண்ணிச் செய்வார்க்கு
அரும் பொருள் யாது ஒன்றும் இல். 2

ஆக்கம் கருதி, முதல் இழக்கும் செய்வினை
ஊக்கார், அறிவு உடையார். 3

தெளிவு இலதனைத் தொடங்கார்—இளிவு என்னும்
ஏதப்பாடு அஞ்சுபவர். 4

வகை அறச் சூழாது எழுதல், பகைவரைப்
பாத்திப் படுப்பது ஓர் ஆறு. 5

செய்தக்க அல்ல செயக் கெடும்; செய்தக்க
செய்யாமையானும் கெடும். 6

எண்ணித் துணிக, கருமம்; துணிந்தபின்,
எண்ணுவம் என்பது இழுக்கு. 7

ஆற்றின் வருந்தா வருத்தம், பலர் நின்று
போற்றினும், பொத்துப்படும். 8

நன்று ஆற்றலுள்ளும் தவறு உண்டு—அவரவர்
பண்பு அறிந்து ஆற்றாக்கடை. 9

எள்ளாத எண்ணிச் செயல்வேண்டும்—தம்மொடு
கொள்ளாத கொள்ளாது உலகு. 10

## 48. வலி அறிதல்

வினை வலியும், தன் வலியும், மாற்றான் வலியும்,
துணை வலியும், தூக்கிச் செயல். 1

ஒல்வது அறிவது அறிந்து, அதன்கண் தங்கிச்
செல்வார்க்குச் செல்லாதது இல். 2

உடைத் தம் வலி அறியார், ஊக்கத்தின் ஊக்கி,
இடைக்கண் முரிந்தார் பலர். 3

அமைந்து ஆங்கு ஒழுகான், அளவு அறியான், தன்னை
வியந்தான், விரைந்து கெடும். 4

பீலி பெய் சாகாடும் அச்சு இறும்—அப் பண்டம்
சால மிகுத்துப் பெயின். 5

நுனிக் கொம்பர் ஏறினார் அஃது இறந்து ஊக்கின்,
உயிர்க்கு இறுதி ஆகிவிடும். 6

ஆற்றின் அளவு அறிந்து ஈக; அது பொருள்
போற்றி வழங்கும் நெறி. 7

ஆகு ஆறு அளவு இட்டிது ஆயினும், கேடு இல்லை—
போகு ஆறு அகலாக்கடை. 8

அளவு அறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல
இல்லாகி, தோன்றாக் கெடும். 9

உள வரை தூக்காத ஒப்புரவு ஆண்மை,
வள வரை வல்லைக் கெடும். 10

## 49. காலம் அறிதல்

பகல் வெல்லும், கூகையைக் காக்கை;—இகல் வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும், பொழுது. 1

பருவத்தொடு ஒட்ட ஒழுகல்—திருவினைத்
தீராமை ஆர்க்கும் கயிறு. 2

அரு வினை என்ப உளவோ—கருவியான்
காலம் அறிந்து செயின்? 3

ஞாலம் கருதினும், கைகூடும்—காலம்
கருதி, இடத்தான் செயின். 4

காலம் கருதி இருப்பர்—கலங்காது
ஞாலம் கருதுபவர். 5

ஊக்கம் உடையான் ஒடுக்கம் பொரு தகர்
தாக்கற்குப் பேரும் தகைத்து. 6

பொள்ளென ஆங்கே புறம் வேரார்; காலம் பார்த்து,
உள் வேர்ப்பர், ஒள்ளியவர். 7

செறுநரைக் காணின் சுமக்க; இறுவரை
காணின் கிழக்காம் தலை. 8

எய்தற்கு அரியது இயைந்தக்கால், அந் நிலையே
செய்தற்கு அரிய செயல். 9

கொக்கு ஒக்க, கூம்பும் பருவத்து; மற்று அதன்
குத்து ஒக்க, சீர்த்த இடத்து. 10

## 50. இடன் அறிதல்

தொடங்கற்க எவ் வினையும்; எள்ளற்க—முற்றும்
இடம் கண்டபின் அல்லது! 1

முரண் சேர்ந்த மொய்ம்பினவர்க்கும் அரண் சேர்ந்து ஆம்
ஆக்கம் பலவும் தரும். 2

ஆற்றாரும் ஆற்றி அடுப—இடன் அறிந்து
போற்றார்கண் போற்றிச் செயின். 3

எண்ணியார் எண்ணம் இழப்பர்—இடன் அறிந்து
துன்னியார் துன்னிச் செயின். 4

நெடும் புனலுள் வெல்லும் முதலை; அடும், புனலின்
நீங்கின், அதனைப் பிற. 5

கடல் ஓடா, கால் வல் நெடுந் தேர்; கடல் ஓடும்
நாவாயும் ஓடா, நிலத்து. 6

அஞ்சாமை அல்லால், துணை வேண்டா — எஞ்சாமை
எண்ணி இடத்தான் செயின். 7

சிறு படையான் செல் இடம் சேரின், உறு படையான்
ஊக்கம் அழிந்து விடும். 8

சிறை நலனும் சீரும் இலர் எனினும், மாந்தர்
உறை நிலத்தொடு ஒட்டல் அரிது. 9

கால் ஆழ் களரின் நரி அடும், கண் அஞ்சா
வேல் ஆள் முகத்த களிறு. 10

## 51. தெரிந்து தெளிதல்

அறம், பொருள், இன்பம், உயிர் அச்சம், நான்கின்
திறம் தெரிந்து தேறப்படும். 1

குடிப் பிறந்து, குற்றத்தின் நீங்கி, வடுப் பரியும்
நாண் உடையான்கட்டே தெளிவு. 2

அரிய கற்று, ஆசு அற்றார்கண்ணும், தெரியுங்கால்
இன்மை அரிதே, வெளிறு. 3

குணம் நாடி, குற்றமும் நாடி, அவற்றுள்
மிகை நாடி, மிக்க கொளல்! 4

பெருமைக்கும், ஏனைச் சிறுமைக்கும், தத்தம்
கருமமே கட்டளைக் கல். 5

அற்றாரைத் தேறுதல் ஓம்புக; மற்று அவர்
பற்று இலர்; நாணார் பழி. 6

காதன்மை கந்தா, அறிவு அறியார்த் தேறுதல்
பேதைமை எல்லாம் தரும். 7

தேரான், பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா இடும்பை தரும். 8

தேறற்க யாரையும், தேராது; தேர்ந்த பின்,
தேறுக, தேறும் பொருள். 9

தேரான் தெளிவும், தெளிந்தான்கண் ஐயுறவும்,
தீரா இடும்பை தரும். 10

## 52. தெரிந்து வினையாடல்

நன்மையும் தீமையும் நாடி, நலம் புரிந்த
தன்மையான் ஆளப்படும். 1

வாரி பெருக்கி, வளம் படுத்து, உற்றவை
ஆராய்வான் செய்க வினை! 2

அன்பு, அறிவு, தேற்றம், அவா இன்மை, இந் நான்கும்
நன்கு உடையான்கட்டே தெளிவு. 3

எனை வகையான் தேறியக்கண்ணும், வினை வகையான்
வேறாகும் மாந்தர் பலர். 4

அறிந்து, ஆற்றி, செய்கிற்பாற்கு அல்லால், வினைதான்
சிறந்தான் என்று ஏவற்பாற்று அன்று. 5

செய்வானை நாடி, வினை நாடி, காலத்தோடு
எய்த உணர்ந்து, செயல்! 6

'இதனை, இதனால், இவன் முடிக்கும்' என்று ஆய்ந்து,
அதனை அவன்கண் விடல்! 7

வினைக்கு உரிமை நாடிய பின்றை, அவனை
அதற்கு உரியன் ஆகச் செயல்! 8

வினைக்கண் வினையுடையான் கேண்மை வேறாக
நினைப்பானை நீங்கும், திரு. 9

நாள்தோறும் நாடுக, மன்னன் — வினைசெய்வான்
கோடாமைக் கோடாது உலகு. 10

## 53. சுற்றம் தழால்

பற்று அற்றகண்ணும் பழமை பாராட்டுதல்
சுற்றத்தார்கண்ணே உள. 1

விருப்பு அறாச் சுற்றம் இயையின், அருப்பு அறா
ஆக்கம் பலவும் தரும். 2

அளவளாவு இல்லாதான் வாழ்க்கை — குளவளாக்
கோடு இன்றி நீர் நிறைந்தற்று. 3

சுற்றத்தால் சுற்றப்பட ஒழுகல், செல்வம்தான்
பெற்றத்தால் பெற்ற பயன். 4

கொடுத்தலும் இன் சொலும் ஆற்றின், அடுக்கிய
சுற்றத்தால் சுற்றப்படும். 5

பெருங்கொடையான், பேணான் வெகுளி, அவனின்
மருங்கு உடையார் மா நிலத்து இல். 6

காக்கை கரவா கரைந்து உண்ணும்; ஆக்கமும்
அன்ன நீரார்க்கே உள. 7

பொது நோக்கான், வேந்தன் வரிசையா நோக்கின்,
அது நோக்கி வாழ்வார் பலர். 8

தமர் ஆகி, தன்-துறந்தார் சுற்றம் அமராமைக்
காரணம் இன்றி வரும். 9

உழைப் பிரிந்து காரணத்தின் வந்தானை, வேந்தன்
இழைத்து இருந்து, எண்ணிக் கொளல். 10

## 54. பொச்சாவாமை

இறந்த வெகுளியின் தீதே—சிறந்த
உவகை மகிழ்ச்சியின் சோர்வு. 1

பொச்சாப்புக் கொல்லும் புகழை—அறிவினை
நிச்சம் நிரப்புக் கொன்றாங்கு. 2

பொச்சாப்பார்க்கு இல்லை புகழ்மை; அது உலகத்து
எப் பால் நூலோர்க்கும் துணிவு. 3

அச்சம் உடையார்க்கு அரண் இல்லை; ஆங்கு இல்லை,
பொச்சாப்பு உடையார்க்கு நன்கு. 4

முன்னுறக் காவாது இழுக்கியான், தன் பிழை,
பின் ஊறு, இரங்கிவிடும். 5

இழுக்காமை யார்மாட்டும், என்றும், வழுக்காமை
வாயின், அஃது ஒப்பது இல். 6

அரிய என்று ஆகாத இல்லை— பொச்சாவாக்
கருவியான் போற்றிச் செயின். 7

புகழ்ந்தவை போற்றிச் செயல் வேண்டும்; செய்யாது
இகழ்ந்தார்க்கு எழுமையும் இல். 8

இகழ்ச்சியின் கெட்டாரை உள்ளுக— தாம் தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து! 9

உள்ளியது எய்தல் எளிதுமன்— மற்றும் தான்
உள்ளியது உள்ளப்பெறின். 10

## 55. செங்கோன்மை

ஓர்ந்து, கண்ணோடாது, இறை புரிந்து, யார்மாட்டும்
தேர்ந்து, செய்வஃதே முறை. 1

வான் நோக்கி வாழும் உலகு எல்லாம்;—மன்னவன்
கோல் நோக்கி வாழும் குடி. 2

அந்தணர் நூற்கும், அறத்திற்கும், ஆதியாய்
நின்றது—மன்னவன் கோல். 3

குடி தழீஇக் கோல் ஓச்சும் மா நில மன்னன்
அடி தழீஇ நிற்கும், உலகு. 4

இயல்புளிக் கோல் ஓச்சும் மன்னவன் நாட்ட—
பெயலும் விளையுளும் தொக்கு. 5

வேல் அன்று, வென்றி தருவது; மன்னவன்
கோல்; அதூஉம், கோடாது எனின். 6

இறை காக்கும், வையகம் எல்லாம்; அவனை
முறை காக்கும், முட்டாச் செயின். 7

எண் பதத்தான் ஓரா, முறை செய்யா, மன்னவன்
தண் பதத்தான் தானே கெடும். 8

குடி புறங்காத்து, ஓம்பி, குற்றம் கடிதல்
வடு அன்று; வேந்தன் தொழில். 9

கொலையின், கொடியாரை, வேந்து ஒறுத்தல் பைங்கூழ்
களை கட்டதனொடு நேர். 10

## 56. கொடுங்கோன்மை

கொலை மேற்கொண்டாரின் கொடிதே—அலை மேற்கொண்டு
அல்லவை செய்து ஒழுகும் வேந்து. 1

வேலொடு நின்றான், 'இடு' என்றது போலும்—
கோலொடு நின்றான் இரவு. 2

நாள்தொறும் நாடி, முறைசெய்யா மன்னவன்
நாள்தொறும் நாடு கெடும். 3

கூழும் குடியும் ஒருங்கு இழக்கும்—கோல் கோடி,
சூழாது, செய்யும் அரசு. 4

அல்லற்பட்டு, ஆற்றாது, அழுத கண்ணீர் அன்றே—
செல்வத்தைத் தேய்க்கும் படை. 5

மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை; அஃது இன்றேல்,
மன்னுவாம், மன்னர்க்கு ஒளி. 6

துளி இன்மை ஞாலத்திற்கு எற்று? அற்றே, வேந்தன்
அளி இன்மை வாழும் உயிர்க்கு. 7

இன்மையின் இன்னது, உடைமை—முறை செய்யா
மன்னவன் கோற்கீழ்ப் படின். 8

முறை கோடி மன்னவன் செய்யின், உறை கோடி
ஒல்லாது, வானம் பெயல். 9

ஆ பயன் குன்றும்; அறுதொழிலோர் நூல் மறப்பர்;—
காவலன் காவான் எனின். 10

## 57. வெருவந்த செய்யாமை

தக்காங்கு நாடி, தலைச்செல்லா வண்ணத்தால்
ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து. 1

கடிது ஓச்சி, மெல்ல எறிக—நெடிது ஆக்கம்
நீங்காமை வேண்டுபவர். 2

வெருவந்த செய்து ஒழுகும் வெங்கோலன் ஆயின்,
ஒருவந்தம் ஒல்லைக் கெடும். 3

'இறை கடியன்' என்று உரைக்கும் இன்னுச் சொல் வேந்தன்
உறை கடுகி ஒல்லைக் கெடும். 4

அருஞ் செவ்வி, இன்னு முகத்தான் பெருஞ் செல்வம்
பேஎய் கண்டன்னது உடைத்து. 5

கடுஞ் சொல்லன், கண் இலன் ஆயின், நெடுஞ் செல்வம்
நீடு இன்றி, ஆங்கே கெடும். 6

கடு மொழியும், கையிகந்த தண்டமும், வேந்தன்
அடு முரண் தேய்க்கும் அரம். 7

இனத்து ஆற்றி, எண்ணாத வேந்தன் சினத்து ஆற்றிச்
சீறின், சிறுகும் திரு. 8

செரு வந்த போழ்தில், சிறை செய்யா வேந்தன்,
வெருவந்து, வெய்து கெடும். 9

கல்லார்ப் பிணிக்கும், கடுங்கோல்; அது அல்லது
இல்லை, நிலக்குப் பொறை. 10

## 58. கண்ணோட்டம்

கண்ணோட்டம் என்னும் கழிபெருங் காரிகை
உண்மையான், உண்டு இவ் உலகு. 1

கண்ணோட்டத்து உள்ளது உலகியல்; அஃது இலார்
உண்மை நிலக்குப் பொறை. 2

பண் என் ஆம், பாடற்கு இயைபு இன்றேல்?—கண் என் ஆம்,
கண்ணோட்டம் இல்லாத கண்? 3

உளபோல் முகத்து எவன் செய்யும்—அளவினால்
கண்ணோட்டம் இல்லாத கண்? 4

கண்ணிற்கு அணிகலம் கண்ணோட்டம்; அஃது இன்றேல்,
புண் என்று உணரப்படும். 5

மண்ணோடு இயைந்த மரத்து அனையர்—கண்ணோடு
இயைந்து, கண்ணோடாதவர். 6

கண்ணோட்டம் இல்லவர் கண் இலர்; கண் உடையார்
கண்ணோட்டம் இன்மையும் இல். 7

கருமம் சிதையாமல் கண்ணோட வல்லார்க்கு
உரிமை உடைத்து, இவ் உலகு. 8

ஒறுத்தாற்றும் பண்பினார்கண்ணும், கண்ணோடிப்
பொறுத்தாற்றும் பண்பே தலை. 9

பெயக் கண்டும், நஞ்சு உண்டு அமைவர்—நயத்தக்க
நாகரிகம் வேண்டுபவர். 10

## 59. ஒற்று ஆடல்

ஒற்றும், உரை சான்ற நூலும், இவை இரண்டும்
தெற்றென்க, மன்னவன் கண். 1

எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை எஞ்ஞான்றும்
வல்லறிதல், வேந்தன் தொழில். 2

ஒற்றினான் ஒற்றி, பொருள் தெரியா மன்னவன்
கொற்றம் கொளக் கிடந்தது இல். 3

வினைசெய்வார், தம் சுற்றம், வேண்டாதார், என்று ஆங்கு
அனைவரையும் ஆராய்வது—ஒற்று. 4

கடாஅ உருவொடு கண் அஞ்சாது, யாண்டும்
உகாஅமை வல்லதே—ஒற்று. 5

துறந்தார் படிவத்தர் ஆகி இறந்து, ஆராய்ந்து,
என் செயினும் சோர்வு இலது—ஒற்று. 6

மறைந்தவை கேட்க வற்று ஆகி, அறிந்தவை
ஐயப்பாடு இல்லதே—ஒற்று. 7

ஒற்று ஒற்றித் தந்த பொருளையும், மற்றும் ஓர்
ஒற்றினால் ஒற்றி, கொளல். 8

ஒற்று ஒற்று உணராமை ஆள்க; உடன் மூவர்
சொல் தொக்க தேறப்படும். 9

சிறப்பு அறிய ஒற்றின்கண் செய்யற்க; செய்யின்,
புறப்படுத்தான் ஆகும், மறை. 10

## 60. ஊக்கம் உடைமை

உடையர் எனப்படுவது ஊக்கம்; அஃது இல்லார்
உடையது உடையரோ, மற்று? 1

உள்ளம் உடைமை உடைமை; பொருள் உடைமை
நில்லாது நீங்கிவிடும். 2

'ஆக்கம் இழந்தேம்!' என்று அல்லாவார்—ஊக்கம்
ஒருவந்தம் கைத்து உடையார். 3

ஆக்கம் அதர் வினாய்ச் செல்லும்—அசைவு இலா
ஊக்கம் உடையானுழை. 4

வெள்ளத்து அனைய, மலர் நீட்டம்;—மாந்தர்தம்
உள்ளத்து அனையது, உயர்வு. 5

உள்ளுவது எல்லாம் உயர்வு உள்ளல்! மற்று அது
தள்ளினும், தள்ளாமை நீர்த்து. 6

சிதைவிடத்து ஒல்கார், உரவோர்;—புதை அம்பின்
பட்டுப் பாடு ஊன்றும் களிறு. 7

உள்ளம் இலாதவர் எய்தார்—'உலகத்து
வள்ளியம்' என்னும் செருக்கு. 8

பரியது கூர்ங் கோட்டது ஆயினும், யானை
வெரூஉம், புலி தாக்குறின். 9

உரம் ஒருவற்கு உள்ள வெறுக்கை; அஃது இல்லார்
மரம்; மக்கள் ஆதலே வேறு. 10

## 61. மடி இன்மை

குடி என்னும் குன்று விளக்கம், மடி என்னும்
மாசு ஊர, மாய்ந்து கெடும். 1

மடியை மடியா ஒழுகல்—குடியைக்
குடியாக வேண்டுபவர்! 2

மடி மடிக் கொண்டு ஒழுகும் பேதை பிறந்த
குடி மடியும், தன்னினும் முந்து. 3

குடி மடிந்து, குற்றம் பெருகும்—மடி மடிந்து,
மாண்ட உஞற்று இலவர்க்கு. 4

நெடு நீர், மறவி, மடி, துயில், நான்கும்
கெடும் நீரார் காமக் கலன். 5

படி உடையார் பற்று அமைந்தக்கண்ணும், மடி உடையார்
மாண் பயன் எய்தல் அரிது. 6

இடி புரிந்து, எள்ளும் சொல் கேட்பர்—மடி புரிந்து
மாண்ட உஞற்று இலவர் 7

மடிமை குடிமைக்கண் தங்கின், தன் ஒன்னார்க்கு
அடிமை புகுத்திவிடும். 8

குடி, ஆண்மையுள் வந்த குற்றம், ஒருவன்
மடி ஆண்மை மாற்ற, கெடும். 9

மடி இலா மன்னவன் எய்தும்—அடி அளந்தான்
தாஅயது எல்லாம் ஒருங்கு. 10

## 62. ஆள்வினை உடைமை

அருமை உடைத்து என்று அசாவாமை வேண்டும்;
பெருமை முயற்சி தரும். 1

வினைக்கண் வினைகெடல் ஓம்பல்—வினைக் குறை
தீர்ந்தாரின் தீர்ந்தன்று, உலகு! 2

தாளாண்மை என்னும் தகைமைக்கண் தங்கிற்றே—
வேளாண்மை என்னும் செருக்கு. 3

தாளாண்மை இல்லாதான் வேளாண்மை, பேடி கை
வாள் ஆண்மை போல, கெடும். 4

இன்பம் விழையான், வினை விழைவான் தன் கேளிர்
துன்பம் துடைத்து ஊன்றும் தூண். 5

முயற்சி திருவினை ஆக்கும்; முயற்று இன்மை
இன்மை புகுத்திவிடும். 6

'மடி உளாள், மா முகடி' என்ப; மடி இலான்
தாள் உளாள், தாமரையினாள். 7

பொறி இன்மை யார்க்கும் பழி அன்று; அறிவு அறிந்து,
ஆள்வினை இன்மை பழி. 8

தெய்வத்தான் ஆகாதுஎனினும், முயற்சி தன்
மெய் வருத்தக் கூலி தரும். 9

ஊழையும் உப்பக்கம் காண்பர் — உலைவு இன்றித்
தாழாது உஞற்றுபவர். 10

## 63. இடுக்கண் அழியாமை

இடுக்கண் வருங்கால் நகுக! அதனை
அடுத்து ஊர்வது அஃது ஒப்பது இல். 1

வெள்ளத்து அனைய இடும்பை, அறிவு உடையான்
உள்ளத்தின் உள்ள, கெடும். 2

இடும்பைக்கு இடும்பை படுப்பர் — இடும்பைக்கு
இடும்பை படாஅதவர். 3

மடுத்த வாய் எல்லாம் பகடு அன்னான் உற்ற
இடுக்கண் இடர்ப்பாடு உடைத்து. 4

அடுக்கி வரினும், அழிவு இலான் உற்ற
இடுக்கண் இடுக்கண் படும். 5

'அற்றேம்!' என்று அல்லற்படுபவோ — 'பெற்றேம்!' என்று
ஓம்புதல் தேற்றாதவர். 6

'இலக்கம், உடம்பு இடும்பைக்கு' என்று, கலக்கத்தைக்
கையாறாக் கொள்ளாதாம், மேல். 7

இன்பம் விழையான், 'இடும்பை இயல்பு' என்பான்,
துன்பம் உறுதல் இலன். 8

இன்பத்துள் இன்பம் விழையாதான், துன்பத்துள்
துன்பம் உறுதல் இலன். 9

இன்னாமை இன்பம் எனக் கொளின், ஆகும், தன்
ஒன்னார் விழையும் சிறப்பு. 10

# 2. அமைச்சு இயல்

## 64. அமைச்சு

கருவியும், காலமும், செய்கையும், செய்யும்
அருவினையும், மாண்டது—அமைச்சு. 1

வன்கண், குடிகாத்தல், கற்று அறிதல், ஆள்வினையோடு,
ஐந்துடன் மாண்டது—அமைச்சு. 2

பிரித்தலும், பேணிக்கொளலும், பிரிந்தார்ப்
பொருத்தலும், வல்லது—அமைச்சு. 3

தெரிதலும், தேர்ந்து செயலும், ஒருதலையாச்
சொல்லலும் வல்லது—அமைச்சு. 4

அறன் அறிந்து, ஆன்று அமைந்த சொல்லான், எஞ்ஞான்றும்
திறன் அறிந்தான், தேர்ச்சித் துணை. 5

மதிநுட்பம் நூலோடு உடையார்க்கு அதி நுட்பம்
யா உள, முன் நிற்பவை? 6

செயற்கை அறிந்தக்கடைத்தும், உலகத்து
இயற்கை அறிந்து, செயல்! 7

அறி கொன்று, அறியான் எனினும், உறுதி
உழையிருந்தான் கூறல் கடன். 8

பழுது எண்ணும் மந்திரியின், பக்கத்துள் தெவ் ஓர்
எழுபது கோடி உறும். 9

முறைப்படச் சூழ்ந்தும், முடிவிலவே செய்வர்—
திறப்பாடு இலாஅதவர். 10

## 65. சொல் வன்மை

'நா நலம்' என்னும் நலன் உடைமை; அந் நலம்
யா நலத்து உள்ளதூஉம் அன்று. 1

ஆக்கமும், கேடும், அதனால் வருதலால்,
காத்து ஓம்பல், சொல்லின்கண் சோர்வு. 2

கேட்டார்ப் பிணிக்கும் தகை அவாய், கேளாரும்
வேட்ப, மொழிவது ஆம்—சொல். 3

திறன் அறிந்து சொல்லுக, சொல்லை; அறனும்
பொருளும் அதனின் ஊங்கு இல். 4

சொல்லுக சொல்லை—பிறிது ஓர் சொல் அச் சொல்லை
வெல்லும் சொல் இன்மை அறிந்து. 5

வேட்பத் தாம் சொல்லி, பிறர் சொல் பயன் கோடல்
மாட்சியின் மாசு அற்றார் கோள். 6

சொலல் வல்லன், சோர்வு இலன், அஞ்சான், அவனை
இகல் வெல்லல் யார்க்கும் அரிது. 7

விரைந்து தொழில் கேட்கும் ஞாலம்—நிரந்து இனிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின். 8

பல சொல்லக் காமுறுவர் மன்ற—மாசு அற்ற
சில சொல்லல் தேற்றாதவர். 9

இணர் ஊழ்த்தும் நாறா மலர் அனையர்—கற்றது
உணர விரித்து உரையாதார். 10

## 66. வினைத் தூய்மை

துணை நலம் ஆக்கம் தரூஉம்; வினை நலம்
வேண்டிய எல்லாம் தரும். 1

என்றும் ஒருவுதல் வேண்டும்—புகழொடு
நன்றி பயவா வினை. 2

ஓஒதல் வேண்டும், ஒளி மாழ்கும் செய்வினை—
'ஆஅதும்!' என்னுமவர். 3

இடுக்கண் படினும், இளிவந்த செய்யார்—
நடுக்கு அற்ற காட்சியவர். 4

'எற்று!' என்று இரங்குவ செய்யற்க; செய்வானேல்,
மற்று அன்ன செய்யாமை நன்று. 5

ஈன்றாள் பசி காண்பான்ஆயினும், செய்யற்க—
சான்றோர் பழிக்கும் வினை. 6

பழி மலைந்து எய்திய ஆக்கத்தின், சான்றோர்
கழி நல்குரவே தலை. 7

கடிந்த கடிந்து ஒரார் செய்தார்க்கு அவைதாம்
முடிந்தாலும், பீழை தரும். 8

அழக் கொண்ட எல்லாம் அழப் போம்; இழப்பினும்,
பிற்பயக்கும், நற்பாலவை. 9

சலத்தால் பொருள் செய்து ஏமாக்கல்—பசு மண்-
கலத்துள் நீர் பெய்து, இரீஇயற்று. 10

## 67. வினைத் திட்பம்

வினைத் திட்பம் என்பது ஒருவன் மனத் திட்பம்;
மற்றைய எல்லாம் பிற. 1

ஊறு ஒரால், உற்றபின் ஒல்காமை, இவ் இரண்டின்
ஆறு என்பர்—ஆய்ந்தவர் கோள். 2

கடைக் கொட்கச் செய்தக்கது ஆண்மை; இடைக் கொட்கின்,
எற்ரு விழுமம் தரும். 3

சொல்லுதல் யார்க்கும் எளிய; அரிய ஆம்,
சொல்லிய வண்ணம் செயல். 4

வீறு எய்தி மாண்டார் வினைத் திட்பம், வேந்தன்கண்
ஊறு எய்தி, உள்ளப்படும். 5

எண்ணிய எண்ணியாங்கு எய்துப—எண்ணியார்
திண்ணியர் ஆகப்பெறின். 6

உருவு கண்டு எள்ளாமை வேண்டும்—உருள் பெருந் தேர்க்கு
அச்சு ஆணி அன்ஞர் உடைத்து. 7

கலங்காது கண்ட வினைக்கண், துளங்காது
தூக்கம் கடிந்து செயல். 8

துன்பம் உறவரினும் செய்க, துணிவு ஆற்றி—
இன்பம் பயக்கும் வினை. 9

எனைத் திட்பம் எய்தியக்கண்ணும், வினைத் திட்பம்
வேண்டாரை வேண்டாது, உலகு. 10

## 68. வினை செயல் வகை

சூழ்ச்சி முடிவு துணிவு எய்தல்; அத் துணிவு
தாழ்ச்சியுள் தங்குதல் தீது. 1

தூங்குக, தூங்கிச் செயற்பால; தூங்கற்க,
தூங்காது செய்யும் வினை. 2

ஒல்லும் வாய் எல்லாம் வினை நன்றே; ஒல்லாக்கால்,
செல்லும் வாய் நோக்கிச் செயல். 3

வினை, பகை, என்று இரண்டின் எச்சம், நினையுங்கால்,
தீ எச்சம் போலத் தெறும். 4

பொருள், கருவி, காலம், வினை, இடனொடு ஐந்தும்
இருள் தீர எண்ணிச் செயல்! 5

முடிவும், இடையூறும், முற்றியாங்கு எய்தும்
படுபயனும், பார்த்துச் செயல்! 6

செய்வினை செய்வான் செயல்முறை, அவ் வினை
உள் அறிவான் உள்ளம் கொளல். 7

வினையான் வினை ஆக்கிக்கோடல்—நனை கவுள்
யானையால் யானை யாத்தற்று. 8

நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே—
ஒட்டாரை ஒட்டிக்கொளல். 9

உறை சிறியார் உள் நடுங்கல் அஞ்சி, குறை பெறின்,
கொள்வர் பெரியார்ப் பணிந்து. 10

## 69. தூது

அன்பு உடைமை, ஆன்ற குடிப்பிறத்தல், வேந்து அவாம்
பண்பு உடைமை,—தூது உரைப்பான் பண்பு. 1

அன்பு, அறிவு, ஆராய்ந்த சொல்வன்மை—தூது உரைப்பார்க்கு
இன்றியமையாத மூன்று. 2

நூலாருள் நூல் வல்லன் ஆகுதல்—வேலாருள்
வென்றி வினை உரைப்பான் பண்பு. 3

அறிவு, உரு, ஆராய்ந்த கல்வி, இம் மூன்றன்
செறிவு உடையான் செல்க, வினைக்கு. 4

தொகச் சொல்லி, தூவாத நீக்கி, நகச் சொல்லி,
நன்றி பயப்பது ஆம்—தூது. 5

கற்று, கண் அஞ்சான், செலச் சொல்லி, காலத்தால்
தக்கது அறிவது ஆம்—தூது. 6

கடன் அறிந்து, காலம் கருதி, இடன் அறிந்து,
எண்ணி, உரைப்பான் தலை. 7

தூய்மை, துணைமை, துணிவு உடைமை, இம் மூன்றின்
வாய்மை—வழி உரைப்பான் பண்பு. 8

விடு மாற்றம் வேந்தர்க்கு உரைப்பான்—வடு மாற்றம்
வாய் சோரா வன்கணவன். 9

இறுதி பயப்பினும், எஞ்சாது, இறைவற்கு
உறுதி பயப்பது ஆம்—தூது. 10

## 70. மன்னரைச் சேர்ந்து ஒழுகல்

அகலாது, அணுகாது, தீக் காய்வார் போல்க—
இகல் வேந்தர்ச் சேர்ந்து ஒழுகுவார். 1

மன்னர் விழைப விழையாமை, மன்னரான்
மன்னிய ஆக்கம் தரும். 2

போற்றின் அரியவை போற்றல்—கடுத்தபின்,
தேற்றுதல் யார்க்கும் அரிது! 3

செவிச் சொல்லும், சேர்ந்த நகையும், அவித்து ஒழுகல்—
ஆன்ற பெரியார் அகத்து! 4

எப் பொருளும் ஓரார், தொடரார், மற்று அப் பொருளை
விட்டக்கால் கேட்க, மறை! 5

குறிப்பு அறிந்து, காலம் கருதி, வெறுப்பு இல
வேண்டுப, வேட்பச் சொலல்! 6

வேட்பன சொல்லி, வினை இல எஞ்ஞான்றும்
கேட்பினும், சொல்லா விடல்! 7

'இளையர், இன முறையர்' என்று இகழார், நின்ற
ஒளியொடு ஒழுகப்படும். 8

'கொளப்பட்டேம்' என்று எண்ணி, கொள்ளாத செய்யார்—
துளக்கு அற்ற காட்சியவர். 9

பழையம் எனக் கருதி, பண்பு அல்ல செய்யும்
கெழுதகைமை கேடு தரும். 10

## 71. குறிப்பு அறிதல்

கூறாமை நோக்கி, குறிப்பு அறிவான், எஞ்ஞான்றும்
மாறா நீர் வையக்கு அணி. 1

ஐயப்படாஅது அகத்தது உணர்வானைத்
தெய்வத்தொடு ஒப்பக் கொளல்! 2

குறிப்பின் குறிப்பு உணர்வாரை, உறுப்பினுள்
யாது கொடுத்தும், கொளல்! 3

குறித்தது கூறாமைக் கொள்வாரொடு, ஏனை
உறுப்பு ஓரனையரால், வேறு. 4

குறிப்பின் குறிப்பு உணராஆயின், உறுப்பினுள்
என்ன பயத்தவோ, கண்? 5

அடுத்தது காட்டும் பளிங்குபோல், நெஞ்சம்
கடுத்தது காட்டும், முகம். 6

முகத்தின் முதுக்குறைந்தது உண்டோ—உவப்பினும்
காயினும், தான் முந்துறும்? 7

முகம் நோக்கி நிற்க அமையும்—அகம் நோக்கி,
உற்றது உணர்வார்ப் பெறின். 8

பகைமையும் கேண்மையும் கண் உரைக்கும்—கண்ணின்
வகைமை உணர்வார்ப் பெறின். 9

'நுண்ணியம்' என்பார் அளக்கும் கோல், காணுங்கால்,
கண் அல்லது, இல்லை பிற. 10

## 72. அவை அறிதல்

அவை அறிந்து, ஆராய்ந்து, சொல்லுக—சொல்லின்
தொகை அறிந்த தூய்மையவர்! 1

இடை தெரிந்து, நன்கு உணர்ந்து, சொல்லுக—சொல்லின்
நடை தெரிந்த நன்மையவர்! 2

அவை அறியார், சொல்லல் மேற்கொள்பவர் சொல்லின்
வகை அறியார்; வல்லதூஉம் இல். 3

ஒளியார்முன் ஒள்ளியர் ஆதல்! வெளியார்முன்
வான் சுதை வண்ணம் கொளல்! 4

'நன்று' என்றவற்றுள்ளும் நன்றே—முதுவருள்
முந்து கிளவாச் செறிவு. 5

ஆற்றின் நிலைதளர்ந்தற்றே—வியன் புலம்
ஏற்று, உணர்வார்முன்னர் இழுக்கு. 6

கற்று அறிந்தார் கல்வி விளங்கும்—கசடு அறச்
சொல் தெரிதல் வல்லார் அகத்து. 7

உணர்வது உடையார்முன் சொல்லல்—வளர்வதன்
பாத்தியுள் நீர் சொரிந்தற்று. 8

புல் அவையுள் பொச்சாந்தும் சொல்லற்க—நல் அவையுள்
நன்கு செலச் சொல்லுவார்! 9

அங்கணத்துள் உக்க அமிழ்து அற்றால்—தம் கணத்தர்
அல்லார்முன் கோட்டி கொளல்! 10

## 73. அவை அஞ்சாமை

வகை அறிந்து, வல் அவை, வாய்சோரார்—சொல்லின்
தொகை அறிந்த தூய்மையவர். 1

கற்றருள் கற்றார் எனப்படுவர்—கற்றார்முன்
கற்ற செலச் சொல்லுவார். 2

பகையகத்துச் சாவார் எளியர்; அரியர்,
அவையகத்து அஞ்சாதவர். 3

கற்றார்முன் கற்ற செலச் சொல்லி, தாம் கற்ற,
மிக்காருள், மிக்க கொள்ளல்! 4

ஆற்றின், அளவு அறிந்து கற்க—அவை அஞ்சா
மாற்றம் கொடுத்தற்பொருட்டு! 5

வாளொடு என், வன்கண்ணர் அல்லார்க்கு?—நூலொடு என்,
நுண் அவை அஞ்சுபவர்க்கு? 6

பகையகத்துப் பேடி கை ஒள் வாள்—அவையகத்து
அஞ்சுமவன் கற்ற நூல். 7

பல்லவை கற்றும், பயம் இலரே—நல் அவையுள்
நன்கு செலச் சொல்லாதார். 8

'கல்லாதவரின் கடை' என்ப—'கற்று அறிந்தும்,
நல்லார் அவை அஞ்சுவார்.' 9

உளர் எனினும், இல்லாரொடு ஒப்பர்—களன் அஞ்சி,
கற்ற செலச் சொல்லாதார். 10

## 74. நாடு

தள்ளா விளையுளும், தக்காரும், தாழ்வு இலாச்
செல்வரும், சேர்வது—நாடு. 1

பெரும் பொருளான் பெட்டக்கது ஆகி, அருங் கேட்டால்,
ஆற்ற விளைவது—நாடு. 2

பொறை ஒருங்கு மேல்வருங்கால் தாங்கி, இறைவற்கு
இறை ஒருங்கு நேர்வது—நாடு. 3

உறு பசியும், ஓவாப் பிணியும், செறு பகையும்,
சேராது இயல்வது—நாடு. 4

பல் குழுவும், பாழ்செய்யும் உட்பகையும், வேந்து அலைக்கும்
கொல் குறும்பும், இல்லது—நாடு. 5

கேடு அறியா, கெட்ட இடத்தும் வளம் குன்றா
நாடு, என்ப, நாட்டின் தலை. 6

இரு புனலும், வாய்ந்த மலையும், வரு புனலும்,
வல் அரணும்,—நாட்டிற்கு உறுப்பு. 7

பிணி இன்மை, செல்வம், விளைவு, இன்பம், ஏமம்—
அணி என்ப, நாட்டிற்கு—இவ் ஐந்து. 8

நாடு என்ப, நாடா வளத்தன; நாடு அல்ல,
நாட, வளம் தரும் நாடு. 9

ஆங்கு அமைவு எய்தியக்கண்ணும் பயம் இன்றே—
வேந்து அமைவு இல்லாத நாடு. 10

## 75. அரண்

ஆற்றுபவர்க்கும் அரண் பொருள்; அஞ்சித் தற்
போற்றுபவர்க்கும் பொருள். 1

மணி நீரும், மண்ணும், மலையும், அணி நிழற்
காடும், உடையது—அரண். 2

'உயர்வு, அகலம், திண்மை, அருமை, இந் நான்கின்
அமைவு அரண்' என்று உரைக்கும் நூல். 3

சிறு காப்பின் பேர் இடத்தது ஆகி, உறு பகை
ஊக்கம் அழிப்பது—அரண். 4

கொளற்கு அரிதாய், கொண்ட கூழ்த்து ஆகி, அகத்தார்
நிலைக்கு எளிது ஆம் நீரது—அரண். 5

எல்லாப் பொருளும் உடைத்தாய், இடத்து உதவும்
நல் ஆள் உடையது—அரண். 6

முற்றியும், முற்றாது எறிந்தும், அறைப்படுத்தும்,
பற்றற்கு அரியது—அரண். 7

முற்று ஆற்றி முற்றியவரையும், பற்று ஆற்றி,
பற்றியார் வெல்வது—அரண். 8

முனை முகத்து மாற்றலர் சாய, வினைமுகத்து
வீறு எய்தி மாண்டது—அரண். 9

எனை மாட்சித்து ஆகியக்கண்ணும், வினை மாட்சி
இல்லார்கண் இல்லது—அரண். 10

## 76. பொருள் செயல் வகை

பொருள் அல்லவரைப் பொருளாகச் செய்யும்
பொருள் அல்லது, இல்லை பொருள். 1

இல்லாரை எல்லாரும் எள்ளுவர்; செல்வரை
எல்லாரும் செய்வர், சிறப்பு. 2

பொருள் என்னும் பொய்யா விளக்கம், இருள் அறுக்கும்—
எண்ணிய தேயத்துச் சென்று. 3

அறன் ஈனும்; இன்பமும் ஈனும்;—திறன் அறிந்து,
தீது இன்றி வந்த பொருள். 4

அருளொடும், அன்பொடும் வாராப் பொருள் ஆக்கம்
புல்லார், புரள விடல்! 5

உறு பொருளும், உல்கு பொருளும், தன் ஒன்னார்த்
தெறு பொருளும்,—வேந்தன் பொருள். 6

அருள் என்னும் அன்பு ஈன் குழவி, பொருள் என்னும்
செல்வச் செவிலியால், உண்டு. 7

குன்று ஏறி, யானைப் போர் கண்டற்றால்—தன் கைத்து ஒன்று
உண்டாகச் செய்வான் வினை. 8

செய்க பொருளை! செறுநர் செருக்கு அறுக்கும்
எஃகு அதனின் கூரியது இல். 9

ஒண் பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு, எண் பொருள்—
ஏனை இரண்டும் ஒருங்கு. 10

## 77. படை மாட்சி

உறுப்பு அமைந்து, ஊறு அஞ்சா, வெல் படை—வேந்தன்
வெறுக்கையுள் எல்லாம் தலை. 1

உலைவு இடத்து ஊறு அஞ்சா வன்கண், தொலைவு இடத்து,
தொல் படைக்கு அல்லால், அரிது. 2

ஒலித்தக்கால் என் ஆம், உவரி எலிப்பகை?
நாகம் உயிர்ப்ப, கெடும். 3

அழிவு இன்று, அறைபோகாது ஆகி, வழிவந்த
வன்கணதுவே—படை. 4

கூற்று உடன்று மேல்வரினும், கூடி, எதிர் நிற்கும்
ஆற்றலதுவே—படை. 5

மறம், மானம், மாண்ட வழிச் செலவு, தேற்றம்,
என நான்கே ஏமம், படைக்கு. 6

தார் தாங்கிச் செல்வது தானை—தலைவந்த
போர் தாங்கும் தன்மை அறிந்து. 7

அடல்தகையும், ஆற்றலும், இல் எனினும், தானை
படைத் தகையான் பாடு பெறும். 8

சிறுமையும், செல்லாத் துனியும், வறுமையும்,
இல்லாயின் வெல்லும், படை. 9

நிலை மக்கள் சால உடைத்துஎனினும், தானை
தலைமக்கள் இல்வழி இல். 10

## 78. படைச் செருக்கு

என்னை முன் நில்லன்மின்—தெவ்விர்!—பலர், என்னை
முன் நின்று கல் நின்றவர். 1

கான முயல் எய்த அம்பினில், யானை
பிழைத்த வேல் ஏந்தல் இனிது. 2

பேர் ஆண்மை என்ப, தறுகண்; ஒன்று உற்றக்கால்,
ஊராண்மை மற்று அதன் எஃகு. 3

கை வேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய் வேல் பறியா, நகும். 4

விழித்த கண் வேல்கொண்டு எறிய, அழித்து இமைப்பின்,
ஓட்டு அன்றோ, வன்கணவர்க்கு? 5

விழுப்புண் படாத நாள் எல்லாம் வழுக்கினுள்
வைக்கும், தன் நாளை எடுத்து. 6

சுழலும் இசை வேண்டி, வேண்டா உயிரார்
கழல் யாப்புக் காரிகை நீர்த்து. 7

உறின், உயிர் அஞ்சா மறவர், இறைவன்
செறினும், சீர் குன்றல் இலர். 8

இழைத்தது இகவாமைச் சாவாரை, யாரே,
பிழைத்தது ஒறுக்கிற்பவர்? 9

புரந்தார் கண் நீர் மல்கச் சாகிற்பின், சாக்காடு
இரந்து கோள்-தக்கது உடைத்து. 10

## 79. நட்பு

செயற்கு அரிய யா உள, நட்பின்?—அதுபோல்
வினைக்கு அரிய யா உள, காப்பு? 1

நிறை நீர, நீரவர் கேண்மை, பிறை; மதிப்
பின் நீர, பேதையார் நட்பு. 2

நவில்தொறும் நூல் நயம் போலும்—பயில்தொறும்,
பண்பு உடையாளர் தொடர்பு. 3

நகுதற்பொருட்டு அன்று, நட்டல்; மிகுதிக்கண்
மேற்சென்று இடித்தற்பொருட்டு. 4

புணர்ச்சி, பழகுதல், வேண்டா; உணர்ச்சிதான்
நட்பு ஆம் கிழமை தரும். 5

முகம் நக, நட்பது நட்பு அன்று; நெஞ்சத்து
அகம் நக, நட்பது—நட்பு. 6

அழிவினவை நீக்கி, ஆறு உய்த்து, அழிவின்கண்
அல்லல் உழப்பது ஆம்—நட்பு. 7

உடுக்கை இழந்தவன் கை போல, ஆங்கே
இடுக்கண் களைவது ஆம்—நட்பு. 8

'நட்பிற்கு வீற்றிருக்கை யாது?' எனின், கொட்பு இன்றி
ஒல்லும்வாய் ஊன்றும் நிலை. 9

'இனையர், இவர் எமக்கு; இன்னம் யாம்' என்று
புனையினும், புல்லென்னும்—நட்பு. 10

## 80. நட்பு ஆராய்தல்

நாடாது நட்டலின் கேடு இல்லை; நட்டபின்,
வீடு இல்லை, நட்பு ஆள்பவர்க்கு. 1

ஆய்ந்து ஆய்ந்து கொள்ளாதான் கேண்மை, கடைமுறை,
தான் சாம் துயரம் தரும். 2

குணனும், குடிமையும், குற்றமும், குன்றா
இனனும், அறிந்து யாக்க நட்பு. 3

குடிப் பிறந்து, தன்கண் பழி நாணுவானைக்
கொடுத்தும் கொளல் வேண்டும், நட்பு. 4

அழச் சொல்லி, அல்லது இடித்து, வழக்கு அறிய
வல்லார் நட்பு ஆய்ந்து கொளல்! 5

கேட்டினும் உண்டு, ஓர் உறுதி—கிளைஞரை
நீட்டி அளப்பது ஓர் கோல். 6

ஊதியம் என்பது ஒருவற்குப் பேதையார்
கேண்மை ஒரீஇ விடல். 7

உள்ளற்க, உள்ளம் சிறுகுவ! கொள்ளற்க,
அல்லற்கண் ஆற்றறுப்பார் நட்பு! 8

கெடும் காலைக் கைவிடுவார் கேண்மை, அடும் காலை
உள்ளினும், உள்ளம் சுடும். 9

மருவுக, மாசு அற்றார் கேண்மை! ஒன்று ஈத்தும்
ஒருவுக, ஒப்பு இலார் நட்பு! 10

## 81. பழமை

'பழமை எனப்படுவது யாது?' எனின், யாதும்
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு. 1

நட்பிற்கு உறுப்புக் கெழுதகைமை; மற்று அதற்கு
உப்பு ஆதல் சான்றோர் கடன். 2

பழகிய நட்பு எவன் செய்யும்—கெழுதகைமை
செய்தாங்கு அமையாக்கடை? 3

விழைதகையான் வேண்டியிருப்பர்—கெழுதகையான்
கேளாது நட்டார் செயின். 4

பேதைமை ஒன்றோ, பெருங் கிழமை என்று உணர்க—
நோ தக்க நட்டார் செயின்! 5

எல்லைக்கண் நின்றார் துறவார்—தொலைவிடத்தும்,
தொல்லைக்கண் நின்றார் தொடர்பு. 6

அழிவந்த செய்யினும், அன்பு அறார்—அன்பின்
வழிவந்த கேண்மையவர். 7

கேள் இழுக்கம் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு
நாள், இழுக்கம் நட்டார் செயின். 8

கெடாஅர், வழிவந்த கேண்மையார் கேண்மை
விடாஅர் விழையும், உலகு. 9

விழையார் விழையப்படுப—பழையார்கண்
பண்பின் தலைப்பிரியாதார். 10

## 82. தீ நட்பு

பருகுவார் போலினும், பண்பு இலார் கேண்மை
பெருகலின் குன்றல் இனிது. 1

உறின் நட்டு, அறின் ஒரூஉம் ஒப்பு இலார் கேண்மை
பெறினும், இழப்பினும், என்? 2

உறுவது சீர்தூக்கும் நட்பும், பெறுவது
கொள்வாரும், கள்வரும், நேர். 3

அமரகத்து ஆற்றறுக்கும் கல்லா மா அன்னர்
தமரின், தனிமை தலை. 4

செய்து ஏமம் சாரா, சிறியவர் புன் கேண்மை
எய்தலின் எய்தாமை நன்று. 5

பேதை பெருங் கெழீஇ நட்பின், அறிவு உடையார்
ஏதின்மை கோடி உறும். 6

நகை வகையர் ஆகிய நட்பின், பகைவரான்
பத்து அடுத்த கோடி உறும். 7

ஒல்லும் கருமம் உடற்றுபவர் கேண்மை
சொல்லாடார், சோரவிடல்! 8

கனவினும் இன்னாது மன்னோ—வினை வேறு
சொல் வேறு பட்டார் தொடர்பு! 9

எனைத்தும் குறுகுதல் ஓம்பல்—மனைக் கெழீஇ,
மன்றில் பழிப்பார் தொடர்பு! 10

## 83. கூடா நட்பு

சீர் இடம் காணின், எறிதற்குப் பட்டடை—
நேரா நிரந்தவர் நட்பு. 1

இனம் போன்று இனம் அல்லார் கேண்மை, மகளிர்
மனம் போல, வேறுபடும். 2

பல நல்ல கற்றக்கடைத்தும், மனம் நல்லர்
ஆகுதல் மாணார்க்கு அரிது. 3

முகத்தின் இனிய நகாஅ, அகத்து இன்னா
வஞ்சரை அஞ்சப்படும். 4

மனத்தின் அமையாதவரை, எனைத்து ஒன்றும்,
சொல்லினான் தேறற்பாற்று அன்று. 5

நட்டார்போல் நல்லவை சொல்லினும், ஒட்டார் சொல்
ஒல்லை உணரப்படும். 6

சொல் வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க—வில் வணக்கம்
தீங்கு குறித்தமையான்! 7

தொழுத கையுள்ளும் படை ஒடுங்கும்; ஒன்னார்
அழுத கண்ணீரும், அனைத்து. 8

மிகச் செய்து, தம் எள்ளுவாரை நகச் செய்து,
நட்பினுள் சாப் புல்லற்பாற்று. 9

பகை நட்பு ஆம் காலம் வருங்கால், முகம் நட்டு,
அகம் நட்பு ஒரீஇவிடல்! 10

## 84. பேதைமை

பேதைமை என்பது ஒன்று; 'யாது?' எனின், ஏதம் கொண்டு,
ஊதியம் போகவிடல். 1

பேதைமையுள் எல்லாம் பேதைமை, காதன்மை
கை அல்லதன்கண் செயல். 2

நாணாமை, நாடாமை, நார் இன்மை, யாது ஒன்றும்
பேணாமை,—பேதை தொழில். 3

ஓதி உணர்ந்தும், பிறர்க்கு உரைத்தும், தான் அடங்காப்
பேதையின் பேதையார் இல். 4

ஒருமைச் செயல் ஆற்றும், பேதை—எழுமையும்
தான் புக்கு அழுந்தும் அளறு! 5

பொய்படும் ஒன்றோ; புனை பூணும்;—கை அறியாப்
பேதை வினை மேற்கொளின். 6

ஏதிலார் ஆர, தமர் பசிப்பர்—பேதை
பெருஞ் செல்வம் உற்றக்கடை. 7

மையல் ஒருவன் களித்தற்றால்—பேதை தன்
கை ஒன்று உடைமை பெறின். 8

பெரிது இனிது, பேதையார் கேண்மை—பிரிவின்கண்
பீழை தருவது ஒன்று இல்! 9

கழாஅக் கால் பள்ளியுள் வைத்தற்றால்—சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல். 10

## 85. புல்லறிவு ஆண்மை

அறிவு இன்மை, இன்மையுள் இன்மை; பிறிது இன்மை
இன்மையா வையாது, உலகு. 1

அறிவு இலான் நெஞ்சு உவந்து ஈதல், பிறிது யாதும்
இல்லை, பெறுவான் தவம். 2

அறிவு இலார் தாம் தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்கும் செய்தல் அரிது. 3

'வெண்மை எனப்படுவது யாது?' எனின், 'ஒண்மை
உடையம் யாம்!' என்னும் செருக்கு. 4

கல்லாத மேற்கொண்டு ஒழுகல், கசடு அற
வல்லதூஉம், ஐயம் தரும். 5

அற்றம் மறைத்தலோ புல்லறிவு—தம்வயின்
குற்றம் மறையாவழி. 6

அரு மறை சோரும் அறிவு இலான் செய்யும்,
பெரு மிறை, தானே தனக்கு. 7

ஏவவும் செய்கலான், தான் தேறான், அவ் உயிர்
போஒம் அளவும் ஓர் நோய். 8

காணாதாற் காட்டுவான் தான் காணான்; காணாதான்
கண்டான் ஆம், தான் கண்ட ஆறு. 9

உலகத்தார், 'உண்டு' என்பது 'இல்' என்பான் வையத்து
அலகையா வைக்கப்படும். 10

## 86. இகல்

இகல் என்ப—எல்லா உயிர்க்கும் பகல் என்னும்
பண்புஇன்மை பாரிக்கும் நோய். 1

பகல் கருதிப் பற்றா செயினும், இகல் கருதி,
இன்னா செய்யாமை தலை. 2

இகல் என்னும் எவ்வ நோய் நீக்கின், தவல் இல்லாத்
தா இல் விளக்கம் தரும். 3

இன்பத்துள் இன்பம் பயக்கும்—இகல் என்னும்
துன்பத்துள் துன்பம் கெடின். 4

இகல் எதிர் சாய்ந்து ஒழுக வல்லாரை, யாரே,
மிகல் ஊக்கும் தன்மையவர்? 5

இகலின் மிகல் இனிது என்பவன் வாழ்க்கை
தவலும் கெடலும் நணித்து. 6

மிகல் மேவல் மெய்ப்பொருள் காணார்—இகல் மேவல்
இன்னா அறிவினவர். 7

இகலிற்கு எதிர் சாய்தல் ஆக்கம்; அதனை
மிகல் ஊக்கின், ஊக்குமாம் கேடு. 8

இகல்காணான், ஆக்கம் வருங்கால்; அதனை
மிகல் காணும், கேடு தரற்கு. 9

இகலான் ஆம், இன்னாத எல்லாம்; நகலான் ஆம்,
நல் நயம் என்னும் செருக்கு. 10

## 87. பகை மாட்சி

வலியார்க்கு மாறு ஏற்றல் ஓம்புக! ஓம்பா,
மெலியார்மேல் மேக, பகை! 1

அன்பு இலன்; ஆன்ற துணை இலன்; தான் துவ்வான்;—
என் பரியும், ஏதிலான் துப்பு? 2

அஞ்சும்; அறியான்; அமைவு இலன்; ஈகலான்;—
தஞ்சம் எளியன், பகைக்கு. 3

நீங்கான் வெகுளி; நிறை இலன்;—எஞ்ஞான்றும்,
யாங்கணும், யார்க்கும், எளிது. 4

வழி நோக்கான்; வாய்ப்பன செய்யான்; பழி நோக்கான்;
பண்பு இலன்;—பற்றார்க்கு இனிது. 5

காணாச் சினத்தான், கழி பெருங் காமத்தான்,—
பேணாமை பேணப்படும். 6

கொடுத்தும் கொளல்வேண்டும் மன்ற— அடுத்து இருந்து,
மாணாத செய்வான் பகை. 7

குணன் இலனாய், குற்றம் பலஆயின், மாற்றார்க்கு,
இனன் இலன் ஆம்; ஏமாப்பு உடைத்து. 8

செறுவார்க்குச் சேண், இகவா, இன்பம்—அறிவு இலா
அஞ்சும் பகைவர்ப் பெறின். 9

கல்லான் வெகுளும் சிறு பொருள், எஞ்ஞான்றும்,
ஒல்லானை ஒல்லாது, ஒளி. 10

## 88. பகைத் திறம் தெரிதல்

பகை என்னும் பண்புஇலதனை, ஒருவன்
நகையேயும், வேண்டற்பாற்று அன்று. 1

வில் ஏர் உழவர் பகை கொளினும், கொள்ளற்க—
சொல் ஏர் உழவர் பகை! 2

ஏமுற்றவரினும் ஏழை—தமியனாய்ப்
பல்லார் பகை கொள்பவன். 3

பகை நட்பாக் கொண்டு ஒழுகும் பண்பு உடையாளன்
தகைமைக்கண் தங்கிற்று, உலகு. 4

தன் துணை இன்றால்; பகை இரண்டால்; தான் ஒருவன்
இன் துணையாக் கொள்க, அவற்றின் ஒன்று! 5

தேறினும், தேறாவிடினும், அழிவின்கண்
தேறான் பகாஅன் விடல்! 6

நோவற்க, நொந்தது அறியார்க்கு! மேவற்க,
மென்மை, பகைவரகத்து! 7

வகை அறிந்து, தற் செய்து, தற் காப்ப, மாயும்—
பகைவர்கண் பட்ட செருக்கு. 8

இளைதாக முள்மரம் கொல்க—களையுநர்
கை கொல்லும் காழ்த்த இடத்து! 9

உயிர்ப்ப உளர் அல்லர் மன்ற—செயிர்ப்பவர்
செம்மல் சிதைக்கலாதார். 10

## 89. உட்பகை

நிழல் நீரும் இன்னாத இன்னா—தமர் நீரும்,
இன்னா ஆம், இன்னா செயின். 1

வாள்போல் பகைவரை அஞ்சற்க! அஞ்சுக,
கேள்போல் பகைவர் தொடர்பு! 2

உட்பகை அஞ்சித் தற் காக்க! உலைவு இடத்து,
மட்பகையின் மாணத் தெறும். 3

மனம் மாணா உட்பகை தோன்றின், இனம் மாணா
ஏதம் பலவும் தரும். 4

உறல் முறையான் உட்பகை தோன்றின், இறல் முறையான்
ஏதம் பலவும் தரும். 5

ஒன்றுமை ஒன்றியார்கண் படின், எஞ்ஞான்றும்,
பொன்றுமை ஒன்றல் அரிது. 6

செப்பின் புணர்ச்சிபோல் கூடினும், கூடாதே—
உட்பகை உற்ற குடி. 7

அரம் பொருத பொன் போல, தேயும் உரம், பொருது—
உட்பகை உற்ற குடி. 8

எட் பகவு அன்ன சிறுமைத்தேஆயினும்,
உட்பகை, உள்ளது ஆம், கேடு. 9

உடம்பாடு இலாதவர் வாழ்க்கை—குடங்கருள்
பாம்போடு உடன் உறைந்தற்று. 10

## 90. பெரியாரைப் பிழையாமை

ஆற்றுவார் ஆற்றல் இகழாமை; போற்றுவார்
போற்றலுள் எல்லாம் தலை. 1

பெரியாரைப் பேணுது ஒழுகின், பெரியாரால்
பேரா இடும்பை தரும். 2

கெடல்வேண்டின், கேளாது செய்க—அடல் வேண்டின்,
ஆற்றுபவர்கண் இழுக்கு! 3

கூற்றத்தைக் கையால் விளித்தற்றுல்—ஆற்றுவார்க்கு
ஆற்றுதார் இன்னு செயல். 4

யாண்டுச் சென்று யாண்டும் உளர் ஆகார்—வெந் துப்பின்
வேந்து செறப்பட்டவர். 5

எரியான் சுடப்படினும், உய்வு உண்டாம்; உய்யார்,
பெரியார்ப் பிழைத்து ஒழுகுவார். 6

வகை மாண்ட வாழ்க்கையும், வான் பொருளும் என் ஆம்—
தகை மாண்ட தக்கார் செறின்? 7

குன்று அன்னுர் குன்ற மதிப்பின், குடியொடு,
நின்றன்னுர் மாய்வர், நிலத்து. 8

ஏந்திய கொள்கையார் சீறின், இடை முரிந்து,
வேந்தனும் வேந்து கெடும். 9

இறந்து அமைந்த சார்புஉடையர் ஆயினும், உய்யார்—
சிறந்து அமைந்த சீரார் செறின். 10

## 91. பெண்வழிச் சேறல்

மனை விழைவார் மாண் பயன் எய்தார்; வினை விழைவார்
வேண்டாப் பொருளும் அது. 1

பேணாது பெண் விழைவான் ஆக்கம் பெரியதோர்
நாணாக, நாணுத் தரும். 2

இல்லாள்கண் தாழ்ந்த இயல்புஇன்மை, எஞ்ஞான்றும்,
நல்லாருள் நாணுத் தரும். 3

மனையாளை அஞ்சும் மறுமைஇலாளன்
வினை ஆண்மை வீறு எய்தல் இன்று. 4

இல்லாளை அஞ்சுவான், அஞ்சும் மற்று எஞ்ஞான்றும்,
நல்லார்க்கு நல்ல செயல். 5

இமையாரின் வாழினும், பாடு இலரே—இல்லாள்
அமை ஆர் தோள் அஞ்சுபவர். 6

பெண் ஏவல் செய்து ஒழுகும் ஆண்மையின், நாணுடைப்
பெண்ணே பெருமை உடைத்து. 7

நட்டார் குறை முடியார்; நன்று ஆற்றார்;—நன்னுதலாள்
பெட்டாங்கு ஒழுகுபவர். 8

அறவினையும், ஆன்ற பொருளும், பிற வினையும்,—
பெண் ஏவல் செய்வார்கண் இல். 9

எண் சேர்ந்த நெஞ்சத்து, இடன் உடையார்க்கு, எஞ்ஞான்றும்,
பெண் சேர்ந்து ஆம் பேதைமை இல். 10

## 92. வரைவு இல் மகளிர்

அன்பின் விழையார், பொருள் விழையும் ஆய்தொடியார்
இன் சொல் இழுக்குத் தரும். 1

பயன் தூக்கிப் பண்பு உரைக்கும் பண்பு இல் மகளிர்
நயன் தூக்கி, நள்ளா விடல்! 2

பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம்—இருட்டு அறையில்
ஏதில் பிணம் தழீஇயற்று. 3

பொருட்பொருளார் புன் நலம் தோயார்—அருட் பொருள்
ஆயும் அறிவினவர். 4

பொது நலத்தார் புன் நலம் தோயார்—மதி நலத்தின்
மாண்ட அறிவினவர். 5

தம் நலம் பாரிப்பார் தோயார்—தகை செருக்கி,
புன் நலம் பாரிப்பார் தோள். 6

நிறை நெஞ்சம் இல்லவர் தோய்வர்—பிற நெஞ்சில்
பேணி, புணர்பவர் தோள். 7

'ஆயும் அறிவினர் அல்லார்க்கு அணங்கு' என்ப—
'மாய மகளிர் முயக்கு.' 8

வரைவு இலா மாண் இழையார் மென் தோள்—புரை இலாப்
பூரியர்கள் ஆழும் அளறு. 9

இரு மனப் பெண்டிரும், கள்ளும், கவறும்,—
திரு நீக்கப்பட்டார் தொடர்பு. 10

## 93. கள் உண்ணுமை

உட்கப் படாஅர், ஒளி இழப்பர், எஞ்ஞான்றும்—
கள்-காதல் கொண்டு ஒழுகுவார். 1

உண்ணற்க, கள்ளை! உணில், உண்க, சான்ரேரான்
எண்ணப்பட வேண்டாதார்! 2

ஈன்ருள் முகத்தேயும் இன்னுதால்; என், மற்றுச்
சான்ரேர் முகத்துக் களி! 3

நாண் என்னும் நல்லாள் புறங்கொடுக்கும்—கள் என்னும்
பேணுப் பெருங் குற்றத்தார்க்கு. 4

கை அறியாமை உடைத்தே—பொருள் கொடுத்து,
மெய் அறியாமை கொளல். 5

துஞ்சினர் செத்தாரின் வேறு அல்லர்;—எஞ்ஞான்றும்
நஞ்சு உண்பார் கள் உண்பவர். 6

உள் ஒற்றி உள்ளூர் நகப்படுவர்—எஞ்ஞான்றும்
கள் ஒற்றிக் கண் சாய்பவர். 7

'களித்து அறியேன்' என்பது கைவிடுக—நெஞ்சத்து
ஒளித்ததூஉம் ஆங்கே மிகும்! 8

களித்தானைக் காரணம் காட்டுதல்—கீழ் நீர்க்
குளித்தானைத் தீத் துரீஇயற்று. 9

கள் உண்ணுப் போழ்தில், களித்தானைக் காணுங்கால்,
உள்ளான்கொல், உண்டதன் சோர்வு! 10

## 94. சூது

வேண்டற்க, வென்றிடினும் சூதினை! வென்றதூஉம்,
தூண்டில்-பொன் மீன் விழுங்கியற்று. 1

ஒன்று எய்தி, நூறு இழக்கும் சூதர்க்கும் உண்டாம்கொல்—
நன்று எய்தி வாழ்வதோர் ஆறு? 2

உருள் ஆயம் ஓவாது கூறின், பொருள் ஆயம்
போஒய்ப் புறமே படும். 3

சிறுமை பல செய்து, சீர் அழிக்கும் சூதின்,
வறுமை தருவது ஒன்று இல். 4

கவறும், கழகமும், கையும், தருக்கி
இவறியார்—இல்லாகியார். 5

அகடு ஆரார்; அல்லல் உழப்பர்;—சூது என்னும்
முகடியான் மூடப்பட்டார். 6

பழகிய செல்வமும் பண்பும் கெடுக்கும்—
கழகத்துக் காலை புகின். 7

பொருள் கெடுத்து, பொய் மேற்கொளீஇ, அருள் கெடுத்து,
அல்லல் உழப்பிக்கும்—சூது. 8

உடை, செல்வம், ஊண், ஒளி, கல்வி, என்று ஐந்தும்
அடையாவாம்—ஆயம் கொளின். 9

இழத்தொறூஉம் காதலிக்கும் சூதேபோல், துன்பம்
உழத்தொறூஉம் காதற்று, உயிர். 10

## 95. மருந்து

மிகினும் குறையினும், நோய் செய்யும்—நூலோர்
வளி முதலா எண்ணிய மூன்று. 1

மருந்து என வேண்டாவாம், யாக்கைக்கு—அருந்தியது,
அற்றது போற்றி உணின். 2

அற்றால், அளவு அறிந்து உண்க! அஃது உடம்பு
பெற்றான் நெடிது உய்க்கும் ஆறு. 3

அற்றது அறிந்து, கடைப்பிடித்து, மாறு அல்ல
துய்க்க, துவரப் பசித்து! 4

மாறுபாடு இல்லாத உண்டி மறுத்து உண்ணின்,
ஊறுபாடு இல்லை, உயிர்க்கு. 5

இழிவு அறிந்து உண்பான்கண் இன்பம்போல், நிற்கும்,
கழி பேர் இரையான்கண் நோய். 6

தீ அளவு அன்றித் தெரியான் பெரிது உண்ணின்,
நோய் அளவு இன்றிப் படும். 7

நோய் நாடி, நோய் முதல் நாடி, அது தணிக்கும்
வாய் நாடி, வாய்ப்பச் செயல்! 8

உற்றான் அளவும், பிணி அளவும், காலமும்,
கற்றான், கருதிச் செயல்! 9

உற்றவன், தீர்ப்பான், மருந்து, உழைச்செல்வான், என்று
அப் பால் நாற் கூற்றே—மருந்து. 10

## 3. ஒழிபு இயல்

### 96. குடிமை

இற் பிறந்தார்கண் அல்லது இல்லை— இயல்பாகச்
செப்பமும் நாணும் ஒருங்கு. 1

ஒழுக்கமும், வாய்மையும், நாணும், இம் மூன்றும்
இழுக்கார்—குடிப் பிறந்தார். 2

நகை, ஈகை, இன் சொல், இகழாமை, நான்கும்
வகை என்ப—வாய்மைக் குடிக்கு. 3

அடுக்கிய கோடி பெறினும், குடிப் பிறந்தார்
குன்றுவ செய்தல் இலர். 4

வழங்குவது உள்வீழ்ந்தக்கண்ணும், பழங்குடி
பண்பின் தலைப்பிரிதல் இன்று. 5

சலம் பற்றிச் சால்பு இல செய்யார்—'மாசு அற்ற
குலம் பற்றி வாழ்தும்' என்பார். 6

குடிப்பிறந்தார்கண்—விளங்கும்—குற்றம், விசும்பின்
மதிக்கண் மறுப்போல், உயர்ந்து. 7

நலத்தின்கண் நார் இன்மை தோன்றின், அவனைக்
குலத்தின்கண் ஐயப்படும். 8

நிலத்தில் கிடந்தமை கால் காட்டும்;—காட்டும்,
குலத்தில் பிறந்தார் வாய்ச் சொல். 9

நலம் வேண்டின், நாண் உடைமை வேண்டும்; குலம் வேண்டின்,
வேண்டுக, யார்க்கும் பணிவு! 10

## 97. மானம்

இன்றி அமையாச் சிறப்பினஆயினும்,
குன்ற வருப விடல்! 1

சீரினும், சீர் அல்ல செய்யாரே—சீரொடு
பேராண்மை வேண்டுபவர். 2

பெருக்கத்து வேண்டும், பணிதல்; சிறிய
சுருக்கத்து வேண்டும், உயர்வு. 3

தலையின் இழிந்த மயிர் அனையர்—மாந்தர்
நிலையின் இழிந்தக்கடை. 4

குன்றின் அனையாரும் குன்றுவர்—குன்றுவ
குன்றி அனைய செயின். 5

புகழ் இன்றால்; புத்தேள் நாட்டு உய்யாதால்; என் மற்று,
இகழ்வார்பின் சென்று நிலை? 6

ஒட்டார் பின் சென்று ஒருவன் வாழ்தலின், அந் நிலையே
கெட்டான் எனப்படுதல் நன்று. 7

மருந்தோ, மற்று ஊன் ஓம்பும் வாழ்க்கை—பெருந்தகைமை
பீடு அழிய வந்தஇடத்து? 8

மயிர் நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர் நீப்பர், மானம் வரின். 9

இளி வரின், வாழாத மானம் உடையார்
ஒளி தொழுது ஏத்தும், உலகு. 10

## 98. பெருமை

ஒளி, ஒருவற்கு உள்ள வெறுக்கை; இளி ஒருவற்கு,
'அஃது இறந்து வாழ்தும்' எனல். 1

பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்க்கும்; சிறப்பு ஒவ்வா,
செய்தொழில் வேற்றுமையான். 2

மேல் இருந்தும், மேல் அல்லார் மேல் அல்லர்; கீழ் இருந்தும்,
கீழ் அல்லார், கீழ் அல்லவர். 3

ஒருமை மகளிரே போல, பெருமையும்,
தன்னைத்தான் கொண்டு ஒழுகின், உண்டு. 4

பெருமை உடையவர் ஆற்றுவார்—ஆற்றின்
அருமை உடைய செயல். 5

சிறியார் உணர்ச்சியுள் இல்லை—'பெரியாரைப்
பேணிக் கொள்வேம்' என்னும் நோக்கு. 6

இறப்பே புரிந்த தொழிற்று ஆம்—சிறப்பும்தான்
சீர் அல்லவர்கண் படின். 7

பணியுமாம், என்றும் பெருமை; சிறுமை
அணியுமாம், தன்னை வியந்து. 8

பெருமை பெருமிதம் இன்மை; சிறுமை
பெருமிதம் ஊர்ந்துவிடல். 9

அற்றம் மறைக்கும் பெருமை; சிறுமைதான்
குற்றமே கூறிவிடும். 10

## 99. சான்ருண்மை

கடன் என்ப, நல்லவை எல்லாம்—கடன் அறிந்து,
சான்ருண்மை மேற்கொள்பவர்க்கு. 1

குண நலம், சான்ருேர் நலனே; பிற நலம்
எந் நலத்து உள்ளதூஉம் அன்று. 2

அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணுேட்டம், வாய்மையொடு
ஐந்து—சால்பு ஊன்றிய தூண். 3

கொல்லா நலத்தது, நோன்மை;—பிறர் தீமை
சொல்லா நலத்தது, சால்பு. 4

ஆற்றுவார் ஆற்றல் பணிதல்; அது சான்ருேர்
மாற்ருரை மாற்றும் படை. 5

'சால்பிற்குக் கட்டளை யாது?' எனின், தோல்வி
துலை அல்லார்கண்ணும் கொளல். 6

இன்ன செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால்,
என்ன பயத்ததோ, சால்பு? 7

இன்மை ஒருவற்கு இளிவு அன்று—சால்பு என்னும்
திண்மை உண்டாகப்பெறின். 8

ஊழி பெயரினும், தாம் பெயரார்—சான்ருண்மைக்கு
ஆழி எனப்படுவார். 9

சான்றவர் சான்ருண்மை குன்றின், இரு நிலம்தான்
தாங்காது மன்னோ, பொறை! 10

## 100. பண்பு உடைமை

எண் பதத்தால், எய்தல் எளிது என்ப, யார்மாட்டும்,
பண்பு உடைமை என்னும் வழக்கு. 1

அன்பு உடைமை, ஆன்ற குடிப்பிறத்தல், இவ் இரண்டும்
பண்பு உடைமை என்னும் வழக்கு. 2

உறுப்பு ஒத்தல் மக்கள் ஒப்பு அன்ருல்; வெறுத்தக்க
பண்பு ஒத்தல், ஒப்பது ஆம் ஒப்பு. 3

நயனெடு நன்றி புரிந்த பயன் உடையார்
பண்பு பாராட்டும், உலகு. 4

நகையுள்ளும் இன்னது, இகழ்ச்சி; பகையுள்ளும்
பண்பு உள, பாடு அறிவார்மாட்டு. 5

பண்பு உடையார்ப் பட்டு, உண்டு உலகம்; அது இன்றேல்,
மண் புக்கு மாய்வதுமன். 6

அரம் போலும் கூர்மையரேனும், மரம் போல்வர்,
மக்கட் பண்பு இல்லாதவர். 7

நண்பு ஆற்ருர் ஆகி, நயம் இல செய்வார்க்கும்,
பண்பு ஆற்ருராதல் கடை. 8

நகல் வல்லர் அல்லார்க்கு மா இரு ஞாலம்,
பகலும், பாற் பட்டன்று, இருள். 9

பண்பு இலான் பெற்ற பெருஞ் செல்வம்—நன் பால்
கலம் தீமையால் திரிந்தற்று. 10

## 101. நன்றி இல் செல்வம்

வைத்தான், வாய் சான்ற பெரும் பொருள்; அஃது உண்ணுன்
செத்தான், செயக்கிடந்தது இல். 1

'பொருளான் ஆம், எல்லாம்' என்று, ஈயாது இவறும்
மருளான், ஆம், மாணுப் பிறப்பு. 2

ஈட்டம் இவறி, இசை வேண்டா ஆடவர்
தோற்றம் நிலக்குப் பொறை. 3

எச்சம் என்று என் எண்ணும் கொல்லோ—ஒருவரால்
நச்சப் படாஅதவன்! 4

கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்கு, அடுக்கிய
கோடி உண்டாயினும், இல். 5

ஏதம், பெருஞ் செல்வம்—தான் துவ்வான், தக்கார்க்கு ஒன்று
ஈதல் இயல்பு இலாதான். 6

அற்ருர்க்கு ஒன்று ஆற்ருதான் செல்வம்—மிகு நலம்
பெற்ருள் தமியள் மூத்தற்று. 7

நச்சப்படாதவன் செல்வம்— நடுவூருள்
நச்சு மரம் பழுத்தற்று. 8

அன்பு ஒரீஇ, தற் செற்று, அறம் நோக்காது, ஈட்டிய
ஒண் பொருள் கொள்வார், பிறர். 9

சீருடைச் செல்வர் சிறு துனி—மாரி
வறம் கூர்ந்தனையது உடைத்து. 10

## 102. நாண் உடைமை

கருமத்தான் நாணுதல், நாணு; திருநுதல்
நல்லவர் நாணு, பிற. 1

ஊண், உடை, எச்சம், உயிர்க்கு எல்லாம் வேறு அல்ல;
நாண் உடைமை மாந்தர் சிறப்பு. 2

ஊனைக் குறித்த, உயிர் எல்லாம்; நாண் என்னும்
நன்மை குறித்தது, சால்பு. 3

அணி அன்ரே, நாண் உடைமை சான்ருேர்க்கு! அஃது இன்றேல்
பிணி அன்ரே, பீடு நடை! 4

'பிறர் பழியும் தம் பழியும் நாணுவார் நாணுக்கு
உறைபதி' என்னும், உலகு. 5

நாண் வேலி கொள்ளாது, மன்னே, வியல் ஞாலம்
பேணலர்—மேலாயவர். 6

நாணுல் உயிரைத் துறப்பர்; உயிர்ப்பொருட்டால்
நாண் துறவார்;—நாண் ஆள்பவர். 7

பிறர் நாணத்தக்கது தான் நாணுன்ஆயின்,
அறம் நாணத் தக்கது உடைத்து. 8

குலம் சுடும், கொள்கை பிழைப்பின்; நலம் சுடும்,
நாண் இன்மை நின்றக்கடை. 9

நாண் அகத்து இல்லார் இயக்கம்—மரப்பாவை
நாணுல் உயிர் மருட்டியற்று. 10

## 103. குடி செயல் வகை

'கருமம் செய'—ஒருவன்—'கைதூவேன்' என்னும்
பெருமையின், பீடு உடையது இல். 1

ஆள்வினையும், ஆன்ற அறிவும், என இரண்டின்
நீள் வினையான், நீளும் குடி. 2

'குடி செய்வல்' என்னும் ஒருவற்கு, தெய்வம்
மடி தற்று, தான் முந்துறும். 3

சூழாமல் தானே முடிவு எய்தும்—தம் குடியைத்
தாழாது உஞற்றுபவர்க்கு. 4

குற்றம் இலனாய், குடி செய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்றும், உலகு. 5

நல் ஆண்மை என்பது ஒருவற்குத் தான் பிறந்த
இல் ஆண்மை ஆக்கிக்கொளல். 6

அமரகத்து வன்கண்ணர் போல, தமரகத்தும்
ஆற்றுவார் மேற்றே, பொறை. 7

குடி செய்வார்க்கு இல்லை, பருவம்; மடி செய்து,
மானம் கருத, கெடும். 8

இடும்பைக்கே கொள்கலம்கொல்லோ—குடும்பத்தைக்
குற்றம் மறைப்பான் உடம்பு! 9

இடுக்கண் கால் கொன்றிட, வீழும்—அடுத்து ஊன்றும்
நல் ஆள் இலாத குடி. 10

## 104. உழவு

சுழன்றும் ஏர்ப் பின்னது, உலகம்; அதனால்,
உழந்தும் உழவே தலை. 1

உழுவார் உலகத்தார்க்கு ஆணி—அஃது ஆற்றாது
எழுவாரை எல்லாம் பொறுத்து. 2

உழுது, உண்டு, வாழ்வாரே வாழ்வார்; மற்று எல்லாம்
தொழுது, உண்டு, பின் செல்பவர். 3

பல குடை நீழலும் தம் குடைக்கீழ்க் காண்பர்—
அலகு உடை நீழலவர். 4

இரவார்; இரப்பார்க்கு ஒன்று ஈவர்—கரவாது
கை செய்து ஊண் மாலையவர். 5

உழவினர் கைம்மடங்கின், இல்லை—'விழைவதூஉம்
விட்டேம்' என்பார்க்கு நிலை. 6

தொடிப் புழுதி கஃசா உணக்கின், பிடித்து எருவும்
வேண்டாது, சாலப் படும். 7

ஏரினும் நன்றால், எரு இடுதல்; கட்டபின்,
நீரினும் நன்று, அதன் காப்பு. 8

செல்லான் கிழவன் இருப்பின், நிலம் புலந்து
இல்லாளின் ஊடிவிடும். 9

'இலம்!' என்று அசைஇ இருப்பாரைக் காணின்,
நிலம் என்னும் நல்லாள் நகும். 10

## 105. நல்குரவு

'இன்மையின் இன்னாதது யாது?' எனின், இன்மையின்
இன்மையே இன்னாதது. 1

இன்மை என ஒரு பாவி, மறுமையும்
இம்மையும் இன்றி, வரும். 2

தொல் வரவும் தோலும் கெடுக்கும், தொகையாக—
நல்குரவு என்னும் நசை. 3

இற்பிறந்தார்கண்ணேயும், இன்மை, இளி வந்த
சொல் பிறக்கும் சோர்வு தரும். 4

நல்குரவு என்னும் இடும்பையுள் பல்குரைத்
துன்பங்கள் சென்று படும். 5

நற் பொருள் நன்கு உணர்ந்து சொல்லினும், நல்கூர்ந்தார்
சொல் பொருட் சோர்வு படும். 6

அறம் சாரா நல்குரவு, ஈன்ற தாயானும்,
பிறன் போல நோக்கப்படும். 7

இன்றும் வருவது கொல்லோ—நெருநலும்
கொன்றது போலும் நிரப்பு! 8

நெருப்பினுள் துஞ்சலும் ஆகும்; நிரப்பினுள்
யாது ஒன்றும் கண்பாடு அரிது. 9

துப்புரவு இல்லார் துவரத் துறவாமை
உப்பிற்கும் காடிக்கும் கூற்று. 10

## 106. இரவு

இரக்க, இரத்தக்கார்க் காணின்! கரப்பின்,
அவர் பழி தம் பழி அன்று. 1

இன்பம் ஒருவற்கு இரத்தல்—இரந்தவை
துன்பம் உறூஅ வரின். 2

கரப்பு இலா நெஞ்சின் கடன் அறிவார் முன் நின்று,
இரப்பும் ஓர் ஏஎர் உடைத்து. 3

இரத்தலும் ஈதலே போலும்—கரத்தல்
கனவினும் தேற்றாதார்மாட்டு. 4

கரப்பு இலார் வையகத்து உண்மையான், கண் நின்று,
இரப்பவர் மேற்கொள்வது. 5

கரப்பு இடும்பை இல்லாரைக் காணின், நிரப்பு இடும்பை
எல்லாம் ஒருங்கு கெடும். 6

இகழ்ந்து எள்ளாது ஈவாரைக் காணின், மகிழ்ந்து உள்ளம்
உள்ளுள் உவப்பது உடைத்து. 7

இரப்பாரை இல்லாயின், ஈர்ங்கண் மா ஞாலம்
மரப்பாவை சென்று வந்தற்று. 8

ஈவார்கண் என் உண்டாம், தோற்றம்—இரந்து கோள்
மேவார் இலாஅக்கடை? 9

இரப்பான் வெகுளாமை வேண்டும்; நிரப்பு இடும்பை-
தானேயும் சாலும் கரி. 10

## 107. இரவு அச்சம்

கரவாது, உவந்து ஈயும் கண் அன்னார்கண்ணும்
இரவாமை கோடி உறும். 1

இரந்தும் உயிர் வாழ்தல் வேண்டின், பரந்து
கெடுக, உலகு இயற்றியான்! 2

'இன்மை இடும்பை இரந்து தீர்வாம்' என்னும்
வன்மையின் வன்பாட்டது இல். 3

இடம் எல்லாம் கொள்ளாத் தகைத்தே—இடம் இல்லாக்
காலும், இரவு ஒல்லாச் சால்பு. 4

தெள் நீர் அடு புற்கை ஆயினும், தாள் தந்தது
உண்ணலின் ஊங்கு இனியது இல். 5

'ஆவிற்கு நீர்' என்று இரப்பினும், நாவிற்கு
இரவின் இளிவந்தது இல். 6

இரப்பன், இரப்பாரை எல்லாம்—'இரப்பின்,
கரப்பார் இரவன்மின்' என்று. 7

இரவு என்னும் ஏமாப்பு இல் தோணி, கரவு என்னும்
பார் தாக்க, பக்கு விடும். 8

இரவு உள்ள, உள்ளம் உருகும்; கரவு உள்ள,
உள்ளதூஉம் இன்றிக் கெடும். 9

கரப்பவர்க்கு யாங்கு ஒளிக்கும்கொல்லோ—இரப்பவர்
சொல்லாடப் போஒம் உயிர்! 10

## 108. கயமை

மக்களே போல்வர், கயவர்; அவர் அன்ன
ஒப்பாரி யாம் கண்டது இல். 1

நன்று அறிவாரின் கயவர் திரு உடையர்—
நெஞ்சத்து அவலம் இலர்! 2

தேவர் அனையர், கயவர்—அவரும் தாம்
மேவன செய்து, ஒழுகலான்! 3

அகப் பட்டி ஆவாரைக் காணின், அவரின்
மிகப்பட்டுச் செம்மாக்கும், கீழ். 4

அச்சமே கீழ்களது ஆசாரம்; எச்சம்
அவா உண்டேல், உண்டாம் சிறிது. 5

அறை பறை அன்னர் கயவர்—தாம் கேட்ட
மறை பிறர்க்கு உய்த்து உரைக்கலான். 6

ஈர்ங் கை விதிரார் கயவர்—கொடிறு உடைக்கும்
கூன் கையர் அல்லாதவர்க்கு. 7

சொல்ல, பயன்படுவர் சான்றோர்; கரும்புபோல்
கொல்ல, பயன்படும் கீழ். 8

உடுப்பதூஉம் உண்பதூஉம் காணின், பிறர்மேல்
வடுக் காண வற்று ஆகும், கீழ். 9

எற்றிற்கு உரியர் கயவர்—ஒன்று உற்றக்கால்,
விற்றற்கு உரியர் விரைந்து! 10

மூன்றுவது

# காமத்துப் பால்

## 1. களவு இயல்

### 109. தகை அணங்கு உறுத்தல்

தலைமகள் உருவு முதலியன முன் கண்டறிவன அன்றிச் சிறந்தமையின், அவளைத் தலைமகன் ஐயுற்றது

அணங்குகொல்! ஆய் மயில்கொல்லோ!—கனங்குழை—
மாதர்கொல்! மாலும், என் நெஞ்சு. 1

மானுட மாதராதல் தெளிந்த தலைமகன் அவள் நோக்கினுன் ஆய வருத்தம் கூறியது

நோக்கினுள் நோக்கு எதிர் நோக்குதல்—தாக்கு அணங்கு
தானைக் கொண்டன்னது உடைத்து. 2

பண்டு அறியேன், 'கூற்று' என்பதனை; இனி அறிந்தேன்;
பெண்தகையான் பேர் அமர்க் கட்டு. 3

கண்டார் உயிர் உண்ணும் தோற்றத்தான், பெண் தகைப்
பேதைக்கு, அமர்த்தன கண். 4

கூற்றமோ! கண்ணோ! பிணையோ!—மடவரல்
நோக்கம் இம் மூன்றும் உடைத்து. 5

கொடும் புருவம் கோடா மறைப்பின், நடுங்கு அஞர்
செய்யலமன், இவள் கண். 6

அவள் முலைகளின் ஆய வருத்தம் கூறியது

கடாஅக் களிற்றின்மேல் கண் படாம்—மாதர்
படாஅ முலைமேல் துகில்! 7

நுதலின் ஆய வருத்தம் கூறியது

ஒள் நுதற்கு, ஓஒ! உடைந்ததே—ஞாட்பினுள்
நண்ணாரும் உட்கும் என் பீடு! 8

அணிநலத்தான் ஆய வருத்தம் கூறியது

பிணை ஏர் மட நோக்கும், நாணும் உடையாட்கு
அணி எவனோ, ஏதில தந்து? 9

தலைமகள் குறிப்பறிதல் உற்றான் சொல்லியது

உண்டார்கண் அல்லது, அடு நறா, காமம்போல்
கண்டார் மகிழ் செய்தல் இன்று. 10

## 110. குறிப்பு அறிதல்

தலைமகன் தலைமகள் உளப்பாட்டுக் குறிப்பினை அவள் நோக்கான் அறிந்தது

இரு நோக்கு இவள் உண்கண் உள்ளது; ஒரு நோக்கு
நோய் நோக்கு; ஒன்று அந் நோய் மருந்து. 1

கண் களவு கொள்ளும் சிறு நோக்கம் காமத்தின்
செம்பாகம் அன்று; பெரிது. 2

நோக்கினானும் நாணினானும் அறிந்தது

நோக்கினாள்; நோக்கி இறைஞ்சினாள்; அஃது அவள்
யாப்பினுள் அட்டிய நீர். 3

நாணினானும் மகிழ்ச்சியினானும் அறிந்தது

யான் நோக்கும் காலை நிலன் நோக்கும்; நோக்காக்கால்,
தான் நோக்கி, மெல்ல நகும். 4

குறிக்கொண்டு நோக்காமை அல்லால், ஒரு கண்
சிறக்கணித்தாள் போல நகும். 5

தோழி சேட்படுத்தவழி, அவள் குறிப்பு அறிந்த தலைமகன் தன்னுள்ளே சொல்லியது

உறாஅதவர்போல் சொலினும், செறாஅர் சொல்
ஒல்லை உணரப்படும். 6

செறாஅச் சிறு சொல்லும், செற்றார்போல் நோக்கும்,—
உறாஅர் போன்று உற்றார் குறிப்பு. 7

தன்னை நோக்கி மகிழ்ந்த தலைமகளைக் கண்டு, தலைமகன் கூறியது

அசையியற்கு உண்டு, ஆண்டு ஓர் ஏஎர்; யான் நோக்க,
பசையினள், பைய நகும். 8

தோழி மதியுடம்படுவாள் தன்னுள்ளே சொல்லியது

ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலார்கண்ணே உள. 9

கண்ணோடு கண் இணை நோக்கு ஒக்கின், வாய்ச் சொற்கள்
என்ன பயனும் இல. 10

## 111. புணர்ச்சி மகிழ்தல்

இயற்கைப் புணர்ச்சி இறுதிக்கண் சொல்லியது

கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று, அறியும் ஐம்புலனும்
ஒண்டொடிகண்ணே உள. 1

இடந்தலைப்பாட்டின்கண் சொல்லியது

பிணிக்கு மருந்து பிறமன்; அணியிழை
தன் நோய்க்குத் தானே மருந்து. 2

'நிரதிசய இன்பத்திற்கு உரிய நீ இச் சிற்றின்பத்திற்கு இன்னை யாதல் தகாது' என்ற பாங்கற்குச் சொல்லியது

தாம் வீழ்வார் மென் தோள்-துயிலின் இனிதுகொல்—
தாமரைக்கண்ணான் உலகு? 3

பாங்கற் கூட்டத்து இறுதிக்கண் சொல்லியது

நீங்கின் தெறூஉம், குறுகுங்கால் தண்ணென்னும்,
தீ யாண்டுப் பெற்றாள், இவள்? 4

தோழியிற் கூட்டத்து இறுதிக்கண் சொல்லியது

வேட்ட பொழுதின் அவை அவை போலுமே—
தோட்டார் கதுப்பினாள் தோள். 5

உறுதோறு உயிர் தளிர்ப்பத் தீண்டலான், பேதைக்கு
அமிழ்தின் இயன்றன, தோள். 6

'இவளை நீ வரைந்துகொண்டு, உலகோர் தம் இல்லிருந்து தமது பாத்துண்ணும் இல்லறத்தொடு படல்வேண்டும்' என்ற தோழிக்குச் சொல்லியது

தம் இல் இருந்து, தமது பாத்து உண்டற்றால்—
அம் மா அரிவை முயக்கு. 7

'ஒத்த அன்புடைய நுமக்கு ஒருபொழுதும் விடாத முயக்கமே இனியது' என வரைவு கடாய தோழிக்குச் சொல்லியது

வீழும் இருவர்க்கு இனிதே—வளி இடை
போழப் படாஅ முயக்கு. 8

'கரத்தல் வேண்டாமையின், இடையறவு இல்லாத கூட்டமே இன்பப் பயனுடைத்து' என வரைவு கடாவியாட்குச் சொல்லியது

ஊடல், உணர்தல், புணர்தல், இவை—காமம்
கூடியார் பெற்ற பயன். 9

புணர்ந்து உடன் போகின்றான் தன்னுள்ளே சொல்லியது

அறிதோறு அறியாமை கண்டற்றால்—காமம்
செறிதோறும் சேயிழைமாட்டு. 10

## 112. நலம் புனைந்து உரைத்தல்

இயற்கைப்புணர்ச்சி இறுதிக்கண் சொல்லியது

நல்நீரை! வாழி!—அனிச்சமே!—நின்னினும்
மெல் நீரள், யாம் வீழ்பவள். 1

இடந்தலைப்பாட்டின்கண் சொல்லியது

மலர் காணின் மையாத்தி—நெஞ்சே!—'இவள் கண்
பலர் காணும் பூ ஒக்கும்!' என்று. 2

கூட்டுதலுற்ற பாங்கற்குத் தலைமகன் தலைமகளது இயல்பு கூறியது

முறி, மேனி; முத்தம், முறுவல்; வெறி, நாற்றம்;
வேல், உண்கண்;—வேய்த்தோளவட்கு. 3

பாங்கற் கூட்டத்துச் சென்று சார்தலுறுவான் சொல்லியது

காணின், குவளை, கவிழ்ந்து நிலன் நோக்கும்—
'மாணிழை கண் ஒவ்வேம்!' என்று. 4

பகற் குறிக்கண் பூ அணி கண்டு சொல்லியது

அனிச்சப்பூக் கால் களையாள் பெய்தாள்; நுசுப்பிற்கு
நல்ல படாஅ, பறை. 5

இரவுக் குறிக்கண் மதி கண்டு சொல்லியது

மதியும் மடந்தை முகனும் அறியா,
பதியின் கலங்கிய, மீன். 6

அறுவாய் நிறைந்த அவிர் மதிக்குப் போல
மறு உண்டோ, மாதர் முகத்து! 7

மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல்,
காதலை—வாழி, மதி! 8

மலர் அன்ன கண்ணாள் முகம் ஒத்தி ஆயின்,
பலர் காணத் தோன்றல்!—மதி! 9

உடன்போக்கு உரைத்த தோழிக்கு அதனது அருமை கூறி மறுத்தது

அனிச்சமும் அன்னத்தின் தூவியும், மாதர்
அடிக்கு, நெருஞ்சிப் பழம். 10

## 113. காதல்-சிறப்பு உரைத்தல்

இயற்கைப்புணர்ச்சி இறுதிக்கண் தலைமகன் தன் நயப்பு உணர்த்தியது

பாலொடு தேன் கலந்தற்றே—பணிமொழி
வால் எயிறு ஊறிய நீர்! 1

பிரிவு அச்சம் கூறியது

உடம்பொடு உயிரிடை என்ன, மற்று அன்ன—
மடந்தையொடு எம்மிடை நட்பு. 2

இடந்தலைப்பாட்டின்கண் தலைமகள் நீக்கத்துச் சொல்லியது

கருமணியின் பாவாய்! நீ போதாய்—யாம் வீழும்
திருநுதற்கு இல்லை, இடம்! 3

பகற் குறிக்கண் புணர்ந்து நீங்குவான் சொல்லியது

வாழ்தல் உயிர்க்கு அன்னள், ஆயிழை; சாதல்
அதற்கு அன்னள், நீங்கும் இடத்து. 4

ஒருவழித்தணந்து வந்த தலைமகன், 'நீயிர் தணந்த ஞான்று எம்மை உள்ளியும் அறிதிரோ?' என்ற தோழிக்குச் சொல்லியது

உள்ளுவன்மன், யான் மறப்பின்; மறப்பு அறியேன்,
ஒள் அமர்க் கண்ணாள் குணம். 5

ஒருவழித்தணப்பின்கண், 'தலைமகனைத் தோழி இயற்பழிக்கும்' என்று அஞ்சி, அவள் கேட்ப, தன்னுள்ளே சொல்லியது

கண்ணுள்ளின் போகார்; இமைப்பின் பருவரார்;
நுண்ணியர். எம் காதலவர். 6

கண் உள்ளார் காதலவராக, கண்ணும்
எழுதேம், கரப்பாக்கு அறிந்து. 7

நெஞ்சத்தார் காதலவராக, வெய்து உண்டல்
அஞ்சுதும், வேபாக்கு அறிந்து. 8

வரைவிடை வைத்துப் பிரிவின்கண் தலைமகள் ஆற்றுதற்பொருட்டுத் தோழி தலைமகனை இயற்பழித்தவழி, அவள் இயற்பட மொழிந்தது

இமைப்பின், கரப்பாக்கு அறிவல்; அனைத்திற்கே,
'ஏதிலர்' என்னும், இவ் ஊர். 9

உவந்து உறைவர், உள்ளத்துள் என்றும்; 'இகந்து உறைவர்;
ஏதிலர்' என்னும், இவ் ஊர். 10

## 114. நாணுத் துறவு உரைத்தல்

சேட்படுக்கப்பட்டு ஆற்ருனாய தலைமகன் சொல்லியது

காமம் உழந்து வருந்தினர்க்கு, ஏம
மடல் அல்லது இல்லை, வலி. 1

'நாணுடைய நுமக்கு அது முடியாது' என மடல் விலக்கல் உற்ருட்குச் சொல்லியது

நோனா உடம்பும் உயிரும், மடல் ஏறும்—
நாணினை நீக்கி நிறுத்து. 2

'நாணையன்றி, நல் ஆண்மையும் உடைமையின், முடியாது' என்ருட்குச் சொல்லியது

நாணொடு நல் ஆண்மை பண்டு உடையேன்; இன்று உடையேன்,
காமுற்ருர் ஏறும் மடல். 3

'நாணும் நல் ஆண்மையும் காமவெள்ளத்திற்குப் புணைஆகலின், அதனால்
அவை நீங்குவன அல்ல' என்ருட்குச் சொல்லியது

காமக் கடும் புனல் உய்க்குமே—நாணொடு
நல் ஆண்மை என்னும் புணை. 4

'இவ் ஆற்ருமையும் மடலும் நுமக்கு எவ்வாறு வந்தன?' என்ருட்குச் சொல்லியது

தொடலைக் குறுந்தொடி தந்தாள், மடலொடு
மாலை உழக்கும் துயர். 5

'மடல் ஊரும் பொழுது இற்றைக்கும் கழிந்தது' என்ருட்குச் சொல்லியது

மடல் ஊர்தல் யாமத்தும் உள்ளுவேன் மன்ற;—
படல் ஒல்லா, பேதைக்கு என் கண். 6

'பேதைக்கு என்கண் படல் ஒல்லா' என்பது பற்றி, 'அறிவிலராய
மகளிரினும் அஃது உடையராய ஆடவரன்றே ஆற்றற்பாலர்?' என்ருட்குச்
சொல்லியது

கடல் அன்ன காமம் உழந்தும், மடல் ஏருப்
பெண்ணின் பெருந்தக்கது இல். 7

காப்புச் சிறை மிக்குக் காமம் பெருகியவழிச் சொல்லியது

'நிறை அரியர்; மன் அளியர்' என்னாது, காமம்
மறை இறந்து, மன்று படும். 8

'அறிகிலார், எல்லாரும்' என்றே, என் காமம்
மறுகில் மறுகும், மருண்டு. 9

செவிலிக்கு அறத்தொடு நின்றுவைத்து, 'யான் நிற்குமாறு என்னை?' என்று
நகையாடிய தோழியொடு புலந்து, தன்னுள்ளே சொல்லியது

யாம் கண்ணின் காண நகுப, அறிவு இல்லார்—
யாம் பட்ட தாம் படாவாறு. 10

## 115. அலர் அறிவுறுத்தல்

அல்லகுறிப்பட்ட பிற்றைஞான்று வந்த தலைமகனைத் தோழி அலர் கூறி வரைவு கடாயவழி, அவன் சொல்லியது

அலர் எழ, ஆர் உயிர் நிற்கும்; அதனைப்
பலர் அறியார், பாக்கியத்தால். 1

மலர் அன்ன கண்ணாள் அருமை அறியாது,
அலர் எமக்கு ஈந்தது, இவ் ஊர். 2

உறுஅதோ, ஊர் அறிந்த கௌவை? அதனைப்
பெறாஅது பெற்றன்ன நீர்த்து. 3

கவ்வையான் கவ்விது, காமம்; அது இன்றேல்,
தவ்வென்னும், தன்மை இழந்து. 4

களித்தொறும் கள் உண்டல் வேட்டற்றால்—காமம்
வெளிப்படும்தோறும் இனிது. 5

இடையீடுகளானும் அல்ல குறியானும் தலைமகனை எய்தப் பெறாத தலைமகள் அவன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய் அலர் அறிவுறீஇ, வரைவு கடாயது

கண்டது மன்னும் ஒரு நாள்; அலர் மன்னும்
திங்களைப் பாம்பு கொண்டற்று. 6

வரைவு நீட ஆற்றாளாய தலைமகளை, தலைமகன் சிறைப்புறத்தானாதல் அறிந்த தோழி, 'ஊரவர் அலரும் அன்னைசொல்லும் நோக்கி ஆற்றல்வேண்டும்' எனச் சொல்லெடுப்பியவழி, அவள் சொல்லியது

ஊரவர் கௌவை எருவாக, அன்னை சொல்
நீராக, நீளும்—இந் நோய். 7

'நெய்யால் எரி நுதுப்பேம்' என்றற்றால்—'கௌவையான்
காமம் நுதுப்பேம்' எனல். 8

வரைவிடைவைத்துப் பிரிவின்கண் ஆற்றாளாய தலைமகள், அவன் வந்து சிறைப்புறத்தானாதல் அறிந்து, 'அலர் அஞ்சி ஆற்றல் வேண்டும்' என்ற தோழிக்குச் சொல்லியது

அலர் நாண ஒல்வதோ—'அஞ்சல் ஓம்பு!' என்றார்
பலர் நாண நீத்தக்கடை? 9

தலைமகன் சிறைப்புறத்தானாக, தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய், அலரறிவுறீஇ, அவன் உடன்போக்கு நயப்பச் சொல்லியது

தாம் வேண்டின் நல்குவர், காதலர்; யாம் வேண்டும்
கௌவை எடுக்கும், இவ் ஊர். 10

## 2. கற்பு இயல்

### 116. பிரிவு ஆற்றாமை

'பிரிந்து கடிதின் வருவல்' என்ற தலைமகற்குத் தோழி சொல்லியது

செல்லாமை உண்டேல், எனக்கு உரை; மற்று நின்
வல்வரவு, வாழ்வார்க்கு உரை. 1

பிரிவு தலைமகன் குறிப்பான் அறிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது

இன்கண் உடைத்து அவர் பார்வல்; பிரிவு அஞ்சும்
புன்கண் உடைத்தால், புணர்வு. 2

அரிதுஅரோ, தேற்றம்—அறிவுடையார்கண்ணும்
பிரிவு ஓர் இடத்து உண்மையான். 3

அளித்து, 'அஞ்சல்!' என்றவர் நீப்பின், தெளித்த சொல்
தேறியார்க்கு உண்டோ, தவறு? 4

ஓம்பின், அமைந்தார் பிரிவு ஓம்பல்! மற்று அவர்
நீங்கின், அரிதால், புணர்வு! 5

தலைமகன் பிரிவு உணர்த்தியவாறு வந்து சொல்லிய தோழிக்குச் சொல்லியது

பிரிவு உரைக்கும் வன்கண்ணர்ஆயின், அரிது, 'அவர்
நல்குவர்' என்னும் நசை. 6

துறைவன் துறந்தமை தூற்றுகொல்—முன்கை
இறை இறவாநின்ற வளை! 7

இன்னாது, இனன் இல் ஊர் வாழ்தல்; அதனினும்
இன்னாது, இனியார்ப் பிரிவு. 8

'காமம் தீயே போன்று தான் நின்ற இடத்தைச் சுடும்ஆகலான், நீ
ஆற்றல் வேண்டும்' என்ற தோழிக்குச் சொல்லியது

தொடின் சுடின் அல்லது, காமநோய் போல,
விடின் சுடல் ஆற்றுமோ, தீ? 9

'தலைவியர் பலரும் பிரிவாற்றி இருப்பர்; அது நீ செய்கின்றிலை' என்ற
தோழிக்குச் சொல்லியது

அரிது ஆற்றி, அல்லல் நோய் நீக்கி, பிரிவு ஆற்றி,
பின் இருந்து, வாழ்வார் பலர். 10

## 117. படர் மெலிந்து இரங்கல்

'காமநோயை வெளிப்படுத்தல் நின் நாணுக்கு ஏலாது' என்ற தோழிக்குச் சொல்லியது

மறைப்பேன்மன் யான், இஃதோ, நோயை—இறைப்பவர்க்கு
ஊற்றுநீர் போல மிகும். 1

'ஈண்டையார் அறியாமல் மறைத்தல், ஆண்டையார் அறியத் தூதுவிடுதல், என்னும் இரண்டனுள் ஒன்று செயல்வேண்டும்' என்ற தோழிக்குச் சொல்லியது

கரத்தலும் ஆற்றேன், இந் நோயை; நோய் செய்தார்க்கு
உரைத்தலும் நாணுத் தரும்! 2

காமமும் நாணும் உயிர் காவாத் தூங்கும், என்
நோனா உடம்பினகத்து. 3

'தலைவியர் காமக்கடற் படார்; படினும், அதனை ஏற்ற புணையால் நீந்திக் கடப்பர்' என்ற தோழிக்குச் சொல்லியது

காமக் கடல் மன்னும் உண்டே; அது நீந்தும்
ஏமப் புணை மன்னும் இல். 4

தூது விடாமை நோக்கித் தோழியொடு புலந்து சொல்லியது

துப்பின் எவன் ஆவர்மன்கொல்—துயர் வரவு
நட்பினுள் ஆற்றுபவர்! 5

'காமத்தான் இன்பமுற்றார்க்கு அதனினாய துன்பமும் வரும்' என்ற தோழிக்குச் சொல்லியது

இன்பம் கடல் மற்றுக் காமம்; அஃது அடுங்கால்,
துன்பம் அதனின் பெரிது. 6

'காமக்கடல் நிறை புணையாக நீந்தப்படும்' என்றாட்குச் சொல்லியது

காமக் கடும் புனல் நீந்திக் கரை காணேன்,
யாமத்தும், யானே உளேன். 7

இரவின் கொடுமை சொல்லி இரங்கியது

மன் உயிர் எல்லாம் துயிற்றி,—அளித்து, இரா!—
என் அல்லது இல்லை, துணை. 8

கொடியார் கொடுமையின் தாம் கொடிய—இந் நாள்
நெடிய கழியும் இரா. 9

'நின்கண்கள் பேரழகு அழிகின்றனவாதலின், அழற்பாலை யல்லை' என்றாட்குச் சொல்லியது

உள்ளம் போன்று உள்வழிச் செல்கிற்பின், வெள்ளநீர்
நீந்தல மன்னோ, என் கண். 10

## 118. கண் விதுப்பு அழிதல்

'நின் கண்கள கலுழ்ந்து, தம் அழகு இழவாநின்றன; நீ ஆற்றல்வேண்டும்' என்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது

கண்தாம் கலுழ்வது எவன்கொலோ—தண்டா நோய்,
தாம் காட்ட, யாம் கண்டது! 1

தெரிந்து உணரா நோக்கிய உண்கண் பரிந்து உணரா,
பைதல் உழப்பது எவன்? 2

கதுமெனத் தாம் நோக்கித் தாமே கலுழும்
இது நகத்தக்கது உடைத்து. 3

பெயல் ஆற்று நீர் உலந்த, உண்கண்—உயல் ஆற்று
உய்வு இல் நோய் என்கண் நிறுத்து. 4

படல் ஆற்று, பைதல் உழக்கும்—கடல் ஆற்றுக்
காமநோய் செய்த என் கண். 5

ஓஒ, இனிதே!—எமக்கு இந் நோய் செய்த கண்
தாஅம் இதற்பட்டது. 6

உழந்து உழந்து உள் நீர் அறுக—விழைந்து இழைந்து
வேண்டி அவர்க் கண்ட கண்! 7

'காதலர் பிரிந்துபோயினரல்லர்; அவர் ஈண்டு உளர்; அவரைக் காணுமளவும் நீ ஆற்றல்வேண்டும்' என்ற தோழிக்குச் சொல்லியது

பேணாது பெட்டார் உளர்மன்னோ—மற்று அவர்க்
காணாது அமைவு இல கண். 8

'நீயும் ஆற்றி, நின் கண்களும் துயில்வனவாதல் வேண்டும்' என்ற தோழிக்குச் சொல்லியது

வாராக்கால், துஞ்சா; வரின், துஞ்சா; ஆயிடை
ஆர் அஞர் உற்றன, கண். 9

'காதலரை இவ் ஊர் இயற்பழியாமல், அவர் கொடுமையை மறைக்கவேண்டும்' என்ற தோழிக்குச் சொல்லியது

மறை பெறல் ஊரார்க்கு அரிது அன்றால்—எம்போல்
அறை பறை கண்ணார் அகத்து. 10

## 119. பசப்பு உறு பருவரல்

முன் பிரிவு உடம்பட்ட தலைமகள் அஃது ஆற்றாது பசந்தவழி, தன்னுள்ளே சொல்லியது

நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன்; பசந்த என்
பண்பு யார்க்கு உரைக்கோ, பிற! 1

'ஆற்றாள்' எனக் கவன்ற தோழிக்கு, 'ஆற்றுவல்' என்பதுபடச் சொல்லியது

அவர் தந்தார் என்னும் தகையால் இவர்தந்து, என்
மேனிமேல் ஊரும், பசப்பு. 2

'அழகும் நாணும் அழியாமல் நீ ஆற்றல் வேண்டும்' என்ற தோழிக்குச் சொல்லியது

சாயலும் நாணும் அவர் கொண்டார்—கைம்மாறா
நோயும் பசலையும் தந்து. 3

'பிரிகின்றவர் தெளிவித்த சொற்களையும் அவர் நல்திறங்களையும் அறிதியாகலின் நீட்டியாது வருவர்' என்றவழிச் சொல்லியது

உள்ளுவன்மன் யான்; உரைப்பது அவர்திறமால்;
கள்ளம் பிறவோ, பசப்பு. 4

'காதலர் பிரிந்து அணித்தாயிருக்கவும் ஆற்றுகின்றிலை' என்ற தோழிக்கு முன் நிகழ்ந்தது கூறியது

உவக்காண், எம் காதலர் செல்வார்; இவக்காண், என்
மேனி பசப்பு ஊர்வது! 5

விளக்கு அற்றம் பார்க்கும் இருளேபோல், கொண்கன்
முயக்கு அற்றம் பார்க்கும், பசப்பு. 6

புல்லிக் கிடந்தேன், புடைபெயர்ந்தேன்; அவ் அளவில்,
அள்ளிக்கொள்வற்றே, பசப்பு. 7

'நீ இங்ஙனம் பசக்கற்பாலை யல்லை' என்ற தோழியொடு புலந்து சொல்லியது

'பசந்தாள் இவள்' என்பது அல்லால், 'இவளைத்
துறந்தார் அவர்' என்பார் இல். 8

பசக்கமன் பட்டாங்கு, என் மேனி—நயப்பித்தார்
நல் நிலையர் ஆவர்எனின்! 9

தலைமகள் ஆற்றுதற்பொருட்டுத் தோழி தலைமகனை இயற்பழித்தவழி, அவள் இயற்பட மொழிந்தது

பசப்பு எனப் பேர் பெறுதல் நன்றே—நயப்பித்தார்
நல்காமை தூற்றார்எனின். 10

## 120. தனிப் படர் மிகுதி

'காதலர் நின்னினும் ஆற்றுராய்க் கடிதின் வருவர்; நீ அவரொடு பேர் இன்பம் நுகர்தி' என்ற தோழிக்குச் சொல்லியது

தாம் வீழ்வார் தம் வீழப்பெற்றவர் பெற்றுரே,
காமத்துக் காழ் இல் கனி. 1

வாழ்வார்க்கு வானம் பயந்தற்றுல்—வீழ்வார்க்கு
வீழ்வார் அளிக்கும் அளி. 2

வீழுநர் வீழப்படுவார்க்கு அமையுமே,
'வாழுநம்' என்னும் செருக்கு. 3

'காதலரை இயற்பழித்தலை அஞ்சி, அவர் அருளின்மை மறைத்த நீ கடவுள்-கற்பினையாகலின் கற்புடை மகளிரால் நன்கு மதிக்கப்படுதி' என்ற தோழிக்குச் சொல்லியது

வீழப்படுவார், கெழீஇயிலர், தாம் வீழ்வார்
வீழப்படாஅர் எனின். 4

'அவர்மேல் காதலுடைமையின், அவர் கருத்தறிந்து ஆற்றிஞய்' என்ற தோழிக்குச் சொல்லியது

நாம் காதல் கொண்டார் நமக்கு எவன் செய்பவோ
தாம் காதல் கொள்ளாக்கடை! 5

ஒருதலையான் இன்னுது, காமம்; காப் போல
இருதலையானும் இனிது. 6

பருவரலும் பைதலும் காணுன்கொல்--காமன்
ஒருவர்கண் நின்று ஒழுகுவான்! 7

தலைமகன் தூது வரக் காணுது சொல்லியது

வீழ்வாரின் இன்சொல் பெறுஅது, உலகத்து
வாழ்வாரின் வன்கணுர் இல். 8

நசைஇயார் நல்கார் எனினும், அவர்மாட்டு
இசையும் இனிய, செவிக்கு. 9

தலைமகன் தூது வரப் பெறுது, தான் தூது விடக் கருதியாள் நெஞ்சொடு சொல்லியது

உறுஅர்க்கு உறு நோய் உரைப்பாய்—கடலைச்
செறுஅஅய்!—வாழிய நெஞ்சு! 10

## 121. நினைந்து அவர் புலம்பல்

தூதாய்ச் சென்ற பாங்கனுக்குத் தலைமகன் சொல்லியது

உள்ளினும், தீராப் பெரு மகிழ் செய்தலால்,
கள்ளினும் காமம் இனிது. 1

எனைத்து ஒன்று இனிதேகாண் காமம்; தாம் வீழ்வார்
நினைப்ப, வருவது ஒன்று இல். 2

தலைமகனை நினைந்து வருந்துகின்ற தலைமகள் தோழிக்குச் சொல்லியது

நினைப்பவர் போன்று நினையார்கொல்—தும்மல்
சினைப்பது போன்று கெடும்! 3

யாமும் உளேம்கொல், அவர் நெஞ்சத்து?—எம் நெஞ்சத்து,
ஓஒ! உளரே அவர்! 4

தம் நெஞ்சத்து எம்மைக் கடி கொண்டார் நாணார்கொல்—
எம் நெஞ்சத்து ஓவா வரல்? 5

'அவரொடு புணர்ந்த ஞான்றை இன்பத்தை நினைந்து இறந்துபாடு எய்தாநின்றாய்;
அது மறத்தல் வேண்டும்' என்றாட்குச் சொல்லியது

மற்று யான் என் உளேன் மன்னோ! அவரொடு யான்
உற்ற நாள் உள்ள, உளேன். 6

மறப்பின், எவன் ஆவன் மன்கொல்—மறப்பு அறியேன்,
உள்ளினும் உள்ளம் சுடும்? 7

'இத் துன்பம் அறிந்து வந்து, காதலர் நினக்கு இன்பம் செய்வர்'
என்றாட்குச் சொல்லியது

எனைத்தும் நினைப்பினும் காயார்; அனைத்து அன்றோ,
காதலர் செய்யும் சிறப்பு? 8

தலைமகன் தூது வரக் காணாது வருந்துகின்றாள் வற்புறுத்தும்
தோழிக்குச் சொல்லியது

விளியும், என் இன் உயிர்—'வேறு அல்லம்' என்பார்
அளி இன்மை ஆற்ற நினைந்து. 9

வன்புறை எதிரழிந்தாள் காமம் மிக்க கழிபடரால் சொல்லியது

விடாஅது சென்றாரைக் கண்ணினால் காணப்
படாஅதி—வாழி மதி! 10

## 122. கனவு நிலை உரைத்தல்

தலைமகன் தூது வரக் கண்டாள் சொல்லியது

காதலர் தூதொடு வந்த கனவினுக்கு
யாது செய்வேன்கொல், விருந்து! 1

தூது விடக் கருதியாள் சொல்லியது

கயல் உண்கண் யான் இரப்பத் துஞ்சின், கலந்தார்க்கு
உயல் உண்மை சாற்றுவேன்மன். 2

'ஆற்றாள்' எனக் கவன்றாட்கு, 'ஆற்றுவல்' என்பது படச் சொல்லியது

நனவினான் நல்காதவரைக் கனவினான்
காண்டலின் உண்டு, என் உயிர். 3

கனவினான் உண்டாகும் காமம்—நனவினான்
நல்காரை நாடித் தரற்கு. 4

நனவினான் கண்டதூஉம், ஆங்கே, கனவும்தான்
கண்ட பொழுதே இனிது. 5

நனவு என ஒன்று இல்லைஆயின், கனவினான்
காதலர் நீங்கலர்மன். 6

விழித்துழிக் காணாளாயினாள் கனவிற்கூட்டம் நினைந்து, ஆற்றாளாய்ச் சொல்லியது

நனவினான் நல்காக் கொடியார் கனவினான்,
என், எம்மைப் பீழிப்பது? 7

தான் ஆற்றுதற்பொருட்டுத் தலைமகனை இயற்பழித்தாட்கு இயற்பட மொழிந்தது

துஞ்சுங்கால் தோள் மேலர் ஆகி, விழிக்குங்கால்
நெஞ்சத்தர் ஆவர், விரைந்து. 8

நனவினான் நல்காரை நோவர்—கனவினான்
காதலர்க் காணாதவர். 9

நனவினான், நம் நீத்தார் என்பர்; கனவினான்
காணார்கொல், இவ் ஊரவர்! 10

## 123. பொழுது கண்டு இரங்கல்

பொழுதொடு புலந்து சொல்லியது

மாலையோ அல்லை; மணந்தார் உயிர் உண்ணும்
வேலை நீ;—வாழி, பொழுது! 1

தன்னுட்கையாற்றை அதன்மேல் இட்டுச் சொல்லியது

புன்கண்ணை—வாழி, மருள் மாலை!—எம் கேள்போல்
வன்கண்ணதோ, நின் துணை? 2

'ஆற்றல்வேண்டும்' என்ற தோழிக்குச் சொல்லியது

பனி அரும்பிப் பைதல் கொள் மாலை, துனி அரும்பித்
துன்பம் வளர, வரும். 3

காதலர் இல் வழி, மாலை, கொலைக்களத்து
ஏதிலர் போல, வரும். 4

காலைக்குச் செய்த நன்று என்கொல்? எவன்கொல், யான்
மாலைக்குச் செய்த பகை? 5

'இன்று இன்னையாகின்ற நீ, அன்று, அவர் பிரிவிற்கு உடம்பட்டது என்னை?'
என்றாட்குச் சொல்லியது

மாலை நோய் செய்தல், மணந்தார் அகலாத
காலை அறிந்ததிலேன். 6

'மாலைப் பொழுதின்கண் இன்னையையாதற்குக் காரணம் என்னை?'
என்றாட்குச் சொல்லியது

காலை அரும்பி, பகல் எல்லாம் போது ஆகி,
மாலை மலரும்—இந் நோய். 7

அழல் போலும் மாலைக்குத் தூது ஆகி, ஆயன்
குழல்போலும் கொல்லும் படை. 8

பதி மருண்டு, பைதல் உழக்கும்—மதி மருண்டு,
மாலை படர்தரும் போழ்து. 9

பொருள்மாலையாளரை உள்ளி, மருள் மாலை
மாயும், என் மாயா உயிர். 10

## 124. உறுப்பு நலன் அழிதல்

ஆற்றுமை மிகுதியான் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது

சிறுமை நமக்கு ஒழியச் சேண் சென்றார் உள்ளி,
நறு மலர் நாணின, கண். 1

நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்—
பசந்து பனி வாரும் கண். 2

தணந்தமை சால அறிவிப்ப போலும்—
மணந்த நாள் வீங்கிய தோள். 3

பணை நீங்கிப் பைந் தொடி சோரும்—துணை நீங்கித்
தொல் கவின் வாடிய தோள். 4

கொடியார் கொடுமை உரைக்கும்—தொடியொடு
தொல் கவின் வாடிய தோள். 5

தான் ஆற்றுதற்பொருட்டு இயற்பழித்த தோழிக்குத் தலைமகள் சொல்லியது

தொடியொடு தோள் நெகிழ நோவல்—அவரை,
'கொடியர்' எனக் கூறல் நொந்து. 6

அவ் இயற்பழிப்புப் பொறுது தன் நெஞ்சிற்குச் சொல்லியது

பாடு பெறுதியோ—நெஞ்சே!—கொடியார்க்கு என்
வாடு தோட் பூசல் உரைத்து? 7

வினைமுடித்து மீளலுற்ற தலைமகன் முன் நிகழ்ந்தது நினைந்து, தன்னுள்ளே சொல்லியது

முயங்கிய கைகளை ஊக்க, பசந்தது—
பைந் தொடிப் பேதை நுதல்! 8

முயக்கிடைத் தண் வளி போழ, பசப்பு உற்ற—
பேதை பெரு மழைக்கண். 9

கண்ணின் பசப்போ பருவரல் எய்தின்றே—
ஒள் நுதல் செய்தது கண்டு. 10

## 125. நெஞ்சொடு கிளத்தல்

தன் ஆற்றாமை தீரும் திறன் நாடியது

நினைத்து ஒன்று சொல்லாயோ—நெஞ்சே!—எனைத்து ஒன்றும்
எவ்வ நோய் தீர்க்கும் மருந்து? 1

தலைமகனைக் காண்டற்கண் வேட்கை மிகுதியால் சொல்லியது

காதல் அவர் இலர் ஆக நீ நோவது
பேதைமை—வாழி, என் நெஞ்சு! 2

இருந்து உள்ளி, என், பரிதல்?—நெஞ்சே!—பரிந்து உள்ளல்
பைதல் நோய் செய்தார்கண் இல். 3

கண்ணும் கொளச் சேறி—நெஞ்சே!—இவை என்னைத்
தின்னும், அவர்க் காணல் உற்று! 4

செற்றார் எனக் கைவிடல் உண்டோ—நெஞ்சே!—யாம்
உற்றால் உறாஅதவர்? 5

தலைமகன் கொடுமை நினைந்து, செலவு உடம்படாத நெஞ்சினைக் கழறியது

கலந்து உணர்த்தும் காதலர்க் கண்டால், புலந்து உணராய்;
பொய்க் காய்வு காய்தி—என் நெஞ்சு! 6

நாண் தடுத்தலின், அச் செலவு ஒழிவாள் சொல்லியது

காமம் விடு, ஒன்றோ; நாண் விடு—நல் நெஞ்சே!—
யானோ பொறேன், இவ் இரண்டு! 7

பரிந்து அவர் நல்கார் என்று, ஏங்கி, பிரிந்தவர்-
பின் செல்வாய்; பேதை—என் நெஞ்சு! 8

உள்ளத்தார் காதலவர் ஆக, உள்ளி நீ
யாருழைச் சேறி?—என் நெஞ்சு! 9

'அவரை மறந்து ஆற்றல் வேண்டும்' என்பதுபடச் சொல்லியது

துன்னத் துறந்தாரை நெஞ்சத்து உடையேமா,
இன்னும் இழத்தும், கவின். 10

## 126. நிறை அழிதல்

'நாணும் நிறையும் அழியாமை நீ ஆற்றல்வேண்டும்' என்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது

காமக் கணிச்சி உடைக்கும்—நிறை என்னும்
நாணுத் தாழ் வீழ்த்த கதவு. 1

'நெஞ்சின்கண் தோன்றிய காமம் நெஞ்சால் அடக்கப்படும்' என்றாட்குச் சொல்லியது

காமம் என ஒன்றோ கண் இன்று! என் நெஞ்சத்தை
யாமத்தும் ஆளும், தொழில். 2

'மகளிர் காமம் மறைக்கப்படும்' என்றாட்குச் சொல்லியது

மறைப்பேன்மன் காமத்தை யானோ; குறிப்பு இன்றித்
தும்மல்போல் தோன்றிவிடும். 3

நிறை உடையேன் என்பேன்மன், யானோ; என் காமம்,
மறை இறந்து, மன்றுபடும். 4

'நம்மை மறந்தாரை நாமும் மறக்கற்பாலம்' என்றாட்குச் சொல்லியது

செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை, காம நோய்
உற்றார் அறிவது ஒன்று அன்று. 5

செற்றவர்பின் சேறல் வேண்டி,—அளித்துஅரோ!—
எற்று, என்னை உற்ற துயர்? 6

பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகனோடு நிறையழிவாற் கூடிய தலைமகள், 'நீ புலவாமைக்குக் காரணம் யாது?' என்ற தோழிக்குச் சொல்லியது

நாண் என ஒன்றோ அறியலம்—காமத்தான்,
பேணியார் பெட்ப செயின். 7

பல் மாயக் கள்வன் பணிமொழி அன்றோ—நம்
பெண்மை உடைக்கும் படை! 8

'புலப்பல்' எனச் சென்றேன்; புல்லினேன், நெஞ்சம்
கலத்தல் உறுவது கண்டு. 9

நிணம் தீயில் இட்டன்ன நெஞ்சினார்க்கு உண்டோ—
புணர்ந்து ஊடி நிற்பேம் எனல்? 10

## 127. அவர்வயின் விதும்பல்

தலைமகள் காண்டல் விதுப்பினால் சொல்லியது

வாள் அற்றுப் புற்கென்ற, கண்ணும்; அவர் சென்ற
நாள் ஒற்றித் தேய்ந்த, விரல். 1

'ஆற்றாமை மிகுதலின் இடையின்றி நினைக்கற்பாலையல்லை; சிறிது மறக்கல்வேண்டும்'
என்ற தோழிக்குச் சொல்லியது

இலங்கிழாய்! இன்று மறப்பின், என் தோள்மேல்
கலம் கழியும், காரிகை நீத்து. 2

உரன் நசைஇ, உள்ளம் துணையாகச் சென்றார்
வரல் நசைஇ, இன்னும் உளேன். 3

கூடிய காமம் பிரிந்தார் வரவு உள்ளி,
கோடு கொடு ஏறும், என் நெஞ்சு. 4

தலைமகன் வரவு கூறி, 'ஆற்றாயாய்ப் பசக்கற்பாலை யல்லை' என்ற
தோழிக்குச் சொல்லியது

காண்கமன், கொண்கனைக் கண் ஆர; கண்டபின்,
நீங்கும், என் மென் தோட் பசப்பு. 5

வருகமன், கொண்கன் ஒருநாள்; பருகுவன்,
பைதல்நோய் எல்லாம் கெட. 6

புலப்பேன்கொல்—புல்லுவேன் கொல்லோ—கலப்பேன்கொல்—
கண் அன்ன கேளிர் வரின்? 7

வேந்தற்கு உற்றுழிப் பிரிந்த தலைமகன் வினைமுடிவு நீட்டித்துழி,
தலைமகளை நினைந்து, தன்னுள்ளே சொல்லியது

வினை கலந்து வென்றீக, வேந்தன்! மனை கலந்து
மாலை அயர்கம், விருந்து! 8

ஒரு நாள் எழு நாள்போல் செல்லும்—சேண் சென்றார்
வரு நாள் வைத்து ஏங்குபவர்க்கு. 9

பெறின் என் ஆம்—பெற்றக்கால் என் ஆம்—உறின் என் ஆம்—
உள்ளம் உடைந்து உக்கக்கால்? 10

## 128. குறிப்பு அறிவுறுத்தல்

பிரிந்து கூடிய தலைமகன் வேட்கை மிகவினால் புதுவது பல் நாளும் பாராட்ட,
தலைமகள், 'இது ஒன்று உடைத்து' என அஞ்சியவழி, அதனை அவள்
குறிப்பான் அறிந்து, அவன் அவட்குச் சொல்லியது

கரப்பினும், கையிகந்து ஒல்லா, நின் உண்கண்
உரைக்கல் உறுவது ஒன்று உண்டு. 1

நாணால் அவள் அது சொல்லாளாயவழி, அவன் தோழிக்குச் சொல்லியது

கண் நிறைந்த காரிகை, காம்பு ஏர் தோள், பேதைக்குப்
பெண் நிறைந்த நீர்மை பெரிது. 2

மணியுள் திகழ்தரும் நூல்போல், மடந்தை
அணியுள் திகழ்வது ஒன்று உண்டு. 3

முகை மொக்குள் உள்ளது நாற்றம்போல், பேதை
நகை மொக்குள் உள்ளது ஒன்று உண்டு. 4

செறிதொடி செய்து இறந்த கள்ளம், உறு துயர்
தீர்க்கும் மருந்து ஒன்று உடைத்து. 5

தலைமகன் குறிப்பு அறிந்த தலைமகள் அதனை அது தெளிவிக்கச் சென்ற
தோழிக்கு அறிவுறுத்தது

பெரிது ஆற்றிப் பெட்பக் கலத்தல், அரிது ஆற்றி,
அன்பு இன்மை சூழ்வது உடைத்து. 6

தண்ணந் துறைவன் தணந்தமை, நம்மினும்
முன்னம் உணர்ந்த, வளை. 7

நெருநற்றுச் சென்றார் எம் காதலர்; யாமும்
எழு நாளேம், மேனி பசந்து! 8

தலைமகள் குறிப்பு அறிந்த தோழி அதனைத் தலைமகற்கு அறிவித்தது

தொடி நோக்கி, மென் தோளும் நோக்கி, அடி நோக்கி,
அஃது, ஆண்டு அவள் செய்தது. 9

தலைமகன் பிரியாமைக் குறிப்பினைத் தோழிக்கு அறிவுறுத்தது

பெண்ணினான் பெண்மை உடைத்து என்ப—கண்ணினான்
காம நோய் சொல்லி இரவு. 10

## 129. புணர்ச்சி விதும்பல்

'பிரிதற்குறிப்பினன் ஆகியானோடு நீ புலவாமைக்குக் காரணம் யாது?' என
நகையாடிய தோழிக்குத் தலைமகள் சொல்லியது

உள்ளக் களித்தலும், காண மகிழ்தலும்,
கள்ளுக்கு இல்; காமத்திற்கு உண்டு. 1

தினைத் துணையும் ஊடாமை வேண்டும்—பனைத் துணையும்
காமம் நிறைய வரின். 2

பேணாது பெட்பவே செய்யினும், கொண்கனைக்
காணாது அமையல, கண். 3

ஊடற்கண் சென்றேன்மன்;—தோழி!—அது மறந்து
கூடற்கண் சென்றது, என் நெஞ்சு. 4

எழுதுங்கால் கோல் காணுக் கண்ணேபோல், கொண்கன்
பழி காணேன், கண்ட இடத்து. 5

காணுங்கால் காணேன் தவறு ஆய; காணுக்கால்,
காணேன், தவறு அல்லவை. 6

உய்த்தல் அறிந்து புனல் பாய்பவரேபோல்,
பொய்த்தல் அறிந்து, என் புலந்து? 7

தலைமகள் புணர்ச்சி விதுப்பு அறிந்த தோழி தலைமகற்குச் சொல்லியது

இளித்தக்க இன்னு செயினும், களித்தார்க்குக்
கள் அற்றே—கள்வ!—நின் மார்பு. 8

உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைமகன் சொல்லியது

மலரினும் மெல்லிது காமம்; சிலர், அதன்
செவ்வி தலைப்படுவார். 9

கண்ணின் துனித்தே, கலங்கினுள், புல்லுதல்
என்னினும் தான் விதுப்புற்று. 10

## 130. நெஞ்சொடு புலத்தல்

தலைமகன்கண் தவறு உண்டாயவழியும் புலவி கருதாத நெஞ்சிற்குத்
தலைமகள் சொல்லியது

அவர் நெஞ்சு அவர்க்கு ஆதல் கண்டும், எவன்,—நெஞ்சே!—
நீ எமக்கு ஆகாதது? 1

உறாஅதவர்க் கண்ட கண்ணும், அவரைச்
செறாஅர் எனச் சேறி—என் நெஞ்சு! 2

'கெட்டார்க்கு நட்டார் இல்' என்பதோ—நெஞ்சே!—நீ
பெட்டாங்கு அவர்பின் செலல்? 3

இனி, அன்ன நின்னொடு சூழ்வார் யார்—நெஞ்சே!
துனி செய்து துவ்வாய்காண் மற்று? 4

வாயிலாகச் சென்ற தோழி கேட்ப, தலைமகள் சொல்லியது

பெறாஅமை அஞ்சும்; பெறின், பிரிவு அஞ்சும்;
அறாஅ இடும்பைத்து—என் நெஞ்சு. 5

தனியே இருந்து நினைத்தக்கால், என்னைத்
தினிய இருந்தது—என் நெஞ்சு. 6

நாணும் மறந்தேன்—அவர் மறக்கல்லா என்
மாணா மட நெஞ்சின் பட்டு. 7

'எள்ளின், இளிவாம்' என்று எண்ணி, அவர் திறம்
உள்ளும்—உயிர்க் காதல் நெஞ்சு. 8

உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைமகன் சொல்லியது

துன்பத்திற்கு யாரே துணை ஆவார்—தாம் உடைய
நெஞ்சம் துணை அல்வழி? 9

தஞ்சம், தமர் அல்லர் ஏதிலார்—தாம் உடைய
நெஞ்சம் தமர் அல்வழி. 10

## 131. புலவி

வாயிலாகச் சென்ற தோழி தலைமகள் வாயில் நேர்தற்பொருட்டு
அவளோடு நகையாடிச் சொல்லியது

புல்லாது இராஅப் புலத்தை; அவர் உறும்
அல்லல் நோய் காண்கம், சிறிது. 1

புலவி ஒழிந்து வாயில் நேரும்வகை அவள் சொல்லியது

உப்பு அமைந்தற்றால், புலவி; அது சிறிது
மிக்கற்றால், நீள விடல். 2

பரத்தையரிடத்துநின்றும் வந்த தலைமகனோடு தலைமகள் புலந்து சொல்லியது

அலந்தாரை அல்லல் நோய் செய்தற்றால்—தம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல். 3

ஊடியவரை உணராமை—வாடிய
வள்ளி முதல் அரிந்தற்று. 4

தலைமகளைப் புலவி நீக்கிக் கூடிய தலைமகன் தன்னுள்ளே சொல்லியது

நலத்தகை நல்லவர்க்கு ஏஎர், புலத் தகை,
பூ அன்ன கண்ணார் அகத்து. 5

துனியும் புலவியும் இல்லாயின், காமம்
கனியும் கருக்காயும் அற்று. 6

ஊடலின் உண்டு ஆங்கு ஓர் துன்பம்—'புணர்வது
நீடுவது அன்றுகொல்!' என்று. 7

உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைமகன் தலைமகளோடு புலந்து சொல்லியது

நோதல் எவன், மற்று—'நொந்தார்' என்று அஃது அறியும்
காதலர் இல்லாவழி! 8

நீரும் நிழலது இனிதே; புலவியும்
வீழுநர்கண்ணே இனிது. 9

ஊடல் உணங்க, விடுவாரொடு, என் நெஞ்சம்,
'கூடுவேம்' என்பது அவா. 10

## 132. புலவி நுணுக்கம்

உலாப் போய் வந்த தலைமகன் பள்ளியிடத்தானாகத் தலைமகள் சொல்லியது

பெண் இயலார் எல்லாரும் கண்ணின் பொது உண்பர்;
நண்ணேன்—பரத்த!—நின் மார்பு. 1

தலைமகன் நீக்கத்துச் சென்ற தோழிக்குத் தலைமகள்
பள்ளியிடத்து நிகழ்ந்தது கூறியது

ஊடி இருந்தேமா, தும்மினார்—யாம் தம்மை,
'நீடு வாழ்க!' என்பாக்கு அறிந்து. 2

தலைமகளது புலவிக் குறிப்பினைக் கண்டு, 'நீயிர் கூடி ஒழுகாநிற்கவும், இது
நிகழ்தற்குக் காரணம் யாது?' என்ற தோழிக்குத் தலைமகன் சொல்லியது

கோட்டுப் பூச் சூடினும் காயும்—'ஒருத்தியைக்
காட்டிய சூடினீர்!' என்று. 3

'யாரினும் காதலம்' என்றேனா, ஊடினாள்—
'யாரினும்! யாரினும்!' என்று. 4

'இம்மைப் பிறப்பில் பிரியலம்' என்றேனா,
கண் நிறை நீர் கொண்டனள். 5

'உள்ளினேன்' என்றேன்; 'மற்று என் மறந்தீர்' என்று என்னைப்
புல்லாள், புலத்தக்கனள். 6

வழுத்தினாள், தும்மினேனாக; அழித்து அழுதாள்,
'யார் உள்ளித் தும்மினீர்?' என்று. 7

தும்முச் செறுப்ப, அழுதாள், 'நுமர் உள்ளல்
எம்மை மறைத்திரோ?' என்று. 8

தன்னை உணர்த்தினும் காயும், 'பிறர்க்கும் நீர்
இந் நீரர் ஆகுதிர்!' என்று. 9

நினைத்திருந்து நோக்கினும், காயும், 'அனைத்தும் நீர்
யார் உள்ளி நோக்கினீர்?' என்று. 10

## 133. ஊடல் உவகை

தலைமகள் காரணமின்றிப் புலக்கின்றமை கேட்ட தோழி, 'அங்ஙனம் நீ புலக்கின்றது என்னை?' என்றாட்கு அவள் சொல்லியது

இல்லை தவறு அவர்க்கு ஆயினும், ஊடுதல்
வல்லது, அவர் அளிக்குமாறு. 1

'புலவாக்காலும் அத் தலையளி பெறலாயிருக்க, அஃது இழந்து, புலவியான் வருந்துவது என்னை?' என்றாட்கு அவள் சொல்லியது

ஊடலின் தோன்றும் சிறு துனி, நல் அளி
வாடினும், பாடு பெறும். 2

புலத்தலின் புத்தேள்-நாடு உண்டோ—நிலத்தொடு
நீர் இயைந்தன்னாரகத்து? 3

'அப் புலவி இனி யாதால் நீங்கும்?' என்றாட்குச் சொல்லியது

புல்லி விடாஅப் புலவியுள் தோன்றும்—என்
உள்ளம் உடைக்கும் படை. 4

தலைமகளை ஊடல் நீக்கிக் கூடிய தலைமகன் கழியுவகையனாய்த் தன்னுள்ளே சொல்லியது

தவறு இலர்ஆயினும், தாம் வீழ்வார் மென் தோள்
அகறலின், ஆங்கு ஒன்று உடைத்து. 5

உணலினும், உண்டது அறல் இனிது; காமம்
புணர்தலின், ஊடல் இனிது. 6

ஊடலின் தோற்றவர் வென்றார்; அது மன்னும்
கூடலின் காணப்படும். 7

ஊடிப் பெறுகுவம்கொல்லோ—நுதல் வெயர்ப்பக்
கூடலின் தோன்றிய உப்பு! 8

ஊடுக மன்னோ, ஒளியிழை! யாம் இரப்ப,
நீடுக மன்னோ, இரா! 9

ஊடுதல் காமத்திற்கு இன்பம்; அதற்கு இன்பம்,
கூடி முயங்கப்பெறின். 10

# நாலடியார்

திருக்குறளுக்கு அடுத்த நிலையில் வைத்துப் போற்றப்பெறும் சிறப்பு வாய்ந்த அறநூல் நாலடியார். நூல் அமைப்பில் இரண்டிற்கும் மிகுந்த ஒற்றுமை உண்டு. திருக்குறள் சூத்திரம் போன்று இரண்டு அடிகளில் கருதிய பொருளைச் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கிறது; நாலடியாரோ, பொருள்களைத் தக்க உதாரணம் காட்டி விளக்குவதோடு, கற்போர் உளம் கொளும் வகையில் தெளிவுபடவும் உரைக்கின்றது. இவ்வகையில் நாலடியாரைத் திருக்குறளின் விளக்கம் என்று கூறலாம். 'நாலும் இரண்டும் சொல்லுக்கு உறுதி' என வழங்கும் பழமொழியிலும், 'பழகு தமிழ்ச்சொல் அருமை நால் இரண்டில்' என உரைக்கும் தனிப்பாடல் பகுதியிலும் இந்த இரு அற நூல்களையும் ஒருசேர வைத்து எண்ணுதல் நோக்கத் தக்கது.

நான்கு அடி வெண்பாக்களால் இந் நூல் செய்யுட்கள் அமைந்திருத்தலின் இதனை 'நாலடி' என்றும், 'ஆர்' என்னும் சிறப்பு விகுதியை இறுதியில் இணைத்து, 'நாலடியார்' என்றும் வழங்கி வருகின்றனர். குறளைத் 'திருக்குறள்' என்று குறித்ததைப் போல, நாலடி வெண்பாக்களாலாகிய வேறு நூல்கள் பல தமிழில் இருக்கவும், இந் நூல் ஒன்றையே 'நாலடி' என்ற பெயரால் குறித்து வந்துள்ளனர். இந் நூலில் அமைந்துள்ள பாடல் தொகையை உட்கொண்டு, 'நாலடி நானூறு' என்றும் இது குறிக்கப் பெறுகின்றது. இதற்கு 'வேளாண் வேதம்' என்ற ஒரு பெயரும் உளதென்பது சில தனிப் பாடல்களால் தெரியவருகிறது.

இந் நூல், ஆசிரியர் ஒருவரால் இயற்றப்பெற்றது அன்று என்றும், பலர் பாடிய பாடல்களின் தொகுப்பாய் உள்ளது என்றும் சிலர் கூறுகின்றனர். இது பற்றிய கன்னபரம்பரை வரலாறு ஒன்றும் உள்ளது: ஒரு சமயம் எண்ணாயிரவர் சமண முனிவர், பஞ்சத்தால் தம் நாடு விட்டு வந்து, பாண்டியன் ஆதரவில் வாழ்ந்து வந்தனராம். சில காலத்தில் தம் நாடு முன் போலச் செழிப்புறவே அவர்கள் மீண்டு செல்ல விரும்பிய போது, பாண்டியன் அவர்களைப் பிரிய மனம் இன்றி, விடை கொடாது இருந்தனனும். இதனால், எண்ணாயிரவரும் ஒவ்வொரு பாடல் எழுதித் தத்தம் இருக்கையின் கீழ் வைத்துவிட்டு, பாண்டியனிடம் அறிவியாமலே, தம் நாட்டுக்குத் திரும்பிவிட்டனராம். இச் செய்தி தெரிந்த மன்னன், புலவர்களைப் பிரிந்த மனத்துயராலும், தன் வாக்கை அவர்கள் மதியாமை பற்றி எழுந்த வெகுளியாலும், அவர்கள் எழுதிய எண்ணாயிரம் பாடல்களையும் வைகைப் பெருக்கில் எறியக் கட்டளை பிறப்பித்தானும். அரசன் ஆணைப்படி வைகையில் எறிந்த ஏடுகளில் நானூறு நீரை எதிர்த்து வரவே, பாண்டிய மன்னன் அவற்றைச் சிறந்தன என்று கொண்டு தொகுப்பித்து வைத்தானும். இந் நிகழ்ச்சியைச் சில தனிப் பாடல்கள் தெரிவிக்கின்றன.

> எண் பெருங் குன்றத்து எணாஅயிரம் இருடி
> பண் பொருந்தப் பாடிய பா நானூறும்

என்றும் ஒரு தனிப்பாடலில் காண்கிறது.

இவ்வரலாறு எவ்வாறாயினும், நாலடியார் புலவர் பலர் பாடிய செய்யுட்களின் தொகுதி என்றே ஆராய்ச்சியாளர் எண்ணுகின்றனர். கூறியது கூறலாகச் சில கருத்துக்கள் அங்கங்கே காணப்பெறுதலும், அதிகாரங்களுக்கு இயைபில்லாத பாடல்கள் சிற்சில இடங்களில் காணப்பெறுதலும் இதற்குத் தக்க சான்றுகளாம் என்பர்.

> 'வெள்ளாண் மரபுக்கு வேதம்' எனச் சான்றோர்
> எல்லாரும் கூடி எடுத்துரைத்த, சொல் ஆரும்,
> நாலடி நானூறும் நன்கு இனிதா என் மனத்தே
> சீலமுடன் நிற்க, தெளிந்து.

என்ற தனிப்பாடல் இந்நூலிலுள்ள பாக்கள் சான்றோர் பலர் பாடியவை என்னும் கருத்தைப் புலப்படுத்துகிறது. சீவக சிந்தாமணி உரையில் (1089), நச்சினார்க்கினியர், நாலடியார்ப் பாடல் ஒன்றை மேற்கோள் காட்டி, 'பிறரும் இச்

சமயத்தார், ''சிறுகா பெருகா முறை பிறழ்ந்து வாரா'' (நாலடி 110) என்பதனானும் உணர்க' என்று குறித்துள்ளனர். இவற்றால், நாலடியார் சைன சமயச் சான்றோர் பலர் பாடிய பாடல்களின் தொகுதி என்பது போதரும்.

நாலடியார்ப் பிரதிகள் சிலவற்றில் காணும் 'வளம் கெழு திருவொடு' எனத் தொடங்கும் பாடலிலிருந்து, நாலடி நூலுக்கு அதிகாரம் வகுத்தவர் 'பதுமனார்' என்பதும், இவ்வதிகாரங்களை முப்பாலுக்கும் அடைவுபடுத்தி உரை கண்டவர் 'தருமர்' என்பதும் தெரியவருகின்றன. பதுமனார், திருக்குறள் நூலைப் போன்று அதிகாரத்திற்குப் பப்பத்துப் பாடல்களாக அமைத்து, நூலை உருவாக்கியிருக்கிறார். நூலுக்குப் புறம்பாக முதற்கண் உள்ள கடவுள் வாழ்த்துப் பாடல் நீங்கலாக, இதன்கண் 40 அதிகாரங்களும் 400 பாடல்களும் உள்ளன. பின்னர், பாலும் இயலும் வகுத்த உரையாசிரியர்கள், அறத்துப் பால், பொருட் பால், காமத்துப் பால் என முப்பாலாகப் பகுத்து, இயல் பாகுபாடுகளும் செய்திருக்கின்றனர். பொருட்பாலில் பொது இயல், பல் நெறி இயல் என்பன ஓர் அதிகாரமே ஓர் இயலாகக் குறிக்கப்படுபவை. தருமர் இறுதி மூன்று அதிகாரங்களையும் காமத்துப் பால் எனக் கொண்டு, 'பொதுமகளிர்' என்னும் ஓர் அதிகாரத்தை (38) 'இன்ப துன்ப இயல்' என்றும், ஏனை இரண்டு அதிகாரங்களையும் (39, 40) 'இன்ப இயல்' என்றும் கொள்வர். வேறு சில உரைகாரர் இறுதி அதிகாரமாகிய 'காமம் நுதல் இயல்' ஒன்றை மட்டுமே காமத்துப் பாலுக்கு உரியதாகக் கொண்டுள்ளனர். ஓர் அதிகாரமே இயல்களாக அமைந்துள்ளமையும், ஓர் அதிகாரம் இயலாகவும் 'பால்' எனப்படும் பெரும் பிரிவாகவும் அமைந்துள்ளமையும் சிந்திக்கின், இந்தப் பால், இயல் பகுப்பு சிறந்த அமைப்பு முறையாகத் தோன்றவில்லை. காமத்துப் பாலின் இன்ப இயல் பாடல்களுக்குத் துறைக் குறிப்புக்களும் உரைகளில் காணப்படுகின்றன.

இந்நூல் பாடல்களில் ஆடூஉ முன்னிலை (52) அதிகமாகவும், மகடூஉ முன்னிலை (6) மிகக் குறைவாகவும் வந்துள்ளன. 'பூங்குன்ற நாட!' என வரும் விளித்தொடர் நூலகத்து இரண்டு இடங்களில் (128, 212) வருவது கொண்டு, பூங்குன்ற நாட்டுத் தலைவனைக் குறித்ததாக எண்ணுவோரும் உண்டு. ஆனால், இவையும் ஏனைய ஆடூஉ முன்னிலைத் தொடர்களைப் போலப் பொது வகையில் அமைந்தவை என்பதே பொருத்தம் எனத் தோன்றுகிறது.

ஆனால், 'முத்தரையர்' என்ற அரச பரம்பரையினரைக் குறித்த செய்திகள் இரண்டு பாடல்களில் (200, 296) உள்ளன. இம் முத்தரையர் வரலாற்றோடு இயைபுபட்டவர் என்றும், இவர்கள் காலம் கி. பி. 7-ஆம் நூற்றாண்டுக்குப் பிந்தியதாதல் வேண்டும் என்றும் ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். எனவே, நாலடி நானூறும் இக்காலத்தைச் சார்ந்ததாதல் கூடும்.

இந்நூலைத் தொகுத்து முறைப்படுத்திய பதுமனாரே இதற்கு ஓர் உரையும் வகுத்தார் என்பது தெரியவருகிறது. மதிவரர் என்பவர் இந் நூற்கு அரும் பதவுரை இயற்றினார் என்பதும், தருமர் என்பவர் உரை எழுதினார் என்பதும் தனிப்பாடல்களால் தெரியவருகின்றன. இந்நூலினை இளம்பூரணர் முதலிய தொல்காப்பிய உரைகாரரும், பரிமேலழகரும், அடியார்க்கு நல்லாரும் தம்தம் உரைகளில் மேற்கோளாக எடுத்தாண்டுள்ளனர்.

## கடவுள் வாழ்த்து

வான் இடு வில்லின் வரவு அறியா, வாய்மையால்,
கால் நிலம் தோயாக் கடவுளை, யாம் நிலம்
சென்னி உற வணங்கிச் சேர்தும்—'எம் உள்ளத்து
முன்னியவை முடிக!' என்று.

முதலாவது

# அறத்துப் பால்

## 1. துறவற இயல்

### 1. செல்வம் நிலையாமை

அறு சுவை உண்டி, அமர்ந்து, இல்லாள் ஊட்ட,
மறு சிகை நீக்கி உண்டாரும், வறிஞராய்ச்
சென்று இரப்பர் ஓர் இடத்துக் கூழ்எனின், செல்வம் ஒன்று
உண்டாக வைக்கற்பாற்று அன்று. 1

துகள் தீர் பெருஞ் செல்வம் தோன்றியக்கால் தொட்டு,
பகடு நடந்த கூழ் பல்லாரோடு உண்க—
அகடு உற யார் மாட்டும் நில்லாது, செல்வம்
சகடக்கால் போல வரும்! 2

யானை எருத்தம் பொலிய, குடை நிழற்கீழ்ச்
சேனைத் தலைவராய்ச் சென்றோரும், ஏனை
வினை உலப்ப, வேறு ஆகி வீழ்வர், தாம் கொண்ட
மனையாளை மாற்றார் கொள. 3

'நின்றன நின்றன நில்லா' என உணர்ந்து,
ஒன்றின ஒன்றின வல்லே, செயின், செய்க—
சென்றன சென்றன, வாழ்நாள்; செறுத்து, உடன்
வந்தது வந்தது, கூற்று! 4

என்னானும் ஒன்று தம் கையுறப் பெற்றக்கால்,
பின் ஆவது என்று பிடித்து இரார், முன்னே
கொடுத்தார் உயப் போவர்—கோடு இல் தீக் கூற்றம்
தொடுத்து ஆறு செல்லும் சுரம். 5

இழைத்த நாள் எல்லை இகவா; பிழைத்து ஒரீஇ,
கூற்றம் குதித்து உய்ந்தார் ஈங்கு இல்லை;—ஆற்றப்
பெரும் பொருள் வைத்தீர்!—வழங்குமின்; நாளைத்
'தழீஇம் தழீஇம்' தண்ணம் படும். 6

தோற்றம் சால் ஞாயிறு நாழியா, வைகலும்
கூற்றம் அளந்து, நும் நாள் உண்ணும்; ஆற்ற
அறம் செய்து அருளுடையீர் ஆகுமின்; யாரும்
பிறந்தும், பிறவாதாரில். 7

'செல்வர் யாம்!' என்று, தாம் செல்வுழி எண்ணாத
புல்லறிவாளர் பெருஞ் செல்வம், எல்லில்
கருங் கொண்மூ வாய் திறந்த மின்னுப்போல் தோன்றி,
மருங்கு அறக் கெட்டுவிடும். 8

உண்ணான், ஒளி நிறான், ஓங்கு புகழ் செய்யான்,
துன்ன அருங் கேளிர் துயர் களையான், கொன்னே
வழங்கான், பொருள் காத்து இருப்பானேல், 'அஆ!
இழந்தான்' என்று எண்ணப்படும். 9

உடாஅதும், உண்ணாதும், தம் உடம்பு செற்றும்,
கெடாஅத நல் அறமும் செய்யார், கொடாஅது
வைத்து ஈட்டினார் இழப்பர்;—வான் தோய் மலை நாட!—
உய்த்து ஈட்டும் தேனீக் கரி. 10

## 2. இளமை நிலையாமை

'நரை வரும்!' என்று எண்ணி, நல் அறிவாளர்
குழவியிடத்தே துறந்தார்; புரை தீரா,
மன்னா இளமை மகிழ்ந்தாரே, கோல் ஊன்றி,
இன்னாங்கு எழுந்திருப்பார். 1

நட்புநார் அற்றன; நல்லாரும் அஃகினார்;
அற்புத் தளையும் அவிழ்ந்தன; உள் காணாய்;
வாழ்தலின், ஊதியம் என் உண்டாம்? வந்ததே,
ஆழ் கலத்து அன்ன கலுழ்! 2

சொல் தளர்ந்து, கோல் ஊன்றி, சோர்ந்த நடையினர் ஆய்,
பல் கழன்று, பண்டம் பழிகாறும் இல்-செறிந்து,
காம நெறி படரும் கண்ணினார்க்கு இல்லையே—
ஏம நெறி படரும் ஆறு. 3

தாழா, தளரா, தலை நடுங்கா, தண்டு ஊன்றா,
வீழா விறக்கும் இவள்மாட்டும், காழ் இலா
மம்மர் கொள் மாந்தர்க்கு அணங்கு ஆகும்—தன் கைக் கோல்
அம்மனைக் கோல் ஆகிய ஞான்று. 4

எனக்குத் தாய் ஆகியாள் என்னை ஈங்கு இட்டு,
தனக்குத் தாய் நாடியே சென்றாள்; தனக்குத் தாய்
ஆகியவளும் அதுஆனால், தாய்த் தாய்க்கொண்டு,
ஏகும் அளித்து, இவ் உலகு. 5

வெறி அயர் வெங் களத்து வேல்மகன் பாணி
முறி ஆர் நறுங் கண்ணி முன்னர்த் தயங்க,
மறி குளகு உண்டன்ன மன்னா மகிழ்ச்சி
அறிவுடையாளர்கண் இல். 6

பனி படு சோலைப் பயன் மரம் எல்லாம்
கனி உதிர்ந்து வீழ்ந்தற்று, இளமை; 'நனி பெரிதும்
வேல்-கண்ணள்!' என்று இவளை வெஃகன்மின்; மற்று இவளும்
கோல்-கண்ணள் ஆகும், குனிந்து. 7

'பருவம் எனைத்து உள? பல்லின் பால் ஏனை?
இரு சிகையும் உண்டீரோ?' என்று, வரிசையால்
உள் நாட்டம் கொள்ளப்படுதலால், யாக்கைக் கோள்
எண்ணார், அறிவுடையார். 8

'மற்று அறிவாம் நல் வினை; யாம் இளையம்' என்னாது,
கைத்து உண்டாம் போழ்தே, கரவாது, அறம் செய்ம்மின்!—
முற்றி இருந்த கனி ஒழிய, தீ வளியால்
நல் காய் உதிர்தலும் உண்டு! 9

ஆள் பார்த்து உழலும் அருள் இல் கூற்று உண்மையால்,
தோட்கோப்புக் காலத்தால் கொண்டு உய்ம்மின்; பீள் பிதுக்கிப்
பிள்ளையைத் தாய் அலறக் கோடலால், மற்று அதன்
கள்ளம் கடைப்பிடித்தல் நன்று. 10

### 3. யாக்கை நிலையாமை

மலைமிசைத் தோன்றும் மதியம்போல், யானைத்
தலைமிசைக் கொண்ட குடையர், நிலமிசைத்
துஞ்சினார் என்று எடுத்துத் தூற்றப்பட்டார் அல்லால்,
எஞ்சினார் இவ் உலகத்து இல். 1

வாழ்நாட்கு அலகா, வயங்கு ஒளி மண்டிலம்
வீழ் நாள் படாஅது எழுதலால், வாழ்நாள்
உலவாமுன் ஒப்புரவு ஆற்றுமின்; யாரும்
நிலவார், நிலமிசை மேல். 2

'மன்றம் கறங்க மணப் பறை ஆயின,
அன்று அவர்க்கு ஆங்கே, பிணப் பறை ஆய், பின்றை
ஒலித்தலும் உண்டாம்' என்று, உய்ந்துபோம் ஆறே
வலிக்குமாம்—மாண்டார் மனம். 3

சென்றே எறிப ஒருகால்; சிறு வரை
நின்றே எறிப, பறையினை; நன்றேகாண்,
முக் காலைக் கொட்டினுள், மூடி, தீக் கொண்டு எழுவர்,
செத்தாரைச் சாவார் சுமந்து! 4

கணம் கொண்டு சுற்றத்தார் கல்லென்று அலற,
பிணம் கொண்டு காட்டு உய்ப்பார்க் கண்டும், மனம் கொண்டு, ஈண்டு,
'உண்டு, உண்டு, உண்டு' என்னும் உணர்வினன்-சாற்றுமே,
'டொண் டொண் டொண்' என்னும் பறை. 5

நார்த் தொடுத்து ஈர்க்கில் என்? நன்று ஆய்ந்து அடக்கில் என்?
பார்த்துழிப் பெய்யில் என்? பல்லோர் பழிக்கில் என்?—
தோற்பையுள்நின்று, தொழில் அறச் செய்து ஊட்டும்
கூத்தன் புறப்பட்டக்கால். 6

'படு மழை மொக்குளின் பல் காலும் தோன்றி,
கெடும், இது ஓர் யாக்கை' என்று எண்ணி, 'தடுமாற்றம்
தீர்ப்பேம் யாம்' என்று உணரும் திண் அறிவாளரை
நேர்ப்பார் யார், நீள் நிலத்தின்மேல்? 7

யாக்கையை யாப்புடைத்தாப் பெற்றவர், தாம் பெற்ற
யாக்கையால் ஆய பயன் கொள்க—யாக்கை
மலை ஆடும் மஞ்சுபோல் தோன்றி, மற்று ஆங்கே
நிலையாது நீத்துவிடும்! 8

'புல் நுனிமேல் நீர்போல் நிலையாமை' என்று எண்ணி,
இன்னினியே செய்க அறவினை—'இன்னினியே
நின்றான், இருந்தான், கிடந்தான், தன் கேள் அலறச்
சென்றான்' எனப்படுதலால்! 9

கேளாதே வந்து, கிளைகளாய் இல் தோன்றி,
வாளாதே போவரால், மாந்தர்கள்—வாளாதே
சேக்கை மரன் ஒழியச் சேண் நீங்கு புள் போல,
யாக்கை தமர்க்கு ஒழிய நீத்து. 10

## 4. அறன் வலியுறுத்தல்

'அகத்து ஆரே வாழ்வார்?' என்று அண்ணாந்து நோக்கி,
புகத் தாம் பெறுஅர், புறங்கடை பற்றி,
மிகத் தாம் வருந்தி யிருப்பரே—மேலைத்
தவத்தால் தவம் செய்யாதார். 1

'ஆவாம் நாம், ஆக்கம் நசைஇ; அறம் மறந்து,
போவாம் நாம்' என்னா,—புலை நெஞ்சே!—ஓவாது
நின்று உஞற்றி வாழ்தி எனினும், நின் வாழ்நாள்கள்
சென்றன; செய்வது உரை. 2

வினைப் பயன் வந்தக்கால், வெய்ய உயிரா,
மனத்தின் அழியுமாம், பேதை; நினைத்து, அதனைத்
தொல்லையது என்று உணர்வாரே தடுமாற்றத்து
எல்லை இகந்து ஒருவுவார். 3

அரும் பெறல் யாக்கையைப் பெற்ற பயத்தால்,
பெரும் பயனும் ஆற்றவே கொள்க!—கரும்பு ஊர்ந்த
சாறுபோல் சாலவும் பின் உதவி, மற்று அதன்
கோதுபோல் போகும், உடம்பு! 4

கரும்பு ஆட்டி, கட்டி சிறுகாலைக் கொண்டார்
துரும்பு எழுந்து வேங்கால் துயர் ஆண்டு உழவார்;—
வருந்தி உடம்பின் பயன் கொண்டார், கூற்றம்
வருங்கால் பரிவது இலர். 5

'இன்றுகொல்? அன்றுகொல்? என்றுகொல்?' என்னாது,
'பின்றையே நின்றது கூற்றம்' என்று எண்ணி,
ஒருவுமின், தீயவை; ஒல்லும் வகையால்
மருவுமின், மாண்டார் அறம். 6

மக்களால் ஆய பெரும் பயனும், ஆயுங்கால்,
எத்துணையும் ஆற்றப் பலஆனால், தொக்க
உடம்பிற்கே ஒப்புரவு செய்து ஒழுகாது, உம்பர்க்
கிடந்து உண்ணப் பண்ணப்படும். 7

உறக்கும் துணையது ஓர் ஆலம் வித்து ஈண்டி,
இறப்ப நிழற் பயந்தாஅங்கு, அறப்பயனும்,
தான் சிறிதுஆயினும், தக்கார் கைப் பட்டக்கால்,
வான் சிறிதாப் போர்த்துவிடும். 8

வைகலும் வைகல் வரக்கண்டும், அஃது உணரார்,
வைகலும், வைகலை வைகும் என்று இன்புறுவர்—
வைகலும் வைகல் தம் வாழ்நாள்மேல் வைகுதல்
வைகலை வைத்து உணராதார். 9

மான அருங் கலம் நீக்கி, இரவு என்னும்
ஈன இளிவினால் வாழ்வேன்மன்—ஈனத்தால்
ஊட்டியக் கண்ணும் உறுதி சேர்ந்து, இவ் உடம்பு
நீட்டித்து நிற்கும் எனின்! 10

## 5. தூய்தன்மை

'மாக் கேழ் மட நல்லாய்!' என்று அரற்றும் சான்றவர்
நோக்கார்கொல், நொய்யது ஓர் துச்சிலை? யாக்கைக்கு ஓர்
ஈச் சிறகு அன்னது ஓர் தோல் அறினும், வேண்டுமே,
காக்கை கடிவது ஓர் கோல்! 1

தோற் போர்வைமேலும் துளை பலவாய், பொய்ம் மறைக்கும்
மீப் போர்வை மாட்சித்து, உடம்பு; ஆனால், மீப் போர்வை
பொய்ம் மறையா, காமம் புகலாது, மற்று அதனைப்
பைம் மறியாப் பார்க்கப்படும். 2

தக்கோலம் தின்று, தலை நிறையப் பூச் சூடி,
பொய்க் கோலம் செய்ய, ஒழியுமே—'எக்காலும்
உண்டி வினையுள் உறைக்கும்' எனப் பெரியோர்
கண்டு, கைவிட்ட மயல்? 3

'தெள் நீர்க் குவளை, பொரு கயல், வேல்' என்று,
கண் இல் புன்மாக்கள் கவற்ற, விடுவெனோ—
உள் நீர் களைந்தக்கால் நுங்கு சூன்றிட்டன்ன
கண் நீர்மை கண்டு ஒழுகுவேன்? 4

'முல்லை முகை, முறுவல், முத்து' என்று இவை பிதற்றும்
கல்லாப் புன்மாக்கள் கவற்ற விடுவெனோ—
எல்லாரும் காண, புறங்காட்டு உதிர்ந்து உக்க
பல்-என்பு கண்டு ஒழுகுவேன்? 5

குடரும், கொழுவும், குருதியும், என்பும்,
தொடரும் நரம்பொடு தோலும், இடையிடையே
வைத்த தடியும், வழும்பும், ஆம் மற்று இவற்றுள்
எத் திறத்தாள், ஈர்ங் கோதையாள்? 6

ஊறி, உவர்த்தக்க ஒன்பது வாய்ப் புலனும்
கோதிக் குழம்பு அலைக்கும் கும்பத்தை, பேதை,
'பெருந்தோளி! பெய்வளாய்!' என்னும்—மீப் போர்த்த
கருந் தோலால் கண் விளக்கப்பட்டு. 7

பண்டம் அறியார், படு சாந்தும் கோதையும்
கண்டு, பாராட்டுவார் கண்டிலர்கொல்—மண்டிப்
பெடைச் சேவல் வன் கழுகு பேர்த்து இட்டுக் குத்தல்,
முடைச் சாகாடு அச்சு இற்றுழி? 8

கழிந்தார் இடு தலை, கண்டார் நெஞ்சு உட்க,
குழிந்து ஆழ்ந்த கண்ணவாய்த் தோன்றி, ஒழிந்தாரை,
'போற்றி நெறி நின்மின்; இற்று, இதன் பண்பு' என்று
சாற்றும்கொல், சாலச் சிரித்து! 9

உயிர் போயார் வெண் தலை உட்கச் சிரித்து,
செயிர் தீர்க்கும், செம்மாப்பவரை; செயிர் தீர்ந்தார்
கண்டு, 'இற்று, இதன் வண்ணம்' என்பதனுல், தம்மை ஓர்
பண்டத்துள் வைப்பது இலர். 10

## 6. துறவு

விளக்குப் புக இருள் மாய்ந்தாங்கு, ஒருவன்
தவத்தின்முன் நில்லாதாம் பாவம்; விளக்கு நெய்
தேய்விடத்துச் சென்று இருள் பாய்ந்தாங்கு, நல் வினை
தீர்விடத்து நிற்குமாம், தீது. 1

நிலையாமை, நோய், மூப்பு, சாக்காடு, என்று எண்ணி,
தலையாயார் தம் கருமம் செய்வார்; தொலைவு இல்லாச்
சத்தமும் சோதிடமும் என்று ஆங்கு இவை பிதற்றும்
பித்தரின் பேதையார் இல். 2

இல்லம்,இளமை,எழில்,வனப்பு, மீக்கூற்றம்,
செல்வம், வலி, என்று இவை எல்லாம், மெல்ல,
நிலையாமை கண்டு, நெடியார், துறப்பர்—
தலையாயார்—தாம் உய்யக் கொண்டு. 3

துன்பம் பல நாள் உழந்தும், ஒரு நாளை
இன்பமே காமுறுவர், ஏழையார்; இன்பம்
இடை தெரிந்து, இன்னாமை நோக்கி, மனை ஆறு
அடைவு ஒழிந்தார், ஆன்று அமைந்தார். 4

கொன்னே கழிந்தன்று இளமையும்! இன்னே
பிணியொடு மூப்பும் வருமால்;—துணிவு ஒன்றி,
என்னொடு சூழாது, எழுநெஞ்சே!—போதியோ,
நல் நெறி சேர, நமக்கு? 5

'மாண்ட குணத்தொடு மக்கட் பேறு இல் எனினும்,
பூண்டான் கழித்தற்கு அருமையால், பூண்ட
மிடி என்னும் காரணத்தின், மேன்முறைக்கண்ணே
கடி' என்றார், கற்று அறிந்தார். 6

ஊக்கித் தாம் கொண்ட விரதங்கள் உள் உடைய,
தாக்க அருந் துன்பங்கள்தாம் தலைவந்தக்கால்,
நீக்கி, நிறூஉம் உரவோரே, நல் ஒழுக்கம்
காக்கும் திருவத்தவர். 7

தம்மை இகழ்ந்தமை தாம் பொறுப்பது அன்றி, 'மற்று
எம்மை இகழ்ந்த வினைப் பயத்தான், உம்மை
எரிவாய் நிரயத்து வீழ்வர்கொல்!' என்று
பரிவதூஉம், சான்றோர் கடன். 8

மெய், வாய், கண், மூக்கு, செவி, எனப் பேர் பெற்ற
ஐ வாய வேட்கை அவாவினை, கைவாய்,
கலங்காமல் காத்து, உய்க்கும் ஆற்றல் உடையான்
விலங்காது வீடு பெறும். 9

துன்பமே மீதூரக் கண்டும், துறவு உள்ளார்,
இன்பமே காமுறுவர், ஏழையார்; இன்பம்
இசைதொறும், மற்று அதன் இன்றைமை நோக்கி,
பசைதல் பரியாதாம், மேல். 10

## 7. சினம் இன்மை

மதித்து இறப்பாரும் இறக்க! மதியார்,
மிதித்து இறப்பாரும் இறக்க! மிதித்து ஏறி,
ஈயும் தலைமேல் இருத்தலால், அஃது அறிவார்
காயும் கதம் இன்மை நன்று. 1

தண்டாச் சிறப்பின் தம் இன் உயிரைத் தாங்காது,
கண்டுழி எல்லாம் துறப்பவோ—மண்டி,
அடி பெயராது, ஆற்ற இளி வந்த போழ்தின்
முடிகிற்கும் உள்ளத்தவர்? 2

காவாது, ஒருவன் தன் வாய் திறந்து சொல்லும் சொல்
ஓவாதே தம்மைச் சுடுதலால், ஓவாதே
ஆய்ந்து அமைந்த கேள்வி அறிவுடையார், எஞ் ஞான்றும்,
காய்ந்து அமைந்த சொல்லார், கறுத்து. 3

நேர்த்து, நிகர் அல்லார் நீர் அல்ல சொல்லியக்கால்,
வேர்த்து வெகுளார், விழுமியோர்; ஓர்த்து அதனை,
உள்ளத்தான் உள்ளி, உரைத்து, உராய், ஊர் கேட்ப,
துள்ளி, தூண் முட்டுமாம், கீழ். 4

இளையான் அடக்கம் அடக்கம்; கிளை பொருள்
இல்லான் கொடையே கொடைப் பயன்; எல்லாம்
ஒறுக்கும் மதுகை உரனுடையாளன்
பொறுக்கும் பொறையே பொறை. 5

கல் எறிந்தன்ன கயவர் வாய் இன்னாச் சொல்
எல்லாரும் காணப் பொறுத்து, உய்ப்பர்—ஒல்லை,
இடு நீற்றால் பை அவிந்த நாகம்போல், தம்தம்
குடிமையான் வாதிக்கப்பட்டு. 6

மாற்றாராய் நின்று, தம் மாறு ஏற்பார்க்கு ஏலாமை,
'ஆற்றாமை' என்னார், அறிவுடையார்; ஆற்றாமை
நேர்த்து, இன்னா மற்று அவர் செய்தக்கால், தாம் அவரைப்
பேர்த்து இன்னா செய்யாமை நன்று. 7

நெடுங் காலம் ஓடினும், நீசர் வெகுளி
கெடும் காலம் இன்றிப் பரக்கும்; அடும் காலை
நீர் கொண்ட வெப்பம்போல் தானே தணியுமே,
சீர் கொண்ட சான்றோர் சினம். 8

உபகாரம் செய்ததனை ஓராதே, தங்கண்
அபகாரம் ஆற்றச் செயினும், உபகாரம்
தாம் செய்வது அல்லால், தவற்றினால் தீங்கு ஊக்கல்
வான் தோய் குடிப் பிறந்தார்க்கு இல். 9

கூர்த்து நாய் கௌவிக் கொளக் கண்டும், தம் வாயால்
பேர்த்து நாய் கௌவினார் ஈங்கு இல்லை; நீர்த்து அன்றிக்
கீழ்மக்கள் கீழ் ஆய சொல்லியக்கால், சொல்பவோ,
மேன்மக்கள் தம் வாயால் மீட்டு? 10

# 2. இல்லற இயல்

## 8. பொறை உடைமை

கோதை அருவிக் குளிர் வரை நல் நாட!
பேதையோடு யாதும் உரையற்க! பேதை,
உரைக்கின், சிதைந்து உரைக்கும்; ஒல்லும் வகையால்,
வழுக்கிக் கழிதலே நன்று. 1

நேர் அல்லார் நீர் அல்ல சொல்லியக்கால், மற்று அது
தாரித்திருத்தல் தகுதி; மற்று ஓரும்
புகழ்மையாக் கொள்ளாது, பொங்கு நீர் ஞாலம்
சமழ்மையாக் கொண்டுவிடும். 2

காதலார் சொல்லும் கடுஞ் சொல், உவந்து உரைக்கும்
ஏதிலார் இன் சொலின் தீது ஆமோ—போது எலாம்
மாதர் வண்டு ஆர்க்கும் மலி கடல் தண் சேர்ப்ப!—
ஆவது அறிவார்ப் பெறின்? 3

அறிவது அறிந்து, அடங்கி, அஞ்சுவது அஞ்சி,
உறுவது உலகு உவப்பச் செய்து, பெறுவதனுல்
இன்புற்று வாழும் இயல்புடையார், எஞ் ஞான்றும்,
துன்புற்று வாழ்தல் அரிது. 4

வேற்றுமை இன்றிக் கலந்து, இருவர் நட்டக்கால்,
தேற்ரு ஒழுக்கம் ஒருவன்கண் உண்டாயின்,
ஆற்றும் துணையும் பொறுக்க! பொருுன்ஆயின்
தூற்ருதே, தூர விடல்! 5

'இன்ஞ செயினும், இனிய ஒழிக!' என்று,
தன்னையே தான் நோவின் அல்லது, துன்னிக்
கலந்தாரைக் கைவிடுதல்—கானக நாட!—
விலங்கிற்கும் விள்ளல் அரிது! 6

பெரியார் பெரு நட்புக் கோடல், தாம் செய்த
அரிய பொறுப்ப என்று அன்ரே? அரியரோ—
ஒல்லென் அருவி உயர் வரை நல் நாட!—
நல்ல செய்வார்க்குத் தமர்? 7

வற்றி, மற்று ஆற்றப் பசிப்பினும், பண்பு இலார்க்கு
அற்றம் அறிய உரையற்க! அற்றம்
மறைக்கும் துணையார்க்கு உரைப்பவே, தம்மைத்
துறக்கும் துணிவு இலாதார். 8

இன்பம் பயந்தாங்கு இழிவு தலைவரினும்,
இன்பத்தின் பக்கம் இருந்தைக்க! இன்பம்
ஒழியாமை கண்டாலும்— ஓங்கு அருவி நாட!—
பழி ஆகா ஆறே தலை. 9

தான் கெடினும், தக்கார் கேடு எண்ணற்க! தன் உடம்பின்
ஊன் கெடினும், உண்ணார் கைத்து உண்ணற்க! வான் கவிந்த
வையகம் எல்லாம் பெறினும், உரையற்க,
பொய்யோடு இடை மிடைந்த சொல்! 10

## 9. பிறர் மனை நயவாமை

அச்சம் பெரிதால்; அதற்கு இன்பம் சிற்றளவால்;
நிச்சல் நினையுங்கால் கோக் கொலையால்; நிச்சலும்
கும்பிக்கே கூர்த்த வினையால்;—பிறன் தாரம்
நம்பற்க, நாண் உடையார்! 1

அறம், புகழ், கேண்மை, பெருமை, இந் நான்கும்
பிறன் தாரம் நச்சுவார்ச் சேரா; பிறன் தாரம்
நச்சுவார்ச் சேரும், பகை, பழி, பாவம், என்று
அச்சத்தோடு இந் நாற் பொருள். 2

புக்க இடத்து அச்சம்; போதரும் போது அச்சம்;
துய்க்கும் இடத்து அச்சம்; தோன்றாமைக் காப்பு அச்சம்;
எக் காலும் அச்சம் தருமால்; எவன்கொலோ,
உட்கான், பிறன் இல் புகல்? 3

காணின், குடிப் பழி ஆம்; கையுறின், கால் குறையும்;
ஆண் இன்மை செய்யுங்கால், அச்சம் ஆம்; நீள் நிரயத்
துன்பம் பயக்குமால்; துச்சாரி! நீ கண்ட
இன்பம், எனக்கு, எனைத்தால்? கூறு. 4

செம்மை ஒன்று இன்றி, சிறியார் இனத்தர் ஆய்,
கொம்மை வரி முலையாள் தோள் மரீஇ, உம்மை,
வலியால் பிறர் மனைமேல் சென்றாரே—இம்மை,
அலி ஆகி, ஆடி உண்பார். 5

பல்லார் அறியப் பறை அறைந்து, நாள் கேட்டு,
கல்யாணம் செய்து, கடி புக்க மெல் இயல்
காதல் மனையாளும் இல்லாளா, என், ஒருவன்
ஏதில் மனையாளை நோக்கு? 6

அம்பல் அயல் எடுப்ப, அஞ்சித் தமர் பரீஇ,
வம்பலன் பெண் மரீஇ, மைந்துற்று, நம்பும்
நிலைமை இல் நெஞ்சத்தான் துப்புரவு—பாம்பின்
தலை நக்கியன்னது உடைத்து. 7

பரவா, வெளிப்படா, பல்லோர்கண் தங்கா,
உரவோர்கண் காம நோய்,—ஓஒ கொடிதே!—
விரவாருள் நாணுப்படல் அஞ்சி, யாதும்
உரையாது, உள் ஆறிவிடும். 8

அம்பும், அழலும், அவிர் கதிர் ஞாயிறும்,
வெம்பிச் சுடினும், புறம் சுடும்; வெம்பிக்
கவற்றி மனத்தைச் சுடுதலால், காமம்
அவற்றினும் அஞ்சப்படும். 9

ஊருள் எழுந்த உரு கெழு செந் தீக்கு
நீருள் குளித்தும் உயல் ஆகும்; நீருள்
குளிப்பினும், காமம் சுடுமே; குன்று ஏறி
ஒளிப்பினும், காமம் சுடும். 10

## 10. ஈகை

இல்லா இடத்தும், இயைந்த அளவினால்
உள்ள இடம்போல் பெரிது உவந்து, மெல்லக்
கொடையொடு பட்ட குணனுடை மாந்தர்க்கு
அடையாவாம், ஆண்டைக் கதவு. 1

முன்னரே, சாம் நாள், முனிதக்க மூப்பு, உள;
பின்னரும் பீடு அழிக்கும் நோய் உள; கொன்னே
பரவன்மின்; பற்றன்மின்; பாத்து உண்மின்; யாதும்
கரவன்மின், கைத்து உண்டாம் போழ்து. 2

நடுக்குற்றுத் தற் சேர்ந்தார் துன்பம் துடையார்;—
கொடுத்துத் தான் துய்ப்பினும், ஈண்டுங்கால் ஈண்டும்;
மிடுக்கு உற்றுப் பற்றினும், நில்லாது செல்வம்,
விடுக்கும் வினை உலந்தக்கால். 3

இம்மி அரிசித் துணையானும், வைகலும்,
நும்மில் இயைவ கொடுத்து உண்மின்;—நும்மைக்
கொடாஅதவர் என்பர், குண்டு நீர் வையத்து
அடாஅ அடுப்பினவர். 4

மறுமையும் இம்மையும் நோக்கி, ஒருவற்கு
உறுமாறு இயைவ கொடுத்தல்! வறுமையால்
ஈதல் இசையாதுஎனினும், இரவாமை
ஈதல் இரட்டி உறும். 5

நடு ஊருள் வேதிகை சுற்றுக்கோள் புக்க
படு பனை அன்னர், பலர் நச்ச வாழ்வார்;
குடி கொழுத்தக்கண்ணும், கொடுத்து உண்ணா மாக்கள்
இடுகாட்டுள் ஏற்றைப் பனை. 6

பெயற்பால் மழை பெய்யாக்கண்ணும், உலகம்
செயற்பால செய்யாவிடினும்,—கயல் புலால்
புன்னை கடியும் பொரு கடல் தண் சேர்ப்ப!—
என்னை உலகு உய்யும் ஆறு? 7

ஏற்ற கை, மாற்றாமை, என்னானும் தாம் வரையாது,
ஆற்றாதார்க்கு ஈவது ஆம் ஆண் கடன்; ஆற்றின்,—
மலி கடல் தண் சேர்ப்ப!—மாறு ஈவார்க்கு ஈதல்
பொலி கடன் என்னும் பெயர்த்து. 8

இறப்பச் சிறிது என்னாது, இல் என்னாது, என்றும்,
அறப்பயன் யார் மாட்டும் செய்க! முறைப் புதவின்
ஐயம் புகூஉம் தவசி கடிஞைபோல்,
பைய நிறைத்துவிடும். 9

கடிப்பு இகு கண் முரசம் காதத்தோர் கேட்பர்;
இடித்து முழங்கியது ஓர் யோசனையோர் கேட்பர்;
அடுக்கிய மூஉலகும் கேட்குமே, சான்றோர்
கொடுத்தார் எனப்படும் சொல். 10

## 11. பழவினை

பல் ஆவுள் உய்த்துவிடினும், குழக் கன்று
வல்லது ஆம், தாய் நாடிக் கோடலை; தொல்லைப்
பழவினையும் அன்ன தகைத்தே, தற் செய்த
கிழவனை நாடிக் கொளற்கு. 1

உருவும், இளமையும், ஒண் பொருளும், உட்கும்,
ஒரு வழி நில்லாமை கண்டும், ஒரு வழி
ஒன்றேயும் இல்லாதான் வாழ்க்கை உடம்பு இட்டு
நின்று வீழ்ம் தக்கது உடைத்து. 2

வளம் பட வேண்டாதார் யார்? யாரும் இல்லை;
அளந்தன போகம், அவர் அவர் ஆற்றான்;—
விளங்காய் திரட்டினார் இல்லை; களங் கனியைக்
கார் எனச் செய்தாரும் இல். 3

உறற்பால நீக்கல் உறுவர்க்கும் ஆகா;
பெறற்பால் அனையவும் அன்ன ஆம்;—மாரி
வறப்பின், தருவாரும் இல்லை; அதனைச்
சிறப்பின், தணிப்பாரும் இல். 4

தினைத் துணையர் ஆகி, தம் தேசு உள் அடக்கி,
பனைத் துணையார் வைகலும் பாடு அழிந்து வாழ்வர்;
நினைப்பக் கிடந்தது எவன் உண்டாம், மேலை
வினைப்பயன் அல்லால், பிற? 5

பல் ஆன்ற கேள்விப் பயன் உணர்வார் வீயவும்,
கல்லாதார் வாழ்வது அறிதிரேல்,—கல்லாதார்
சேதனம் என்னும் அச் சேறு அகத்து இன்மையால்
கோது என்று கொள்ளாதாம், கூற்று. 6

இடும்பை கூர் நெஞ்சத்தார் எல்லாரும் காண,
நெடுங் கடை நின்று உழல்வது எல்லாம்,—அடும்பம்பூ
அன்னம் கிழிக்கும் அலை கடல் தண் சேர்ப்ப!—
முன்னை வினை ஆய்விடும். 7

அறியாரும் அல்லர்; அறிவது அறிந்தும்,
பழியோடு பட்டவை செய்தல்,—வளி ஓடி
நெய்தல் நறவு உயிர்க்கும் நீள் கடல் தண் சேர்ப்ப!—
செய்த வினையான் வரும். 8

ஈண்டு நீர் வையத்துள், எல்லாரும், எள்துணையும்,
வேண்டார்மன், தீய; விழைபமன், நல்லவை;—
வேண்டினும், வேண்டாவிடினும், உறற்பால
தீண்டாவிடுதல் அரிது. 9

சிறுகா, பெருகா, முறை பிறழ்ந்து வாரா,
உறு காலத்து ஊற்று ஆகா, ஆம் இடத்தே ஆகும்,
சிறுகாலைப் பட்ட பொறியும்; அதனால்,
இறுகாலத்து, என்னை பரிவு? 10

## 12. மெய்ம்மை

இசையா ஒரு பொருள் இல் என்றல், யார்க்கும்
வசை அன்று; வையத்து இயற்கை; நசை அழுங்க
நின்று ஓடிப் பொய்த்தல்,—நிரைதொடீஇ!—செய்ந்நன்றி
கொன்றாரின் குற்றம் உடைத்து. 1

தக்காரும் தக்கவர் அல்லாரும், தம் நீர்மை
எக்காலும் குன்றல் இலர் ஆவர்;—அக்காரம்
யாவரே தின்னினும் கையாதாம்; கைக்குமாம்,
தேவரே தின்னினும், வேம்பு. 2

கால் ஆடு போழ்தில், கழி கிளைஞர், வானத்து-
மேல் ஆடும் மீனின் பலர் ஆவர்; ஏலா
இடர் ஒருவர் உற்றக்கால்,—ஈர்ங் குன்ற நாட!—
'தொடர்பு உடையேம்' என்பார் சிலர். 3

வடு இலா வையத்து, மன்னிய மூன்றில்,
நடுவணது எய்த, இரு தலையும் எய்தும்;
நடுவணது எய்தாதான் எய்தும், உலைப் பெய்து,
அடுவது போலும் துயர். 4

நல் ஆவின் கன்றுஆயின், நாகும் விலை பெறூஉம்;
கல்லாரேஆயினும், செல்வர் வாய்ச் சொல் செல்லும்.
புல் ஈரப் போழ்தின் உழவேபோல் மீது ஆடி,
செல்லாவாம், நல்கூர்ந்தார் சொல். 5

இடம் பட மெய்ஞ்ஞானம் கற்பினும் என்றும்,
அடங்காதார் என்றும் அடங்கார்;—தடங் கண்ணாய்!—
உப்பொடு நெய், பால், தயிர், காயம், பெய்து அடினும்,
கைப்பு அறா, பேய்ச் சுரையின் காய். 6

தம்மை இகழ்வாரைத் தாம் அவரின் முன் இகழ்க!
என்னை, அவரொடு பட்டது?—புன்னை
விறல் பூங் கமழ் கானல் வீங்கு நீர்ச் சேர்ப்ப!—
உறற்பால யார்க்கும் உறும். 7

ஆ வேறு உருவின ஆயினும், ஆ பயந்த
பால் வேறு உருவின அல்லவாம்; பால்போல்
ஒருதன்மைத்து ஆகும் அறம்; நெறி, ஆபோல்,
உருவு பலகொளல், ஈங்கு. 8

யாஅர், உலகத்து ஓர் சொல் இல்லார்?—தேருங்கால்—
யாஅர், உபாயத்தின் வாழாதார்? யாஅர்,
இடையாக இன்னாதது எய்தாதார்? யாஅர்,
கடைபோகச் செல்வம் உய்த்தார்? 9

தாம் செய் வினை அல்லால், தம்மொடு செல்வது மற்று
யாங்கணும் தேரின், பிறிது இல்லை; ஆங்குத் தாம்
போற்றிப் புனைந்த உடம்பும் பயன் இன்றே,
கூற்றம் கொண்டு ஓடும் பொழுது. 10

## 13. தீவினை அச்சம்

துக்கத்துள் தூங்கி, துறவின்கண் சேர்கலா
மக்கட் பிணத்த, சுடுகாடு;—தொக்க
விலங்கிற்கும் புள்ளிற்கும் காடே, புலம் கெட்ட
புல்லறிவாளர் வயிறு. 1

இரும்பு ஆர்க்கும் காலர் ஆய், ஏதிலார்க்கு ஆள் ஆய்,
கரும்பு ஆர் கழனியுள் சேர்வர்;—சுரும்பு ஆர்க்கும்
காட்டுள் ஆய் வாழும் சிவலும் குறும்பூழும்
கூட்டுள் ஆய்க் கொண்டு வைப்பார். 2

அக்கேபோல் அங்கை ஒழிய, விரல் அழுகி,
துக்கத் தொழுநோய் எழுபவே—அக் கால்,
அலவனைக் காதலித்துக் கால் முரித்துத் தின்ற
பழவினை வந்து அடைந்தக்கால். 3

நெருப்பு அழல் சேர்ந்தக்கால், நெய் போல்வதூஉம்
எரிப்பச் சுட்டு, எவ்வ நோய் ஆக்கும்;—பரப்பக்
கொடு வினையர் ஆகுவர், கோடாரும், கோடிக்
கடு வினையர் ஆகியார்ச் சார்ந்து. 4

பெரியவர் கேண்மை, பிறை போல, நாளும்
வரிசை வரிசையா நந்தும்; வரிசையால்,
வான் ஊர் மதியம்போல் வைகலும் தேயுமே,
தானே, சிறியார் தொடர்பு. 5

சான்றோர் என மதித்துச் சார்ந்தாய்மன்; சார்ந்தாய்க்குச்
சான்றாண்மை சார்ந்தார்கண் இல்ஆயின், சார்ந்தோய்! கேள்:
சாந்து அகத்து உண்டு என்று, செப்புத் திறந்து, ஒருவன்
பாம்பு கண்டன்னது உடைத்து. 6

யாஅர், ஒருவர் ஒருவர்தம் உள்ளத்தைத்
தேரும் துணைமை உடையவர்?—சாரல்
கன மணி நின்று இமைக்கும் நாட! கேள்:—மக்கள்
மனம் வேறு; செய்கையும் வேறு. 7

உள்ளத்தால் நள்ளாது, உறுதித் தொழிலர் ஆய்,
கள்ளத்தால் நட்டார் கழி கேண்மை—தெள்ளிப்
புனற் செதும்பு நின்று அலைக்கும் பூங் குன்ற நாட!—
மனத்துக்கண் மாசு ஆய்விடும். 8

ஒக்கிய ஒள் வாள் தன் ஒன்னார் கைப் பட்டக்கால்,
ஊக்கம் அழிப்பதூஉம் மெய் ஆகும்;—ஆக்கம்
இருமையும் சென்று சுடுதலால், நல்ல
கருமமே, கல்லார்கண் தீர்வு. 9

மனைப் பாசம் கைவிடாய்! மக்கட்கு என்று ஏங்கி,
எனைத்து ஊழி வாழ்தியோ?—நெஞ்சே!—எனைத்தும்
சிறு வரையே ஆயினும், செய்த நன்று அல்லால்,
உறு பயனோ இல்லை, உயிர்க்கு. 10

இரண்டாவது

# பொருட் பால்

## 1. அரசு இயல்

### 14. கல்வி

குஞ்சி அழகும், கொடுந் தானைக் கோட்டழகும்,
மஞ்சள் அழகும், அழகு அல்ல; நெஞ்சத்து,
'நல்லம் யாம்' என்னும் நடுவு நிலைமையால்,
கல்வி அழகே அழகு. 1

இம்மை பயக்குமால்; ஈயக் குறைவு இன்றால்;
தம்மை விளக்குமால்; தாம் உளராக் கேடு இன்றால்;—
எம்மை உலகத்தும் யாம் காணேம், கல்விபோல்
மம்மர் அறுக்கும் மருந்து. 2

களர் நிலத்துப் பிறந்த உப்பினைச் சான்றோர்
விளை நிலத்து நெல்லின் விழுமிதாக் கொள்வர்;—
கடை நிலத்தோர் ஆயினும், கற்று அறிந்தோரைத்
தலை நிலத்து வைக்கப்படும். 3

வைப்புழிக் கோட்படா; வாய்த்து ஈயின், கேடு இல்லை;
மிக்க சிறப்பின் அரசர் செறின், வவ்வார்;
எச்சம் என ஒருவன் மக்கட்குச் செய்வன
விச்சை; மற்று அல்ல, பிற. 4

கல்வி கரை இல; கற்பவர் நாள் சில;
மெல்ல நினைக்கின், பிணி பல; தெள்ளிதின்
ஆராய்ந்து அமைவுடைய கற்பவே, நீர் ஒழியப்
பால் உண் குருகின் தெரிந்து. 5

தோணி இயக்குவான், தொல்லை வருணத்து,
காணின், கடைப்பட்டான் என்று இகழார்; காணாய்!
அவன் துணையா ஆறு போயற்றே, நூல் கற்ற
மகன் துணையா நல்ல கொளல். 6

தவல் அருந் தொல் கேள்வித் தன்மை உடையார்,
இகல் இலர், எஃகு உடையார், தம்முள் குழீஇ,
நகலின் இனிதுஆயின், காண்பாம், அகல் வானத்து
உம்பர் உறைவார் பதி. 7

கனை கடல் தண் சேர்ப்ப! கற்று அறிந்தார் கேண்மை
நுனியின் கரும்பு தின்றற்றே; நுனி நீக்கித்
தூரின் தின்றன்ன தகைத்துஅரோ, பண்பு இலா
ஈரம் இலாளர் தொடர்பு. 8

கல்லாரேஆயினும் கற்றாரைச் சேர்ந்து ஒழுகின்,
நல்லறிவு நாளும் தலைப்படுவர்—தொல் சிறப்பின்
ஒள் நிறப் பாதிரிப்பூச் சேர்தலால் புத்தோடு
தண்ணீர்க்குத் தான் பயந்தாங்கு. 9

அலகு சால் கற்பின், அறிவன் நூல் கல்லாது,
உலக நூல் ஓதுவது எல்லாம், கலகல
கூஉம் துணைஅல்லால், கொண்டு, தடுமாற்றம்
போஒம் துணை அறிவார் இல். 10

## 15. குடிப் பிறப்பு

உடுக்கை உலறி உடம்பு அழிந்தக்கண்ணும்,
குடிப் பிறப்பாளர் தம் கொள்கையின் குன்றார்;—
இடுக்கண் தலைவந்தக்கண்ணும், அரிமா
கொடிப் புல் கறிக்குமோ மற்று? 1

சான்றாண்மை, சாயல், ஒழுக்கம், இவை மூன்றும்
வான் தோய் குடிப் பிறந்தார்க்கு அல்லது,—வான் தோயும்
மை தவழ் வெற்ப!—படாஅ, பெருஞ் செல்வம்
எய்தியக்கண்ணும், பிறர்க்கு. 2

இருக்கை எழலும், எதிர் செலவும், ஏனை
விடுப்ப ஒழிதலோடு, இன்ன, குடிப் பிறந்தார்
குன்றா ஒழுக்கமாக் கொண்டார்; கயவரோடு
ஒன்றா உணரற்பாற்று அன்று. 3

நல்லவை செய்யின் இயல்பு ஆகும்; தீயவை
பல்லவர் தூற்றும் பழி ஆகும்; எல்லாம்
உணரும் குடிப் பிறப்பின் ஊதியம் என்னோ,
புணரும் ஒருவர்க்கு எனின்? 4

கல்லாமை அச்சம்; கயவர் தொழில் அச்சம்;
சொல்லாமையுள்ளும் ஓர் சோர்வு அச்சம்; எல்லாம்
இரப்பார்க்கு ஒன்று ஈயாமை அச்சம்; மரத்தார், இம்
மாணுக் குடிப் பிறந்தார். 5

இன நன்மை, இன்சொல், ஒன்று ஈதல், மற்று ஏனை
மன நன்மை, என்று இவை எல்லாம்,—கன மணி
முத்தோடு இமைக்கும் முழங்கு உவரித் தண் சேர்ப்ப!—
இற் பிறந்தார்கண்ணே உள. 6

செய்கை அழிந்து, சிதல் மண்டிற்றுஆயினும்,
பெய்யா ஒரு சிறை பேர் இல் உடைத்து ஆகும்;—
எவ்வம் உழந்தக்கடைத்தும், குடிப் பிறந்தார்
செய்வர், செயற்பாலவை. 7

ஒரு புடை பாம்பு கொளினும், ஒரு புடை
அம் கண் மா ஞாலம் விளக்குறூஉம் திங்கள்போல்,—
செல்லாமை செவ்வன் நேர் நிற்பினும், ஒப்புரவிற்கு
ஒல்கார்—குடிப் பிறந்தார். 8

செல்லா இடத்தும் குடிப் பிறந்தார் செய்வன,
செல் இடத்தும் செய்யார், சிறியவர்;—புல்வாய்
பருமம் பொறுப்பினும், பாய் பரிமாபோல்
பொரு முரண் ஆற்றுதல் இன்று. 9

எற்று ஒன்றும் இல்லா இடத்தும், குடிப் பிறந்தார்
அற்றுத் தற் சேர்ந்தார்க்கு அசைவிடத்து ஊற்று ஆவர்;—
அற்றக் கடைத்தும் அகல் யாறு அகழ்ந்தக்கால்,
தெற்றெனத் தெள் நீர் படும். 10

## 16. மேன்மக்கள்

அம் கண் விசும்பின் அகல் நிலாப் பாரிக்கும்
திங்களும் சான்றோரும் ஒப்பர்மன்; திங்கள்
மறு ஆற்றும்; சான்றோர் அஃது ஆற்றார்; தெருமந்து
தேய்வர், ஒரு மாசு உறின். 1

இசையும் எனினும், இசையாதுஎனினும்,
வசை தீர எண்ணுவர், சான்றோர்;—விசையின்
நரிமா உளம் கிழித்த அம்பினின் தீதோ,
அரிமாப் பிழைப்ப எய்த கோல்? 2

நரம்பு எழுந்து நல்கூர்ந்தார் ஆயினும், சான்றோர்
குரம்பு எழுந்து குற்றம் கொண்டு ஏறார்; உரம் கவறா,
உள்ளம் எனும் நாரினால் கட்டி, உளவரையால்
செய்வர், செயற்பாலவை. 3

செல்வுழிக்கண் ஒருநாள் காணினும், சான்றவர்
தொல் வழிக் கேண்மையின் தோன்றப் புரிந்து யாப்பர்;—
நல் வரை நாட!— சில நாள் அடிப்படின்,
கல் வரையும் உண்டாம், நெறி. 4

புல்லா எழுத்தின் பொருள் இல் வறுங் கோட்டி,
கல்லா ஒருவன் உரைப்பவும், கண் ஓடி,
நல்லார் வருந்தியும் கேட்பரே, மற்று அவன்
பல்லாருள் நாணல் பரிந்து. 5

கடித்துக் கரும்பினைக் கண் தகர நூறி,
இடித்து, நீர் கொள்ளினும் இன் சுவைத்தே ஆகும்;—
வடுப்பட வைது இறந்தக்கண்ணும், குடிப் பிறந்தார்
கூறார், தம் வாயின் சிதைந்து. 6

கள்ளார்; கள் உண்ணார்; கடிவ கடிந்து ஒரீஇ,
எள்ளிப் பிறரை இகழ்ந்து உரையார்; தள்ளியும்,
வாயின் பொய் கூறார்;—வடு அறு காட்சியார்—
சாயின், பரிவது இலர். 7

பிறர் மறையின்கண் செவிடு ஆய், திறன் அறிந்து
ஏதிலார் இற்கண் குருடன் ஆய், தீய
புறங்கூற்றின் மூங்கை ஆய், நிற்பானேல், யாதும்
அறம் கூற வேண்டா, அவற்கு. 8

பல் நாளும் சென்றக்கால், பண்பு இலார் தம்முழை,
'என்னானும் வேண்டுப' என்று இகழ்ப; 'என்னானும்
வேண்டினும் நன்று மற்று' என்று, விழுமியோர்
காண்தொறும் செய்வர், சிறப்பு. 9

'உடையார் இவர்' என்று, ஒருதலையாப் பற்றி,
கடையாயார் பின் சென்று வாழ்வர்; உடைய
பிலம் தலைப்பட்டது போலாதே, நல்ல
குலம் தலைப்பட்ட இடத்து? 10

## 17. பெரியாரைப் பிழையாமை

'பொறுப்பர்' என்று எண்ணி, புரை தீர்ந்தார் மாட்டும்
வெறுப்பன செய்யாமை வேண்டும்; வெறுத்தபின்,—
ஆர்க்கும் அருவி அணி மலை நல் நாட!—
பேர்க்குதல் யார்க்கும் அரிது. 1

பொன்னே கொடுத்தும், புணர்தற்கு அரியாரைக்
கொன்னே தலைக்கூடப் பெற்றிருந்தும், அன்னோ!
பயன் இல் பொழுதாக் கழிப்பரே—நல்ல
நயம் இல் அறிவினவர். 2

அவமதிப்பும், ஆன்ற மதிப்பும், இரண்டும்,
மிகை மக்களால் மதிக்கற்பால; நயம் உணரா,
கை அறியா, மாக்கள் இழிப்பும் எடுத்து ஏத்தும்,
வையார், வடித்த நூலார். 3

விரி நிற நாகம் விடர் உளதேனும்,
உருமின் கடுஞ் சினம் சேண் நின்றும், உட்கும்;—
அருமை உடைய அரண் சேர்ந்தும் உய்யார்,
பெருமை உடையார் செறின். 4

'எம்மை அறிந்திலிர்; எம் போல்வார் இல்' என்று
தம்மைத் தாம் கொள்வது கோள் அன்று; தம்மை
அரியரா நோக்கி, அறன் அறியும் சான்றோர்,
பெரியராக் கொள்வது கோள். 5

நளி கடல் தண் சேர்ப்ப! நாள் நிழல் போல
விளியும், சிறியவர் கேண்மை; விளிவு இன்றி,
அல்கு நிழல்போல், அகன்று அகன்று ஓடுமே,
தொல் புகழாளர் தொடர்பு. 6

மன்னர் திருவும், மகளிர் எழில் நலமும்,
துன்னியார் துய்ப்பர்; தகல் வேண்டா;—துன்னிக்
குழை கொண்டு தாழ்ந்த குளிர் மரம் எல்லாம்
உழை, தம்கண் சென்றார்க்கு ஒருங்கு. 7

தெரியத் தெரியும் தெரிவுஇலார்கண்ணும்
பிரிய, பெரும் படர் நோய் செய்யும்;—பெரிய
உலவா இருங் கழிச் சேர்ப்ப!—யார் மாட்டும்
கலவாமை கோடி உறும். 8

கல்லாது போகிய நாளும், பெரியவர்கண்
செல்லாது வைகிய வைகலும், ஒல்வ
கொடாஅது ஒழிந்த பகலும்,—உரைப்பின்,
படாஅ ஆம், பண்புடையார்கண். 9

பெரியார் பெருமை சிறு தகைமை; ஒன்றிற்கு
உரியார் உரிமை அடக்கம்; தெரியுங்கால்,
செல்வம் உடையாரும் செல்வரே, தற்சேர்ந்தார்
அல்லல் களைபஎனின். 10

## 18. நல் இனம் சேர்தல்

அறியாப் பருவத்து அடங்காரோடு ஒன்றி,
நெறியல்ல செய்து ஒழுகியவ்வும், நெறி அறிந்த
நற் சார்வு சார, கெடுமே—வெயில் முறுகப்
புற் பனிப் பற்று விட்டாங்கு. 1

அறிமின், அற நெறி; அஞ்சுமின், கூற்றம்;
பொறுமின், பிறர் கடுஞ் சொல்; போற்றுமின், வஞ்சம்;
வெறுமின், வினை தீயார் கேண்மை; எஞ் ஞான்றும்
பெறுமின், பெரியார் வாய்ச் சொல். 2

அடைந்தார்ப் பிரிவும், அரும் பிணியும், கேடும்,
உடங்கு, உடம்பு கொண்டார்க்கு உறலால், தொடங்கி,
'பிறப்பு இன்னாது' என்று உணரும் பேர் அறிவினாரை
உறப் புணர்க, அம்மா, என் நெஞ்சு! 3

இறப்ப நினையுங்கால், இன்னாது எனினும்,
பிறப்பினை யாரும் முனியார்—பிறப்பினுள்
பண்பு ஆற்றும் நெஞ்சத்தவர்களோடு எஞ் ஞான்றும்
நண்பு ஆற்றி நட்கப் பெறின். 4

ஊர் அங்கண நீர் உரவு நீர்ச் சேர்ந்தக்கால்,
பேரும் பிறிது ஆகி, தீர்த்தம் ஆம்;—ஒரும்
குல மாட்சி இல்லாரும் குன்றுபோல் நிற்பர்,
நல மாட்சி நல்லாரைச் சார்ந்து. 5

ஒண் கதிர் வாள் மதியம் சேர்தலால், ஓங்கிய
அம் கண் விசும்பின் முயலும் தொழப்படூஉம்;—
குன்றிய சீர்மையர்ஆயினும், சீர் பெறுவர்,
குன்று அன்னார் கேண்மை கொளின். 6

பாலோடு அளாய நீர் பால் ஆகும் அல்லது,
நீராய் நிறம் தெரிந்து தோன்றுதாம்;—தேரின்,
சிறியார் சிறுமையும் தோன்றுதாம், நல்ல
பெரியார் பெருமையைச் சார்ந்து. 7

கொல்லை இரும் புனத்துக் குற்றி அடைந்த புல்
ஒல்காவே ஆகும், உழவர் உழுபடைக்கு;—
மெல்லியரேஆயினும், நற் சார்வு சார்ந்தார்மேல்,
செல்லாவாம், செற்றார் சினம். 8

நில நலத்தால் நந்திய நெல்லேபோல், தம்தம்
குல நலத்தால் ஆகுவர், சான்றோர்; கல நலத்தைத்
தீ வளி சென்று சிதைத்தாங்கு, சான்றாண்மை
தீஇனம் சேரக் கெடும். 9

மனத்தால் மறு இலரேனும், தாம் சேர்ந்த
இனத்தால் இகழப்படுவர்;—புனத்து
வெறி கமழ் சந்தனமும் வேங்கையும் வேமே,
எறி புனம் தீப்பட்டக்கால். 10

## 19. பெருமை

'ஈதல் இசையாது; இளமை சேண் நீங்குதலால்,
காதலவரும் கருத்து அல்லர்; காதலித்து,
''ஆதும் நாம்'' என்னும் அவாவினைக் கைவிட்டுப்
போவதே போலும் பொருள்!' 1

'இச் சார்வின் ஏமாந்தேம்; ஈங்கு அமைந்தேம்' என்று எண்ணிப்
பொச்சாந்து ஒழுகுவர், பேதையார்; 'அச் சார்வு
நின்றன போன்று நிலையா' என உணர்ந்தார்,
என்றும் பரிவது இலர். 2

மறுமைக்கு வித்து மயல் இன்றிச் செய்து,
சிறுமைப் படாதே, நீர் வாழ்மின், அறிஞராய்;—
நின்றுழி நின்றே நிறம் வேறு ஆம்; காரணம்
இன்றிப் பலவும் உள. 3

'உறைப்பு அருங் காலத்தும், ஊற்று நீர்க் கேணி
இறைத்து உணினும், ஊர் ஆற்றும்' என்பர்; கொடைக்கடனும்,
சாஅயக்கண்ணும், பெரியார்போல் மற்றையார்
ஆஅயக்கண்ணும், அரிது. 4

உறு புனல் தந்து, உலகு ஊட்டி, அறும் இடத்தும்
கல்லூற்றுழி ஊறும் ஆறேபோல், செல்வம்
பலர்க்கு ஆற்றி, கெட்டு உலந்தக்கண்ணும், சிலர்க்கு ஆற்றிச்
செய்வர், செயற்பாலவை. 5

பெரு வரை நாட! பெரியார்கண் தீமை
கரு நரைமேல் சூடேபோல் தோன்றும்; கரு நரையைக்
கொன்றன்ன இன்னா செயினும், சிறியார்மேல்
ஒன்றானும் தோன்றாக் கெடும். 6

இசைந்த சிறுமை இயல்பு இலாதார்கண்
பசைந்த துணையும், பரிவு ஆம்; அசைந்த
நகையேயும் வேண்டாத நல் அறிவினார்கண்
பகையேயும் பாடு பெறும். 7

மெல்லிய நல்லாருள் மென்மை, அது இறந்து
ஒன்னாருள் கூற்று உட்கும் உட்கு உடைமை, எல்லாம்
சலவருள் சாலச் சலமே, நலவருள்
நன்மை,—வரம்பாய் விடல்! 8

கடுக்கி, ஒருவன் கடுங் குறளை பேசி,
மயக்கிவிடினும், மனப் பிரிப்பு ஒன்று இன்றி,
துளக்கம் இலாதவர், தூய மனத்தார்,
விளக்கினுள் ஒண் சுடரே போன்று. 9

முன் துற்றும் துற்றினை நாளும் அறம் செய்து,
பின் துற்றுத் துற்றுவர், சான்றவர்; அத் துற்று
முக் குற்றம் நீக்கி, முடியும் அளவு எல்லாம்
துக்கத்துள் நீக்கிவிடும். 10

## 20. தாளாண்மை

கோள் ஆற்றக் கொள்ளாக் குளத்தின்கீழ்ப் பைங் கூழ்போல்,
கேள் ஈவது உண்டு, கிளைகளோ துஞ்சுப;
வாள் ஆடு கூத்தியர் கண்போல் தடுமாறும்
தாளாளர்க்கு உண்டோ, தவறு? 1

ஆடு கோடு ஆகி அதரிடை நின்றதூஉம்,
காழ் கொண்டகண்ணே, களிறு அணைக்கும் கந்து ஆகும்;—
வாழ்தலும் அன்ன தகைத்தே, ஒருவன்தான்
தாழ்வு இன்றித் தன்னைச் செயின். 2

உறு புலி ஊன் இரை இன்றி, ஒருநாள்
சிறு தேரை பற்றியும் தின்னும்;—அறிவினல்
கால்-தொழில் என்று கருதற்க! கையினல்
மேல் தொழிலும் ஆங்கே மிகும். 3

இசையாதுஎனினும், இயற்றி, ஓர் ஆற்ருல்
அசையாது, நிற்பதாம் ஆண்மை; இசையுங்கால்,—
கண்டல் திரை அலைக்கும் கானல் அம் தண் சேர்ப்ப!—
பெண்டிரும் வாழாரோ மற்று? 4

நல்ல குலம் என்றும், தீய குலம் என்றும்,
சொல் அளவு அல்லால் பொருள் இல்லை; தொல் சிறப்பின்
ஒண்பொருள் ஒன்ருே? தவம், கல்வி, ஆள்வினை,
என்று இவற்ருன் ஆகும், குலம். 5

ஆற்றும் துணையும், அறிவினை உள் அடக்கி,
ஊற்றம் உரையார் உணர்வு உடையார்; ஊற்றம்
உறுப்பினல் ஆராயும் ஒண்மை உடையார்
குறிப்பின்கீழ்ப் பட்டது, உலகு. 6

சிதலை தினப்பட்ட ஆல மரத்தை,
மதலை ஆய், மற்று அதன் வீழ் ஊன்றியாங்கு,
குதலைமை தந்தைகண் தோன்றின், தான் பெற்ற
புதல்வன் மறைப்ப, கெடும். 7

ஈனமாய், இல் இருந்து, இன்றி, விளியினும்,
மானம் தலைவருவ செய்பவோ—யானை
வரி முகம் புண்படுக்கும் வள் உகிர் நோன் தாள்
அரிமா மதுகையவர்? 8

தீம் கரும்பு ஈன்ற திரள் கால் உளை அலரி
தேம் கமழ் நாற்றம் இழந்தாஅங்கு, ஓங்கும்
உயர் குடியுள் பிறப்பின் என்னும்—பெயர் பொறிக்கும்
பேர் ஆண்மை இல்லாக்கடை? 9

பெரு முத்தரையர் பெரிது உவந்து ஈயும்
கருனைச் சோறு ஆர்வர் கயவர்; கருனையைப்
பேரும் அறியார், நனி விரும்பு தாளாண்மை
நீரும் அமிழ்து ஆய்விடும். 10

## 2. நட்பு இயல்

### 21. சுற்றம் தழால்

வயாவும், வருத்தமும், ஈன்றக்கால் நோவும்,
கவாஅன் மகற் கண்டு தாய் மறந்தாஅங்கு,
அசாஅத் தான் உற்ற வருத்தம் உசாஅத் தன்
கேளிரைக் காண, கெடும். 1

அழல் மண்டு போழ்தின் அடைந்தவர்கட்கு எல்லாம்
நிழல் மரம்போல் நேர் ஒப்பத் தாங்கி, பழு மரம்போல்
பல்லார் பயன் துய்ப்ப, தான் வருந்தி வாழ்வதே—
நல் ஆண்மகற்குக் கடன். 2

அடுக்கல் மலை நாட! தற் சேர்ந்தவரை
எடுக்கலம் என்னார் பெரியோர்;—அடுத்து அடுத்து
வன் காய் பலபல காய்ப்பினும், இல்லையே,
தன் காய் பொறுக்கலாக் கொம்பு? 3

உவகு அறியத் தீரக் கலப்பினும், நில்லா,
சில பகல் ஆம், சிற்றினத்தார் கேண்மை; நிலை திரியா-
நிற்கும் பெரியோர் நெறி அடைய நின்றனைத்தால்,
ஒற்கம் இலாளர் தொடர்பு. 4

'இன்னர்; இனையர்; எமர்; பிறர்' என்னும் சொல்
என்னும் இலர் ஆம் இயல்பினால் துன்னி,
தொலை மக்கள் துன்பம் தீர்ப்பாரே,—யார்மாட்டும்
தலைமக்கள் ஆகற்பாலார். 5

பொற் கலத்துப் பெய்த புலி உகிர் வான் புழுக்கல்
அக்காரம் பாலோடு அமரார் கைத்து உண்டலின்,
உப்பு இலிப் புற்கை, உயிர்போல் கிளைஞர்மாட்டு
எக் கலத்தானும் இனிது. 6

நாள்வாய்ப் பெறினும், தம் நள்ளாதார் இல்லத்து,
வேளாண்மை வெங் கருனை வேம்பு ஆகும்; கேளாய்:
அபரானப் போழ்தின் அடகு இடுவரேனும்,
தமர் ஆயார்மாட்டே இனிது. 7

முட்டிகை போல முனியாது, வைகலும்,
கொட்டி உண்பாரும், குறடுபோல் கைவிடுவர்;
சுட்டுக்கோல் போல, எரியும் புகுவரே,
நட்டார் எனப்படுவார். 8

நறு மலர்த் தண் கோதாய்! நட்டார்க்கு நட்டார்
மறுமையும் செய்வது ஒன்று உண்டோ—இறும் அளவும்,
இன்புறுவ இன்புற்று எழீஇ, அவரொடு
துன்புறுவ துன்புறுக்கால்? 9

விருப்பு இலார் இல்லத்து வேறு இருந்து உண்ணும்
வெருக்குக் கண் வெங் கருனே வேம்பு ஆம்; விருப்புடைத்
தன் போல்வார் இல்லுள் தயங்கு நீர்த் தண் புற்கை,
என்போடு இயைந்த அமிழ்து. 10

## 22. நட்பு ஆராய்தல்

கருத்து உணர்ந்து கற்று அறிந்தார் கேண்மை, எஞ் ஞான்றும்,
குருத்தின் கரும்பு தின்றற்றே; குருத்திற்கு
எதிர் செலத் தின்றன்ன தகைத்துஅரோ, என்றும்
மதுரம் இலாளர் தொடர்பு. 1

இற் பிறப்பு எண்ணி, இடை திரியார் என்பது ஓர்
நல் புடை கொண்டமை அல்லது,—பொன் கேழ்
புனல் ஒழுகப் புள் இரியும் பூங் குன்ற நாட!—
மனம் அறியப்பட்டது ஒன்று அன்று. 2

யானே அனேயவர் நண்பு ஒரீஇ, நாய் அனேயார்
கேண்மை கெழீஇக் கொளல்வேண்டும்;—யானே
அறிந்து அறிந்தும், பாகனேயே கொல்லும்; எறிந்த வேல்
மெய்யதா, வால் குழைக்கும், நாய். 3

பல நாளும் பக்கத்தார்ஆயினும், நெஞ்சில்
சில நாளும் ஒட்டாரோடு ஒட்டார்; பல நாளும்
நீத்தார் என, கைவிடல் உண்டோ—தம் நெஞ்சத்து
யாத்தாரோடு யாத்த தொடர்பு? 4

கோட்டுப்பூப் போல மலர்ந்து, பின் கூம்பாது,
வேட்டதே வேட்டது ஆம் நட்பு ஆட்சி; தோட்ட
கயப்பூப்போல் முன் மலர்ந்து, பின் கூம்புவாரை
நயப்பாரும் நட்பாரும் இல். 5

கடையாயார் நட்பில் கமுகு அனேயர்; ஏனே
இடையாயார் தெங்கின் அனேயர்; தலேயாயார்
எண்ண அரும் பெண்ணே போன்று, இட்ட ஞான்று இட்டதே,
தொன்மை உடையார் தொடர்பு. 6

கழுநீருள் கார் அடகேனும், ஒருவன்
விழுமிதாக் கொள்ளின் அமிழ்து ஆம்; விழுமிய
குய்த் துவை ஆர் வெண் சோறேஆயினும், மேவாதார்
கைத்துண்டல் காஞ்சிரங்காய். 7

நாய்க் கால் சிறு விரல்போல் நன்கு அணியர்ஆயினும்,
ஈக் கால் துணையும் உதவாதார் நட்பு என்னும்?
சேய்த்தானும் சென்று கொளல்வேண்டும், செய் விளைக்கும்
வாய்க்கால் அனையார் தொடர்பு: 8

தெளிவு இலார் நட்பின் பகை நன்று; சாதல்
விளியா அரு நோயின் நன்றால்; அளிய
இகழ்தலின் கோறல் இனிதே; மற்று இல்ல
புகழ்தலின் வைதலே நன்று. 9

மரீஇ, பலரொடு பல் நாள் முயங்கி,
பொரீஇ, பொருள்தக்கார்க் கோடலே வேண்டும்;
பரீஇ, உயிர் செகுக்கும் பாம்பொடும் இன்னா,
மரீஇஇ, பின்னைப் பிரிவு. 10

## 23. நட்பிற் பிழை பொறுத்தல்

நல்லார் எனத் தாம் நனி விரும்பிக் கொண்டாரை,
அல்லார் எனினும், அடக்கிக் கொளல்வேண்டும்;—
நெல்லுக்கு உமி உண்டு; நீர்க்கு நுரை உண்டு;
புல் இதழ் பூவிற்கும் உண்டு. 1

செறுத்தோறு உடைப்பினும், செம் புனலோடு ஊடார்,
மறுத்தும் சிறைசெய்வர், நீர் நசைஇ வாழ்நர்;—
வெறுப்ப வெறுப்பச் செயினும், பொறுப்பரே,
தாம் வேண்டிக் கொண்டார் தொடர்பு. 2

இறப்பவே தீய செயினும், தன் நட்டார்
பொறுத்தல் தகுவது ஒன்று அன்றோ?—நிறக் கோங்கு
உருவ வண்டு ஆர்க்கும் உயர் வரை நாட!—
ஒருவர் பொறை இருவர் நட்பு. 3

மடி திரை தந்திட்ட வான் கதிர் முத்தம்
கடு விசை நாவாய் கரை அலைக்கும் சேர்ப்ப!
விடுதற்கு அரியார் இயல்பு இலரேல், நெஞ்சம்
சுடுதற்கு மூட்டிய தீ. 4

இன்ன செயினும், விடற்பாலர் அல்லாரைப்
பொன்னாகப் போற்றிக் கொளல்வேண்டும்—பொன்னொடு
நல் இல் சிதைத்த தீ நாள்தொறும் நாடித் தம்
இல்லத்தில் ஆக்குதலால். 5

இன்ன செயினும், விடுதற்கு அரியாரைத்
துன்னாத் துறத்தல் தகுவதோ?—துன்ன அருஞ் சீர்
விண் குத்தும் நீள் வரை வெற்ப!—களைபவோ,
கண் குத்திற்று என்று தம் கை? 6

இலங்கு நீர்த் தண் சேர்ப்ப! இன்ன செயினும்,
கலந்து பழி காணார், சான்றோர்; கலந்தபின்,
தீமை எடுத்து உரைக்கும் திண் அறிவு இல்லாதார்-
தாமும், அவரின் கடை. 7

ஏதிலார் செய்தது இறப்பவே தீது எனினும்,
நோதக்கது என் உண்டாம், நோக்குங்கால்? காதல்
கழுமியார் செய்த,—கறங்கு அருவி நாட!—
விழுமிதாம், நெஞ்சத்துள் நின்று. 8

தமர் என்று தாம் கொள்ளப்பட்டவர் தம்மைத்
தமர் அன்மை தாம் அறிந்தார்ஆயின், அவரைத்
தமரினும் நன்கு மதித்து, தமர் அன்மை
தம்முள் அடக்கிக்கொளல்! 9

'குற்றமும், ஏனைக் குணமும், ஒருவனை
நட்டபின் நாடித் திரிவேனேல், நட்டான்
மறை காவா விட்டவன் செல்வுழிச் செல்க,
அறை கடல் சூழ் வையம் நக!' 10

## 24. கூடா நட்பு

செறிப்பு இல் பழங் கூரைச் சேறு அணை ஆக
இறைத்தும், நீர் ஏற்றும், கிடப்பர்,—கறைக் குன்றம்
பொங்கு அருவி தாழும் புனல் வரை நல் நாட!—
தம் கருமம் முற்றும் துணை. 1

சீரியார் கேண்மை சிறந்த சிறப்பிற்று ஆய்,
மாரிபோல் மாண்ட பயத்தது ஆம்; மாரி
வறந்தக்கால் போலுமே,—வால் அருவி நாட!—
சிறந்தக்கால் சீர் இலார் நட்பு. 2

நுண் உணர்விஞரொடு கூடி நுகர்வு உடைமை
விண்ணுலகே ஒக்கும் விழைவிற்ருல்; நுண் நூல்
உணர்வு இலர் ஆகிய ஊதியம்இல்லார்ப்
புணர்தல் நிரயத்துள் ஒன்று. 3

பெருகுவது போலத் தோன்றி, வைத் தீப்போல்
ஒருபொழுதும் செல்லாதே நந்தும்,—அருகு எல்லாம்
சந்தன நீள் சோலைச் சாரல் மலை நாட!—
பந்தம் இலாளர் தொடர்பு. 4

'செய்யாத செய்தும் நாம்' என்றலும், செய்வதனைச்
செய்யாது தாழ்த்துக்கொண்டு ஒட்டலும், மெய்யாக
இன்புறூஉம் பெற்றி இகழ்ந்தார்க்கும், அந் நிலையே
துன்புறூஉம் பெற்றி தரும். 5

ஒரு நீர்ப் பிறந்து, ஒருங்கு நீண்டக்கடைத்தும்,
விரி நீர்க் குவளையை ஆம்பல் ஒக்கல்லா;—
பெரு நீரார் கேண்மை கொளினும், நீர் அல்லார்
கருமங்கள் வேறுபடும். 6

முற்றல் சிறு மந்தி முற்பட்ட தந்தையை
நெற்றுக் கண்டன்ன விரலால் ஞெமிர்த்திட்டுக்
குற்றிப் பறிக்கும் மலை நாட! இன்ஞதே,
ஒற்றுமை கொள்ளாதார் நட்பு. 7

முட்டு உற்ற போழ்தில் முடுகி, என் ஆர் உயிரை
நட்டான் ஒருவன் கை நீட்டேனேல், நட்டான்
கடி மனை கட்டு அழித்தான் செல்வுழிச் செல்க!
நெடுமொழி வையம் நக! 8

ஆன் படு நெய் பெய் கலனுள் அது களைந்து,
வேம்பு அடு நெய் பெய்தனைத்துஅரோ—தேம் படு
நல் வரை நாட!—நயம் உணர்வார் நண்பு ஒரீஇ,
புல்லறிவிஞரொடு நட்பு. 9

உருவிற்கு அமைந்தான்கண் ஊராண்மை இன்மை,
பருகற்கு அமைந்தபால் நீர் அளாயற்றே;
தெரிவு உடையார் தீஇனத்தார் ஆகுதல், நாகம்
விரி பெடையோடு ஆடி, விட்டற்று. 10

# 3. இன்ப இயல்

## 25. அறிவு உடைமை

பகைவர் பணிவு இடம் நோக்கி, தகவு உடையார்
தாமேயும் நாணித் தலைச்செல்லார்;—காணாய்:
இளம் பிறை ஆயக்கால் திங்களைச் சேராது,
அணங்கு அருந் துப்பின் அரா. 1

நளி கடல் தண் சேர்ப்ப! நல்கூர்ந்த மக்கட்கு
அணிகலம் ஆவது அடக்கம்; பணிவு இல் சீர்
மாத்திரை இன்றி நடக்குமேல், வாழும் ஊர்
கோத்திரம் கூறப்படும். 2

எந் நிலத்து வித்து இடினும், காஞ்சிரங் காழ் தெங்கு ஆகா;
தென் நாட்டவரும் சுவர்க்கம் புகுதலால்,
தன்னால்தான் ஆகும் மறுமை; வட திசையும்,
கொன்னாளர் சாலப் பலர். 3

வேம்பின் இலையுள் கனியினும், வாழை தன்
தீம் சுவை யாதும் திரியாதாம்; ஆங்கே,
இனம் தீது எனினும், இயல்பு உடையார் கேண்மை
மனம் தீது ஆம் பக்கம் அரிது. 4

கடல் சார்ந்தும் இன் நீர் பிறக்கும்; மலை சார்ந்தும்
உப்பு ஈண்டு உவரி பிறத்தலால், தம்தம்
இனத்து அனையர் அல்லர்—எறி கடல் தண் சேர்ப்ப!—
மனத்து அனையர், மக்கள் என்பார். 5

பராஅரைப் புன்னை படு கடல் தண் சேர்ப்ப!
ஒராஅலும் ஒட்டலும் செய்பவோ, நல்ல
மருஉச் செய்து யார்மாட்டும் தங்கும் மனத்தார்?
விராஅய்ச் செய்யாமை நன்று. 6

உணர உணரும் உணர்வு உடையாரைப்
புணர, புணருமாம் இன்பம்; புணரின்,
தெரியத் தெரியும் தெரிவு இலாதாரைப்
பிரிய, பிரியுமாம் நோய். 7

நல் நிலைக்கண் தன்னை நிறுப்பானும், தன்னை
நிலை கலக்கிக் கீழ் இடுவானும், நிலையினும்
மேல்மேல் உயர்த்து நிறுப்பானும், தன்னைத்
தலையாகச் செய்வானும், தான். 8

கரும வரிசையால், கல்லாதார் பின்னும்
பெருமை உடையாரும் சேறல்,—அரு மரபின்
ஓதம் அரற்றும் ஒலி கடல் தண் சேர்ப்ப!—
பேதைமை அன்று; அது அறிவு. 9

கருமமும் உள்படா, போகமும் துவ்வா,
தருமமும் தக்கார்க்கே செய்யா, ஒருநிலையே
முட்டு இன்றி மூன்றும் முடியுமேல், அஃது என்ப,
'பட்டினம் பெற்ற கலம்.' 10

## 26. அறிவு இன்மை

நுண் உணர்வு இன்மை வறுமை; அஃது உடைமை
பண்ணப் பணைத்த பெருஞ் செல்வம்;—எண்ணுங்கால்,
பெண் அவாய், ஆண் இழந்த பேடி அணியாளோ,
கண் அவாத் தக்க கலம்? 1

பல் ஆன்ற கேள்விப் பயன் உணர்வார் பாடு அழிந்து,
அல்லல் உழப்பது அறிதிரேல்,—தொல் சிறப்பின்
நாவின் கிழத்தி உறைதலால், சேராளே,
பூவின் கிழத்தி புலந்து. 2

'கல்' என்று தந்தை கழற, அதனை ஓர்
சொல் என்று கொள்ளாது இகழ்ந்தவன், மெல்ல
எழுத்து ஓலை பல்லார்முன் நீட்ட, விளியா,
வழுக் கோலைக் கொண்டுவிடும். 3

கல்லாது நீண்ட ஒருவன், உலகத்து,
நல்லறிவாளரிடைப் புக்கு, மெல்ல
இருப்பினும், நாய் இருந்தற்றே; இராஅது
உரைப்பினும், நாய் குரைத்தற்று. 4

புல்லாப் புன் கோட்டிப் புலவரிடைப் புக்கு,
கல்லாத சொல்லும், கடை எல்லாம்; கற்ற
கடாஅயினும் சான்றவர் சொல்லார், பொருள்மேல்
படாஅ விடுபாக்கு அறிந்து. 5

கற்று அறிந்த நாவினர் சொல்லார், தம் சோர்வு அஞ்சி;
மற்றையர் ஆவார் பகர்வர்;—பனையின்மேல்
வற்றிய ஓலை கலகலக்கும்; என்றும்
பச்சோலைக்கு இல்லை, ஒலி. 6

பன்றிக் கூழ்ப் பத்தரில் தேமா வடித்தற்றால்,
நன்று அறியா மாந்தர்க்கு அறத்து ஆறு உரைக்குங்கால்;
குன்றின்மேல் கொட்டும் தறிபோல் தலை தகர்ந்து
சென்று இசையா ஆகும், செவிக்கு. 7

பாலால் கழீஇ, பல நாள் உணக்கினும்,
வாலிதாம் பக்கம் இருந்தைக்கு இருந்தன்று;—
கோலால் கடாஅய்க் குறினும், புகல் ஒல்லா,
நோலா உடம்பிற்கு அறிவு. 8

பொழிந்து இனிது நாறினும், பூ மிசைதல் செல்லாது,
இழிந்தவை காமுறூஉம் ஈப்போல், இழிந்தவை-
தாம் கலந்த நெஞ்சினார்க்கு என் ஆகும், தக்கார் வாய்த்
தேன் கலந்த தேற்றச் சொல் தேர்வு? 9

கற்றார் உரைக்கும் கசடு அறு நுண் கேள்வி
பற்றாது தன் நெஞ்சு உதைத்தலால், மற்றும் ஓர்
தன்போல் ஒருவன் முகம் நோக்கி, தானும் ஓர்
புன்கோட்டி கொள்ளுமாம், கீழ். 10

## 27. நன்றி இல் செல்வம்

அருகலது ஆகிப் பல பழுத்தக்கண்ணும்,
பொரி தாள் விளவினை வாவல் குறுகா;—
பெரிது அணியர்ஆயினும், பீடு இலார் செல்வம்
கருதும் கடப்பாட்டது அன்று. 1

அள்ளிக்கொள்வன்ன குறு முகிழ ஆயினும்,
கள்ளிமேல் கைந் நீட்டார், சூடும் பூ அன்மையால்;—
செல்வம் பெரிது உடையர்ஆயினும், கீழ்களை
நள்ளார், அறிவுடையார். 2

மல்கு திரைய கடற் கோட்டு இருப்பினும்,
வல் ஊற்று உவர் இல் கிணற்றின்கண் சென்று உண்பர்;—
செல்வம் பெரிது உடையர்ஆயினும், சேண் சென்றும்
நல்குவார்கட்டே நசை. 3

புணர் கடல் சூழ் வையத்துப் புண்ணியமோ வேறே—
உணர்வது உடையார் இருப்ப, உணர்வு இலா
வட்டும் வழுதுணையும் போல்வாரும் வாழ்பவே,
பட்டும் துகிலும் உடுத்து! 4

நல்லார் நயவர் இருப்ப, நயம் இலாக்
கல்லார்க்கு ஒன்று ஆகிய காரணம், தொல்லை
வினைப் பயன் அல்லது,—வேல் நெடுங் கண்ணாய்!—
நினைப்ப வருவது ஒன்று இல். 5

நாருத் தகடேபோல் நல் மலர்மேல் பொற்பாவாய்!—
நீராய் நிலத்து விளிஅரோ—வேறு ஆய்
புன்மக்கள் பக்கம் புகுவாய் நீ, பொன் போலும்
நன்மக்கள் பக்கம் துறந்து! 6

நயவார்கண் நல்குரவு நாண் இன்று கொல்லோ?
பயவார்கண் செல்வம் பரம்பப் பயின்கொல்?
வியவாய்காண்,—வேற் கண்ணாய்!—இவ் இரண்டும் ஆங்கே
நயவாது நிற்கும் நிலை. 7

வலவைகள் அல்லாதார், கால் ஆறு சென்று,
கலவைகள் உண்டு, கழிப்பர்; வலவைகள்
கால் ஆறும் செல்லார், கருணையால் துய்ப்பவே,
மேல் ஆறு பாய, விருந்து. 8

பொன் நிறச் செந்நெல் பொதியொடு பீள் வாட,
மின் ஒளிர் வானம் கடலுள்ளும் கான்று உகுக்கும்—
வெண்மை உடையார் விழுச் செல்வம் எய்தியக்கால்,
வண்மையும் அன்ன தகைத்து. 9

ஓதியும் ஓதார், உணர்வு இலார்; ஓதாதும்
ஓதி அனையார், உணர்வு உடையார்; தூய்து ஆக
நல்கூர்ந்தும் செல்வர், இரவாதார்; செல்வரும்
நல்கூர்ந்தார், ஈயார்எனின். 10

## 4. துன்ப இயல்

### 28. ஈயாமை

நட்டார்க்கும நள்ளாதவர்க்கும் உள வரையால்
அட்டது பாத்து உண்டல், அட்டு உண்டல்; அட்டது
அடைத்து இருந்து உண்டு ஒழுகும் ஆவது இல் மாக்கட்கு
அடைத்தவாம், ஆண்டைக் கதவு. 1

எத்துணையானும், இயைந்த அளவினால்,
சிற்றறம் செய்தார் தலைப்படுவர்; மற்றைப்
பெருஞ் செல்வம் எய்தியக்கால், 'பின் அறிதும்!' என்பார்
அழிந்தார், பழி கடலத்துள். 2

துய்த்துக் கழியான், துறவோர்க்கு ஒன்று ஈகலான்,
வைத்துக் கழியும் மடவோனை,—வைத்த
பொருளும் அவனை நகுமே; உலகத்து
அருளும் அவனை நகும். 3

கொடுத்தலும், துய்த்தலும் தேற்றா இடுக்குடை
உள்ளத்தான் பெற்ற பெருஞ் செல்வம், இல்லத்து
உருவுடைக் கன்னியரைப் போல, பருவத்தால்,
ஏதிலான் துய்க்கப்படும். 4

எறி நீர்ப் பெருங் கடல் எய்தி இருந்தும்,
அறு நீர்ச் சிறு கிணற்று ஊறல் பார்த்து உண்பர்;
மறுமை அறியாதார் ஆக்கத்தின், சான்றோர்
கழி நல்குரவே தலை. 5

'எனது எனது' என்று இருக்கும் ஏழை பொருளை,
'எனது எனது' என்று இருப்பன், யானும்; தனதுஆயின்,
தானும் அதனை வழங்கான்; பயன் துவ்வான்;
யானும் அதனை அது. 6

வழங்காத செல்வரின், நல்கூர்ந்தார் உய்ந்தார்:
இழந்தார் எனப்படுதல் உய்ந்தார்; உழந்து அதனைக்
காப்பு உய்ந்தார்; கல்லுதலும் உய்ந்தார்; தம் கைந் நோவ
யாப்பு உய்ந்தார்; உய்ந்த பல. 7

தனது ஆகத் தான் கொடான்; தாயத்தவரும்
தமது ஆய போழ்தே கொடாஅர்; தனது ஆக
முன்னே கொடுப்பின், அவர் கடியார்; தான் கடியான்,
பின்னை அவர் கொடுக்கும் போழ்து. 8

இரவலர் கன்று ஆக, ஈவார் ஆ ஆக,
விரகின் சுரப்பதாம், வண்மை; விரகு இன்றி
வல்லவர் ஊன்ற வடி ஆபோல், வாய் வைத்துக்
கொல்லச் சுரப்பதாம், கீழ். 9

ஈட்டலும் துன்பம்; மற்று ஈட்டிய ஒண் பொருளைக்
காத்தலும் ஆங்கே கடுந் துன்பம்; காத்த
குறைபடின், துன்பம்; கெடின், துன்பம்; துன்பக்கு
உறைபதி, மற்றைப் பொருள். 10

## 29. இன்மை

அத்து இட்ட கூறை அரைச் சுற்றி வாழினும்,
பத்து எட்டு உடைமை பலருள்ளும் பாடு எய்தும்;
ஒத்த குடிப் பிறந்தக்கண்ணும், ஒன்று இல்லாதார்
செத்த பிணத்தின் கடை. 1

நீரினும் நுண்ணிது நெய் என்பர்; நெய்யினும்
யாரும் அறிவர் புகை நுட்பம்; தேரின்,
நிரப்பு இடும்பையாளன் புகுமே, புகையும்
புகற்கு அரிய பூழை நுழைந்து. 2

கல் ஓங்கு உயர் வரைமேல் காந்தள் மலராக்கால்,
செல்லாவாம், செம் பொறி வண்டுஇனம்;—கொல்லைக்
கலாஅல் கிளி கடியும் கானக நாட!—
இலாஅர்க்கு இல்லை, தமர். 3

உண்டாய போழ்தின், உடைந்துழிக் காகம்போல்,
தொண்டு ஆயிரவர் தொகுபவே; வண்டாய்த்
திரிதரும் காலத்து, 'தீது இலிரோ?' என்பார்
ஒருவரும் இவ் உலகத்து இல். 4

பிறந்த குலம் மாயும்; பேர் ஆண்மை மாயும்;
சிறந்த தம் கல்வியும் மாயும்;—கறங்கு அருவி
கல்மேல் கழூஉம் கண மலை நல் நாட!—
இன்மை தழுவப்பட்டார்க்கு. 5

உள் கூர் பசியால் உழை நசைஇச் சென்றார்கட்கு,
உள்ளூர் இருந்தும், ஒன்று ஆற்றாதான், உள்ளூர்
இருந்து, உயிர் கொன்னே கழியாது, தான் போய்
விருந்தினன் ஆதலே நன்று. 6

நீர்மையே அன்றி, நிரம்ப எழுந்த் தம்
கூர்மையும் எல்லாம் ஒருங்கு இழப்பர்,—கூர்மையின்
முல்லை அலைக்கும் எயிற்றாய்!—நிரப்பு என்னும்
அல்லல் அடையப்பட்டார். 7

இட்டு ஆற்றுப்பட்டு, ஒன்று இரந்தவர்க்கு ஆற்றாது,
முட்டு ஆற்றுப்பட்டு, முயன்று, உள்ளூர் வாழ்தலின்,
நெட்டாற்றுச் சென்று, நிரை மனையில் கைந் நீட்டும்
கெட்ட ஆற்று வாழ்க்கையே நன்று. 8

கடகம் செறிந்த தம் கைகளால் வாங்கி,
அடகு பறித்துக்கொண்டு அட்டு, குடை கவனு,
உப்பு இலி வெந்தை தின்று, உள் அற்று, வாழ்பவே—
துப்புரவு சென்று உலந்தக்கால். 9

ஆர்த்த பொறிய அணி கிளர் வண்டுஇனம்
பூத்து ஒழி கொம்பின்மேல் செல்லாவாம்;—நீர்த்து அருவி
தாழா உயர் சிறப்பின் தண் குன்ற நல் நாட!—
வாழாதார்க்கு இல்லை, தமர். 10

## 30. மானம்

திரு மதுகையாகத் திறன் இலார் செய்யும்
பெருமிதம் கண்டக்கடைத்தும், எரி மண்டிக்
கானம் தலைப்பட்ட தீப்போல் கனலுமே—
மானம் உடையார் மனம். 1

என்பாய் உகினும், இயல்பு இலார் பின் சென்று,
தம் பாடு உரைப்பரோ, தம் உடையார்? தம் பாடு
உரையாமை முன் உணரும் ஒண்மை உடையார்க்கு
உரையாரோ, தாம் உற்ற நோய்? 2

யாம்ஆயின் எம் இல்லம் காட்டுதும்; தாம்ஆயின்,
காணவே கற்பு அழியும் என்பார்போல், நாணி,
புறங்கடை வைத்து ஈவர், சோறும்; அதனுல்
மறந்திடுக, செல்வர் தொடர்பு! 3

இம்மையும் நன்று ஆம்; இயல் நெறியும் கைவிடாது,
உம்மையும் நல்ல பயத்தலால்,—செம்மையின்
நானம் கமழும் கதுப்பினுய்!—நன்றேகாண்,
மானம் உடையார் மதிப்பு. 4

பாவமும் ஏனைப் பழியும் பட வருவ,
சாயினும், சான்றவர் செய்கலார்;—சாதல்
ஒருநாள் ஒருபொழுதைத் துன்பம்; அவைபோல்
அரு நவை ஆற்றுதல் இன்று. 5

மல்லல் மா ஞாலத்து வாழ்பவருள் எல்லாம்
செல்வர் எனினும், கொடாதவர் நல்கூர்ந்தார்;
நல்கூர்ந்தக்கண்ணும், பெரு முத்தரையரே,
செல்வரைச் சென்று இரவாதார். 6

கடை எலாம் காய் பசி அஞ்சும்; மற்று ஏனை
இடை எலாம் இன்னாமை அஞ்சும்;—புடை உலாம்
விற் புருவ வேல் நெடுங் கண்ணாய்!—தலை எலாம்
சொற் பழி அஞ்சிவிடும். 7

'நல்லர்! பெரிது அளியர்! நல்கூர்ந்தார்!' என்று எள்ளி,
செல்வர் சிறு நோக்கு நோக்குங்கால், கொல்லன்
உலை ஊதும் தீயேபோல் உள் கனலும் கொல்லோ,
தலையாய சான்றோர் மனம். 8

நச்சியார்க்கு ஈயாமை நாண் அன்று; நாள் நாளும்,
அச்சத்தால் நாணுதல் நாண் அன்றாம்; எச்சத்தின்
மெல்லியர் ஆகித் தம் மேலாயார் செய்தது
சொல்லாது இருப்பது—நாண். 9

கடமா தொலைச்சிய கான் உறை வேங்கை
இடம் வீழ்ந்தது உண்ணாது இறக்கும்;—இடமுடைய
வானகம் கையுறினும் வேண்டார், விழுமியோர்,
மானம் அழுங்க வரின். 10

## 31. இரவு அச்சம்

'நம்மாலே ஆவர், இந் நல்கூர்ந்தார்; எஞ் ஞான்றும்
தம்மால் ஆம் ஆக்கம் இலர்' என்று, தம்மை
மருண்ட மனத்தார்பின் செல்பவோ, தாமும்
தெருண்ட அறிவினவர்? 1

இழித்தக்க செய்து ஒருவன் ஆர உணலின்,
பழித்தக்க செய்யான், பசித்தல் தவறோ?—
விழித்து இமைக்கும் மாத்திரை அன்றோ, ஒருவன்
அழித்துப் பிறக்கும் பிறப்பு? 2

இல்லாமை கந்தா இரவு துணிந்து, ஒருவர்
செல்லாரும் அல்லர், சிறு நெறி; புல்லா,
'அகம் புகுமின்; உண்ணுமின்' என்பவர்மாட்டு அல்லால்,
முகம்புகுதல் ஆற்றுமோ, மேல்? 3

திருத் தன்னை நீப்பினும், தெய்வம் செறினும்,
உருத்த மனத்தோடு உயர்வு உள்ளின் அல்லால்,
அருத்தம் செறிக்கும் அறிவிலார் பின் சென்று,
எருத்து இறைஞ்சி நில்லாதாம், மேல். 4

கரவாத திண் அன்பின் கண் அன்னர்கண்ணும்
இரவாது வாழ்வது ஆம் வாழ்க்கை; இரவினை
உள்ளுங்கால் உள்ளம் உருகுமால்; என்கொலோ,
கொள்ளுங்கால் கொள்வார் குறிப்பு? 5

'இன்னா இயைக; இனிய ஒழிக' என்று
தன்னையே தான் இரப்பத் தீர்வதற்கு, என்னைகொல்,
காதல் கவற்றும் மனத்தினால் கண் பாழ்பட்டு
ஏதிலவரை இரவு? 6

என்றும் புதியார் பிறப்பினும், இவ் உலகத்து,
என்றும் அவனே பிறக்கலான்—குன்றின்
பரப்பு எலாம் பொன் ஒழுகும் பாய் அருவி நாட!—
இரப்பாரை எள்ளா மகன். 7

புறத்துத் தன் இன்மை நலிய, அகத்துத் தன்
நல் ஞானம் நீக்கி நிறீஇ, ஒருவனை,
'ஈயாய், எனக்கு!' என்று இரப்பானேல், அந் நிலையே
மாயானோ, மாற்றிவிடின்? 8

ஒருவர் ஒருவரைச் சார்ந்து ஒழுகல் ஆற்றி,
வழிபடுதல் வல்லுதல் அல்லால், பரிசு அழிந்து,
'செய்யீரோ, என்னானும்!' என்னும் சொற்கு இன்னாதே,
பையத் தாம் செல்லும் நெறி? 9

பழமை கந்தாகப் பசைந்த வழியே
கிழமைதான் யாதானும் செய்க! கிழமை
பொறாஅர் அவர் என்னின், பொத்தி, தம் நெஞ்சத்து
அறாஅச் சுடுவது ஓர் தீ. 10

## 5. பொது இயல்

### 32. அவை அறிதல்

மெய்ஞ் ஞானக் கோட்டி உறழ்வழி விட்டு, ஆங்கு ஓர்
அஞ்ஞானம் தந்திட்டு, அது ஆங்கு அறத் துழாய்,
கைஞ் ஞானம் கொண்டு ஒழுகும் காரறிவாளர் முன்,
சொல் ஞானம் சோர விடல்! 1

நாப் பாடம் சொல்லி நயம் உணர்வார்போல் செறிக்கும்
தீப் புலவற் சேரார், செறிவுடையார்; தீப் புலவன்
கோட்டியுள், குன்றக் குடி பழிக்கும்; அல்லாக்கால்,
தோள் புடைக்கொள்ளா எழும். 2

சொல்-தாற்றுக் கொண்டு சுனைத்து எழுதல் காமுறுவர்,
கற்ற ஆற்றல் வன்மையும் தாம் தேறார், கற்ற
செல உரைக்கும் ஆறு அறியார், தோற்பது அறியார்,
பல உரைக்கும் மாந்தர் பலர். 3

கற்றதூஉம் இன்றி, கணக்காயர் பாடத்தால்
பெற்றதாம் பேதை ஓர் சூத்திரம்; மற்று அதனை
நல்லாரிடைப் புக்கு, நாணாது சொல்லி, தன்
புல்லறிவு காட்டிவிடும். 4

வென்றிப் பொருட்டால் விலங்கு ஒத்து, மெய் கொள்ளார்,
கன்றிக் கறுத்து எழுந்து, காய்வாரோடு ஒன்றி,
உரை வித்தகம் எழுவார் காண்பவே, கையுள்
சுரை வித்துப் போலும் தம் பல். 5

பாடமே ஓதிப் பயன் தெரிதல் தேற்றாத
மூடர் முனிதக்க சொல்லுங்கால், கேடு அருஞ் சீர்ச்
சான்றோர் சமழ்த்தனர் நிற்பவே, மற்று அவரை
ஈன்றாட்கு இறப்பப் பரிந்து. 6

பெறுவது கொள்பவர் தோள்போல், நெறிபட்டுக்
கற்பவர்க்கு எல்லாம் எளிய, நூல்; மற்று அம்
முறி புரை மேனியர் உள்ளம் போன்று, யார்க்கும்
அறிதற்கு அரிய, பொருள். 7

புத்தகமே சாலத் தொகுத்தும், பொருள் தெரியார்,
உய்த்து, அகம் எல்லாம் நிறைப்பினும், மற்று அவற்றைப்
போற்றும் புலவரும் வேறே; பொருள் தெரிந்து
தேற்றும் புலவரும் வேறு. 8

பொழிப்பு, அகலம், நுட்பம், நூல் எச்சம், இந் நான்கின்
கொழித்து, அகலம் காட்டாதார் சொற்கள்,—பழிப்பு இல்
நிரை ஆமா சேக்கும் நெடுங் குன்ற நாட!—
உரை ஆமோ, நூலிற்கு நன்கு? 9

இற் பிறப்பு இல்லார் எனைத்து நூல் கற்பினும்,
சொல் பிறரைக் காக்கும் கருவியரோ? இற் பிறந்த
நல் அறிவாளர், நவின்ற நூல் தேற்றாதார்
புல்லறிவு தாம் அறிவது இல். 10

# 6. பகை இயல்

## 33. புல்லறிவாண்மை

அருளின் அறம் உரைக்கும் அன்புடையார் வாய்ச் சொல்
பொருள் ஆகக் கொள்வர், புலவர்; பொருள் அல்லா
ஏழை அதனை இகழ்ந்து உரைக்கும், பாற்கூழை
மூழை சுவை உணராதாங்கு. 1

அவ்வியம் இல்லார் அறத்து ஆறு உரைக்குங்கால்,
செவ்வியர் அல்லார் செவி கொடுத்தும் கேட்கலார்—
கவ்வித் தோல் தின்னும் குணுங்கர் நாய் பாற்சோற்றின்
செவ்வி கொளல் தேற்றாதாங்கு. 2

இமைக்கும் அளவில் தம் இன் உயிர் போம் ஆற்றை
எனைத்தானும் தாம் கண்டு இருந்தும், தினைத் துணையும்
நன்றி புரிகல்லா, நாண் இல் மட மாக்கள்
பொன்றில் என்? பொன்றாக்கால் என்? 3

உளநாள் சிலவால்; உயிர்க்கு ஏமம் இன்றால்;
பலர் மன்னும் தூற்றும் பழியால்; பலருள்ளும்
கண்டாரோடு எல்லாம் நகாஅது, எவன் ஒருவன்,
தண்டி, தனிப் பகை கோள்? 4

எய்தி இருந்த அவைமுன்னர்ச் சென்று, எள்ளி,
வைதான், ஒருவன் ஒருவனை; வைய,
வயப்பட்டான் வாளா இருப்பானேல், வைதான்
வியத்தக்கான், வாழும்எனின். 5

மூப்பு மேல் வாராமை முன்னே, அறவினையை
ஊக்கி, அதன்கண் முயலாதான், நூக்கி,
'புறத்து இரு; போகு' என்னும் இன்னாச் சொல் இல்லுள்
தொழுத்தையால் கூறப்படும். 6

தாமேயும் இன்புறார்; தக்கார்க்கும் நன்று ஆற்றார்;
ஏமம் சார் நல் நெறியும் சேர்கலார்; தாம் மயங்கி
ஆக்கத்துள் தூங்கி, அவத்தமே வாழ்நாளைப்
போக்குவார்—புல்லறிவினார். 7

சிறுகாலையே தமக்குச் செல்வுழி வல்சி
இறுகிறுகத் தோட்கோப்புக் கொள்ளார், இறுகிறுகி,
'பின் அறிவாம்' என்று இருக்கும் பேதையார், கை காட்டும்
பொன்னும் புளி விளங்காய் ஆம். 8

வெறுமை இடத்தும், விழுப் பிணிப் போழ்தும்,
மறுமை மனத்தாரே ஆகி, மறுமையை
ஐந்தை அனைத்தானும், ஆற்றிய காலத்துச்
சிந்தியார் சிற்றறிவினர். 9

என்னே!—மற்று இவ் உடம்பு பெற்றும் அறம் நினையார்,
கொன்னே கழிப்பர் தம் வாழ்நாளை,—அன்னோ!
அளவு இறந்த காதல் தம் ஆர் உயிர் அன்னார்க்
கொள இழைக்கும் கூற்றமும் கண்டு. 10

## 34. பேதைமை

கொலைஞர் உலை ஏற்றித் தீ மடுப்ப, ஆமை
நிலை அறியாது அந் நீர் படிந்தாடியற்றே—
கொலை வல் கொடுங் கூற்றம் கோள் பார்ப்ப, ஈண்டை
வலையகத்துச் செம்மாப்பார் மாண்பு. 1

பெருங் கடல் ஆடிய சென்றார், 'ஒருங்கு உடன்
ஓசை அவிந்தபின் ஆடுதும்' என்றற்றால்—
'இல் செய் குறைவினை நீக்கி, அறவினை
மற்று அறிவாம்' என்று இருப்பார் மாண்பு. 2

குலம், தவம், கல்வி, குடிமை, மூப்பு, ஐந்தும்
விலங்காமல் எய்தியக்கண்ணும், நலம் சான்ற
மை அறு தொல் சீர் உலகம் அறியாமை
நெய் இலாப் பாற்சோற்றின் நேர். 3

கல் நனி நல்ல, கடை ஆய மாக்களின்—
சொல் நனி தாம் உணரா ஆயினும், இன்னினியே
நிற்றல், இருத்தல், கிடத்தல், இயங்குதல், என்று
உற்றவர்க்குத் தாம் உதவலான். 4

பெறுவது ஒன்று இன்றியும், பெற்றானே போலக்
கறுவுகொண்டு, ஏலாதார்மாட்டும், கறுவினால்
கோத்து இன்னா கூறி உரையாக்கால், பேதைக்கு
நாத் தின்னும், நல்ல சுனைத்து! 5

தம்கண் அமர்பு இல்லார்பின் சென்று, தாம், 'அவரை
எம்கண் வணக்குதும்' என்பவர் புன் கேண்மை—
நல் தளிர்ப் புன்னை மலரும் கடற் சேர்ப்ப!—
கல் கிள்ளிக் கை இழந்தற்று. 6

ஆகாதுஎனினும், அகத்து நெய் உண்டாகின்,
போகாது எறும்பு புறம் சுற்றும்;—யாதும்
கொடாஅர்எனினும், உடையாரைப் பற்றி
விடாஅர், உலகத்தவர். 7

நல்லவை நாள்தொறும் எய்தார்; அறம் செய்யார்;
இல்லாதார்க்கு யாது ஒன்றும் ஈகலார்; எல்லாம்
இனியார் தோள் சேரார்; இசைபட வாழார்;—
முனியார்கொல் தாம் வாழும் நாள்? 8

விழைந்து ஒருவர் தம்மை வியப்ப, ஒருவர்
விழைந்திலேம் என்று இருக்கும் கேண்மை, தழங்குரல்
பாய் திரை சூழ் வையம் பயப்பினும், இன்னாதே—
ஆய் நலம் இல்லாதார்மாட்டு. 9

கற்றவும், கண் அகன்ற சாயலும், இற் பிறப்பும்,
பக்கத்தார் பாராட்டப் பாடு எய்தும்; தான் உரைப்பின்,
மைத்துனர் பல்கி, 'மருந்தின் தணியாத
பித்தன்!' என்று எள்ளப்படும்.

10

## 35. கீழ்மை

கப்பி கடவதாக் காலைத் தன் வாய்ப் பெயினும்,
குப்பை கிளைப்பு ஓவாக் கோழிபோல், மிக்க
கனம் பொதிந்த நூல் விரித்துக் காட்டினும், கீழ் தன்
மனம் புரிந்தவாறே மிகும். 1

'காழ் ஆய கொண்டு, கசடு அற்றார் தம் சாரல்,
தாழாது போவாம்' என உரைப்பின், கீழ்தான்,
'உறங்குவாம்' என்று எழுந்து போமாம்; அஃது அன்றி,
மறங்குமாம், மற்று ஒன்று உரைத்து. 2

பெரு நடை தாம் பெறினும், பெற்றி பிழையாது
ஒரு நடையர் ஆகுவர், சான்றோர்; பெரு நடை
பெற்றக்கடைத்தும்,—பிறங்கு அருவி நல் நாட!—
வற்று ஆம் ஒரு நடை, கீழ். 3

தினை அனைத்தே ஆயினும் செய்த நன்று உண்டால்,
பனை அனைத்தா உள்ளுவர், சான்றோர்; பனை அனைத்து
என்றும் செயினும்,—இலங்கு அருவி நல் நாட!—
நன்று இல, நன்று அறியார்மாட்டு. 4

பொற்கலத்து ஊட்டிப் புறந்தரினும், நாய் பிறர்
எச்சிற்கு இமையாது பார்த்திருக்கும்; அச் சீர்,
பெருமை உடைத்தாக் கொளினும், கீழ் செய்யும்
கருமங்கள் வேறுபடும். 5

சக்கரச் செல்வம் பெறினும், விழுமியோர்
எக் காலும் சொல்லார் மிகுதிச்சொல்; எக் காலும்
முந்திரிமேற் காணி மிகுவதேல், கீழ் தன்னை
இந்திரனு எண்ணிவிடும். 6

மை தீர் பசும் பொன்மேல் மாண்ட மணி அழுத்திச்
செய்தது எனினும், செருப்புத் தன் காற்கே ஆம்;—
எய்திய செல்வத்தர்ஆயினும், கீழ்களைச்
செய் தொழிலால் காணப்படும். 7

கடுக்கெனச் சொல்வற்று ஆம்; கண்ணோட்டம் இன்றாம்;
இடுக்கண் பிறர்மாட்டு உவக்கும்; அடுத்து அடுத்து
வேகம் உடைத்து ஆம்;—விறல் மலை நல் நாட!—
ஏகுமாம்; எள்ளுமாம்;—கீழ். 8

'பழையர் இவர்' என்று பல்நாள் பின் நிற்பின்,
உழை இனியர் ஆகுவர், சான்றோர்; விழையாதே,—
கள் உயிர்க்கும் நெய்தல் கனை கடல் தண் சேர்ப்ப!—
எள்ளுவர், கீழாயவர். 9

கொய் புல் கொடுத்துக் குறைத்து என்றும் தீற்றினும்,
வையம் பூண்கல்லா, சிறு குண்டை;—ஐய! கேள்:—
எய்திய செல்வத்தர்ஆயினும், கீழ்களைச்
செய்தொழிலால் காணப்படும். 10

## 36. கயமை

ஆர்த்த அறிவினர், ஆண்டு இளையர் ஆயினும்,
காத்து ஓம்பித் தம்மை அடக்குப; மூத்தொறூஉம்
தீத்தொழிலே கன்றித் திரிதந்து, எருவைபோல்
போத்து அறார், புல்லறிவினார். 1

செழும் பெரும் பொய்கையுள் வாழினும், என்றும்
வழும்பு அறுக்ககில்லாவாம், தேரை; வழும்பு இல் சீர்
நூல் கற்றக்கண்ணும், நுணுக்கம் ஒன்று இல்லாதார்
தேர்கிற்கும் பெற்றி அரிது. 2

கண மலை நல் நாட!—கண் இன்று ஒருவர்
குணனேயும் கூறற்கு அரிதால்; குணன் அழுங்கக்
குற்றம் உழை நின்று கூறும் சிறியவர்கட்கு
எற்றால் இயன்றதோ, நா! 3

கோடு ஏந்து அகல் அல்குல் பெண்டிர் தம் பெண் நீர்மை
சேடியர் போலச் செயல் தேற்றார்; கூடி,
புதுப்பெருக்கம் போலத் தம் பெண் நீர்மை காட்டி,
மதித்து இறப்பர், மற்றையவர். 4

தளிர்மேலே நிற்பினும், தட்டாமல் செல்லா
உளி நீரர் மாதோ, கயவர்; அளி நீரார்க்கு
என்னானும் செய்யார்; எனைத்தானும் செய்பவே,
இன்னாங்கு செய்வார்ப் பெறின். 5

மலை நலம் உள்ளும், குறவன்; பயந்த
விளை நிலம் உள்ளும், உழவன்; சிறந்து ஒருவர்
செய்த நன்று உள்ளுவர் சான்றோர்; கயம், தன்னை
வைததை உள்ளிவிடும். 6

ஒரு நன்றி செய்தவர்க்கு ஒன்றி எழுந்த
பிழை நூறும் சான்றோர் பொறுப்பர்; கயவர்க்கு
எழுநூறு நன்றி செய்து, ஒன்று தீதுஆயின்,
எழுநூறும் தீதாய்விடும். 7

ஏட்டைப் பருவத்தும் இற் பிறந்தார் செய்வன,
மோட்டிடத்தும் செய்யார், முழுமக்கள்;—கோட்டை
வயிரம் செறிப்பினும்,—வாட் கண்ணாய்!—பன்றி
செயிர் வேழம் ஆகுதல் இன்று. 8

'இன்று ஆதும்; இந் நிலையே ஆதும்; இனிச் சிறிது
நின்று ஆதும்' என்று நினைத்திருந்து, ஒன்றி
உரையின் மகிழ்ந்து, தம் உள்ளம் வேறு ஆகி,
மரை இலையின் மாய்ந்தார், பலர். 9

நீருள் பிறந்து, நிறம் பசியதுஆயினும்,
ஈரம் கிடையகத்து இல் ஆகும்;—ஓரும்
நிறைப் பெருஞ் செல்வத்து நின்றக்கடைத்தும்,
அறைப் பெருங் கல் அன்னார் உடைத்து. 10

# 7. பல் நெறி இயல்

## 37. பல் நெறி

மழை திளைக்கும் மாடம் ஆய், மாண்பு அமைந்த காப்பு ஆய்,
இழை விளக்கு நின்று இமைப்பின் என் ஆம், விழைதக்க
மாண்ட மனையாளை இல்லாதான் இல்லகம்?
காண்டற்கு அரியது ஓர் காடு! 1

வழுக்கு எனைத்தும் இல்லாத வாள்வாய்க் கிடந்தும்,
இழுக்கினைத் தாம் பெறுவர்ஆயின், இழுக்கு எனைத்தும்
செய்குறாப் பாணி சிறிதே; அச் சின்மொழியார்
கை உறாப் பாணி பெரிது. 2

'எறி' என்று எதிர் நிற்பாள் கூற்றம்; சிறுகாலை
அட்டில் புகாதாள் அரும் பிணி; அட்டதனை
உண்டி உதவாதாள் இல் வாழ் பேய்;—இம் மூவர்
கொண்டானைக் கொல்லும் படை. 3

'கடி' எனக் கேட்டும், கடியான்; வெடிபட
ஆர்ப்பது கேட்டும், அது தெளியான்; பேர்த்தும் ஓர்
இல் கொண்டு இனிது இரூஉம் ஏமுறுதல், என்பவே,
கல் கொண்டு எறியும் தவறு. 4

தலையே, தவம் முயன்று வாழ்தல்; ஒருவர்க்கு
இடையே, இனியார்கண் தங்கல்; கடையே,
புணராது என்று எண்ணிப் பொருள் நசையால், தம்மை
உணரார் பின் சென்று நிலை. 5

கல்லாக் கழிப்பர், தலையாயார்; நல்லவை
துவ்வாக் கழிப்பர், இடைகள்; கடைகள்,
'இனிது உண்ணேம்! ஆரப் பெறேம் யாம்!' என்னும்
முனிவினால் கண்பாடு இலர். 6

செந்நெல்லால் ஆய செழு முளை மற்றும் அச்
செந்நெல்லே ஆகி விளைதலால்,—அந் நெல்
வயல் நிறையக் காய்க்கும் வள வயல் ஊர!—
மகன் அறிவு, தந்தை அறிவு. 7

உடைப் பெருஞ் செல்வரும் சான்றோரும் கெட்டு,
புடைப் பெண்டிர் மக்களும் கீழும் பெருகி,
கடைக்கால் தலைக்கண்ணது ஆகி, குடைக் கால்போல்
கீழ் மேலாய் நிற்கும், உலகு! 8

இனியார் தம் நெஞ்சத்து நோய் உரைப்ப, அந் நோய்
தணியாத உள்ளம் உடையார்,—மணி வரன்றி
வீழும் அருவி விறல் மலை நல் நாட!—
வாழ்வின், வரை பாய்தல் நன்று. 9

புதுப் புனலும், பூங்குழையார் நட்பும், இரண்டும்,
விதுப்பு அற நாடின், வேறு அல்ல;—புதுப் புனலும்
மாரி அறவே அறுமே; அவர் அன்பும்
வாரி அறவே அறும். 10

மூன்றாவது

# காமத்துப் பால்

## 1. இன்ப துன்ப இயல்

### 38. பொதுமகளிர்

விளக்கு ஒளியும், வேசையர் நட்பும், இரண்டும்,
துளக்கு அற நாடின், வேறு அல்ல;—விளக்கு ஒளியும்
நெய் அற்றகண்ணே அறுமே; அவர் அன்பும்
கை அற்றகண்ணே அறும். 1

அம் கோட்டு அகல் அல்குல் ஆய் இழையாள், நம்மொடு,
'செங் கோடு பாய்துமே' என்றாள்மன்; செங் கோட்டின்-
மேல் காணம் இன்மையால் மேவாது ஒழிந்தாளே,
கால் கால்நோய் காட்டிக் கலுழ்ந்து. 2

அம் கண் விசும்பின் அமரர் தொழப்படும்
செங் கண் மால் ஆயினும் ஆகமன்! தம் கைக்
கொடுப்பது ஒன்று இல்லாரை, கொய் தளிர் அன்னார்,
விடுப்பர், தம் கையால் தொழுது. 3

ஆணம் இல் நெஞ்சத்து அணி நீலக் கண்ணார்க்குக்
காணம் இல்லாதார் கடு அனையர்;—காணவே—
செக்கு ஊர்ந்து கொண்டானும் செய்த பொருள் உடையார்
அக்காரம் அன்னார், அவர்க்கு. 4

பாம்பிற்கு ஒரு தலை காட்டி, ஒரு தலை
தேம் படு தெண் கயத்து மீன் காட்டும் ஆங்கு
மலங்கு அன்ன செய்கை மகளிர் தோள் சேர்வர்,
விலங்கு அன்ன வெள்ளறிவினார். 5

'பொத்த நூல் கல்லும், புணர் பிரியா அன்றிலும்போல்,
நித்தலும் நம்மைப் பிரியலம்' என்று உரைத்த
பொற்றொடியும் போர்த் தகர்க் கோடு ஆயினாள்; நல் நெஞ்சே!
நிற்றியோ, போதியோ, நீ? 6

ஆமாபோல் நக்கி, அவர் கைப் பொருள் கொண்டு,
சேமாபோல் குப்புறூஉம் சில்லைக்கண் அன்பினை
ஏமாந்து, எமது என்று இருந்தார் பெறுபவே,
தாமாம் பலரால் நகை. 7

ஏமாந்த போழ்தின் இனியார் போன்று, இன்னாராய்த்
தாம் ஆர்ந்த போதே தகர்க்கோடு ஆம், மான் நோக்கின்,
தம் நெறிப் பெண்டிர் தட முலை சேராரே—
'செந் நெறிச் சேர்தும்' என்பார். 8

ஊறு செய் நெஞ்சம் தம் உள் அடக்கி, ஒண்ணுதலார்
தேற மொழிந்த மொழி கேட்டு, தேறி,
'எமர்' என்று கொள்வாரும் கொள்பவே; யார்க்கும்
தமர் அல்லர்; தம் உடம்பினர். 9

உள்ளம் ஒருவன் உழையதா, ஒண்ணுதலார்
கள்ளத்தால் செய்யும் கருத்து எல்லாம் தெள்ளி
அறிந்த இடத்தும், அறியாராம்—பாவம்
செறிந்த உடம்பினவர். 10

## 2. இன்ப இயல்

### 39. கற்புடை மகளிர்

அரும் பெறல் கற்பின் அயிராணி அன்ன
பெரும் பெயர்ப் பெண்டிர் எனினும், விரும்பிப்
பெறு நசையால், பின்நிற்பார் இன்மையே பேணும்
நறு நுதலாள்—நன்மைத் துணை. 1

குடம் நீர் அட்டு உண்ணும் இடுக்கண் பொழுதும்,
கடல் நீர் அற உண்ணும் கேளிர் வரினும்,
கடன் நீர்மை கையாறுக் கொள்ளும் மட மொழி
மாதர்—மனை மாட்சியாள். 2

நால் ஆறும் ஆறாய், நனி சிறிதாய், எப் புறனும்
மேல் ஆறு மேல் உறை சோரினும், மேலாய
வல்லாளாய், வாழும் ஊர் தற் புகழும் மாண் கற்பின்
இல்லாள் அமைந்ததே—இல். 3

கட்கு இனியாள், காதலன் காதல் வகை புனைவாள்
உட்கு உடையாள், ஊராண் இயல்பினாள், உட்கி
இடன் அறிந்து ஊடி இனிதின் உணரும்
மடமொழி மாதராள்—பெண். 4

எஞ்ஞான்றும், எம் கணவர் எம் தோள்மேல் சேர்ந்து எழினும்,
அஞ் ஞான்று கண்டேம்போல் நாணுதுமால்; எஞ்ஞான்றும்,
என்னை, கெழீஇயினர் கொல்லோ, பொருள் நசையால்
பல் மார்பு சேர்ந்து ஒழுகுவார்! 5

தலைவன் தலைவி உரிமையை வியந்து கூறியது

உள்ளத்து உணர்வுடையான் ஓதிய நூல் அற்றால்;
வள்ளன்மை பூண்டான்கண் ஒண் பொருள்; தெள்ளிய
ஆண்மகன் கையில் அயில் வாள் அனைத்துஅரோ;—
நாணுடையாள் பெற்ற நலம். 6

பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகனொடு தலைவி புலந்து கூறியது

கருங் கொள்ளும், செங் கொள்ளும், தூணிப் பதக்கு என்று
ஒருங்கு ஒப்பக் கொண்டானும், ஊரன்;—ஒருங்கு ஒவ்வா
நல் நுதலார்த் தோய்ந்த வரைமார்பன் நீராடாது,
என்னையும் தோய வரும்! 7

தலைவனது வாயிலாகப் பாணன் வர, அவனை நோக்கித் தலைவி நகையாடிக் கூறியது

கொடியவை கூறாதி;—பாண!—நீ கூறின்,
அடி பைய இட்டு ஒதுங்கிச் சென்று, துடியின்
இடக் கண் அனையம் யாம், ஊரற்கு; அதனால்,
வலக் கண் அனையார்க்கு உரை. 8

'பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகனோடு நீ புலவாமைக்குக் காரணம் என்?'
என்ற தோழிக்குத் தலைவி சொல்லியது

சாய்ப் பறிக்க நீர் திகழும் தண் வயல் ஊரன்மீது
ஈப் பறக்க நொந்தேனும் யானேமன்! தீப் பறக்கத்
தாக்கி முலை பொருத தண் சாந்து அணி அகலம்
நோக்கி இருந்தேனும் யான்! 9

தலைவி பாணனொடு வெகுளல்

'அரும்பு அவிழ் தாரினான் எம் அருளும்' என்று
பெரும் பொய் உரையாதி;—பாண!—கரும்பின்
கடைக் கண் அனையம் யாம் ஊரற்கு; அதனால்,
இடைக் கண் அனையார்க்கு உரை. 10

## 40. காமம் நுதல் இயல்

தலைமகற்கு வாயில் நேர்ந்த தோழி தலைமகள் புலவி நீங்கச் சொல்லியது

முயங்காக்கால், பாயும் பசலை; மற்று ஊடி
உயங்காக்கால், உப்பு இன்றும் காமம்;—வயங்கு ஓதம்
நில்லாத் திரை அலைக்கும் நீள் கழித் தண் சேர்ப்ப!—
புல்லாப் புலப்பது ஓர் ஆறு. 1

பருவம் கண்டு ஆற்றாளாகிய தலைவி தோழிக்குச் சொல்லியது

தம் அமர் காதலர் தார் சூழ் அணி அகலம்
விம்ம முயங்கும் துணை இல்லார்க்கு, இம்மெனப்
பெய்ய எழிலி முழங்கும் திசைஎல்லாம்
நெய்தல் அறைந்தன்ன நீர்த்து. 2

தலைமகள் செலவு உடன்படாமையைத் தலைமகற்குத் தோழி சொல்லியது

கம்மம் செய் மாக்கள் கருவி ஒடுக்கிய
மம்மர் கொள் மாலை, மலர் ஆய்ந்து, பூத் தொடுப்பாள்,
கைம் மாலை இட்டுக் கலுழ்ந்தாள், 'துணை இல்லார்க்கு
இம் மாலை என் செய்வது!' என்று. 3

வினை முற்றி மீண்ட தலைமகன் பாகன் கேட்பச் சொல்லியது

செல் சுடர் நோக்கிச் சிதர் அரிக் கண் கொண்ட நீர்
மெல் விரல் ஊழ் தெறியா, விம்மி, தன் மெல் விரலின்,
நாள் வைத்து, நம் குற்றம் எண்ணும்கொல், அந்தோ! தன்
தோள் வைத்து அணைமேல் கிடந்து! 4

தலைமகன் தான் உற்றதைப் பாங்கற்குச் சொல்லியது

கண் கயல் என்னும் கருத்தினால், காதலி
பின் சென்றது அம்ம, சிறு சிரல்! பின் சென்றும்,
ஊக்கி எழுந்தும், எறிகல்லா—ஒண் புருவம்
கோட்டிய வில் வாக்கு அறிந்து. 5

செவிலி மகள் சென்ற சுரத்து அருமை கூறி, இரங்கியது

அரக்கு ஆம்பல் நாறும் வாய் அம் மருங்கிற்கு, அன்னோ!
பரற் கானம் ஆற்றின கொல்லோ—அரக்கு ஆர்ந்த
பஞ்சி கொண்டு ஊட்டினும், 'பையென, பையென!' என்று,
அஞ்சி, பின் வாங்கும் அடி! 6

சிறைப்புறத்தான் ஆன தலைவன் கேட்ப, பிரிவை ஆற்றாத தலைவியின் நிலைமையைத் தோழி கூறியது

ஓலைக் கணக்கர் ஒலி அடங்கு புன் செக்கர்
மாலைப்பொழுதில், மணந்தார் பிரிவு உள்ளி,
மாலை பரிந்திட்டு அழுதாள்—வன முலைமேல்
கோலம் செய் சாந்தம் திமிர்ந்து. 7

உடன்போக்குக்கு ஒருப்பட்ட தலைமகள் தோழிக்குக் கூறியது

' ''கடக்க அருங் கானத்து, காளைபின், நாளை
நடக்கவும் வல்லையோ?'' என்றி—சுடர்த்தொடீஇ!—
பெற்றான் ஒருவன் பெருங் குதிரை அந் நிலையே
கற்றான், அஃது ஊருமாறு?' 8

மகளைப் போக்கிய நற்றாய் கவன்று கூறியது

'முலைக்கண்ணும், முத்தும், முழு மெய்யும், புல்லும்
இலக்கணம் யாதும் அறியேன்; கலைக் கணம்
வேங்கை வெரூஉம் நெறி செலிய போலும், என்
பூம்பாவை செய்த குறி. 9

தலைமகள் பிரிவாற்றாமையைத் தோழிக்குச் சொல்லியது

கண் மூன்று உடையானும், காக்கையும், பை அரவும்,
என் ஈன்ற யாயும், பிழைத்தது என்?—பொன் ஈன்ற
கோங்கு அரும்பு அன்ன முலையாய்!—பொருள்வயின்
பாங்கனார் சென்ற நெறி! 10

# அதிகார இயல் அடைவு

வளம் கெழு திருவொடு வையகம் முழுதும்
உளம் குளிர் இன்பத்து இன்பம் உவப்ப,
வண் பெருஞ் சிறப்பின் மா தவம் புரிந்தாங்கு
என் பெருங் குன்றத்து இருந் தவ முனிவரர்
அறம் பொருள் இன்பம் வீடு எனும் அவற்றின்
திறம் பிறர் அறியும் திறத்தை நாடி,
பண்புற எடுத்துப் பாங்குறப் பகர்ந்த
வெண்பா இயல் எஸ்ஞயிரம். இவற்றுள்
பார் எதிர்கொண்டு பரவி ஏத்த
நீர் எதிர் வந்து, நிரை அணி பெற்ற,
மேல் நூல் தகையின் விதிமுறை பிழையா
நானூறு. அவற்றின் நயம் தெரிந்து ஓதிய
மது மலர்த் தண் தார்ப் பதுமன் தெரிந்த
ஐயம் இல் பொருண்மை அதிகாரம்தாம்
மெய் ஆம் நலத்த எண்-ஐந்து. அவற்றுள்,
'அற இயல் பதின்மூன்று; அரசர்க்கு உரிய
பொருள் இயல் இருபத்து ஒரு நான்கு; இன்பம்
ஆன்ற வகையே மூன்று'—என மொழிந்தனன்,
சான்றோர் ஏத்தும் தருமத் தலைவனே.

அற இயல் இரு வகைத்து ஆம்: அவைதம்முள்,
துறவு ஏழ்; இல்லறம் இரு-மூன்று என்ப.
பொருள் இயல் வகை ஏழ் புலப்படக் கிளப்பின்,
அரசு இயல் ஏழ் அதிகாரம் ஆகும்;
நட்பு இயல் நான்கு அதிகாரம்; இன்பம்
மூன்றே; துன்ப இயல் அதிகாரம்
நான்கே; ஒன்றே பொது இயல்; பகை இயல்
கூறு அதிகாரம் நான்கே; பல் நெறி
கூறு அதிகாரம் ஒன்று எனக் கிளப்பர்.
கடை இன்ப வகைதான் கருதின் இரு வகை:
இன்ப துன்ப அதிகாரம் ஒன்றே; ஏனை
இன்பம் கூறு அதிகாரம் இரண்டே.

## அதிகாரங்களில் பாடல்களின் அடைவு

பின் வரும் அதிகாரங்களில் பாடல்களின் வரிசை முறை ஒரு சில பிரதிகளில் சிறிது மாறுபட்டுக் காண்கிறது.

**11:** 8—7, 4—3, 5—4, 6—5, 7—6. **24:** 8—10, 9—8, 10—9. **25:** 1—3, 2—1, 3—2, 4—5, 5—4. **29:** 6—8, 7—9, 8—6, 9—7. **31:** 4—9, 5—4, 6—5, 7—6, 8—7, 9—8. **36:** 9—10, 10—9.

# பழமொழி

நாலடி நானூற்றைப் போலவே நானூறு பாடல்களைக் கொண்டு விளங்கும் கீழ்க்கணக்கு நூல் பழமொழி. நாலடிப் பாடல்களின் சொற்பொருள்களைப் பல இடங்களில் தழுவிச் செல்வதனுல், இது நாலடியாரோடு நெருங்கிய தொடர்புடையது என்னலாம். இந் நூலிலுள்ள பாடல்களுள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு பழமொழியை அமைத்து, அதற்கு விளக்கம்கூறும் வகையில் ஆசிரியர் பாடியிருத்தலின், பழமொழி என்னும் சிறப்புப் பெயர் இதற்கு அமைவதாயிற்று. பாடல் தொகையைக் கொண்டு, 'பழமொழி நானூறு' என்றும் இது குறிக்கப் பெறும். இந் நூலகத்துப் பண்டைப் பழமொழிகளைத் தேர்ந்து எடுத்து ஆசிரியர் அமைத்துள்ளார் என்பதை

> பிண்டியின் நீழல் பெருமான் அடி வணங்கி,
> பண்டைப் பழமொழி நானூறும்—கொண்டு இனிதா
> முன்றுறை மன்னவன் நான்கு அடியும் செய்து அமைத்தான்,
> இன் துறை வெண்பா இவை

என வரும் தற்சிறப்புப் பாயிரத்தால் அறிகின்றோம்.

பழமொழிகள் எனப்படுபவை புதியனவாக அமைக்கப்படாது, வழிவழியாக மக்களிடையே வழங்கிவரும் உலக வசனங்களாகும். இவை ஒரு கருத்தைத் தெளிவாகவும், சுருக்கமாகவும், கேட்போர் உளம் கொளும் வகையிலும் தெரிவிக்கின்றன. இவை பொது மக்களின் அனுபவம் வாயிலாக, அவர்களது உள்ளுணர்ச்சியினின்று வெளிப்படுவன ஆகும். எனவே, இவை கருதிய பயனை விளைக்கும் ஆற்றல் வாய்ந்து விளங்குகின்றன. 'சுருக்கம், தெளிவு முதலியன விளங்க அமைந்து, கருதின பொருளை முடித்தற்கு வரும், ஏதுவைக் குறித்த தொடர்கள் முதுமொழி எனப்படும்' என்பது தொல்காப்பியத்தில் காண்கிறது. தொல்காப்பியர் கூறிய,

> நுண்மையும் சுருக்கமும் ஒளியுடைமையும்
> ஒண்மையும் என்று இவை விளங்கத் தோன்றி,
> குறித்த பொருளை முடித்தற்கு வரூஉம்,
> ஏது நுதலிய முதுமொழி என்ப

என வரும் முதுமொழி விளக்கம் பற்றிய இச் சூத்திர உரையில், நச்சினார்க்கினியர், 'பழமொழி இவ்விலக்கணம் பற்றிச் செய்தது' என்று குறித்துள்ளார்.

சங்கப் பாடல்களிலும் பிற்காலப் பாடல்களிலும் புலவர்கள் சிற்சில இடங்களில், அக்காலத்து வழங்கிய பழமொழிகளை ஆற்றலுடன் சந்தர்ப்பத்திற்கு இயைய எடுத்தாண்டிருக்கிறார்கள்.

> அம்ம வாழி தோழி! 'இம்மை
> நன்று செய் மருங்கில் தீது இல்' என்னும்
> தொன்றுபடு பழமொழி இன்று பொய்த்தன்றுகொல்?
>
> (அகம். 101)

என வரும் அகப்பாடலில் பழமொழி ஒன்றை எடுத்துக் காட்டியதுடன், 'தொன்றுபடு பழமொழி' என, வழிவழியாக வழங்கிவருகின்ற இயல்பையும் ஆசிரியர் புலப்படுத்தியிருத்தல் காணலாம். ஆனால், இப்பழமொழிகளின் அருமை பெருமைகளை உணர்ந்து தனிப்பட நூல் செய்த பெருமை புலவர் முன்றுறை அரையனார்க்கு உரியதாகும்.

முன்றுறை அரையனர் என்ற பெயர் இயற்பெயர் என்று எண்ணுதற்கு இடமில்லை. முன்றுறை என்னும் இடத்தில் அரசு புரிந்த அரசர் என்பதே இதன் பொருளாகும். 'முன்றுறை மன்னவன்' என்பது தற்சிறப்புப் பாயிரத்துள் காண்கிறது. ஒருகால், முன்றுறையில் வாழ்ந்த 'அரையர்' என்னும் சிறப்புப் பெயர் பெற்ற ஒரு தலைவராக இவர் இருத்தலும் கூடும். அன்றியும், அரையர் என்பது சேனவரையர் என்னும் தொல்காப்பிய உரையாசிரியர் பெயரிலும் காணப்பெறுதல் இங்குச் சிந்திக்கத் தக்கது. மேலும், 'அரையர்' என்பது ஒரு மரபுப் பெயராகவோ குடிப் பெயராகவோ இருத்தலும் கூடும். அரையர் குடியில் புலமையில் சிறந்து விளங்கிய இவரது இயற்பெயரை விடுத்து, அக்குடிப்பெயரால் வழங்கிவந்தனரோ என்று ஐயுறவு கொள்ளவும் இடமுண்டு. 'முன்றுறை' எங்குள்ளது என்பது தெளிவாகத் தெரியவில்லை. தமிழகத்தில் கொற்கை முன்றுறை, காவிரி முன்றுறை, திருமருத முன்றுறை, கழார் முன்றுறை என்னும் இடங்கள் இருந்தனவாகப் பண்டை இலக்கியம் வாயிலாக அறிகிறோம். இவற்றைப் போலவே பழமொழி ஆசிரியர் வாழ்ந்த ஊரும் நீர்த்துறைச் சிறப்பு வாய்ந்த ஓர் இடமாக இருத்தல் கூடும். அடைமொழி இன்றி 'முன்றுறை' என இவ்வூர் வழங்கப் பெறுதலினல் இது அக் காலத்தில் மிக்க பெருஞ் சிறப்புடன் விளங்கியிருத்தல் வேண்டும். இவர் சமண சமயத்தினர் என்பது தற் சிறப்புப் பாயிரத்தால் விளங்கும்.

இந்நூல், முக்கியமாக நாலடியாரிலும், திருக்குறள் முதலிய கீழ்க்கணக்கு நூல்களிலும் வந்துள்ள பல கருத்துக்களைச் சிற்சில இடங்களில் அடியொற்றிச் செல்லுகிறது. தூங்கு எயில் எறிந்த சோழன், கரிகாலன், பாரி, பேகன், முதலியோரைப் பற்றிய முற்கால நிகழ்ச்சிகளை எடுத்தாளுதலோடு, பொற்கைப்பாண்டியன், மனுநீதிச் சோழன் முதலியோரைப் பற்றிய பிற்கால வரலாறுகளையும் பழமொழி ஆசிரியர் தம் நூலுள் சுட்டியுள்ளார். இவர் தமது பாடல் ஒன்றில் (143) குறித்துள்ள 'பிரம்பூரி' என்னும் நெல்வகை அப்பர் பாடலிலும் (4, 20, 7) காணப்பெறுகிறது. மரிசாதி (118), மன்றிவிடல் (286) என்று சாஸனங்களில் வழங்கும் சொற்கள் பழமொழிப் பாடல்களில் பயின்றுள்ளன. இவற்றல் பழமொழி நானூறு நாலடி நானூற்றிற்குப் பின்னர்த் தோன்றியது என்று கருதலாம்.

பழமொழி நானூற்றுப் பாடல்கள் பலவற்றில் காணும் ஒரு பொது இயல்பு கவனிக்கத் தக்கது. பழமொழி பாடலின் இறுதியில் வருகின்றது. முன் இரண்டு அடிகளில் அதற்கு உரிய விளக்கத்தைக் காணலாம். மூன்றும் அடியில் பெரும்பாலும் ஆடூஉ முன்னிலை, மகடூஉ முன்னிலைத் தொடர்களுள் ஒன்று இடம் பெறுகிறது. ஆசிரியர் எடுத்துக் கூறும் முறையில் பழமொழியின் பொருளும், பாடலில் அவர் சுட்டும் அறநெறியும் நமக்கு நன்கு புலனாகின்றன.

விளித் தொடர்களில் ஆடூஉ முன்னிலை மிகுந்தும், மகடூஉ முன்னிலை மிகக் குறைந்தும் காணப்படுகின்றன.

ஆசிரியர், தாம் அவ்வப்போது ஆய்ந்து உணர்ந்த பொருள்களைப் பழமொழியோடு பொருத்திப் பாடி வந்திருக்க வேண்டும். இதனாலேதான், இந்நூற்பாடல்கள் எல்லாம் தனித்தனியே பொருள் முடிந்து நிற்கும் முத்தகச் செய்யுட்களாய் அமைந்து, தனித்தனிக் கருத்தை வெளியிடுகின்றன அன்றி, ஒன்றற்கு ஒன்று பொருள் தொடர்பு உடையதாக அமையவில்லை போலும்! பழமொழியின் பழைய உரையாசிரியரும், 'இருகயல் உண்கண்' எனத் தொடங்கும் பாடலின் உரையில் (338) 'இந்த நானூறும் முத்தகச் செய்யுள் ஆதலால், தனியே நின்று ஒரு பொருள் பயந்து முற்றுப்பெற்றன என அறிக' என்று எழுதிய குறிப்பும் மேற்குறித்த கருத்தை அரண் செய்வதாகும்.

நூலின் முதற்பாடல் பழமொழி ஏடுகளில் காணப்பெறவில்லை. ஆயினும், அதற்கு உரிய பழைய உரைப்பகுதி காணப்பெறுகின்றது. ச. ஆறுமுக நயினர் வெளியிட்ட மூலப் பதிப்பில், முதற்பாடலுக்குப் பழைய உரையே அச்சிடப் பெற்றிருக்கிறது. இவ் உரைக்குரிய மூலச் செய்யுளை நன்னூலின் பழைய உரைகாரராகிய மயிலைநாதர் கொண்டுகூட்டுப் பொருள்கோளுக்கு மேற்கோள் காட்டியிருப்பது தெரிந்து, டாக்டர், உ. வே. சாமிநாதையர் அவர்கள், செந்தமிழ்ப் பத்திரிகை வாயிலாக வெளியிட்டனர். அதன் பின்னரே, பழமொழியின் முதற்பாடல் பழமொழி அச்சு நூல்களில் இடம் பெறலாயிற்று.

மேற்குறித்த ச.ஆறுமுக நயினர்தாம் பழமொழி நூலைப் பிரதிகளில் உள்ளபடி அச்சு இயற்றியவர் (1904). முதல் இருநூறு பாடல்களைப் பழைய உரையுடனும், தமது விளக்கக் குறிப்புக்களுடனும் வெளியிட்ட திரு. நாராயண ஐயங்காரும் (1918, 1922) பிரதிகளில் காணும் வரிசை முறையையே பின்பற்றியிருக்கிருர். பழமொழிப் பாடல்களின் வரிசை முறையை மாற்றி முதல்முதல் அச்சு இயற்றியவர் சோடசாவதானம் சுப்பராயச் செட்டியார் (1874). இவர் நாலடியாரைப் போலப் பப்பத்துப் பாடல்கள் கொண்ட 39 அதிகாரமாகக் கொண்டு, அதற்குத் தக்கபடி பாடல்களின் வரிசை முறையை மாற்றி அமைத்து, பால், இயல் பாகுபாடுகளும் செய்திருக்கிருர். பத்து வெண்பாக்கள் இவர் பதிப்பில் விடுபட்டுப் போயின.

பழைய உரையுடன் பழமொழி நூலை வெளியிட்ட தி. செல்வக்கேசவராய முதலியாரும் (1916) வேருெரு வகையாக இந்நூலைப் பாகுபாடு செய்து, சுப்பராயச் செட்டியாரைப்போன்றே பாடல்களின் வரிசை முறையையும் மாற்றி அமைத்துள்ளார். நூலை ஐந்து பெரும்பிரிவுகளாகவும், 35 சிறு பிரிவுகளாகவும் இவர் கொண்டுள்ளார். இச் சிறு பிரிவுகள் ஒரு வரையறை இன்றி, 4 பாடல்கள் முதல் 21 பாடல்கள் வரையில் வெவ்வேறு அளவில் பாடல்களைப் பெற்றுள்ளன. முதலியார்அவர்கள் தமது பதிப்புரையில், 'ஓர் இனமான பொருள்களை ஒருவழி வைத்து வகைப்படுத்தாவிட்டால், இந்நூலைப் படிப்பது மாணுக்கர்க்கு இனிதுருது என்று கடவுள் வாழ்த்து நீங்கலாக முந்நூற்றுத் தொண்ணூற்ருென்பது செய்யுள்களையும் ஐந்து பெரும்பிரிவுகளாகவும், அவைகளில் ஒவ்வொன்றையும் ஏற்ற பெற்றி சிறிய உட்பிரிவுகளாகவும் பிரித்து வைத்தேன். இங்ஙனம் பிரிப்பதில் எல்லோரும் ஒருமனப்படார் என்பது உரைக்க வேண்டா' என்று குறித்துள்ளார். இவர் கடவுள் வணக்கமாகக் குறிப்பிடும் செய்யுள் நூலின் முதற்செய்யுளாகப் பிரதிகளில் தெரிய வருகிறதேயன்றி, கடவுள் வணக்கம் என்று சுவடிகளில் குறிக்கப்பெறவில்லை.

நூலகத்துப் பயின்று வரும் பழமொழிகளில் பல, எதுகை மோனைகளுக்கு ஏற்ப மாறுதல்கள் பெற்றிருக்கின்றன. சிற்சில பழமொழிகள் இக்கால வழக்கில் இல்லை. ஒரு சில பாடல்களில் அமைந்துள்ள பழமொழிகளின் வடிவம் விளங்கவில்லை. இரண்டொரு பாடல்கள் பழமொழியைப் பெற்றுள்ளனவோ என்று ஐயுறும்படியாகவும் உள்ளன.

'புறத்திரட்டு' என்னும் தொகை நூலைத் திரட்டியவர், இந்நூலின் பொருட்சிறப்புக் கருதி, 319 பாடல்களைத் தம் நூலுள், தாம் வகுத்துக்கொண்ட பொருளுக்கு இயைய அங்கங்கே கோத்திருக்கின்ருர். இவர் காட்டிய செய்யுட்களில் மூன்று (புறத். 146, 1107, 1139) பழமொழி நூற் பிரதிகளில் காணப்பெறவில்லை. இவற்றுள் ஒன்றின் அமைப்பு (146) சிறுபஞ்ச மூலச் செய்யுட்களை ஒத்துள்ளமையால், இது சிறுபஞ்ச மூலச் செய்யுளாக இருத்தல் கூடும் என்று புறத்திரட்டு நூலின் பதிப்பாசிரியர் குறிப்பு எழுதியுள்ளார். இந்த மூன்று பாடல்களையும், 'மிகைப் பாடல்கள்' என்னும் தலைப்பின் கீழ் நூல் இறுதியில் சேர்த்துளோம்; அடுத்து, தற்சிறப்புப் பாயிரமாக உள்ள ஒரு செய்யுளையும் அமைத்துள்ளோம்.

இந் நூலுக்குச் சிறந்த முறையில் அமைந்த பழைய உரை ஒன்று உள்ளது. இது பொழிப்புரையாய் அமைந்துள்ளது. இதில் வரும் இரண்டொரு குறிப்புக்களால், இதற்கு முற்பட்ட ஓர் உரையும் உண்டு என்பது தெரியவருகிறது. புறத்திரட்டில் காட்டப்பெற்றிருக்கும் பாடல்களின் மூலபாடத்திற்கும், பழமொழி நூற் பிரதிகளில் காணும் மூலபாடத்திற்கும் பற்பல இடங்களில் வேறுபாடு காணப்படுகிறது. புறத்திரட்டில் காணும் வேற்றுப் பாடங்கள் பல இடங்களில் பழைய உரைக்குப் பொருத்தமாயும், பொருட்சிறப்பு உள்ளனவாயும் காண்கின்றன.

# பழமொழி

அரிது அவித்து, ஆசு இன்று உணர்ந்தவன் பாதம்,
விரி கடல் சூழ்ந்த வியன் கண் மா ஞாலத்து,
உரியதனில் கண்டு உணர்ந்தார் ஒக்கமே—போல,
பெரியதன் ஆவி பெரிது. 1

கல்லாதான் கண்ட கழி நுட்பம் கற்றூர்முன்
சொல்லுங்கால், சோர்வு படுதலால், நல்லாய்!
வினை முந்துறுத உரை இல்லை;—இல்லை,
கனை முந்துறுத வினை. 2

கல்வியான் ஆய கழி நுட்பம், கல்லார் முன்
சொல்லிய நல்லவும், தீய ஆம்,—எல்லாம்
இவர் வரை நாட!—தமரை இல்லார்க்கு
நகரமும் காடு போன்றுங்கு. 3

கேட்பாரை நாடி, கிளக்கப்படும் பொருட்கண்
வேட்கை அறிந்து, உரைப்பார், வித்தகர்;—வேட்கையால்
வண்டு வழிப்படரும் வாள் கண்ணாய்!—தோற்பன
கொண்டு புகாஅர், அவை. 4

புலம் மிக்கவரைப் புலமை தெரிதல்
புலம் மிக்கவர்க்கே புலனாம்;—நலம் மிக்க
பூம் புனல் ஊர!—பொது மக்கட்கு ஆகாதே;
பாம்பு அறியும் பாம்பின கால். 5

ஈனுலகத்துஆயின், இசை பெறூஉம்; அஃது இறந்து,
ஏனுலகத்துஆயின், இனிது, அதூஉம்; தான் ஒருவன்
நாள்வாயும் நல் அறம் செய்வாற்கு இரண்டு உலகும்
வேள் வாய் கவட்டை நெறி. 6

ஆஅம் எனக்கு எளிது' என்று, உலகம் ஆண்டவன்,
மேஎந் துணை அறியான், மிக்கு நீர் பெய்து, இழந்தான்;—
தோஒம் உடைய தொடங்குவார்க்கு இல்லையே,
தாஅம் தர வாரா நோய். 7

எந் நெறியானும் இறைவன் தன் மக்களைச்
செந் நெறிமேல் நிற்பச் செயல் வேண்டும்; அந் நெறி—
மான் சேர்ந்த நோக்கினாய்!—ஆங்க; அணங்கு ஆகும்,
தான் செய்த பாவை தனக்கு. 8

திருந்தாய் நீ, ஆர்வத்தை! தீமை உடையார்,
'வருந்தினார்' என்றே வயப்படுவது உண்டோ?—
அரிந்து அரிகால் பெய்து அமையக் கூட்டியக்கண்ணும்,
பொருந்தா மண், ஆகா, சுவர். 9

பெரிய நட்டார்க்கும் பகைவர்க்கும், சென்று,
திரிவு இன்றித் தீர்ந்தார்போல் சொல்லி, அவருள்
ஒருவரோடு ஒன்றி ஒருப்படாதாரே,
இரு தலைக் கொள்ளி என்பார். 10

மிக்குப் பெருகி, மிகு புனல் பாய்ந்தாலும்,
உப்பு ஒழிதல் செல்லா ஒலி கடல்போல், மிக்க
இன நலம் நன்கு உடைய ஆயினும், என்றும்,
மன நல ஆகாவாம் கீழ். 11

விழும் இழை நல்லார் வெருள் பிணைபோல் நோக்கம்
கெழுமிய நாணை மறைக்கும்; தொழுநையுள்,
மாலையும் மாலுள் மயக்குறுத்தாள்;—அஃதால், அச்
சால்பினைச் சால்பு அறுக்குமாறு. 12

பாப்புக் கொடியாற்குப் பால்மேனியான் போலத்
தாக்கி அமருள் தலைப்பெய்யார், போக்கி,
வழியராய் நட்டார்க்கு மா தவம் செய்வாரே—
கழி விழாத் தோள் ஏற்றுவார். 13

தாம் நட்டு ஒழுகுதற்குத் தக்கார் என வேண்டா;
யார் நட்பது ஆயினும், நட்புக் கொளல் வேண்டும்;—
கான் அட்டு நாறும் கதுப்பினாய்!—தீற்றாதோ,
நாய், நட்டால், நல்ல முயல்? 14

அம் கண் விசும்பின் அகல் நிலாப் பாரிக்கும்
திங்களும், தீங்குறுதல் காண்டுமால்;—பொங்கி,
அறைப் பாய் அருவி அணி மலை நாட!—
உறற்பால யார்க்கும் உறும். 15

நண்பு ஒன்றித் தம்மாலே நாட்டப்பட்டார்களை,
கண் கண்ட குற்றம் உள எனினும், காய்ந்தியார்;—
பண் கொண்ட தீம் சொல் பணைத் தோளாய்!—யார் உளரோ,
தம் கன்று சாக் கறப்பார்? 16

உள்ளது ஒருவர் ஒருவர் கை வைத்தக்கால்,
கொள்ளும் பொழுதே கொடுக்க, தாம் கொள்ளார்;
'நிலைப் பொருள்' என்று அதனை நீட்டித்தல் வேண்டா;—
புலைப் பொருள் தங்கா, வெளி. 17

'தக்காரோடு ஒன்றி, தமராய் ஒழுகினர்;
மிக்காரால்' என்று, சிறியாரைத் தாம் தேறார்;—
கொக்கு ஆர் வள வயல் ஊர!—தினல் ஆமோ,
அக்காரம் சேர்ந்த மணல்? 18

கறுத்து ஆற்றித் தம்மைக் கடிய செய்தாரைப்
பொறுத்து, ஆற்றிச் சேறல் புகழால்; ஒறுத்து ஆற்றின்,—
வான் ஓங்கு உயர் வரை வெற்ப!—பயம் இன்றே;
தான் நோன்றிட வரும், சால்பு. 19

காவலனை ஆக வழிபட்டார், மற்று அவன்
ஏவல் வினை செய்திருந்தார்க்கு உதவு அடுத்தல்—
ஆ அணைய நின்றதன் கன்று, முலை இருப்ப,
தாய் அணல் தான் சுவைத்தற்று. 20

'உரை முடிவு காணான்; இளமையோன்!' என்ற
நரை முது மக்கள் உவப்ப, நரை முடித்து,
சொல்லால் முறை செய்தான், சோழன்;—குல விச்சை
கல்லாமல் பாகம் படும். 21

உரைத்தாரை மீதூரா மீக் கூற்றம்,—பல்லி
நெரித்த சினை போலும் நீள் இரும் புன்னைப்
பொரிப்பூ இதழ் உறைக்கும் பொங்கு நீர்ச் சேர்ப்ப!—
நரிக் கூக் கடற்கு எய்தாவாறு. 22

அருமையுடைய பொருள் உடையார், தங்கண்
கருமம் உடையாரை நாடார்;—எருமைமேல்
நாரை துயில் வதியும் ஊர!—குளம் தொட்டு,
தேரை வழிச் சென்ருர் இல். 23

இசைவ கொடுப்பதூஉம், 'இல்' என்பதூஉம்,
வசை அன்று; வையத்து இயற்கை; அஃது அன்றி,
பசை கொண்டவன் நிற்க, பாத்து உண்ணுன்ஆயின்,
நசை கொன்ருன் செல் உலகம் இல். 24

உரிதினில் தம்மோடு உழந்தமை கண்டு,
பிரிவு இன்றிப் போற்றப் படுவார்; திரிவு இன்றித்
தாம் பெற்றதனுல், உவவார்; பெரிது அகழின்,
பாம்பு காண்பாரும் உடைத்து. 25

விடல் அரிய துப்புடைய வேட்கையை நீக்கி,
படர்வு அரிய நல் நெறிக்கண் நின்ருர், இடர் உடைத்தாய்ப்
பெற்ற விடக்கு நுகர்தல்,—கடல் நீந்தி,
கன்று அடியுள் ஆழ்ந்துவிடல். 26

தேர்ந்து, கண்ணேடாது, தீவினையும் அஞ்சலராய்,
சேர்ந்தாரை எல்லாம் சிறிது உரைத்து, தீர்ந்த
விரகர்கட்கு எல்லாம் வெறுப்பனவே செய்யும்
நரகர்கட்கு இல்லையோ நஞ்சு? 27

தாம் ஆற்றகில்லாதார், தாம் சாரப்பட்டாரைத்
தீ மாற்றத்தாலே பகைப்படுத்திட்டு, ஏமாப்ப
முன் ஒட்டுக்கொண்டு, முரண் அஞ்சிப் போவாரே—
உண் ஒட்டு அகல் உடைப்பார். 28

'முழுதுடன் முன்னே வகுத்தவன்' என்று,
தொழுது இருந்தக்கண்ணே ஒழியுமோ, அல்லல்?—
இழுகினுன் ஆகாப்பது இல்லையே, முன்னம்
எழுதினுன் ஓலை பழுது. 29

நிறையான் மிகுகலா நேரிழையாரைச்
சிறையான் அகப்படுத்தல் ஆகா; அறையோ—
வருந்த வலிதினின் யாப்பினும், நாய் வால்
திருந்துதல் என்றுமோ இல். 30

'எமர் இது செய்க, எமக்கு!' என்று, வேந்தன்
தமரைத் தலைவைத்த காலை, தமர் அவற்கு
வேலின்வாய் ஆயினும், வீழ்வார்; மறுத்து உரைப்பின்,—
'ஆல்' என்னின், 'பூல்' என்னுமாறு. 31

தெருளாது ஒழுகும் திறன் இலாதாரைப்
பொருளால் அறுத்தல் பொருளே; பொருள் கொடுப்ப,
பாணித்து நிற்கிற்பார் யாவர் உளர்?—வேல் குத்திற்கு
ஆணியின் குத்தே வலிது. 32

வெஞ் சின மன்னவன் வேண்டாத செய்யினும்,
நெஞ்சத்துக் கொள்வ சிறிதும் செயல் வேண்டா;—
என் செய்து அகப்பட்டக்கண்ணும், எடுப்புபவோ,
துஞ்சு புலியைத் துயில்? 33

பரந்த திறலாரைப் பாசிமேல் இட்டு,
கரந்து மறைக்கலும் ஆமோ?—நிரந்து எழுந்த
வேயின் திரண்ட தோள், வேற்கண்ணாய்!—விண் இயங்கும்
ஞாயிற்றைக் கைம் மறைப்பார் இல். 34

'தமன்' என்று இரு நாழி ஈத்தவன் அல்லால்,
'நமன்' என்று, காயினும், தான் காயான், மன்னே,
'அவன், இவன்' என்று உரைத்து எள்ளி;—மற்று யாரே,
நம நெய்யை நக்குபவர்? 35

'மிக்கு உடையர் ஆகி, மிக மதிக்கப் பட்டாரை
ஒற்கப்பட முயறும்' என்றல் இழுக்கு ஆகும்;—
நற்கு எளிது ஆகிவிடினும், நளிர் வரைமேல்
கல் கிள்ளி, கை உய்ந்தார் இல். 36

வைத்ததனை வைப்பு என்று உணரற்க! தாம் அதனைத்
துய்த்து, வழங்கி, இரு பாலும் அத் தகத்
தக்குழி நோக்கி, அறம் செய்க!—அஃது அன்றோ,
எய்ப்பினில் வைப்பு என்பது? 37

உற்றான், உறாஅன், எனல் வேண்டா; ஒன் பொருளைக்
கற்றானை நோக்கியே கைவிடுக! கற்றான்
கிழவன் உரை கேட்கும்; கேளான் எனினும்,—
இழவு அன்று, எருது உண்ட உப்பு. 38

நாட்டிக் கொளப்பட்டார் நன்மை இலர்ஆயின்,
'காட்டி, களைதும்' என வேண்டா;—ஒட்டி
இடம்படுத்த கண்ணாய்!—இறக்கும் மை ஆட்டை
உடம்படுத்து வேள்வு உண்டார் இல். 39

பயன் நோக்காது, ஆற்றவும் பாத்து அறிவு ஒன்று இன்றி,
இசை நோக்கி, ஈகின்றார் ஈகை,—வயமாப்போல்
ஆலித்துப் பாயும் அலை கடல் தண் சேர்ப்ப!—
கூலிக்குச் செய்து உண்ணும் ஆறு. 40

வெள்ளம் வருங்காலை ஈர்ப்படுக்கும்; அஃதேபோல்,
கள்ளம் உடையாரைக் கண்டே அறியலாம்;—
ஒள் அமர்க் கண்ணாய்!—ஒளிப்பினும், உள்ளம்
படர்ந்ததே கூறும், முகம். 41

விளிந்தாரே போலப் பிறர் ஆகி நிற்கும்
முளிந்தாரைத் தஞ்சம் மொழியலோ வேண்டா;—
அளிந்தார்கணாயினும், ஆராயான் ஆகித்
தெளிந்தான் விரைந்து கெடும். 42

மறந்தானும், தாம் உடைய தாம் போற்றின் அல்லால்,
சிறந்தார் தமர் என்று, தேற்றார் கை வ்வயார்;—
கறங்கு நீர் கல் அலைக்கும் கானல் அம் சேர்ப்ப!—
இறந்தது பேர்த்து அறிவார் இல். 43

கை ஆர உண்டமையால், காய்வார் பொருட்டாக,
பொய்யாகத் தம்மைப் பொருள் அல்ல கூறுபவேல்,—
மை ஆர உண்ட கண் மாண் இழாய்!—என் பரிப,
செய்யாத எய்தாஎனின்? 44

நோவ உரைத்தாரைத் தாம் பொறுக்கலாற்றாதார்,
நாவின் ஒருவரை வைதால், வயவு உரை,—
பூவின் பொலிந்து அகன்ற கண்ணாய்!—அது அன்றே,
தீ இல்லை ஊட்டும் திறம்? 45

முகம் புறத்துக் கண்டால் பொறுக்கலாதாரை,
'அகம் புகுதும்!' என்று இரக்கும் ஆசை—இருங் கடத்துத்
தக்க நெறியிடைப் பின்னும் செலப் பெறார்
ஒக்கலை வேண்டி அழல். 46

ஆயிரவரானும் அறிவிலார் தொக்கக்கால்,
மா இரு ஞாலத்து மாண்பு ஒருவன் போல்கலார்;—
பாய் இருள் நீக்கும் மதியம்போல், பல் மீனும்,
காய்கலாவாகும் நிலா. 47

நிரை தொடி தாங்கிய நீள் தோள் மாற்கேயும்,
உரை ஒழியாவாகும்; உயர்ந்தோர்கண் குற்றம்,—
மரையா கன்று ஊட்டும் மலை நாட!—மாயா;
நரை ஆன் புறத்து இட்ட சூடு. 48

வீங்கு தோள் செம்பியன் சீற்றம் விறல் விசும்பில்
தூங்கும் எயிலும் தொலைத்தலான், ஆங்கு
முடியும் திறத்தால் முயல்க தாம்!—கூர் அம்பு
அடி இழுப்பின், இல்லை, அரண். 49

கற்றது ஒன்று இன்றிவிடினும், குடிப் பிறந்தார்,
மற்றொன்று அறிவாரின், மாண மிக நல்லரால்;
பொற்ப உரைப்பான் புக வேண்டா;—கொற்சேரித்
துன்னூசி விற்பவர் இல். 50

இயல் பகை வெல்குறுவான், ஏமாப்ப முன்னே
அயல் பகை தூண்டி விடுத்து, ஓர் நயத்தால்
கறு வழங்கி, கைக்கு எளிதாச் செய்க! அதுவே
சிறு குரங்கின் கையால் துழா. 51

பாரதத்துள்ளும், பணையம் தம் தாயமா,
ஈர்-ஐம்பதின்மரும் போர் எதிர்ந்து, ஐவரொடு
ஏதிலர் ஆகி, இடை விண்டார்; ஆதலால்,
காதலரொடு ஆடார் கவறு. 52

அல்லல் ஒருவர்க்கு அடைந்தக்கால், மற்று அவர்க்கு
நல்ல கிளைகள் எனப்படுவார், நல்ல
வினை மரபின், மற்று அதனை நீக்குமதுவே
மனை மரம் ஆய மருந்து. 53

தெள்ளி உணரும் திறன் உடையார் தம் பகைக்கு
உள் வாழ் பகையைப் பெறுதல் உறுதியே;
கள்ளினால் கள் அறுத்தல் காண்டும்; அது அன்றோ,
முள்ளினால் முள் களையும் ஆறு. 54

ஆற்றவும் கற்ருர் அறிவுடையார்; அஃது உடையார்
நால் திசையும் செல்லாத நாடு இல்லை; அந் நாடு
வேற்று நாடு ஆகா; தமவே ஆம்; ஆயினுல்,
ஆற்று உணு வேண்டுவது இல். 55

'எமக்குத் துணையாவார் யாவர்?' என்று எண்ணி,
தமக்குத் துணையாவார்த் தாம் தெரிதல் வேண்டா;
பிறர்க்குப் பிறர் செய்வது ஒன்று உண்டோ? இல்லை;—
தமக்கு மருத்துவர் தாம். 56

'கைவிட்ட ஒண் பொருள் கைவரவு இல்' என்பார்
மெய்ப்பட்ட ஆறே உணர்ந்தாரால், மெய்யா;—
மடம் பட்ட மான் நோக்கின் மா மயில் அன்னுய்!—
கடம் பெற்ருன் பெற்ருன் குடம். 57

நிரந்து வழி வந்த நீசருள் எல்லாம்
பரந்து ஒருவர் நாடுங்கால், பண்புடையார் தோன்ருர்;—
மரம் பயில் சோலை மலை நாட!— என்றும்
குரங்கினுள் நன் முகத்த இல். 58

முட்டு இன்று ஒருவர் உடைய பொழுதின்கண்,
அட்டிற்றுத் தின்பவர் ஆயிரவர் ஆபவே;—
கட்டு அலர் தார் மார்ப!—கலி ஊழிக் காலத்து,
கெட்டார்க்கு நட்டாரோ இல்! 59

ஆற்றும் இளமைக்கண் கல்லாதான் மூப்பின்கண்
போற்றும் எனவும் புணருமே?—ஆற்றச்
சுரம் போக்கி உல்கு கொண்டார் இல்லை; மற்று இல்லை,
மரம் போக்கிக் கூலி கொண்டார். 60

'உணற்கு இனிய இந் நீர் பிறிதுழி இல்' என்னும்
கிணற்று அகத்துத் தேரைபோல் ஆகார், கணக்கினை
முற்றப் பகலும் முனியாது இனிது ஓதிக்
கற்றலின், கேட்டலே நன்று. 61

கழுமலத்து யாத்த களிறும் கருவூர்
விழுமியோன் மேற்சென்றதனுல், விழுமிய
வேண்டினும், வேண்டாவிடினும், உறற்பால
தீண்டா விடுதல் அரிது. 62

எவ்வம் துணையாப் பொருள் முடிக்கும் தாளாண்மை,
தெய்வம் முடிப்புழி, என் செய்யும், மொய் கொண்டு? —
பூப் புக்கு வண்டு ஆர்க்கும் ஊர!—குறும்பு, இயங்கும்
கோப் புக்குழி, செய்வது இல். 63

கல்லாதவரிடைக் கட்டுரையின் மிக்கது ஓர்
பொல்லாதது இல்லை; ஒருவற்கு—நல்லாய்!—
இழுக்கத்தின் மிக்க இழிவு இல்லை; இல்லை,
ஒழுக்கத்தின் மிக்க உயர்வு. 64

வென்று அடுகிற்பாரை வேர்ப்பித்து, அவர் காய்வது
ஒன்றொடு நின்று சிறியார் பல செய்தல்—
குன்றொடு தேன் கலாம் வெற்ப!—அது பெரிதும்
நன்றொடு வந்தது ஒன்று அன்று. 65

முன் இன்னார்ஆயினும், மூடும் இடர் வந்தால்,
பின் இன்னார் ஆகிப் பிரியார், ஒரு குடியார்;
பொன்னாச் செயினும், புகாஅர்—புனல் ஊர!—
துன்னினார் அல்லர், பிறர். 66

சுற்றத்தார், நட்டார், எனச் சென்று, ஒருவரை
அற்றத்தால் தேறார், அறிவுடையார்;—கொற்றப் புள்
ஊர்ந்து, உலகம் தாவிய அண்ணலேஆயினும்,
சீர்ந்தது செய்யாதார் இல். 67

எனைப் பலவே ஆயினும், சேய்த்தாப் பெறலின்,
தினைத் துணையேயானும் அணிக் கொண்டல் நன்றே;—
இனக் கலை தேன் கிழிக்கும் ஏ கல் சூழ் வெற்ப!—
பனைப் பதித்து, உண்ணார் பழம். 68

தம் தம் பொருளும், தமர்தம் வளமையும்,
முந்துற நாடிப் புறந்தரல் ஓம்புக!—
அம் தண் அருவி மலை நாட!—சேண் நோக்கி,
நந்து, நீர் கொண்டதே போன்று! 69

சிறியவர் எய்திய செல்வத்தின், மாண்ட
பெரியவர் நல்குரவு நன்றே, தெரியின்;—
மது மயங்கு பூங் கோதை மாணிழாய்!—மோரின்
முது நெய் தீது ஆகலோ இல். 70

வன் பாட்டவர் பகை கொள்ளினும், மேலாயார்,
புன் பாட்டவர் பகை கோடல் பயம் இன்றே;—
கண் பாட்ட பூங் காவிக் கானல் அம் தண் சேர்ப்ப!—
வெண் பாட்டம் வெள்ளம் தரும். 71

நடலை இலர் ஆகி நன்று உணராராய
முடலை முழுமக்கள் மொய் கொள் அவையுள்,
உடலா ஒருவற்கு உறுதி உரைத்தல்—
கடலுளால் மா வடித்தற்று. 72

'யானும், மற்று இவ் இருந்த எம் முன்னும், ஆயக்கால்,
ஈனம் செயக் கிடந்தது இல்' என்று, கூனல்
படை மாறு கொள்ளப் பகை தூண்டல் அஃதே—
இடை நாய்க்கு எலும்பு இடுமாறு. 73

கண் இல் கயவர் கருத்து உணர்ந்து, கைம்மிக
நண்ணி, அவர்க்கு நலனுடைய செய்பவேல்,—
எண்ணி இடர் வரும் என்னார், புலி முகத்து
உண்ணி பறித்துவிடல். 74

பெரியார்க்குச் செய்யும் சிறப்பினைப் பேணிச்
சிறியார்க்குச் செய்துவிடுதல்,—பொறி வண்டு
பூ மேல் இசை முரலும் ஊர!—அது அன்றோ,
நாய்மேல் தவிசு இடும் ஆறு? 75

செருக் கெழு மன்னர்த் திறல் உடையார் சேர்ந்தால்,
ஒருத்தரை அஞ்சி உலைதலும் உண்டோ?—
உருத்த சுணங்கின் ஒளியிழாய்!—கூரிது,
எருத்து வலியதன் கொம்பு. 76

அன்பின் நெகிழ வழிபட்டுக் கொள்ளாது,
நின்ற பொழுதின் முடிவித்துக் கொள்வதே—
கன்று விட்டு ஆக் கறக்கும் போழ்தில் கறவானாய்,
அம்பு விட்டு ஆக் கறக்குமாறு. 77

இணர் ஓங்கி வந்தாரை, என் உற்றக்கண்ணும்,
உணர்பவர் அஃதே உணர்ப;—உணர்வார்க்கு—
அணி மலை நாட!—அளறு ஆடிக்கண்ணும்,
மணி மணியாகி விடும். 78

கோவாத சொல்லும் குணன் இலா மாக்களை
நாவாய் அடக்கல் அரிது ஆகும்;—நாவாய்
களிகள்போல் தூங்கும் கடல் சேர்ப்ப!—வாங்கி
வளி தோட்கு இடுவாரோ இல். 79

காழ் ஆர மார்ப! கசடு அறக் கை காவாக்
கீழாயோர் செய்த பிழைப்பினை, மேலாயோர்
உள்ளத்துக் கொண்டு நேர்ந்து ஊக்கல், குறு நரிக்கு
நல்ல நாராயம் கொளல். 80

நாடி, 'நமர்' என்று, நன்கு புறந்தந்தாரைக்
கேடு பிறரொடு சூழ்தல்,—கிளர் மணி
நீடு அகல் வெற்ப!—நினைப்பு இன்றி, தாம் இருந்த
கோடு குறைத்துவிடல். 81

பொற்பவும் பொல்லாதனவும், புணர்ந்திருந்தார்
சொல் பெய்து உணர்த்துதல் வேண்டுமோ?—விற் கீழ்
அரி தாய்ப் பரந்து அகன்ற கண்ணாய்!—அறியும்,
பெரிது ஆள்பவனே பெரிது. 82

உற்றதற்கு எல்லாம் உரம் செய்ய வேண்டுமோ?
கற்று அறிந்தார்தம்மை வெகுளாமைக் காப்பு அமையும்;
நெல் செய்யப் புல் தேய்ந்தாற்போல, நெடும் பகை,
தற் செய்ய, தானே கெடும். 83

'இது மன்னும் தீது' என்று இயைந்ததூஉம், ஆவார்க்கு
அது மன்னும் நல்லதே ஆகும்;—மது நெய்தல்
வீ நாறு கானல் விரி திரைத் தண் சேர்ப்ப!—
தீ நாள் திரு உடையார்க்கு இல். 84

ஒட்டிய காதல் உமையாள் ஒரு பாலா,
கட்டங்க வெல் கொடி கொண்டானும், கொண்டானே;—
விட்டு ஆங்கு அகலா முழு மெய்யும் கொள்பவே,
நட்டாரை ஒட்டியுழி. 85

உழை இருந்து, நுண்ணிய கூறி, கருமம்,
புரை இருந்தவாறு அறியான், புக்கான் விளிதல்—
நிரை இருந்து மாண்ட அரங்கினுள், வட்டு,
கரை இருந்தார்க்கு எளிய, போர். 86

கள்ளி அகிலும், கருங் காக்கைச் சொல்லும்போல்,
எள்ளற்க, யார் வாயும் நல் உரை!—தெள்விதின்
ஆர்க்கும் அருவி மலை நாட!—நாய் கொண்டால்,
பார்ப்பாரும் தின்பர், உடும்பு. 87

தெற்றப் பரிந்து ஒருவர் தீர்ப்பர் எனப்பட்டார்க்கு
உற்ற குறையை உரைப்ப, தாம்;—தெற்ற
அறை ஆர் அணி வளையாய்!—தீர்தல் உறுவார்
மறையார், மருத்துவர்க்கு நோய். 88

கண்ணின் மணியேபோல் காதலால் நட்டாரும்,
உண்ணும் துணையும் உளரா, பிறர் ஆவர்;—
எண்ணி உயிர் கொள்வான் ஏன்று திரியினும்,
உண்ணும் துணைக் காக்கும், கூற்று. 89

செந்நீரார் போன்று சிதைய மிதிப்பார்க்கும்,
பொய்ந்நீரார் போன்று பொருளை முடிப்பார்க்கும்,
அந் நீர் அவரவர்க்குத் தக்காங்கு ஒழுகுபவே—
வெந் நீரில் தண்ணீர் தெளித்து. 90

பெரு மலை நாட!—பிறர் அறியலாகா
அரு மறையை ஆன்றோரே காப்பர்; அரு மறையை
நெஞ்சில் சிறியார்க்கு உரைத்தல், பனையின்மேல்
பஞ்சி வைத்து எஃகிவிட்டற்று. 91

பொலந் தார் இராமன் துணையாகப் போதந்து,
இலங்கைக் கிழவற்கு இளையான், இலங்கைக்கே
பேர்ந்து இறை ஆயதூஉம் பெற்றான்;—பெரியாரைச்
சார்ந்து கெழீஇயிலார் இல். 92

சால மறைத்து ஓம்பிச் சான்றவர் கைகரப்ப,
காலை கழிந்ததன் பின்றையும், மேலைக்
கறவைக் கன்று ஊர்ந்தானைத் தந்தையும் ஊர்ந்தான்;—
முறைமைக்கு மூப்பு இளமை இல். 93

நற்பால கற்றாரும் நாடாது சொல்லுவரால்;
இற்பாலர் அல்லார் இயல்பு இன்மை நோவது என்?—
கற்பால் இலங்கு அருவி நாட!—மற்று யாரானும்
சொல் சோர்விலாதாரோ இல். 94

தத்தமக்குக் கொண்ட குறியோ தவம் அல்ல;
செத்துக! சாந்து படுக்க! மனம் ஒத்துச்
சமத்தனாய் நின்று ஒழுகும் சால்பு தவமே—
நுகத்துப் பகல் ஆணி போன்று. 95

மாடம் இடிந்தக்கால், மற்றும் எடுப்பது ஓர்
கூடகாரத்திற்குத் துப்பு ஆகும்; அஃதேபோல்,
பீடு இலாக்கண்ணும், பெரியார் பெருந் தகையர்;—
ஈடு இல்லதற்கு இல்லை, பாடு. 96

தழங்குரல் வானத்துத் தண் பெயல் பெற்றால்,
கிழங்குடைய எல்லாம் முளைக்கும், ஓர் ஆற்றான்;
விழைந்தவரை வேறன்றிக் கொண்டு ஒழுகல் வேண்டா;—
பழம் பகை நட்பு ஆதல் இல். 97

வெள்ளம் பகை வரினும், வேறு இடத்தார் செய்வது என்?
கள்ளம் உடைத்தாகிச் சார்ந்த கழி நட்பு—
புள் ஒலிப் பொய்கைப் புனல் ஊர!—அஃது அன்றோ,
உள் இல்லத்து உண்ட தவிசு. 98

அடங்கி, அகப்பட ஐந்தினையும் காத்து.
தொடங்கிய மூன்றினால் மாண்டு, ஈண்டு உடம்பு ஒழிய,
செல்லும் வாய்க்கு ஏமம் சிறுகாலைச் செய்தாரே—
கொல்லிமேல் கொட்டு வைத்தார். 99

நல்கூர்ந்தவர்க்கு, நவி பெரியர் ஆயினார்,
செல் விருந்து ஆகிச் செலல் வேண்டா; ஒல்வது
இறந்து அவர் செய்யும் வருத்தம்—குருவி
குறங்கு அறுப்பச் சோரும் குடர். 100

பரியப் படுமவர் பண்பு இலரேனும்,
திரியப் பெறுபவோ சான்றோர்?—விரி திரைப்
பார் எறியும் முந்நீர்த் துறைவ!—கடன் அன்றோ,
ஊர் அறிய நட்டார்க்கு உணா? 101

'எனக்குத் தகவு அன்றால்' என்பதே நோக்கி,
தனக்குக் கரி ஆவான் தானாய், தவற்றை
நினைத்து, தன் கை குறைத்தான் தென்னவனும்;—காணார்
எனச் செய்யார், மாணா வினை. 102

நிரம்பி நிரையத்தைக் கண்டு, அந் நிரையம்
வரம்பு இல் பெரியானும் புக்கான்; இரங்கார்,—
கொடி ஆர மார்ப!—குடி கெட வந்தால்,
அடி கெட மன்றிவிடல். 103

நல்லவும் தீயவும் நாடி, பிறர் உரைக்கும்
நல்ல பிறவும் உணர்வாரை, கட்டுரையின்
வல்லிதின் நாடி, வலிப்பதே—புல்லத்தைப்
புல்லம் புறம் புல்லுமாறு. 104

சுடப்பட்டு உயிர் உய்ந்த சோழன் மகனும்,
பிடர்த்தலைப் பேரானைப் பெற்று, கடைக்கால்,
செயிர் அறு செங்கோல் செலீஇயினன்;—இல்லை,
உயிர் உடையார் எய்தா வினை. 105

வாள் திறலானை வளைத்தார்கள், அஞ் ஞான்று,
வீட்டிய சென்றார், விளங்கு ஒளி காட்ட,
பொரு அறு தன்மை கண்டு, அஃது ஒழிந்தார்;—அஃதால்,
உருவு திரு ஊட்டுமாறு. 106

பெற்றாலும் செல்வம், பிறர்க்கு ஈயார், தாம் துவ்வார்,
கற்றாரும் பற்றி இறுகுபவால்;—கற்றா
வரம்பிடைப் பூ மேயும் வண் புனல் ஊர!—
மரம் குறைப்ப மண்ணா, மயிர். 107

உள்ளூரவரால் உணர்ந்தார் முதல் எனினும்,
எள்ளாமை வேண்டும்;—இலங்கிழாய்!—தள்ளாது
அழுங்கல் முது பதி அங்காடி மேயும்
பழங் கன்று ஏறு ஆதலும் உண்டு. 108

மெய்யா உணரின், பிறர் பிறர்க்குச் செய்வது என்?—
பை ஆர் அகல் அல்குல் பைந்தொடி!—எக்காலும்
செய்யார் எனினும், தமர் செய்வர்; பெய்யுமாம்,
பெய்யாது எனினும், மழை. 109

கூற்றம் உயிர் கொள்ளும் போழ்து, குறிப்பு அறிந்து
மாற்றம் உடையாரை ஆராயாது; ஆற்றவும்,—
முல்லை புரையும் முறுவலாய்!—செய்வது என்,
வல்லை, அரசு ஆட்கொளின்? 110

நன்றே, ஒருவன்-துணைக்கோடல்; பாப்பு இடுக்கண்
ஞெண்டேயும் பார்ப்பான்கண் தீர்த்தலான்,—விண் தோயும்
குன்றக நல் நாட!—கூறுங்கால், இல்லையே,
ஒன்றுக்கு உதவாத ஒன்று. 111

ஆண்டு ஈண்டு என ஒன்றோ வேண்டா; அடைந்தாரை
மாண்டிலர் என்றே மறுப்பக் கிடந்ததோ?—
பூண் தாங்கு இள முலைப் பொற்றொடீஇ!—பூண்ட
பறை அறையாப் போயினர் இல். 112

'இடையீடு உடையார் இவர் அவரோடு' என்று,
தலையாயார் ஆய்தந்தும் காணார்; கடையாயார்
முன் நின்று கூறும் குறளை தெரிதலால்,—
பின் இன்னா, பேதையார் நட்பு. 113

தெற்ற ஒருவரைத் தீது உரை கண்டக்கால்,
இற்றே அவரைத் தெளியற்க; மற்றவர்
யாவரே வேண்டினும், நன்கு ஒழுகார்;—கைக்குமே,
தேவரே தின்னினும் வேம்பு. 114

அகலம் உடைய அறிவுடையார் நாப்பண்,
புகல் அரியார் புக்கு, அவர் தாமே இகலினால்
வீண் சேர்ந்த புன் சொல் விளம்பல்—அது அன்றோ,
பாண் சேரிப் பல் கிழிக்குமாறு. 115

'அமர் விலங்கி, ஆற்ற அறியவும்பட்டார்
எமர், மேலை இன்னரால்; யார்க்கு உரைத்தும்' என்று,
தமர் மறையாக் கூழ் உண்டு சேறல்அதுவே—
மகன் மறையாத் தாய் வாழுமாறு. 116

தாயானும், தந்தையாலானும், மிகவு இன்றி,
வாயின் மீக்கூறுமவர்களை ஏத்துதல்—
நோய் இன்று எனினும், அடுப்பின் கடை முடங்கும்
நாயைப் புலியாம் எனல். 117

கட்டு உடைத்தாகக் கருமம் செய வைப்பின்,
பட்டு உண்டு ஆங்கு ஓடும் பரியாரை வையற்க!—
தொட்டாரை ஒட்டாப் பொருள் இல்லை; இல்லையே,
அட்டாரை ஒட்டாக் கலம். 118

ஒற்கம் தாம் உற்ற இடத்தும், உயர்ந்தவர்
நிற்பவே, நின்ற நிலையின்மேல்;—வற்பத்தால்
தன்மேல் நலியும் பசி பெரிதுஆயினும்,
புல் மேயாது ஆகும், புலி. 119

பல் நாளும் நின்ற இடத்தும், கணி வேங்கை
நல் நாளே நாடி மலர்தலால்,—மன்னர்
உவப்ப வழிபட்டு ஒழுகினும், செல்வம்
தொகற்பால போழ்தே தொகும். 120

காடு உறை வாழ்க்கைக் கடு வினை மாக்களை
நாடு உறைய நல்கினும், நன்கு ஒழுகார்;—நாள்தோறும்
கையுளதாகிவிடினும், குறும்பூழ்க்குச்
செய் உளது ஆகும், மனம். 121

விலங்கேயும் தம்மோடு உடன் உறைதல் மேவும்;
கலந்தாரைக் கைவிடுதல் ஒல்லா;—இலங்கு அருவி
தாஅய் இழியும் மலை நாட!—இன்னாதே,
பேஎயொடானும் பிரிவு. 122

கருவினுள் கொண்டு கலந்தாரும், தம்முள்
ஒருவழி நீடி உறைதலோ, துன்பம்;—
பொரு கடல் தண் சேர்ப்ப!—பூந் தாமரைமேல்
திருவொடும் இன்னாது, துச்சு. 123

தம் குற்றம் நீக்கலர் ஆகி, பிறர் குற்றம்
எங்கெங்கும் நீக்கற்கு இடை புகுதல்—எங்கும்
வியன் உலகில் வெள்ளாடு தன் வளி தீராது,
அயல் வளி தீர்த்துவிடல். 124

உரை சான்ற சான்றோர் ஒடுங்கி உறைய,
நிரை உள்ளர் அல்லார் நிமிர்ந்து பெருகல்,—
வரை தாழ் இலங்கு அருவி வெற்ப!—அதுவே,
சுரை ஆழ, அம்மி மிதப்பு. 125

ஆற்றப் பெரியார் பகை வேண்டிக் கொள்ளற்க!
போற்றாது கொண்டு அரக்கன் பொருள் அகப்பட்டானல்;—
நோற்ற பெருமை உடையாரும், கூற்றம்
புறம் கொம்மை கொட்டினர் இல். 126

ஆகும் சமயத்தார்க்கு ஆள்வினையும் வேண்டாவாம்;
போகும் பொறியார் புரிவும் பயம் இன்றே;—
ஏ கல் மலை நாட!—என் செய்து, ஆங்கு என் பெறினும்,
ஆகாதார்க்கு ஆகுவது இல். 127

காட்டிக் கருமம் கயவர்மேல் வைத்து, 'அவர்
ஆக்குவர் ஆற்ற எமக்கு!' என்று அமர்ந்து இருத்தல்,—
மாப் புரை நோக்கின் மயில் அன்னாய்!—பூசையைக்
காப்பிடுதல், புன் மீன் தலை. 128

தொன்மையின் மாண்ட துணிவு ஒன்றும் இல்லாதார்
நன்மையின் மாண்ட பொருள் பெறுதல்,—இன் ஒலி நீர்
கல் மேல் இலங்கு மலை நாட!—மாக் காய்த்துத்
தன்மேல் குணில் கொள்ளுமாறு. 129

நெடியது காண்கலாய்; நீ அளியை;—நெஞ்சே!—
கொடியது கூறினாய் மன்ற;—அடியுளே,
முற்பகல் கண்டான் பிறன் கேடு, தன் கேடு
பிற்பகல் கண்டுவிடும். 130

செம்மாந்து செல்லும் செறுநரை அட்டவர்,
தம்மேல் புகழ் பிறர் பாராட்ட, தம்மேல் தாம்
வீரம் சொல்லாமையே வீழ்க!—களிப்பினும்
சோரப் பொதியாதவாறு. 131

செய்த கருமம் சிறிதானும் கைகூடா;
மெய்யா உணரவும் தாம் படார்; எய்த
நலத் தகத் தம்மைப் புகழ்தல்—'புலத்தகத்துப்
புள் அரைக்கால் விற்பேம்' எனல். 132

'பண்டு இன்னர்' என்று தமரையும், தம்மையும்,
கொண்ட வகையால் குறை தீர நோக்கியக்கால்,
விண்டவரோடு ஒன்றிப் புறன் உரைப்பின்,—அஃது அன்றோ,
உண்ட இல் தீ இடுமாறு. 133

பல நாளும் ஆற்றார்எனினும், அறத்தைச்
சில நாள் சிறந்தவற்றால் செய்க!—முலை நெருங்கி
நைவது போலும் நுசுப்பினாய்!—நல்லறம்
செய்வது செய்யாது, கேள். 134

தெரியாதவர் தம் திறன் இல் சொல் கேட்டால்,
பரியாதார் போல இருக்க! பரிவு இல்லா
வம்பலர் வாயை அவிப்பான் புகுவாரே—
அம்பலம் தாழ்க் கூட்டுவார். 135

அரு விலை மாண் கலனும், ஆன்ற பொருளும்,
திரு உடையராயின், திரிந்தும் வருமால்;—
பெரு வரை நாட!—பிரிவு இன்று, அதனால்;
திருவினும் திட்பமே நன்று. 136

தோற்றம் அரிது ஆய மக்கட் பிறப்பினால்,
ஆற்றும் துணையும் அறம் செய்க!—மாற்று இன்றி,
அஞ்சும் பிணி, மூப்பு, அருங் கூற்றுடன் இயைந்து,
துஞ்ச வருமே, துயக்கு! 137

கற்றானும், கற்றார் வாய்க் கேட்டானும், அல்லாதான்
தெற்ற உணரான், பொருள்களை; எற்றே,
அறிவு இலான் மெய்த் தலைப்பாடு? பிறிது இல்லை;—
நாவற்கீழ்ப் பெற்ற கனி. 138

பெரியாரைச் சார்ந்தார்மேல், பேதைமை கந்தா,
சிறியார் முரண் கொண்டு ஒழுகல்,—வெறி ஒலிக்கு
ஓநாய் இனம் வெரூஉம் வெற்ப!—புலம் புகின்,
தீ நாய் எடுப்புமாம் எண்கு. 139

மரம்போல் வலிய மனத்தாரை முன் நின்று
இரந்தார் பெறுவது ஒன்று இல்லை;—குரங்கு ஊசல்
வள்ளியின் ஆடும் மலை நாட!—அஃது அன்றோ,
பள்ளியுள் ஐயம் புகல். 140

அற்றாக நோக்கி அறத்திற்கு அருள் உடைமை
முற்ற அறிந்தார் முதல் அறிந்தார்; தெற்ற
முதல் விட்டு அஃது ஒழிந்தார் ஓம்பா ஒழுக்கம்—
முயல் விட்டுக் காக்கை தினல். 141

நாணார், பரியார், நயன் இல செய்து ஒழுகும்
பேணா அறிவு இலா மாக்களைப் பேணி,
ஒழுக்கி, அவரோடு உடனுறைசெய்தல்—
புழுப் பெய்து புண் பொதியுமாறு. 142

பரந்தவர் கொள்கைமேல், பல் ஆறும் ஓடார்,
நிரம்பிய காட்சி நினைந்து அறிந்து கொள்க!
வரம்பு இல் பெருமை தருமே;—பிரம்பூரி
என்றும் பதக்கு ஏழ் வரும். 143

தமர் அல்லவரைத் தலையளித்தக்கண்ணும்,
அமராக் குறிப்பு அவர்க்கு ஆகாதே தோன்றும்;—
சுவர் நிலம் செய்து அமைத்துக் கூட்டியக்கண்ணும்,
உவர் நிலம் உட்கொதிக்குமாறு. 144

ஒல்லாது ஒன்று இன்றி, உடையார் கருமங்கள்
நல்லவாய் நாடி நடக்குமாம்; இல்லார்க்கு
இடரா இயலும்;—இலங்கு நீர்ச் சேர்ப்ப!—
கடலுள்ளும் காண்பவே, நன்கு. 145

கடுப்பத் தலைக் கீறி, காலும் இழந்து,
நடைத் தாரா என்பதூஉம் பட்டு, முடத்தொடு
பேர் பிறிதாகப் பெறுதலால், போகாரே—
நீர் குறிதாகப் புகல். 146

பொருள் அல்லார் கூறிய பொய்க் குறளை வேந்தன்
தெருளும் திறம் தெரிதல் அல்லால், வெருள எழுந்து,
ஆடுபவரோடே ஆடார், உணர்வு உடையார்—
ஆடு மணைப் பொய்க் காலே போன்று. 147

'முன் நலிந்து, ஆற்ற முரண் கொண்டு எழுந்தாரைப்
பின் நலிதும்' என்று உரைத்தல் பேதைமையே; பின் நின்று,—
காம்பு அன்ன தோளி!—கலங்கக் கடித்து ஓடும்
பாம்பு பல் கொள்வாரோ இல். 148

நெறியால் உணராது, நீர்மையும் இன்றி,
சிறியார், 'எளியரால்!' என்று, பெரியாரைத்
தங்கள் நேர் வைத்து, தகவு அல்ல கூறுதல்—
திங்களை நாய் குரைத்தற்று. 149

ஆற்றும் தகைய அரசு அடைந்தார்க்கு ஆயினும்,
வீற்று வழி அல்லால், வேண்டினும், கைகூடா;
தேற்றார் சிறியர் எனல் வேண்டா;—நோற்றார்க்குச்
சோற்றுள்ளும் வீழும் கறி. 150

வழங்கலும் துய்த்தலும் தேற்றுதான் பெற்ற
முழங்கு முரசுடைச் செல்வம்,—தழங்கு அருவி
வேய் முற்றி முத்து உதிரும் வெற்ப!—அது அன்றே,
நாய் பெற்ற தெங்கம்பழம். 151

ஆவிற்கு அரும் பனி தாங்கிய மாலையும்,
'கோவிற்குக் கோவலன்' என்று, உலகம் கூறுமால்;
தேவர்க்கு, மக்கட்கு, என வேண்டா;—தீங்கு உரைக்கும்
நாவிற்கு நல்குரவு இல். 152

பூந் தண் புனல் புகார்ப் பூமி குறி காண்டற்கு
வேந்தன் வினுயினன், மாந்தரை; சான்றவன்,
கொண்டதனை நாணி, மறைத்தவால்,—தன் கண்ணின்
கண்டதூஉம் எண்ணிச் சொலல்! 153

இஞ்சி அடைத்துவைத்து, ஏமாந்து இருப்பினும்,
அஞ்சி அகப்படுவர், ஆற்றுதார்;—அஞ்சி
இருள் புக்கு இருப்பினும், மெய்யே வெரூஉம், புள்
இருளின் இருந்தும் வெளி. 154

ஆற்ற வினை செய்தார் நிற்ப, பல உரைத்து,
ஆற்றுதார் வேந்தனை நோவது—சேற்றுள்
வழாஅமைக் காத்து ஓம்பி வாங்கும் எருத்தும்
எழாஅமைச் சாகாடு எழவ். 155

தன் நவிகிற்பான் தலை வரின், தான் அவற்குப்
பின், நவிவானைப் பெறல் வேண்டும்—என்னதூஉம்
வாய் முன்னது ஆக வலிப்பினும் போகாதே,
நாய் பின்னதாகத் தகர். 156

வலியாரைக் கண்டக்கால் வாய் வாளார் ஆகி,
மெலியாரை மீதூரும் மேன்மை உடைமை,—
புலி கலாம் கொள் யானைப் பூங் குன்ற நாட!—
வலி அலாம் தாக்கு வலிது. 157

'மறுமை ஒன்று உண்டோ? மனப் பட்ட எல்லாம்
பெறுமாறு செய்ம்மின்' என்பாரே—நறு நெய்யுள்
கட்டி அடையைக் கனிவித்து, கண் செரீஇ,
இட்டிகை தீற்றுபவர். 158

அறம் செய்பவற்கும், அறவுழி நோக்கி,
திறம் தெரிந்து செய்தக்கால், செல்வுழி நன்று ஆம்;—
புறம் செய்ய, செல்வம் பெருகும்; அறம் செய்ய,
அல்லவை நீங்கிவிடும். 159

வருவாய் சிறிதுஎனினும், வைகலும் ஈண்டின்,
பெரு வாய்த்தா நிற்கும், பெரிதும்;—ஒருவாறு
ஒளி ஈண்டி நின்ருல், உலகம் விளக்கும்;
துளி ஈண்டில், வெள்ளம் தரும். 160

'இனி, யாரும் இல்லாதார் எம்மின் பிறர் யார்?
தனியேம் யாம்!' என்று ஒருவர் தாம் மடியல் வேண்டா;
முனிவு இலராகி முயல்க!—முனியாதார்
முன்னியது எய்தாமை இல். 161

கூஉய்க் கொடுப்பது ஒன்று இல் எனினும், சார்ந்தார்க்குத்
தூஉய்ப் பயின்ருரே துன்பம் துடைக்கிற்பார்;—
வாய்ப்பத் தான் மாழ்கியக்கண்ணும், பெருங் குதிரை,
யாப்புள், வேறு ஆகிவிடும். 162

தோற்றம் பெரிய நசையினுர், அந் நசை
ஆற்ருதவரை அடைந்து ஒழுகல்,—ஆற்றின்
கயல் புரை உண் கண் கனங்குழாய்!—அஃதால்,
உயவுநெய்யுள் குளிக்குமாறு. 163

செறலின் கொலே புரிந்து, சேண் உவப்பர் ஆகி,
அறிவின் அருள் புரிந்து செல்லார், பிறிதின்
உயிர் செகுத்து, ஊன் துய்த்து, ஒழுகுதல்—ஓம்பார்,
தயிர் சிதைத்து, மற்ருென்று அடல். 164

மறு மனத்தான் அல்லாத மா நலத்த வேந்தன்
உறு மனத்தான் ஆகி ஒழுகின்,—தெறு மனத்தார்
பாயிரம் கூறிப் படை தொக்கால் என் செய்ப?—
ஆயிரம் காக்கைக்கு ஓர் கல். 165

'தோற்றத்தால் பொல்லார்; துணே இலார்; நல்கூர்ந்தார்;
மாற்றத்தால் செற்ருர்' என, வலியார் ஆட்டியக்கால்,—
ஆற்ருது அவர் அழுத கண்ணீரவை அவர்க்குக்
கூற்றமாய் வீழ்ந்து விடும். 166

உடுக்கை, மருந்து, உறையுள், உண்டியோடு, இன்ன
கொடுத்து, குறை தீர்த்தல் ஆற்றி விடுத்து, இன்சொல்
ஈயாமை என்ப—எருமை எறிந்து, ஒருவர்
காயக்கு உலோபிக்குமாறு. 167

ஓர்த்த கருத்தும் உலகும் உணராத
மூர்க்கற்கு உறுதி மொழியற்க! மூர்க்கன் தான்
கொண்டதே கொண்டு, விடான் ஆகும்;—ஆகாதே,
உண்டது நீலம் பிறிது. 168

கரப்புடையார் வைத்த, கடையும் உதவா,
துரப்புடைய மன்னர்க்கே துப்புரவு; அது அல்லால்,
நிரப்பு இடும்பை மிக்கார்க்கு உதவ ஒன்று ஈதல்—
சுரத்திடைத் தீரப் பெயல். 169

உரிஞ்சி நடப்பாரை, உள் அடி நோவ,
நெருஞ்சியும் செய்வது ஒன்று இல்லை;—செருந்தி
இருங் கழித் தாழும் எறி கடல் தண் சேர்ப்ப!—
பெரும் பழியும் பேணுதார்க்கு இல். 170

மாரி ஒன்று இன்றி வறந்திருந்த காலத்தும்,
பாரி மட மகள், பாண் மகற்கு, நீர் உலையுள்
பொன், திறந்து, கொண்டு, புகாவாக நல்கினுள்;—
ஒன்று உறு முன்றிலோ இல். 171

உறு மகன் ஆக ஒருவனை நாட்டி,
பெறு மாற்றம் இன்றி, பெயர்த்தே ஒழிதல்
சிறுமைக்கு அமைந்தது ஓர் செய்கை;—அதுவே,
குறுமக்கள் காவு நடல். 172

அல்லது செய்வார் அரும் பொருள் ஆக்கத்தை
நல்லது செய்வார் நயப்பவோ?—ஒல் ஒலி நீர்
பாய்வதே போலும் துறைவ! கேள்:—தீயன
ஆவதே போன்று கெடும். 173

'யாம் தீய செய்த மலை மலைறத்தது' என்று எண்ணி,
தாம் தீயார் தம் தீமை தேற்றுரால்;—ஆம்பல்
மண இல் கமழும் மலி திரைச் சேர்ப்ப!—
கணையிலும் கூரியவாம் கண். 174

வேளாண்மை செய்து, விருந்து ஓம்பி, வெஞ் சமத்து
வாள் ஆண்மையானும் வலியராய், தாளாண்மை
தாழ்க்கும் மடி கோள் இலராய்,—வருந்தாதார்
வாழ்க்கை திருந்துதல் இன்று. 175

'உரைத்தவர் நாவோ பருந்து எறியாது' என்று,
சிலைத்து எழுந்து, செம்மாப்பவரே—மலைத்தால்,
இழைத்தது இகவாதவரைக் கனற்றி,
பலிப் புறத்து உண்பர் உணு. 176

களமர் பலரானும் கள்ளம் படினும்,
வளம் மிக்கார் செல்வம் வருந்தா;—விளை நெல்
அரிநர் அணை திறக்கும் ஊர!—அறுமோ,
நரி நக்கிற்று என்று கடல்? 177

ஆண்தகை மன்னரைச் சேர்ந்தார் தாம் அலவுறினும்,
ஆண்டு ஒன்று வேண்டுதும் என்பது உரையற்க!—
பூண் தகு மார்ப!—பொருள் தக்கார் வேண்டாமை
வேண்டியது எல்லாம் தரும். 178

யாவரேயானும், இழந்த பொருள் உடையார்,
தேவரேஆயினும், தீங்கு ஓர்ப்பர்;—பாவை
படத் தோன்றும் நல்லாய்!—நெடு வேல் கெடுத்தான்
குடத்துள்ளும் நாடிவிடும். 179

வெள்ள மாண்பு எல்லாம் உடைய தமர் இருப்ப,
உள்ள மாண்பு இல்லா ஒருவரைத் தெள்ளி,
மறைக்கண் பிரித்து, அவரை மாற்றூது ஒழிதல்—
பறைக்கண் கடிப்பு இடுமாறு. 180

வெற்றி வேல் வேந்தன் வியங்கொண்டால், 'யாம் ஒன்றும்
பெற்றிலேம்' என்பது பேதைமையே; மற்று அதனை
ஐயம் இலர் ஆகிச் செய்க!—அது அன்றோ,
'செய்க!' என்றான், 'உண்க!' என்னுமாறு. 181

கொழித்துக் கொளப்பட்ட நண்பினவரைப்
பழித்துப் பலர் நடுவண் சொல்லாடார்: என்கொல்?—
விழித்து அலரும் நெய்தல் துறைவ!—உரையார்,
இழித்தக்க காணின், கனு. 182

வளமையும், தேசும், வலியும், வனப்பும்,
இளமையும், இற்பிறப்பும், எல்லாம் உளவா,
மதித்து அஞ்சி மாறும் அஃது இன்மையால்,—கூற்றம்
குதித்து உய்ந்து அறிவாரோ இல். 183

பொல்லாத சொல்லி, மறைந்து ஒழுகும் பேதை, தன்
சொல்லாலே தன்னைத் துயர்ப்படுக்கும்;—நல்லாய்!—
மணலுள் முழுகி மறைந்து கிடக்கும்
நுணலும் தன் வாயால் கெடும். 184

அகத்தால் அழிவு பெரிது ஆயக்கண்ணும்,
புறத்தால் பொலிவுறல் வேண்டும்;—எனைத்தும்
படுக்கை இலராயக்கண்ணும், உடுத்தாரை
உண்டி வினவுவார் இல். 185

கற்றது ஒன்று இன்றிவிடினும், கருமத்தை
அற்றம் முடிப்பான் அறிவுடையான்; உற்று இயம்பும்;—
நீத்த நீர்ச் சேர்ப்ப!—இளையானே ஆயினும்,
மூத்தானே, ஆடு மகன். 186

செருக்குடை மன்னர் இடைப் புக்கு, அவருள்
ஒருத்தற்கு உதவாத சொல்லின், தனக்குத்
திருத்தலும் ஆகாது, தீது ஆம்;—அதுவே
எருத்திடை வைக்கோல் தினல். 187

இம்மைப் பழியும், மறுமைக்குப் பாவமும்,
தம்மைப் பிரியார் தமர்போல் அடைந்தாரின்,
செம்மைப் பகைகொண்டு சேராதார் தீயரோ?—
மைம்மைப்பின் நன்று, குருடு. 188

எய்தா நகைச் சொல் எடுத்து உரைக்கப்பட்டவர்
வைதாராக் கொண்டு விடுவர்மன்; அஃதால்—
புனல் பொய்கை ஊர!—விளக்கு எலி கொண்டு
தனக்கு நோய் செய்துவிடல். 189

தூய்மை மனத்தவர், தோழர் மனையகத்தும்,
தாமே தமியர் புகல் வேண்டா; தீமையான்
ஊர் மிகின், இல்லை, கரியே;—ஒலித்து உடன்
நீர் மிகின், இல்லை, சிறை. 190

'பண்டு உருத்துச் செய்த பழ வினை வந்து, எம்மை
இன்று ஒறுக்கின்றது' என நினையார், துன்புறுக்கும்
மேவலரை நோவது என்?—மின் நேர் மருங்குலாய்!—
ஏவலாள் ஊரும் சுடும். **191**

கற்று ஆற்றுவாரைக் கறுப்பித்து, கல்லாதார்
சொல் தாற்றுக் கொண்டு சுனைத்து எழுதல் எற்று எனின்,—
தானும் நடவான் முடவன், பிடிப்பூணி,
யானையொடு ஆடல் உறவு. **192**

தீப் பால் வினையினைத் தீரவும் அஞ்சாராய்க்
காப்பாரே போன்று உரைத்த பொய், குறளை, ஏய்ப்பார், முன்
சொல்லொடு ஒருப்படார், சோர்வு இன்றி மாறுபவே—
வில்லொடு காக்கையே போன்று. **193**

நெடுங் காலம் வந்தார் நெறி இன்மை கண்டு,
நடுங்கிப் பெரிதும் நலிவார், பெரியர்;—
அடும்பு ஆர் அணி கானல் சேர்ப்ப!—கெடுமே,
கொடும்பாடு உடையான் குடி. **194**

நீர்த்து அன்று ஒருவர் நெறி அன்றிக் கொண்டக்கால்,
பேர்த்துத் தெருட்டல் பெரியார்க்கும் ஆகாதே;—
கூர்த்த நுண் கேள்வி அறிவுடையார்க்குஆயினும்,
ஓர்த்தது இசைக்கும், பறை. **195**

புரை இன்றி நட்டார்க்கு நட்டார் உரைத்த
உரையும் பொருள் முடிவும் ஒன்றால்; உரை பிறிது
கொண்டு எடுத்துக் கூறல்,—கொடுங் கழித் தண் சேர்ப்ப!—
ஒன்று எற்றி வெண்படைக்கோள் ஒன்று. **196**

பட்ட வகையால் பலரும் வருந்தாமல்
கட்டு உடைத்தாகக் கருதிய நல்லறம்,
மூட்டு உடைத்தாகி, இடை வீழ்ந்து ஒழிதலின்,—
நட்டு அறன் ஆதலே நன்று. **197**

'இறப்ப எமக்கு ஈது இளிவரவு!' என்னார்,
பிறப்பின் சிறியாரைச் சென்று, பிறப்பினால்
சாலவும் மிக்கவர் சார்ந்து அடைந்து வாழ்பவே—
தால அடைக்கலமே போன்று. **198**

தக்கம் இல் செய்கைப் பொருள் பெற்றால், அப் பொருள்
தொக்க வகையும் முதலும் அது ஆனால்,
'மிக்க வகையால் அறம் செய்!' என, வெகுடல்,—
அக்காரம் பால் செருக்குமாறு. 199

உடைப் பெருஞ் செல்வத்து உயர்ந்த பெருமை,
அடக்கம் இல் உள்ளத்தன் ஆகி, நடக்கையின்
ஒள்ளியன் அல்லான்மேல் வைத்தல்—குரங்கின் கைக்
கொள்ளி கொடுத்துவிடல். 200

மெய்ம்மையே நின்று மிக நோக்கப்பட்டவர்,
கைம் மேலே நின்று கறுப்பன செய்து ஒழுகி,
பொய்ம் மேலேகொண்டு அவ் இறைவற் கொன்றார்—குறைப்பர்,
தம் மேலே வீழப் பனை. 201

மிக்க பழி பெரிதும் செய்தக்கால், மீட்டு அதற்குத்
தக்கது அறியார், தலைசிறத்தல்,—எக்கர்
அடும்பு அலரும் சேர்ப்ப!—அகலுள் நீராலே
துடும்பல் எறிந்துவிடல். 202

சுட்டிச் சொலப்படும் பேர் அறிவினார்கண்ணும்,
பட்ட இழுக்கம் பலவானால், பட்ட
பொறியின் வகைய, கருமம்; அதனால்,—
அறிவினை ஊழே அடும். 203

கன்றி முதிர்ந்த கழியப் பல் நாள் செயினும்,
என்றும், சிறியார்கண் என்னானும் தோன்றாதாம்;
ஒன்றாய்விடினும், உயர்ந்தார்ப் படும் குற்றம்—
குன்றின்மேல் இட்ட விளக்கு. 204

ஆஅய் வளர்ந்த அணி நெடும் பெண்ணையை,
ஏஎய், இரவு எல்லாம் காத்தாலும், வாஅய்ப்
படற்பாலார்கண்ணே படுமே;—பொறியும்
தொடற்பாலார்கண்ணே தொடும். 205

முறை தெரிந்து, செல்வர்க்கும் நல்கூர்ந்தவர்க்கும்,
இறை, திரியான் நேர் ஒத்தல் வேண்டும்; முறை திரிந்து
நேர் ஒழுகான்ஆயின், அதுவாம்,—ஒரு பக்கம்
நீர் ஒழுக, பால் ஒழுகுமாறு. 206

அறிவு அன்று; அழகு அன்று; அறிவதூஉம் அன்று;
சிறியர் எனற்பாடும் செய்யும்;—எறி திரை
சென்று உலாம் சேர்ப்ப!—குழுவத்தார் மேயிருந்த,
என்று ஊடு அறுப்பினும், மன்று. 207

இல்வாழ்க்கையானும் இலிங்கானும் மேற்கொள்ளார்,
நல் வாழ்க்கை போக, நடுவு நின்று, எல்லாம்
ஒருதலையாச் சென்று துணியாதவரே—
இரு தலையும் காக் கழிப்பார். 208

முதுமக்கள் அன்றி, முனி தக்கார் ஆய
பொதுமக்கள் பொல்லா ஒழுக்கம்அது—மன்னும்
குன்றத்து வீழும் கொடி அருவி நல் நாட!—
மன்றத்து மையல் சேர்ந்தற்று. 209

தாம் அகத்தான் நட்டு, தமர் என்று ஒழுகியக்கால்,
நாண் அகத்துத் தாம் இன்றி நன்கு ஒழுகார் ஆபவேல்,—
மான் அமர்க் கண்ணி!—மறந்தும் பரியலரால்;—
கானகத்து உக்க நிலா. 210

உழந்ததூஉம் பேணார், ஒறுத்தமை கண்டும்,
விழைந்தார்போல் தீயவை பின்னரும் செய்தல்,—
தழங்கண் முழவு இயம்பும் தண் கடல் சேர்ப்ப!—
முழம் குறைப்பச் சாண் நீளுமாறு. 211

உலப்பு இல் உலகத்து உறுதியே நோக்கிக்
குலைத்து அடக்கி நல்லறம் கொள்ளார்க் கொளுத்தல்—
மலைத்து அழுது உண்ணாக் குழவியைத் தாயர்
அலைத்துப் பால் பெய்துவிடல். 212

சேர்ந்தார் ஒருவரைச் சேர்ந்து ஒழுகப்பட்டவர்
தீர்ந்தாராக் கொண்டு தெளியினும், தேர்ந்தவர்க்குச்
செல்லாமை காணுக்கால், செல்லும்வாய் என் உண்டாம்?—
எல்லாம் பொய்; அட்டு ஊணே வாய். 213

நீறு ஆர்ந்தும் ஒட்டா நிகர் இல் மணியேபோல்,
வேறாகத் தோன்றும் விளக்கம் உடைத்தாகும்;—
தாறுப் ப்டினும், தலைமகன் தன் ஒளி,
நூறுயிரவர்க்கு நேர். 214

சிறந்து, நுகர்ந்து ஒழுகும் செல்வம் உடையார்
அறம் செய்து அருள் உடையர் ஆதல்,—பிறங்கல்
அமையொடு வேய் கலாம் வெற்ப!—அதுவே,
சுமையொடு மேல் வைப்பு ஆமாறு. 215

அடர்ந்து வறியராய் ஆற்ருத போழ்தும்,
'இடம் கண்டு அறிவாம்' என்று எண்ணி இராஅர்;—
மடம் கொண்ட சாயல் மயில் அன்னுய்!—சான்ருேர்
கடம் கொண்டும் செய்வர் கடன். 216

ஈட்டிய ஒண் பொருள் இல் எனினும், ஒப்புரவு
ஆற்றும், குடிப் பிறந்த சான்றவன்;—ஆற்றவும்
போற்றப் படாதாகி, புல் இன்றி மேயினும்,
ஏற்றுக் கன்று ஏருய் விடும். 217

அடுத்து ஒன்று இரந்தாற்கு ஒன்று ஈந்தானை, கொண்டான்,
படுத்து, 'ஏழையாம்!' என்று போகினும் போக!—
அடுத்து ஏறு அல் ஐம்பாலாய்!—யாவர்க்கேயானும்
கொடுத்து, ஏழை ஆயினர் இல். 218

திரியும், இடிஞ்சிலும், நெய்யும், சார்வு ஆக
எரியும், சுடர் ஓர் அனைத்தால்; தெரியுங்கால்,
சார்வு அற ஓடிப் பிறப்பு அறுக்கும்; அஃதேபோல்,
நீர் அற, நீர்ச் சார்வு அறும். 219

உறுகண் பலவும் உணராமை கந்தா,
தறுகண்மை ஆகாதாம் பேதை, 'தறுகண்
பொறிப் பட்ட ஆறு அல்லால், பூணுது' என்று எண்ணி,
அறிவு அச்சம் ஆற்றப் பெரிது. 220

முன்னும் ஒரு கால் பிழைப்பு ஆன்ருர் ஆற்றவும்,
பின்னும் பிழைப்பப் பொறுப்பவோ?—இன் இசை
யாழின் வண்டு ஆர்க்கும் புனல் ஊர!—ஈனுமோ,
வாழை இரு கால் குலை? 221

தொடித் தோள் மடவார் துணை முலை ஆகம்
மடுத்து, அவர் மார்பில் மகிழ்நன் மடுப்ப,
நெறி அல்ல சொல்லல் நீ, பாண!—அறி துயில்
ஆர்க்கும் எடுப்பல் அரிது. 222

ஆணம் உடைய அறிவினர் தம் நலம்
மானும் அறிவினவரைத் தலைப்படுத்தல்,—
மான் அமர்க் கண்ணாய்!—மறம் கெழு மா மன்னர்,
யானையால் யானை யாத்தற்று. 223

தருக்கி ஒழுகித் தகவு அல்ல செய்தும்,
பெருக்க மதித்தபின் பேணாத செய்தும்,
கரப்புடை உள்ளம் கனற்றுபவரே—
செருப்பிடைப் பட்ட பரல். 224

விடலைமை செய்ய வெருண்டு அகன்று, நில்லாது,
உடல் அரு மன்னர் உவப்ப ஒழுகின்,—
மடல் அணி பெண்ணை மலி திரைச் சேர்ப்ப!—
கடல் படா எல்லாம் படும். 225

செயிர் அறு செங்கோல் சின வேந்தன் செய்கை
பயிர் அறு பக்கத்தார் கொள்வர்;—துகிர் புரையும்
செவ் வாய் மணி முறுவல் சின்மொழி!—செய்தானை
ஒவ்வாத பாவையோ இல். 226

புரையக் கலந்தவர்கண்ணும் கருமம்
உரையின் வழுவாது உவப்பவே கொள்க!—
வரையக நாட!—விரையின், கருமம்
சிதையும்; இடர் ஆய்விடும். 227

கற்றார் பலரைத் தன் கண்ணாக இல்லாதான்
உற்று இடர்ப்பட்ட பொழுதின்கண், தேற்றம்—
மரையா துணை பயிரும் மா மலை நாட!—
சுரையாழ் நரம்பு அறுத்தற்று. 228

நயவர நட்டு ஒழுகுவாரும், தாம் கேட்டது
உயவாது ஒழிவார் ஒருவரும் இல்லை;—
புயல் அமை கூந்தல் பொலந்தொடீஇ!—சான்றோர்
கயவர்க்கு உரையார், மறை. 229

மனம் கொண்டக்கண்ணும் மருவு இல செய்யார்,
கனம் கொண்டு உரைத்தவை காக்கவே வேண்டும்;
சனங்கள் உவப்பன, செய்யாவும், செய்க!—
இனம் கழு ஏற்றினார் இல். 230

தார் ஏற்ற நீள் மார்பின் தம் இறைவன் நோக்கியக்கால்,
'போர் ஏற்றும்' என்பார், பொது ஆக்கல் வேண்டுமோ?
யார் மேற்றுக் கொள்ளினும் கொண்டீக! காணுங்கால்,
ஊர் மேற்று, அமணர்க்கும் ஓடு. 231

தமரேயும் தம்மைப் புகழ்ந்து உரைக்கும் போழ்தின்,
அமராததனை அகற்றலே வேண்டும்;—
அமை ஆரும் வெற்ப!—அணியாரே தம்மை,
தமவேயும், கொள்ளாக் கலம். 232

ஆமாலோ என்று பெரியாரை முன் நின்று
தாமாச் சிறியார் தறுகண்மை செய்து ஒழுகல்,—
போம் ஆறு அறியா, புலன் மயங்கி, ஊர் புக்கு,
சாம் மா கண் காணுதவாறு. 233

தீயன அல்ல செயினும், திறல் வேந்தன்
காய்வன செய்து ஒழுகார், கற்று அறிந்தார்;—காயும்
புலி முன்னர்ப் புல்வாய்க்குப் போக்கு இல்; அதுவே,
வலி முன்னர் வைப் பாரம் இல். 234

சிறிது ஆய கூழ் பெற்று, செல்வரைச் சேர்ந்தார்,
பெரிது ஆய கூழும் பெறுவர்;—அரிது ஆம்
இடத்துள் ஒருவன் இருப்புழிப் பெற்றால்,
கிடப்புழியும் பெற்றுவிடும். 235

இனியாரை உற்ற இடர் தீர் உபாயம்
முனியார் செயினும், மொழியால் முடியா;—
துனியால் திரை உலாம் தூங்கு நீர்ச் சேர்ப்ப!—
பனியால் குளம் நிறைதல் இல். 236

முயறலே வேண்டா; முனிவரையானும்
இயல்பு இன்னர் என்பது இனத்தான் அறிக!—
கயல் இகல் உண் கண்ணாய்!—கரியவரோ வேண்டா;
அயல் அறியா அட்டூணோ இல். 237

நாவின் இரந்தார் குறை அறிந்தும் தாம் உடைய
மாவினை மாணப் பொதிகிற்பார், தீவினை
அஞ்சில் என்? அஞ்சாவிடில் என்?—குருட்டுக் கண்
துஞ்சில் என்? துஞ்சாக்கால் என்? 238

உற்ருல், இறைவற்கு உடம்பு கொடுக்கிற்பான்,
மற்றவற்கு ஒன்ருரோடு ஒன்றுமோ?—தெற்ற
முரண் கொண்டு மாறு ஆய உண்ணுமோ? உண்ணு,
இரண்டு ஏறு ஒரு துறையில் நீர். 239

மருஅதவனும், பலர் ஒன்று இரந்தால்,
பெருஅன் பேதுறுதல் எண்ணி, பொருஅன்,
கரந்து உள்ளதூஉம் மறைக்கும்; அதனல்,
இரந்து ஊட்குப் பன்மையோ தீது. 240

மொய் கொண்டு எழுந்த அமரகத்து, மாற்ருர் வாய்ப்
பொய் கொண்டு, அறைபோய்த் திரிபவர்க்கு என்கொலாம்?—
மை உண்டு அமர்த்த கண் மாணிழாய்!—சான்றவர்,
கை உண்டும், கூறுவர் மெய். 241

பொருத்தம் அழியாத பூந் தண் தார் மன்னர்
அருத்தம், அடி நிழலாரை வருத்தாது,
கொண்டாரும் போலாதே, கோடல்! அது அன்ருே,
வண்டு தாது உண்டுவிடல். 242

கற்று அறிந்தார் கண்ட அடக்கம்; அறியாதார்
பொச்சாந்து தம்மைப் புகழ்ந்து உரைப்பர், தெற்ற;—
அறை கல் அருவி அணி மலை நாட!—
நிறை குடம் நீர் தளும்பல் இல். 243

தெரிவு உடையாரோடு, தெரிந்து உணர்ந்து நின்ருர்,
பரியாரிடைப் புகார், பண்பு அறிவார், மன்ற;—
விரியா இமிழ் திரை வீங்கு நீர்ச் சேர்ப்ப!—
அரிவாரைக் காட்டார், நரி. 244

தம் தொழில் ஆற்றும் தகைமையார் செய்வன,
வெந் தொழிலர் ஆய வெகுளிகட்குக் கூடுமோ?—
மைந்து இறைகொண்ட மலை மார்ப!—ஆகுமோ.
நந்து உழுத எல்லாம் கணக்கு? 245

'நினைத்தது இது' என்று, அந் நீர்மையைப் பார்த்து,
மனத்தது அறிந்து ஈவார் மாண்டார்;—புனத்த
குடிஞை இரட்டும் குளிர் வரை நாட!—
கடிஞையுள் கல் இடுவார் இல். 246

தம் தீமை இல்லவர், நட்டவர் தீமையையும்,
'எம் தீமை' என்றே உணர்ப, தாம்;—அம் தண்
பொரு திரை வந்து உலாம் பொங்கு நீர்ச் சேர்ப்ப!—
ஒருவர் பொறை, இருவர் நட்பு. 247

அம் கோல் அவிர்தொடி!—ஆழியான்ஆயினும்,
செங்கோலன் அல்லாக்கால், சேர்ந்தாரும் எள்ளுவர்,
வெங்கோன்மை வேந்தர்கண் வேண்டும் சிறிது எனினும்;
தண் கோல் எடுப்புமாம் மொய். 248

நல் அவை கண்டக்கால் நாச் சுருட்டி, நன்று உணராப்
புல் அவையுள் தம்மைப் புகழ்ந்து உரைத்தல்,—புல்லார்-
புடைத் தறுகண் அஞ்சுவான், இல்லுள், வில் ஏற்றி,
இடைக் கலத்து எய்துவிடல். 249

தாக்குற்ற போழ்தில் தமரேபோல் நன்கு உரைத்து,
போக்குற்ற போழ்தில் புறன் அழீஇ, மேன்மைக்கண்
நோக்கு அற்றவரைப் பழித்தல் என்? என்னுனும்,
மூக்கு அற்றதற்கு இல், பழி. 250

கண்டு அறியார் போல்வர் கெழீஇயின்மை செய்வாரைப்
பண்டு அறிவார் போலாது, தாமும் அவரேயாய்,
விண்டு ஓரீஇ, மாற்றிவிடுதல்!—அது அன்றோ,
விண்டற்கு விண்டல் மருந்து. 251

'ஆற்றார் இவர்' என்று, அடைந்த தமரையும்,
தோற்ற, தாம் எள்ளி நலியற்க!—போற்றான்,
கடை அடைத்து வைத்து, புடைத்தக்கால், நாயும்
உடையானைக் கௌவிவிடும். 252

'நிலைஇய பண்பு இலார் நேர் அல்லர்' என்று, ஒன்று
உலைய உரையாது, உறுதியே கொள்க!—
வளை ஒலி ஐம்பாலாய்!—வாங்கியிருந்து,
தொளை எண்ணார், அப்பம் தின்பார். 253

வன் சார்பு உடையர் எனினும், வலி பெய்து,
தம் சார்பு இலாதாரைத் தேசு ஊன்றல் ஆகுமோ?—
மஞ்சு சூழ் சோலை மலை நாட!—யார்க்கானும்
அஞ்சுவார்க்கு இல்லை, அரண். 254

சொல்லாமை நோக்கிக் குறிப்பு அறியும் பண்பின் தம்
இல்லாளே வந்த விருந்து ஓம்பி, செல்வத்து
இடர் இன்றி ஏமார்ந்திருந்தாரே, என்றும்
கடலுள் துலாம் பண்ணினார். 255

மாணாப் பகைவரை மாறு ஒறுக்கல்லாதார்
பேணாது உரைக்கும் உரை கேட்டு உவந்ததுபோல்,—
ஊண் ஆர்ந்து, உதவுவது ஒன்று இல் எனினும், கள்ளினைக்
காணாக் களிக்கும், களி. 256

அன்பு அறிந்தபின் அல்லால், யார் யார்க்கும், தம் மறையை
முன் பிறர்க்கு ஓடி மொழியற்க!—தின்குறுவான்
கொல்வாங்குக் கொன்றபின் அல்லது, உயக் கொண்டு,
புல்வாய் வழிப்படுவார் இல். 257

விதிப் பட்ட நூல் உணர்ந்து வேற்றுமை இல்லார்,
கதிப்பவர் நூலினைக் கையிகந்தார் ஆகி,
பதிப்பட வாழ்வார் பழி ஆய செய்தல்,—
மதிப்புறத்துப் பட்ட மறு. 258

நோக்கி இருந்தார் இமைக்கும் அளவின்கண்,
ஒப்பப் படினும், உணங்கலைப் புள் கவரும்;—
போற்றிப் புறந்தந்தக்கண்ணும், பொருளினைக்
காப்பாரின் பார்ப்பார் மிகும். 259

ஒக்கும் வகையால் உடன் பொரும் சூதின்கண்
பக்கத்து ஒருவன், ஒருவன்பால் பட்டிருக்கும்;—
மிக்க சிறப்பினர்ஆயினும், தாயர்க்கு
மக்களுள் பக்கமோ வேறு. 260

மாய்வதன் முன்னே, வகைப்பட்ட நல் வினையை
ஆய்வு இன்றிச் செய்யாதார், பின்னை வழி நினைந்து,
நோய் காண் பொழுதின், அறம் செய்வார்க் காணாமை,
நாய் காணின் கல் காணாவாறு. 261

கருந் தொழிலர் ஆய கடையாயார் தம்மேல்
பெரும் பழி ஏறுவ பேணார்;—இரும் புன்னை
புன் புலால் தீர்க்கும் துறைவ!—மற்று அஞ்சாதே,
தின்பது அழுவதன்கண். 262

அகம் தூய்மை இல்லாரை ஆற்றப் பெருக்கி,
இகந்துழி விட்டிருப்பின், அஃதால்—இகந்து,
நினைந்து தெரியானாய், நீள் கயத்துள், ஆமை,
'நனைந்து வா' என்று விடல். 263

கல்வி அகலமும், கட்டுரை வாய்பாடும்,
கொல் சின வேந்தன் அவை காட்டும்;—மல்கி,
தலைப்பெய்து இழிதரூஉம் தண் புனல் நீத்தம்
மலைப் பெயல் காட்டும் துணை. 264

நனி அஞ்சத்தக்கவை வந்தக்கால், தங்கண்
துனி அஞ்சார் செய்வது உணர்வார்;—பனி அஞ்சி,
வேழம் பிடி தழூஉம், வேய் சூழ், மலை நாட!—
ஊழ் அம்பு வீழா, நிலத்து. 265

வினைப் பயம் ஒன்று இன்றி, வேற்றுமை கொண்டு,
நினைத்துப் பிறர் பனிப்ப செய்யாமை வேண்டும்;—
புனப் பொன் அவிர் சுணங்கின் பூங் கொம்பர் அன்னாய்!—
தனக்கு இன்னா, இன்னா பிறர்க்கு. 266

'எங்கண் ஒன்று இல்லை; எமர் இல்லை' என்று, ஒருவர்
தங்கண் அழிவு தாம் செய்யற்க!—எங்கானும்
நன்கு திரண்டு பெரியவாம், ஆற்றவும்
முன் கை நெடியார்க்குத் தோள். 267

ஆய்ந்த அறிவினர் அல்லாதார் புல்லுரைக்குக்
காய்ந்து, எதிர் சொல்லுபவோ, கற்று அறிந்தார்?—தீம் தேன்
முசுக் குத்தி நக்கும் மலை நாட!—தம்மைப்
பசுக் குத்தின், குத்துவார் இல். 268

அருள் உடையாரும், மற்று அல்லாதவரும்,
பொருள் உடையாரைப் புகழாதார் இல்லை;—
பொரு படைக் கண்ணாய்!—அதுவால், திரு உடையார்
பண்டம் இருவர் கொளல். 269

நற்கு அறிவு இல்லாரை நாட்டவும் ஆகாதே,
சொல் குறிகொண்டு துடி பண்ணுறுத்ததுபோல்:—
வெற்பு அறைமேல் தாழும் விலங்கு அருவி நல் நாட!—
கற்பறிவு போகா, கடை. 270

அறிவினுல் மாட்சி ஒன்று இல்லா ஒருவன்
பிறிதினுல் மாண்டது எவனும்?—பொறியின்
மணி பொன்னும், சாந்தமும், மாலேயும், மற்று இன்ன
அணி எல்லாம், ஆடையின் பின். 271

எல்லே ஒன்று இன்றியே இன்னு செய்தாரையும்,
ஒல்லே வெகுளார், 'உலகு ஆண்டும்!' என்பவர்;
சொல்லின் வளாஅய், தம் தாள் நிழற்கீழ்க் கொள்பவே,
கொல்லேயில் கூழ்-மரமே போன்று. 272

எண்ணக் குறைபடாச் செல்வமும், இற்பிறப்பும்,
மன்னருடைய உடைமையும், மன்னரால்
இன்னர் எனல் வேண்டா; இம்மைக்கும் உம்மைக்கும்
தம்மை உடைமை தலே. 273

செல்வத் துணேமையும், தம் வாழ்நாள் துணேமையும், தாம்
தெள்ளி உணரார், சிறிதினுல் செம்மாந்து,
பள்ளிப்பால் வாழார், பதி மகிழ்ந்து வாழ்வாரே,—
முள்ளித் தேன் உண்ணுமவர். 274

நன்கு ஒன்று அறிபவர், நாழி கொடுப்பவர்க்கு
என்றும் உறுதியே சூழ்க!—எறி திரை
சென்று உலாம் சேர்ப்ப!—அது போல, நீர் போயும்,
ஒன்று இரண்டாம் வாணிகம் இல். 275

சொல் எதிர்ந்து, தம்மை வழிபட்டு ஒழுகலராய்,
கல் எறிந்தாற் போலக் கலாம் தலேக்கொள்வாரை
இல் இருந்து, ஆற்ற முனிவித்தல், —உள் இருந்து,
அச்சாணி தாம் கழிக்குமாறு. 276

புன் சொல்லும் நன் சொல்லும் பொய் இன்று உணர்கிற்பார்,
வன் சொல் வழியராய் வாழ்தலும் உண்டாமோ?—
புன் சொல் இடர்ப்படுப்பது அல்லால், ஒருவனே
இன் சொல் இடர்ப்படுப்பது இல். 277

நாடு அறியப்பட்ட பெருஞ் செல்வர், நல்கூர்ந்து
வாடிய காலத்தும், வட்குபவோ?—வாடி,
வலித்து, திரங்கி, கிடந்தேவிடினும்,
புலித் தலே நாய் மோத்தல் இல். 278

விட்டுக் கருமம் செயவைத்த பின்னரும்,
முட்டாது அவரை வியங்கொளவேண்டுமால்;—
தொட்டக்கால் மாழ்கும் தளிர்மேலே நிற்பினும்,
கொட்டாமல் செல்லாது, உளி. 279

குரைத்துக் கொளப்பட்டார் கோள் இழுக்குப்பட்டு,
புரைத்து எழுந்து போகினும் போவர்; அரக்கு இல்லுள்
பொய் அற்ற ஐவரும் போயினர்;—இல்லையே,
உய்வதற்கு உய்யா இடம். 280

பொருந்தாதவரைப் பொருது அட்டக் கண்ணும்,
இருந்து அமையார் ஆகி, இறப்ப வெகுடல்,—
விரிந்து அருவி வீழ்தரும் வெற்ப!—அதுவே,
அரிந்து அரிகால் நீர்ப் படுக்குமாறு. 281

உடையதனைக் காப்பான் உடையான்; அதுவே
உடையானைக் காப்பதூஉம் ஆகும்;—அடையின்,
புதற்குப் புலியும் வலியே; புலிக்குப்
புதலும் வலியாய்விடும். 282

ஒற்கப்பட்டு ஆற்றார் உணர உரைத்தபின்,
நற் செய்கை செய்வார்போல் காட்டி, நசை அழுங்க,
வற்கென்ற செய்கை அதுவால்—அவ் வாயுறைப்
புல் கழுத்தில் யாத்துவிடல். 283

காத்து, ஆற்றுகிற்பாரைக் கண்டால், எதிர் உரையார்,
பார்த்து ஆற்றாதாரைப் பரியாது மீதூர்தல்
யாத்த தேசு இல்லார் படை ஆண்மை—நாவிதன் வாள்
சேப்பிலைக்குக் கூர்த்துவிடல். 284

காப்பான் மட மகள், காப்பான் கைப்பட்டிருந்தும்,
'மேய்ப்பு ஆட்டது' என்று உண்ணாள்ஆயினாள்;—தீப் புகைபோல்
மஞ்சு ஆடு வெற்ப!—மறைப்பினும், ஆகாதே,
தம் சாதி மிக்குவிடும். 285

விரும்பி அடைந்தார்க்கும், சுற்றத்தவர்க்கும்,
வருந்தும் பசி களையார், வம்பர்க்கு உதவல்,—
இரும் பனை வில் வென்ற புருவத்தாய்!—ஆற்றக்
கரும் பனை அன்னது உடைத்து. 286

ஒளியாரை மீதூர்ந்து ஒழுகுவது அல்லால்;
களி யானை மன்னர்க்கோ கைகடத்தல் ஏதம்;
துளி உண் பறவைபோல் செவ்வன் ஓர்ப்பாரும்,
எளியாரை எள்ளாதார் இல். 287

தம் நடை நோக்கார், தமர் வந்தவாறு அறியார்,
செந் நடை சேராச் சிறியார்போல் ஆகாது,
நின் நடையானே நட—அத்தா!—நின் நடை
நின்இன்று அறிகிற்பார் இல். 288

மல்லல் பெருஞ் செல்வம் மாண்டவர் பெற்றக்கால்,
செல்வுழியும் ஏமாப்பச் செய்வதாம்;—மெல் இயல்,
சென்று ஒசிந்து ஒல்கு நுசுப்பினாய்!—பைங் கரும்பு
மென்றிருந்து, பாகு செயல். 289

அல்லவை செய்குப, அல்லாப்பின்; அல்லாக்கால்,
செல்வது அறிகிலர் ஆகிச் சிதைத்து எழுவர்;—
கல்லாக் கயவர் இயற்கை;—நரியிற்கு ஊண்
நல் யாண்டும் தீ யாண்டும் இல். 290

'எய்ப்புழி வைப்பாம்' எனப் போற்றப்பட்டவர்
உற்றுழி ஒன்றுக்கு உதவலராய்,—பைத்தொடீஇ!—
அச்சு இடையிட்டுத் திரியின், அது அன்றோ,
மச்சு ஏற்றி, ஏணி களைவு. 291

வழங்கார், வலி இலார், வாய்ச் சொல்லும் பொல்லார்,
உழந்து ஒருவர்க்கு உற்றால் உதவலும் இல்லார்,
இழந்தது இல் செல்வம் பெறுதல்,—அதுவே
பழஞ் செய் போர்பு ஈன்று விடல். 292

தம்மால் முடிவதனைத் தாம் ஆற்றிச் செய்கலார்,
'பின்னை, ஒருவரால் செய்வித்தும்' என்று இருத்தல்,—
செல் நீர் அருவி மலை நாட!—பாய்பவோ,
வெந்நீரும் ஆடாதார் தீ? 293

ஒருவன் உணராது, உடன்று எழுந்த போருள்,
இருவரிடை நட்பான் புக்கால், பெரிய
வெறுப்பினால் பேர்த்துச் செறுப்பின், தலையுள்
குறுக் கண்ணி ஆகிவிடும். 294

சிறப்புடை மன்னரைச் செவ்வியான் நோக்கி,
திறத்தின் உரைப்பார்க்கு ஒன்று ஆகாதது இல்லை;
விறற் புகழ் மன்னர்க்கு உயிர் அன்னரேனும்,
புறத்து அமைச்சின், நன்று, அகத்துக் கூன். 295

நூக்கி அவர் வெலினும், தாம் வெலினும், வெஞ் சமத்துத்
தாக்கி எதிர்ப்படுவர், தக்கவர்; அஃது அன்றி,
காப்பின் அகத்து இருந்து காய்வார் மிக உரைத்தல்
யாப்பினுள் அட்டிய நீர். 296

'ஒன்றுல், சிறிதால், உதவுவது ஒன்று இல்லையால்'
என்று ஆங்கு இருப்பின், இழுக்கம் பெரிது ஆகும்;
அன்றைப் பகலேயும் வாழ்கலார்,—நின்றது,
சென்றது, பேராதவர். 297

மானமும் நாணும் அறியார், மதி மயங்கி,
ஞானம் அறிவார் இடைப்புக்கு, தாம் இருந்து,
ஞானம் வினைஅய் உரைக்கின், நகை ஆகும்—
யானைப் பல் காண்பான் புகல். 298

உளைய உரைத்துவிடினும், உறுதி
கிளைகள் வாய்க் கேட்பது நன்றே;—விளை வயலுள்
பூ மிதித்துப் புள் கலாம் பொய்கைப் புனல் ஊர!—
தாய் மிதித்த ஆகா முடம். 299

குலத்துச் சிறியார், கலாம் தணிப்பான் புக்கு
விலக்குவார் மேலும், எழுதல்—நிலத்து
நிலை அழுங்க வேண்டிப் புடைத்தக்கால், வெண் மாத்
தலை கீழாக் காதிவிடல். 300

நோக்கி அறிகல்லாத் தம் உறுப்பு, கண்ணுடி
நோக்கி, அறிப; அதுவேபோல், நோக்கி,
முகன் அறிவார் முன்னம் அறிப; அதுவே,
மகன் அறிவு தந்தை அறிவு. 301

சிறிய பொருள் கொடுத்துச் செய்த வினையால்,
பெரிய பொருள் கருதுவாரே;—விரி பூ
விராஅம் புனல் ஊர!—வேண்டு அயிரை இட்டு,
வராஅல் வாங்குபவர். 302

இன்றி அமையா இரு முது மக்களும்
பொன்றினமை கண்டும், பொருள் பொருளாக் கொள்பவோ?
ஒன்றும் வகையான் அறம் செய்க! ஊர்ந்து உருளின்
குன்று, வழி அடுப்பது இல். 303

கடம் கொண்ட ஒண் பொருளைக் கைவிட்டு இருப்பார்
இடம் கொண்டு, 'தம்மினே' என்றால், தொடங்கிப்
பகை மேற்கொண்டார் போல, கொண்டார் வெகுடல்,
நகை மேலும் கைப்பாய் விடும். 304

உறாஅ வகையது செய்தாரை, வேந்தன்,
பொறாஅன் போல, பொறுத்தால், பொறாஅமை
மேன்மேலும் செய்து விடுதல்,—அது அன்றோ,
கூன்மேல் எழுந்த குரு. 305

ஒன்னார் அட நின்ற போழ்தின், ஒரு மகன்
தன்னை எனைத்தும் வியவற்க! துன்னினார்
நன்மை இலராய்விடினும், நனி பலர் ஆம்
பன்மையின் பாடு உடையது இல். 306

தமராலும் தம்மாலும் உற்றால், ஒன்று ஆற்றி,
நிகராகச் சென்றாரும் அல்லர்;—இவர் திரை
நீத்த நீர்த் தண் சேர்ப்ப!—செய்தது உவவாதார்க்கு
ஈத்ததை எல்லாம் இழவு. 307

ஆணியாக் கொண்ட கருமம், பதிற்றியாண்டும்
பாணித்தே செய்ப, வியங்கொள்ளின்;—காணி
பயவாமைச் செய்வார் ஆர்? தம் சாகாடேயும்
உயவாமைச் சேறலோ இல். 308

இடு குடைத் தேர் மன்னர், 'எமக்கு அமையும்' என்று,
கடிது அவர் காதலிப்ப தாம் காதல் கொண்டு,
முடிதல் எனைத்தும் உணரா முயறல்,—
கடிய கனைத்துவிடல். 309

தெரியாதார் சொல்லும் திறன் இன்மை தீதாப்
பரியார், பயன் இன்மை செய்து, பெரியார் சொல்
கொள்ளாது, தாம் தம்மைக் காவாதவர்,—பிறரைக்
கள்ளராச் செய்குறுவார். 310

மன்னவன் ஆணைக்கீழ், மற்றையார் மீக்கூற்றம்
என்ன வகையால் செயப் பெறுப?—புன்னைப்
பரப்பில் நீர் தாஅம் படு கடல் தண் சேர்ப்ப!—
மரத்தின் கீழ் ஆகா, மரம். 311

முன் பெரிய நல்வினை முட்டு இன்றிச் செய்யாதார்,
பின் பெரிய செல்வம் பெறல் ஆமோ? வைப்போடு
இகலிப் பொருள் செய்ய எண்ணியக்கால், என் ஆம்?—
முதல் இலார்க்கு ஊதியம் இல். 312

தெற்றப் பகைவர் இடர்ப்பாடு கண்டக்கால்,
மற்றும் கண்ணோடுவர், மேன்மக்கள்;—தெற்ற
நவைக்கப்படும் தன்மைத்துஆயினும், சான்றோர்
அவைப்படின், சாவாது பாம்பு. 313

அடையப் பயின்றவர் சொல் ஆற்றுவராக் கேட்டால்,
உடையது ஒன்று இல்லாமை ஒட்டின்,—படை வென்று
அடைய அமர்த்த கண் ஆயிழாய்!—அஃதால்,
இடையன் எறிந்த மரம். 314

ஊக்கி, உழந்து, ஒருவர் ஈட்டிய ஒண் பொருளை,
'நோக்குமின்!' என்று, இகழ்ந்து, நொவ்வியார்கை விடுதல்,—
போக்கு இல் நீர் தூஉம் பொரு கழித் தண் சேர்ப்ப!—
காக்கையைக் காப்பு இட்ட சோறு. 315

தொடுத்த பெரும் புலவன், சொற் குறை தீர,
'அடுத்தர' என்றாற்கு, 'வாழியரோ!' என்றான்;
தொடுத்து, 'இன்னர்' என்னலோ வேண்டா;—கொடுப்பவர்
தாம் அறிவர், தம் சீர் அளவு. 316

'வரை புரை வேழத்த, வன் பகை' என்று அஞ்சி,
உரையுடை மன்னருள் புக்கு, ஆங்கு அவையுள்,
நிரை உரைத்துப் போகாது, ஒன்று ஆற்றத் துணிக!—
திரை அவித்து, ஆடார் கடல். 317

ஏற்றார்கட்கு எல்லாம் இசை நிற்ப, தாம் உடைய
மாற்றார் கொடுத்திருப்ப, வள்ளன்மை; மாற்றாரை
மண் பற்றிக் கொள்கிற்கும் ஆற்றலார்க்கு என் அரிதாம்?—
பெண் பெற்றான் அஞ்சான், இழவு. 318

முடிந்ததற்கு இல்லை, முயற்சி; முடியாது
ஒடிந்ததற்கு இல்லை, பெருக்கம்; வடிந்து அற
வல்லதற்கு இல்லை, வருத்தம்; உலகினுள்
இல்லதற்கு இல்லை, பெயர். 319

காப்பு இறந்து ஓடி, கழி பெருஞ் செல்வத்தைக்
கோப் பரியான் கொள்ளின், கொடுத்து இராது என் செய்வர்?
நீத்த பெரியார்க்கே ஆயினும், ஈத்தவை
மேவின், பரிகாரம் இல். 320

தன்-தூக்கி, தன் துணையும் தூக்கி, பயன் தூக்கி,
மற்று அது கொள்வ, மதி வல்லார்; அற்று அன்றி,
யாதானும் ஒன்று கொண்டு, யாதானும் செய்தக்கால்,
யாதானும் ஆகிவிடும். 321

'எம் கண் அனையர்' எனக் கருதின், ஏதமால்;
தங்கண்ணேயானும் தகவு இல கண்டக்கால்,
வன்கண்ணன் ஆகி ஒறுக்க; ஒறுக்கல்லா
மென்கண்ணன் ஆளான், அரசு. 322

செறிவுடைத் தார் வேந்தன் செவ்வி மாறுமல்,
அறிவு உடையார் அவ்வியமும் செய்ப;—வறிது உரைத்து,
பிள்ளைகளை மருட்டும் தாயர்போல் அம்புலிமேல்,
ஒள்ளிய காட்டாளர்க்கு அரிது. 323

கொடையும், ஒழுக்கமும், கோள் உள் உணர்வும்,
உடையர் எனப்பட்டு ஒழுகி, பகைவர்
உடைய, மேற்செல்கிற்கும் ஊற்றம் இலாதார்
படையின், படைத் தகைமை நன்று. 324

முன்னை உடையது காவாது, இகழ்ந்து இருந்து,
பின்னை அஃது ஆராய்ந்து கொள்குறுதல்,—இன் இயற்கைப்
பைத்து அகன்ற அல்குலாய்!—அஃதால், அவ் வெண்ணெய்மேல்
வைத்து, மயில் கொள்ளுமாறு. 325

அல்லவையுள் தோன்றி, அலவலைத்து, வாழ்பவர்
நல் அவையுள் புக்கு இருந்து, நா அடங்க, கல்வி
அளவு இறந்து மிக்கார் அறிவு எள்ளிக் கூறல்—
மிளகு உளு உண்பான் புகல். 326

உவப்ப உடன்படுத்தற்கு ஏய கருமம்
அவற்று அவற்று ஆம் துணைய ஆகி, பயத்தான்,
வினை முதிரின் செய்தான்மேல் ஏறும்;—பனை முதிரின்,
தாய் தாள்மேல் வீழ்ந்துவிடும். 327

நிலத்தின் மிகை ஆம் பெருஞ் செல்வம் வேண்டி,
நலத்தகு வேந்தருள் நல்லாரைச் சார்ந்து,
நிலத்து நிலைகொள்ளாக் காலரே காணின்,
உலக்கைமேல் காக்கை என்பார். 328

அடைய அடைந்தாரை அல்லவை செய்து,
கொடை வேந்தன் கோல் கொடியன் ஆகி, குடிகள்மேல்
கூட்டு இறப்பக் கொண்டு, தலையளிப்பின், அஃது அன்றோ,
சூட்டு அறுத்து வாயில் இடல். 329

தன்னின் வலியானைத் தான் உடையன் அல்லாக்கால்,
என்ன குறையன், இளையரால்?—மன்னும்
புலியின் பெருந் திறல ஆயினும், பூசை,
எலி இல்வழிப் பெறா, பால். 330

கொடித் திண் தேர் மன்னரால் கூட்டுண்டு வாழ்வார்,
எடுத்து மேற்கொண்டவர் ஏய வினையை
மடித்து ஒழிதல், என் உண்டாம்?—மாணிழாய்!—கள்ளைக்
குடித்துக் குழைவாரோ இல். 331

சொல்தொறும் சோர்வு படுதலால், சோர்வு இன்றிக்
கற்றாறும், 'கல்லாதேன்' என்று, வழி இரங்கி,
உற்று ஒன்று சிந்தித்து, உழந்து ஒன்று அறியுமேல்,
கற்றாறும் தான் கல்லாதவாறு. 332

பாற்பட்டு வாழ்வர்எனினும், குடிகள்மேல்
மேற்பட்ட கூட்டு மிகை நிற்றல் வேண்டாவே;
கோல் தலையேஆயினும் கொண்டீக! காணுங்கால்,
பால் தலைப் பால் ஊறல் இல். 333

விளக்கு விலை கொடுத்துக் கோடல், விளக்குத்
துளக்கம் இன்று என்று அனைத்தும் தூக்கி; விளக்கு
மருள் படுவதுஆயின்,—மலை நாட!—என்னை?
பொருள் கொடுத்துக் கொள்ளார், இருள். 334

பூ உட்கும் கண்ணாய்!—'பொறுப்பர்' எனக் கருதி,
யாவர்க்கேஆயினும் இன்னா செயல் வேண்டா;—
தேவர்க்கும் கைகூடாத் திண் அன்பினார்க்கேயும்,
நோவச் செயின், நோன்மை இல். 335

அமையா இடத்து ஓர் அரும் பொருள் வைத்தால்,
இமையாது காப்பினும் ஆகா; இமையாரும்
அக் காலத்து ஓம்பி, அமிழ்து கோட்பட்டமையின்,
நல் காப்பின் தீச் சிறையே நன்று. 336

நல்லார் நலத்தை உணரின், அவரினும்
நல்லார் உணர்ப; பிறர் உணரார்;—நல்ல
மயில் ஆடும் மா மலை வெற்ப!—மற்று என்றும்,
அயிலாலே போழ்ப, அயில். 337

இரு கயல் உண் கண் இளையவளை, வேந்தன்,
'தருக!' என்றால் தன்னையரும் நேரார்; செரு அறைந்து,
பாழித் தோள் வட்டித்தார்; காண்பாம்; இனிது அல்லால்,
வாழைக்காய் உப்பு உறைத்தல் இல். 338

விழுத் தொடையர் ஆகி விளங்கி, தொல் வந்தார்
ஒழுக்கு உடையர் ஆகி ஒழுகல்,—பழத் தெங்கு
செய்த்தலை வீழும் புனல் ஊர!—அஃதே, நன்
நெய்த்தலைப் பால் உக்குவிடல். 339

ஓரும் ஒருவர் ஒருவர்தம் உள்ளத்தைத்
தேரும் திறம் அரிதால்;—தேமொழீஇ!—ஆரும்
குலக் குல வண்ணத்தர் ஆகுப; ஆங்கே,
புலப் புல வண்ணத்த, புள். 340

தாமேயும் தம்மைப் புறந்தர ஆற்றாதார்,
வாம் மான் தேர் மன்னரைக் காய்வது எவன்கொலோ?—
ஆமா உகளும் அணி வரை வெற்ப!—கேள்:
ஏமாரார் கோங்கு ஏறினார். 341

சிறந்த தம் சுற்றமும் செய் பொருளும் நீக்கி,
துறந்தார் தொடர்ப்பாடு கோடல்,—கறங்கு அருவி
ஏனல்வாய் வீழும் மலை நாட!—அஃது அன்றோ,
யானை போய், வால் போகாவாறு. 342

முழவு ஒலி முந்நீர் முழுதுடன் ஆண்டோர்
விழவு ஊரில் கூத்தேபோல் வீழ்ந்து அவிதல் கண்டும்,
'இழவு' என்று ஒரு பொருள் ஈயாதான் செல்வம்,
அழகொடு கண்ணின் இழவு. 343

'இரப்பவர்க்கு ஈயக் குறைபடும்' என்று எண்ணி,
கரப்பவர் கண்டறியார்கொல்லோ?—பரப்பில்
துறைத் தோணி நின்று உலாம் தூங்கு நீர்ச் சேர்ப்ப!—
இறைத்தோறும் ஊறும் கிணறு. 344

பல்லார் அவை நடுவண் பாற்பட்ட சான்றவர்
சொல்லார் ஒருவரையும், உள் ஊன்ற;—பல் ஆ
நிரைப் புறம் காத்த நெடியோனேஆயினும்,
உரைத்தால், உரை பெறுதல் உண்டு. 345

இம்மைத் தவமும், அறமும், என இரண்டும்,
தம்மை உடையார் அவற்றைச் சலம் ஒழுகல்,
இம்மைப் பழி ஏயும்; அன்றி, மறுமையும்,
தம்மைத் தாம் ஆர்க்கும் கயிறு. 346

துன்னி இருவர் தொடங்கிய மாற்றத்தில்
பின்னை உரைக்கப்படற்பாலான், முன்னி
மொழிந்தால் மொழி அறியான் கூறல்,—முழந்தாள்
கிழிந்தானை மூக்குப் பொதிவு. 347

பேர் உலையுள் பெய்த அரிசியை வெந்தமை
ஓர் அவிழினாலே உணர்ந்தாங்கு, யார்கண்ணும்
கண்டதனால் காண்டலே வேண்டுமாம்; யாதற்கும்
கண்டது காரணம் ஆமாறு. 348

தலைமை கருதும் தகையாரை வேந்தன்
நிலைமையான் நேர் செய்திருத்தல்,—மலைமிசைக்
காம்பு அனுக்கும் மென் தோளாய்!—அஃது அன்றோ, ஓர் அறையுள்
பாம்பொடு உடன் உறையுமாறு. 349

கல்லாதும், கேளாதும், கற்றார் அவை நடுவண்
சொல்லாடுவாரையும் அஞ்சற்பாற்று—எல் அருவி
பாய் வரை நாட!—பரிசு அழிந்தாரொடு
தேவரும் மாற்றல் இலர். 350

கூர் அறிவினர் வாய்க் குணமுடைச் சொல் கொள்ளாது,
கார் அறிவு கந்தா, கடியன செய்வாரைப்
பேர் அறியார் ஆயின பேதைகள் யார் உளரோ?—
ஊர் அறியா மூரியோ இல். 351

ஒருவர் உரைப்ப உரைத்தால், அது கொண்டு
இருவர் ஆவாரும் எதிர் மொழியற் பாலா;—
பெரு வரை நாட!—சிறிதேனும் இன்னாது,
இருவர் உடன் ஆடல் நாய். 352

துயிலும் பொழுதே தொடு ஊண் மேற்கொண்டு,
வெயில் விரி போழ்தின் வெளிப்பட்டார் ஆகி,—
அயில் போலும் கண்ணாய்!—அடைந்தார்போல் காட்டி,
மயில் போலும் கள்வர் உடைத்து. 353

நலிந்து ஒருவன் நாளும் அடுபாக்குப் புக்கால்,
மெலிந்து அவன் வீழாமை கண்டு, மலிந்து அடைதல்,—
பூப் பிழைத்து வண்டு புடை ஆடும் கண்ணினாய்!—
ஏப் பிழைத்துக் காக் கொள்ளுமாறு. 354

பொருந்தாப் பழி என்னும் பொல்லாப் பிணிக்கு
மருந்து ஆகி நிற்பதாம் மாட்சி; மருந்தின்
தணியாது விட்டக்கால்,—தண் கடல் சேர்ப்ப!—
பிணி ஈடு அழித்துவிடும். 355

பெரிய குடிப் பிறந்தாரும் தமக்குச்
சிறியார் இனமா ஒழுகல்—வெறி இலை
வேலொடு நேர் ஒக்கும் கண்ணாய்!—அஃது அன்றோ,
பூவொடு நார் இயைக்குமாறு. 356

செயல் வேண்டா நல்லவை செய்விக்கும்; தீய
செயல் வேண்டி நிற்பின், விலக்கும்; இகல் வேந்தன்-
தன்னை நலிந்து தனக்கு உறுதி கூறலால்,—
முன் இன்னா, மூத்தார் வாய்ச் சொல். 357

தன்னை மதித்து, தமர் என்று கொண்டக்கால்,
என்ன படினும், அவர் செய்வ செய்வதே;—
இன் ஒலி வெற்ப!—இடர் என்னை? துன்னூசி
போம் வழிப் போகும், இழை. 358

மனத்தினும், வாயினும், மெய்யினும், செய்கை
அனைத்தினும், ஆன்று அவிந்தார் ஆகி, நினைத்திருந்து,
ஒன்றும் பரியலராய், ஓம்புவார் இல்எனின்,
சென்று படுமாம், உயிர். 359

பேதுறவு தீரப் பெருக்கத் தலையளித்து,
ஆசு அறுவ செய்யாராய், ஆற்றப் பெருகினும்,
மாசு அற மாண்ட மனம் உடையர் ஆகாத
கூதறைகள் ஆகார், குடி. 360

முல்லைக்குத் தேரும், மயிலுக்குப் போர்வையும்,
தொல்லை, அளித்தாரைக் கேட்டு அறிதும்;—சொல்லின்,
நெறி மடல் பூந் தாழை நீடு நீர்ச் சேர்ப்ப!—
அறி மடமும் சான்றோர்க்கு அணி. 361

எனைப் பல் பிறப்பினும் ஈண்டி, தாம் கொண்ட
வினைப் பயன் மெய் உறுதல் அஞ்சி, எனைத்தும்,
கழிப்புழி ஆற்றாமை காண்டும்; அதுவே,
குழிப் புழி ஆற்றா குழிக்கு. 362

கொண்டு ஒழுகு மூன்றற்கு உதவாப் பசித் தோற்றம்
பண்டு ஒழுகி வந்த வளமைத்து அங்கு உண்டு, அது
கும்பியில் உந்திச் சென்று எறிதலால்,—தன் ஆசை
அம்பாய் உள் புக்குவிடும். 363

வழிப்பட்டவரை வலியராச் செய்தார்
அழிப்பினும் ஆக்கினும் ஆகும்;—விழுத்தக்க
பை அரவு அல்குல் பணைத் தோளாய்!—பாத்து அறிவு என்,
மெல்ல? கவுள் கொண்ட நீர். 364

பல் நாள் தொழில் செய்து, உடைய கவர்ந்து உண்டார்,
இன்னாத செய்யாமை வேண்டி, இறைவர்க்குப்
பொன் யாத்துக் கொண்டு புகுதல்,—குவளையைத்
தன் நாரால் யாத்துவிடல். 365

பல் கிளையுள் பாத்துளன் ஆகி, ஒருவனை
நல்குரவால், வேறாக நன்கு உணரான் சொல்லின்,
உரையுள் வளவிய சொல் சொல்லாததுபோல்,
நிரையுள்ளே இன்னா, வரைவு. 366

கல்லாதான் கண்ட கழி நுட்பம் காட்டு அரிதால்;
'நல்லேம் யாம்' என்று ஒருவன் நன்கு மதித்தல் என்?
சொல்லால் வணக்கி, வெகுண்டு, அடுகிற்பார்க்கும்,—
சொல்லாக்கால் சொல்லுவது இல். 367

தமக்கு உற்றதே ஆகத் தம் அடைந்தார்க்கு உற்றது
எமக்கு உற்றது என்று உணரா விட்டக்கால், என் ஆம்?—
இமைத்து அருவி பொன் வரன்றும் ஈர்ங் குன்ற நாட!—
உமிக் குற்றுக் கை வருந்துமாறு. 368

மாற்றத்தை மாற்றம் உடைத்தலான், மாற்றவர்க்கு
ஆற்றும் வகையான் அவர்க் களைய வேண்டுமே,
வேற்றுமை யார்க்கும் உண்டுஆதலான்;— ஆற்றுவான்
நூற்றுவரைக் கொண்டுவிடும். 369

இறப்பச் சிறியவர் இன்னா செயினும்,
பிறப்பினால் மாண்டார் வெகுளார்;—திறத்து உள்ளி
நல்ல விறகின் அடினும், நனி வெந்நீர்
இல்லம் சுடுகலாவாறு. 370

ஊழாயினாரைக் களைந்திட்டு, உதவாத
கீழாயினாரைப் பெருக்குதல்,—யாழ் போலும்
தீம் சொல் மழலையாய்!—தேன் ஆர் பலாக் குறைத்து,
காஞ்சிரை நட்டுவிடல். 371

மடங்கப் பசிப்பினும், மாண்புடையாளர்,
தொடங்கிப் பிறர் உடைமை மேவார்;—குடம்பை
மடலொடு புள் கலாம் மால் கடல் சேர்ப்ப!—
கடலொடு காட்டு ஒட்டல் இல். 372

தெற்ற அறிவுடையார்க்கு அல்லால், திறன் இல்லா
முற்றலை நாடிக் கருமம் செய வையார்;
கற்று ஒன்று அறிந்து, கசடு அற்ற காலையும்,
அற்றதன்பால் தேம்பல் நன்று. 373

வல் நெஞ்சினார் பின் வழி நினைந்து செல்குவையால்;
என் நெஞ்சே! இன்று அழிவாய் ஆயினாய்; செல், நெஞ்சே!
இல் சுட்டி நீயும் இனிது உரைத்துச் சாவாதே;
பல் கட்டு, அப் பெண்டிர், மகார். 374

நீர்த் தகவு இல்லார் நிரம்பாமைத் தம் நலியின்,
கூர்த்து அவரைத் தாம் நலிதல் கோள் அன்றால், சான்றவர்க்கு;—
பார்த்து ஓடிச் சென்று, கதம் பட்டு நாய் கவ்வின்,
பேர்த்து நாய் கவ்வினார் இல். 375

எல்லாத் திறத்தும், இறப்பப் பெரியாரை,
கல்லாத் துணையார் கயப்பித்தல் சொல்லின்,—
நிறைந்து ஆர் வளையினாய்!—அஃதால், எருக்கு
மறைந்து, யானை பாய்ச்சிவிடல். 376

தலைக்கொண்ட தம் கருமம் தாம் மடிக் கொண்டு,
கடைப்பிடி இல்லார்பால் வைத்து, கடைப்பிடி
மிக்கு ஓடி விட்டுத் திரியின், அது பெரிது
உக்கு ஓடிக் காட்டிவிடும். 377

உருத்து எழு ஞாட்பினுள், ஒன்னார் தொலைய,
செருக்கினால் செய்கலார் செய்வாரே போல,
தருக்கினால் தம் இறைவன் கூழ் உண்பவரே—
கருத்தினால் கூறை கொள்வார். 378

படரும் பிறப்பிற்கு ஒன்று ஈயார், பொருளைத்
தொடரும் தம் பற்றினால் வைத்து, இறப்பாரே,—
அடரும் பொழுதின்கண், இட்டு, குடர் ஒழிய,
மீ வேலி போக்குபவர். 379

பல் ஆண்டும் ஈண்டிப் பழுதாய்க் கிடந்தது
வல்லான் தெரிந்து வழங்குங்கால், வல்லே
வளம் நெடிது கொண்டது அறாஅது;—அறுமோ,
குளம் நெடிது கொண்டது நீர்? 380

'இரவலர் தம் வரிசை' என்பார், மடவார்;
கரவலராய்க் கை வண்மை பூண்ட புரவலர்
சீர் வரைய ஆகுமாம், செய்கை சிறந்து அனைத்தும்;—
நீர் வரையவாம் நீர் மலர். 381

அமர் நின்ற போழ்தின்கண் ஆற்றுவரேனும்,
நிகர் ஒன்றின்மேல் விடுதல் ஏதம்;—நிகர் இன்றி
வில்லொடு நேர் ஒத்த புருவத்தாய்!—அஃது அன்றோ,
கல்லொடு கை எறியுமாறு. 382

சீர்த் தகு மன்னர் சிறந்த அனைத்தும் கெட்டாலும்,
நேர்த்து உரைத்து எள்ளார், நிலை நோக்கி;—சீர்த்த
கிளை இன்றிப் போஒய்த் தனித்து ஆயக்கண்ணும்,
இளைது என்று பாம்பு இகழ்வார் இல். 383

இகலின் வலியாரை எள்ளி, எளியார்,
இகலின் எதிர் நிற்றல் ஏதம்;—அகலப் போய்,
என் செய்தேஆயினும் உய்ந்தீக!—சாவாதான்
முன்கை வளையும் தொடும். 384

'ஆறுச் சினத்தன் அறிவு இலன்; மற்று அவனை
மாறி ஒழுகல் தலை' என்ப;—ஏறி
வளியால் திரை உலாம் வாங்கு நீர்ச் சேர்ப்ப!—
தெளியானைத் தேறல் அரிது. 385

'தீர்ந்தேம்' எனக் கருதி, தேற்றுது ஒழுகி, தாம்
ஊர்ந்த பரிவும் இலர் ஆகி, சேர்ந்தார்
பழமை கந்து ஆக, பரியார், புதுமை;—
முழு நட்பின், சாண் உட்கு நன்று. 386

மறையாது இனிது உரைத்தல், மாண் பொருள் ஈதல்,
அறையான் அகப்படுத்துக் கோடல், முறையால்
நடுவணுச் சென்று அவரை நன்கு எறிதல், அல்லால்,
ஓடி எறியத் தீரா, பகை. 387

செய்த கொடுமை உடையான், அதன் பயம்
எய்த உரையான், இடரினல்;—எய்தி
மரிசாதியாய் இருந்த மன்று அஞ்சுவாற்குப்
பரிகாரம் யாதொன்றும் இல். 388

மடியை வியங்கொள்ளின், மற்றைக் கருமம்
முடியாதவாறே முயலும்;—கொடி அன்னுய்!—
பாரித்தவனை நலிந்து தொழில் கோடல்,
மூரி எருத்தான் உழவு. 389

எதிர்த்த பகையை இளைது ஆய போழ்தே
கதித்துக் களையின் முதிராது எதிர்த்து,
நனி நிற்பச் செய்தவர் நண்பு எலாம் தீர்க்க;—
தனி மரம் காடு ஆவது இல். 390

வெண்குடைக்கீழ் வாழும் குடிகட்கு வேந்தனும்
செங்கோலன் அல்லனேல், செய்வது என்?—பொங்கு
படு திரைச் சேர்ப்ப!—மற்று இல்லையே, யானை
தொடு உண்ணின், மூடும் கலம். 391

செல்லற்க, சேர்ந்தார் புலம்புற! செல்லாது
நில்லற்க, நீத்தார் நெறி ஒரீஇ! பல் காலும்
நாடுக, தான் செய்த நுட்பத்தை!—கேளாதே
ஓடுக, ஊர் ஓடுமாறு! 392

ஓத நீர் வேலி உலகத்தார், 'இந் நெறி
காதலர்' என்பது அறிந்து அல்லால், யாது ஒன்றும்—
கானக நாட!—பயிலார்; பயின்றதூஉம்
வானகம் ஆகிவிடும். 393

கெடுவல் எனப்பட்டக்கண்ணும், தனக்கு ஓர்
வடு அல்ல செய்தலே வேண்டும்;—நெடு வரை
முற்று நீர் ஆழி வரையகத்து ஈண்டிய
கல் தேயும்; தேயாது, சொல். 394

மெய்ந் நீரர் ஆகி விரியப் புகுவார்க்கும்,
பொய்ந் நீரர் ஆகிப் பொருளை முடிப்பார்க்கும்,
எந் நீரர் ஆயினும் ஆக!—அவரவர்
தம் நீரர் ஆதல் தலை. 395

தொடி முன்கை நல்லாய்!—அத் தொக்க பொருளைக்
குடிமகன் அல்லான் கை வைத்தல்,—கடி நெய்தல்
வேரி கமழும் விரி திரைத் தண் சேர்ப்ப!—
மூரியைத் தீற்றிய புல். 396

வேந்தன் மதித்து உணரப்பட்டாரைக் கொண்டு, ஏனை
மாந்தரும் ஆங்கே மதித்து உணர்ப;—ஆய்ந்த
நல மென் கதுப்பினாய்!—நாடின் நெய் பெய்த
கலமே நெய் பெய்துவிடும். 397

நட்டாரை ஆக்கி, பகை தணித்து, வை எயிற்றுப்
பட்டு ஆர் அகல் அல்குலார்ப் படர்ந்து, ஒட்டித்
தொடங்கினார் இல்லத்து, அதன்பின் துறவா
உடம்பினால் என்ன பயன்? 398

பூத்தாலும் காயா மரம் உள; மூத்தாலும்
நன்கு அறியார் தாமும் நனி உளர்; பாத்தி
விதைத்தாலும் நாருத வித்து உள்; பேதைக்கு
உரைத்தாலும் தோன்ருது உணர்வு. 399

நாண் இன்றி ஆகாது, பெண்மை; நயவிய
ஊண் இன்றி ஆகாது, உயிர் வாழ்க்கை; பேணுங்கால்,
கைத்து இன்றி ஆகா, கருமங்கள்;—காரிகையாய்!—
வித்து இன்றிச் சம்பிரதம் இல். 400



## மிகைப் பாடல்கள்

அருளுடைமை, கொல்லாமை, ஐந்து அடக்கல், வாய்மை,
இருள் அடையாக் கல்வியொடு, ஈகை, புரை இல்லா
உள்ளத்தில் நீர்த்தம் இவை உளவாகப் பெற்ருல்,—
வெள்ளத்தில் நீர்த்தம் மிகை. (புறத்திரட்டு-146)

'அமையப் பொருள் இல்லார் ஆற்ருதார்' என்பது
இமையத்து அனையார்கண் இல்லை;—சிமைய
நகை ஏர் இலங்கு அருவி நல் வரை நாட!
நகையேதான் ஆற்றிவிடும். (புறத்திரட்டு-1107)

அறியாமையோடு இளமை ஆவதாம்; ஆங்கே,
செறியப் பெறுவதாம் செல்வம்;—சிறிய
பிறை பெற்ற வாணுதலாய்!—தானே ஆடும் பேய்,
பறை பெற்ருல் ஆடாதோ, பாய்ந்து? (புறத்திரட்டு-1139)

## தற்சிறப்புப் பாயிரம்

பிண்டியின் நீழற் பெருமான் அடி வணங்கி,
பண்டைப் பழமொழி நானூறும் கொண்டு, இனிதா,
முன்றுறை மன்னவன், நான்கு அடியும் செய்து அமைத்தான்,
இன் துறை வெண்பா இவை.

# நான்மணிக்கடிகை

கீழ்க்கணக்கு நூல்களுள் அடி அளவினால் நாலடியார் பெயர் பெற்றது போல, பாடல்களில் கூறப்பெறும் பொருள்களின் அளவால் **நான்மணிக்கடிகை** பெயர் பெற்றுள்ளது. கடிகை என்பது துண்டம் என்று பொருள்படும். எனவே, நான்மணிக்கடிகை என்னும் தொடர் நான்கு இரத்தினத் துண்டங்கள் என்னும் பொருளைத் தருவதாகும். ஒவ்வொரு பாடலிலும், ஒத்த நான்கு சிறந்த கருத்துக்களைத் தேர்ந்தெடுத்துப் பிணைத்து, அழகிய சொற் கோவைகளில் ஆசிரியர் அமைத்துள்ளனர். அதனோடு சொல்லும் முறைமையிலும் ஓர் ஒருமைப்பாடு அமைந்திருத்தலை நூல் முழுவதும் காணலாம். ஆடூஉ முன்னிலை, மகடூஉ முன்னிலை ஆகிய இடைப் பிறவரல்கள் இன்றி, நந்நான்கு பொருள்களைப் பாடல்தோறும் திறம்பட அமைத்துள்ள ஆசிரியரின் புலமைத் திறனும் கவித் திறனும் வியக்கத்தக்கனவாம்.

இதனை இயற்றியவர் **விளம்பி நாகனார்** என்பவராவர். நாகனார் என்பது இவரது இயற்பெயரையும் விளம்பி என்பது இவரது ஊர்ப் பெயரையும் குறிப்பதாகக் கொள்ளலாம். இள நாகனார், இனிசந்த நாகனார், வெள்ளைக்குடி நாகனார், என்று இவ்வாறு 'நாகனார்' என்ற பெயரைத் தாங்கிய புலவர் பலர் தொகைநூல்களில் காணப்படுகின்றனர். எனவே, நாகனார் என்பது நெடுங்காலமாகத் தமிழ்நாட்டில் வழங்கிவரும் ஒரு பெயரே ஆகும். விளம்பி என்பது ஊர்ப் பெயர் அன்றி, வேறு காரணம் பற்றிய அடைமொழியாக இருத்தலும் கூடும்.

இவர் பெயர் சங்கத்துச் சான்றோர் பெயர் வரிசையில் காணப்பெறாமையினாலும், கீழ்க்கணக்கு நூலாசிரியர்களைப் 'பிற்சான்றோர்' எனப் பேராசிரியர் குறித்துள்ளமையினாலும், இவர் சங்க காலத்திற்குப் பிற்பட்டவர் என்பது தெளிவு. சங்க நூல் கருத்துக்களையும், திருக்குறளின் கருத்துக்களையும் இவரது நூல் சிற்சில இடங்களில் அடியொற்றிச் செல்லுகிறது. 'நாக்கு' (75) என்ற பிற்காலச் சொல் வடிவம் இதன்கண் எடுத்தாளப் பெறுதலும், அசனம் (79), ஆசாரம் (93), சேனாபதி (52) முதலிய வடசொல் ஆட்சிகளும், 'எஞ்சாமை' (25) முதலிய எதிர்மறைத் தொழிற் பெயரை எதிர்மறை வியங்கோட் பொருளில் வழங்கியிருத்தலும், பிறவும், இவர் பிற்சான்றோர் என்பதை உறுதிப்படுத்துவனவாம். இந்நூலுள் வரும் 'அல்லவை செய்வார்க்கு அறம் கூற்றம்' (82) என்னும் செய்யுள் அடியும், 'அல்லவை செய்தார்க்கு அறம் கூற்றம் ஆம் என்னும் பல்லவையோர் சொல்லும் பழுது அன்றே' என்னும் சிலப்பதிகார வெண்பாப் பகுதியும் சொற்பொருள் ஒற்றுமையுடையன. 'பல்லவையோர் சொல்' என்று சிலப்பதிகாரம் சுட்டுவதால், இது அக்காலத்துப் பெருக வழங்கிய ஒரு பழமொழியாகலாம். இரண்டு நூல்களும் இதனை எடுத்தாளுதலினால், இந்நூல்கள் ஒரே காலப்பகுதியில் தோன்றியனபோலும்!

இந் நூலின் முதற்கண் உள்ள கடவுள் வாழ்த்துச் செய்யுட்கள் இரண்டும் மாயவனைப் பற்றியவை. எனவே, இந் நூலாசிரியரை வைணவ சமயத்தினர் என்று கொள்ளலாம்.

கடவுள் வாழ்த்துச் செய்யுட்கள் இரண்டு நீங்கலாக இந்நூலுள் 101 செய்யுட்கள் உள்ளன. 'மதி மன்னும் மாயவன்' என்ற கடவுள் வாழ்த்தும், நூலுள், 'கற்பக் கழிமடம் அஃகும் (27)', 'இனிது உண்பான் என்பான்' (58), என்னும் இரு செய்யுட்களும் பஃறொடை வெண்பாக்கள். ஏனைய எல்லாம் நேரிசை, இன்னிசை, அளவியல்

வெண்பாக்கள். மூன்று செய்யுட்கள் பா வகையால் வேறுபட்டபோதிலும், இவற்றிலும் நந்நான்கு பொருள்களே அமைந்துள்ளன. 'நான்மணிக்கடிகை சதம்' என்று பிரபந்த தீபிகை ஆசிரியர் அளவு குறித்த போதிலும், மேற்குறித்த 101 செய்யுட்களுக்கும் பழைய உரை காணப்பெறுதலின், அவ் உரைகாரர் காலத்திலேயே நான்மணிக்கடிகை இவ்வாறு அமைந்துள்ளமை தெளிவாம்.

சுன்னுகம் குமாரசுவாமிப் பிள்ளை அவர்கள் வெளியிட்ட யாழ்ப்பாணப் பதிப்பில், 'கல்லில் பிறக்கும்' (5), 'நகை இனிது' (36), 'யானை உடையார்' (53), என்னும் மூன்று செய்யுட்களும் காணப்படவில்லை. 65, 66-ஆம் செய்யுட்கள் முன்பின்னாக வரிசை மாறி உள்ளன. 'புகை வித்தாப்' (30) என்ற செய்யுளின் பின், 'முனியார் அரிய' எனத் தொடங்கும் ஒரு புதிய செய்யுள் தரப்பட்டுள்ளது. இது மிகைப் பாடலாக இப்பதிப்பில் நூல் இறுதியில் இணைக்கப்பெற்றுள்ளது.

இந் நூலுக்குப் பழைய பொழிப்புரை ஒன்று உள்ளது. சிற்சில இடங்களில் பொருள் நயத்தைத் தனிப்பட எடுத்துக்காட்டுவதோடு, பாட வேறுபாடுகளையும் ஒரு சில இடங்களில் சுட்டிக் காட்டிக் கருத்தைப் புலப்படுத்தியும் இவ் உரை அமைந்துள்ளது. சுருக்கமும் தெளிவும் இவ் உரையின் தனி இயல்புகள்.

# நான்மணிக்கடிகை

(விளம்பி நாகனார்)

## கடவுள் வாழ்த்து

மதி மன்னும் மாயவன் வாள் முகம் ஒக்கும்;
கதிர் சேர்ந்த ஞாயிறு சக்கரம் ஒக்கும்;
முது நீர்ப் பழனத்துத் தாமரைத் தாளின்
எதிர் மலர் மற்று அவன் கண் ஒக்கும்; பூவைப்
புது மலர் ஒக்கும், நிறம்.

படியை மடியகத்து இட்டான்; அடியினன்
முக் கால் கடந்தான் முழு நிலம்; அக் காலத்து
ஆன் நிரை தாங்கிய, குன்று எடுத்தான்;—சோவின்
அருமை அழித்த மகன்.

## நூல்

எள்ளற்க, என்றும் எளியர் என்று! என் பெறினும்
கொள்ளற்க, கொள்ளார் கை மேற்பட! உள் சுடினும்
சீறற்க, சிற்றில் பிறந்தாரை! கூறற்க,
கூறல்லவற்றை விரைந்து! 1

பறை பட வாழா, அசுணமா; உள்ளம்
குறை பட வாழார், உரவோர்; நிறை வனத்து
நெல் பட்டகண்ணே வெதிர் சாம்; தனக்கு ஒவ்வாச்
சொல் பட்டால், சாவதாம் சால்பு. 2

மண்ணி அறிப, மணி நலம்; பண் அமைத்து
ஏறியபின் அறிப, மா நலம்; மாசு அறச்
சுட்டு அறிப, பொன்னின் நலம் காண்பார்; கெட்டு அறிப,
கேளிரான் ஆய பயன். 3

கள்ளி வயிற்று இன் அகில் பிறக்கும்; மான் வயிற்று
ஒள் அரிதாரம் பிறக்கும்; பெருங் கடலுள்
பல் விலைய முத்தம் பிறக்கும்; அறிவார் யார்,
நல் ஆள் பிறக்கும் குடி? 4

கல்லில் பிறக்கும், கதிர் மணி; காதலி
சொல்லில் பிறக்கும், உயர் மதம்; மெல்லென்
அருளில் பிறக்கும், அற நெறி; எல்லாம்
பொருளில் பிறந்துவிடும். 5

திரு ஒக்கும், தீது இல் ஒழுக்கம்; பெரிய
அறன் ஒக்கும், ஆற்றின் ஒழுகல்; பிறனைக்
கொலை ஒக்கும், கொண்டு கண்மாறல்; புலை ஒக்கும்,
போற்றாதார் முன்னர்ச் செலவு. 6

'கள்வம்!' என்பார்க்கும் துயில் இல்லை; காதலிமாட்டு
உள்ளம் வைப்பார்க்கும் துயில் இல்லை; 'ஒண் பொருள்
செய்வம்!' என்பார்க்கும் துயில் இல்லை; அப் பொருள்
காப்பார்க்கும் இல்லை, துயில். 7

கற்றார்முன் தோன்றா, கழிவு இரக்கம்; காதலித்து ஒன்று
உற்றார்முன் தோன்றா, உறா முதல்; தெற்றென
அல்ல புரிந்தார்க்கு அறம் தோன்றா; எல்லாம்
வெகுண்டார்முன் தோன்றா கெடும். 8

நிலத்துக்கு அணி என்ப, நெல்லும் கரும்பும்;
குளத்துக்கு அணி என்ப, தாமரை; பெண்மை
நலத்துக்கு அணி என்ப, நாணம்; தனக்கு அணி
தான் செல் உலகத்து அறம். 9

கந்தில் பிணிப்பர், களிற்றை; கதம் தவிர,
மந்திரத்தினால் பிணிப்பர், மா நாகம்; கொந்தி,
இரும்பின் பிணிப்பர், கயத்தை; சான்றோரை
நயத்தின் பிணித்துவிடல்! 10

கன்றாமை வேண்டும், கடிய; பிறர் செய்த
நன்றியை நன்றாக் கொளல் வேண்டும்; என்றும்
விடல் வேண்டும், தன்கண் வெகுளி; அடல்வேண்டும்,
ஆக்கம் சிதைக்கும் வினை. 11

பல்லினான் நோய் செய்யும், பாம்பு எல்லாம்; கொல் களிறு
கோட்டான் நோய் செய்யும், குறித்தாரை; ஊடி,
முகத்தான் நோய் செய்வர், மகளிர்; முனிவர்
தவத்தின் தருக்குவர், நோய். 12

பறை நன்று, பண் அமையா யாழின்; நிறை நின்ற
பெண் நன்று, பீடு இலா மாந்தரின்; பண் அழிந்து
ஆர்தலின் நன்று, பசித்தல்; பசைந்தாரின்
தீர்தலின் தீப் புகுதல் நன்று. 13

வளப் பாத்தியுள் வளரும், வண்மை; கிளைக் குழாம்
இன் சொற் குழியுள் இனிது எழூஉம்; வன் சொல்,
கரவு எழூஉம், கண் இல் குழியுள்; இரவு எழூஉம்,
இன்மைக் குழியுள் விரைந்து. 14

இன்னாமை வேண்டின், இரவு எழுக! இந் நிலத்து
மன்னுதல் வேண்டின், இசை நடுக! தன்னொடு
செல்வது வேண்டின், அறம் செய்க! வெல்வது
வேண்டின், வெகுளி விடல்! 15

கடற் குட்டம் போழ்வர், கலவர்; படைக் குட்டம்
பாய்மா உடையான் உடைக்கிற்கும்; தோம் இல்
தவக் குட்டம் தன்னுடையான் நீந்தும்; அவைக் குட்டம்
கற்றான் கடந்துவிடும். 16

பொய்த்தல் இறுவாய, நட்புக்கள்; மெய்த்தாக
மூத்தல் இறுவாய்த்து, இள நலம்; தூக்கு இல்
மிகுதி இறுவாய, செல்வங்கள்; தம்தம்
தகுதி இறுவாய்த்து, உயிர். 17

மனைக்கு ஆக்கம் மாண்ட மகளிர்; ஒருவன்
வினைக்கு ஆக்கம் செவ்வியன் ஆதல்; சினச் செவ் வேல்,
நாட்டு ஆக்கம் நல்லன் இவ் வேந்து என்றல்; கேட்டு ஆக்கம்
கேளிர் ஒரீஇவிடல். 18

பெற்றான் அதிர்ப்பின், பிணை அன்னாள்தான் அதிர்க்கும்;
கற்றான் அதிர்ப்பின், பொருள் அதிர்க்கும்; பற்றிய
மண் அதிர்ப்பின், மன்னவன் கோல் அதிர்க்கும்; பண் அதிர்ப்பின்,
பாடல் அதிர்ந்துவிடும். 19

மனைக்குப் பாழ், வாணுதல் இன்மை; தான் செல்லும்
திசைக்குப் பாழ், நட்டோரை இன்மை; இருந்த
அவைக்குப் பாழ், மூத்தோரை இன்மை; தனக்குப் பாழ்,
கற்று அறிவு இல்லா உடம்பு. 20

மொய சிதைக்கும், ஒற்றுமை இன்மை; ஒருவனைப்
பொய் சிதைக்கும், பொன் போலும் மேனியை; பெய்த
கலம் சிதைக்கும், பாலின் சுவையை; குலம் சிதைக்கும்,
கூடார்கண் கூடிவிடின். 21

புகழ் செய்யும், பொய்யா விளக்கம்; இகழ்ந்து ஒருவன்
பேணாமை செய்வது பேதைமை; காணாக்
குருடராச் செய்வது மம்மர்; இருள் தீர்ந்த
கண்ணராச் செய்வது, கற்பு. 22

மலைப்பினும், வாரணம் தாங்கும்; குழவி,
அலைப்பினும், 'அன்னே!' என்று ஓடும்; சிலைப்பினும்,
நட்டார் நடுங்கும் வினை செய்யார்; ஒட்டார்
உடன் உறையும் காலமும் இல். 23

நசை நலம் நட்டார்கண் நந்தும்; சிறந்த
அவை நலம் அன்பின் விளங்கும்; விசை மாண்ட
தேர் நலம் பாகனால் பாடு எய்தும்; ஊர் நலம்
உள்ளானால் உள்ளப்படும். 24

அஞ்சாமை அஞ்சுக! ஒன்றின், தனக்கு ஒத்த
எஞ்சாமை, எஞ்சும் அளவு எல்லாம்! நெஞ்சு அறியக்
கோடாமை, கோடி பொருள் பெறினும்! நாடாமை,
நட்டார்கண் விட்ட வினை! 25

கோல் நோக்கி வாழும், குடி எல்லாம்; தாய் முலையின்
பால் நோக்கி வாழும், குழவிகள்; வானத்
துளி நோக்கி வாழும், உலகம்; உலகின்
விளி நோக்கி இன்புறூஉம், கூற்று. 26

கற்ப, கழி மடம் அஃகும்; மடம் அஃக,
புற்கம் தீர்ந்து, இவ் உலகில் கோள் உணரும்; கோள் உணர்ந்தால்,
தத்துவம் ஆன நெறி படரும்; அந் நெறியே
இப்பால் உலகத்து இசை நிறீஇ, உப்பால்
உயர்ந்த உலகம் புகும். 27

குழித்துழி நிற்பது நீர்; தன்னைப் பல்லோர்
பழித்துழி நிற்பது பாவம்; அழித்துச்
செறுவுழி நிற்பது காமம்; தனக்கு ஒன்று
உறுவுழி நிற்பது அறிவு. 28

திருவின் திறல் உடையது இல்லை, ஒருவற்கு;
கற்றலின் வாய்த்த பிற இல்லை; எற்றுள்ளும்
இன்மையின் இன்னாதது இல்லை; 'இலம்!' என்னும்
வன்மையின் வன்பாட்டது இல். 29

புகை வித்தாப் பொங்கு அழல் தோன்றும்; சிறந்த
நகை வித்தாத் தோன்றும், உவகை; பகை, ஒருவன்
முன்னம் வித்து ஆக முளைக்கும்; முளைத்தபின்,
இன்னா வித்து ஆகிவிடும். 30

பிணி அன்னர், பின் நோக்காப் பெண்டிர்; உலகிற்கு
அணி அன்னர், அன்புடைய மக்கள்; பிணி பயிலும்
புல் அன்னர், புல் அறிவின் ஆடவர்; கல் அன்னர்,
வல்லென்ற நெஞ்சத்தவர். 31

அந்தணரின் மிக்க பிறப்பு இல்லை; என் செயினும்,
தாயின் சிறந்த தமர் இல்லை; யாதும்
வளமையோடு ஒக்கும் வனப்பு இல்லை; எண்ணின்,
இளமையோடு ஒப்பதூஉம் இல். 32

இரும்பின் இரும்பு இடை போழ்ப; பெருஞ் சிறப்பின்
நீர் உண்டார் நீரான் வாய் பூசுப; தேரின்,
அரிய அரியவற்றால் கொள்ப; பெரிய
பெரியரான் எய்தப்படும். 33

மறக் களி மன்னர் முன் தோன்றும்; சிறந்த
அறக் களி இல்லாதார்க்கு ஈயும்முன் தோன்றும்;
வியக் களி நல்கூர்ந்தார் மேற்றாம்; கயக் களி
ஊரில் பிளிற்றிவிடும். 34

மையால் தளிர்க்கும், மலர்க்கண்கள்; மால் இருள்,
நெய்யால் தளிர்க்கும், நிமிர் சுடர்; பெய்ய
முழங்கத் தளிர்க்கும், குருகிலை; நட்டார்
வழங்கத் தளிர்க்குமாம், மேல். 35

நகை இனிது, நட்டார் நடுவண்; பொருளின்
தொகை இனிது, தொட்டு வழங்கின்; தகை உடைய
பெண் இனிது, பேணி வழிபடின்; பண் இனிது,
பாடல் உணர்வாரகத்து. 36

கரப்பவர்க்குச் செல்சார் கவிழ்தல்; எஞ் ஞான்றும்
இரப்பவர்க்குச் செல்சார் ஒன்று ஈவோர்; பரப்பு அமைந்த
தானைக்குச் செல்சார் தறுகண்மை; ஊன் உண்டல்
செய்யாமை, செல்சார் உயிர்க்கு. 37

கண்டதே செய்பவாம், கம்மியர்; உண்டு எனக்
கேட்டதே செய்ப, புலன் ஆள்வார்; வேட்ட
இனியவே செய்ப, அமைந்தார்; முனியாதார்
முன்னியவே செய்யும், திரு. 38

திருவும் திணை வகையான் நில்லா; பெரு வலிக்
கூற்றமும் கூறுவ செய்து உண்ணுது; ஆற்ற
மறைக்க மறையாதாம், காமம்; முறையும்
இறை வகையான் நின்றுவிடும். 39

பிறக்குங்கால், 'பேர்' எனவும் பேரா; இறக்குங்கால்,
'நில்' எனவும் நில்லா;—உயிர் எனைத்தும். நல்லாள்
உடம்படின், தானே பெருகும்; கெடும் பொழுதில்,
கண்டனவும் காணு கெடும். 40

போர் அறின், வாடும், பொருநர் சீர்; கீழ் வீழ்ந்த
வேர் அறின், வாடும், மரம் எல்லாம்; நீர் பாய்
மடை அறின், நீள் நெய்தல் வாடும்; படை அறின்,
மன்னர் சீர் வாடிவிடும். 41

ஏதிலார் என்பார் இயல்பு இல்லார்; யார் யார்க்கும்
காதலார் என்பார் தகவு உடையார்; மேதக்க
தந்தை எனப்படுவான் தன் உவாத்தி; தாய் என்பாள்
முந்து தான் செய்த வினை. 42

பொறி கெடும், நாண் அற்ற போழ்தே; நெறிப்பட்ட
ஐவரால் தானே வினை கெடும்; பொய்யா
நலம் கெடும், நீர் அற்ற பைங் கூழ்; நலம் மாறின்,
நண்பினர் நண்பு கெடும். 43

நன்றி சாம், நன்று அறியாதார் முன்னர்; சென்ற
விருந்தும் விருப்பு இலார் முன் சாம்; அரும் புணர்ப்பின்
பாடல் சாம், பண் அறியாதார் முன்னர்; ஊடல் சாம்
ஊடல் உணராரகத்து. 44

நாற்றம் உரைக்கும், மலர் உண்மை; கூறிய
மாற்றம் உரைக்கும், வினை நலம்; தூக்கின்,
அகம் பொதிந்த தீமை மனம் உரைக்கும்; முன்னம்
முகம் போல முன் உரைப்பது இல். 45

மழை இன்றி மாநிலத்தார்க்கு இல்லை; மழையும்
தவம் இலார் இல்வழி இல்லை; தவமும்
அரசு இலார் இல்வழி இல்லை; அரசனும்
இல்வாழ்வார் இல்வழி இல். 46

போதினுன் நந்தும், புனை தண் தார்; மற்று அதன்
தாதினுன் நந்தும், சுரும்பு எல்லாம்; தீது இல்
வினையினுன் நந்துவர், மக்களும்; தம்தம்
நனையினுன் நந்தும், நறு. 47

சிறந்தார்க்கு அரிய, செறுதல்; எஞ் ஞான்றும்
பிறந்தார்க்கு அரிய, துணை துறந்து வாழ்தல்;
வரைந்தார்க்கு அரிய, வகுத்து ஊண்; இரந்தார்க்கு ஒன்று
'இல்' என்றல் யார்க்கும் அரிது. 48

இரை சுடும், இன்புறு யாக்கையுள் பட்டால்;
உரை சுடும், ஒண்மை இலாரை; வரை கொள்ளா
முன்னை ஒருவன் வினை சுடும்; வேந்தனையும்,
தன் அடைந்த சேனை சுடும். 49

எள்ளற்பொருளது, இகழ்தல்; ஒருவனை
உள்ளற்பொருளது, உறுதிச் சொல்; உள் அறிந்து,
சேர்தற்பொருளது, அற நெறி; பல் நூலும்
தேர்தற்பொருள, பொருள். 50

யாறு உள் அடங்கும் குளம் உள; வீறு சால்
மன்னர் விழையும் குடி உள; தொல் மரபின்
வேதம் உறுவன பாட்டு உள; வேளாண்மை
வேள்வியோடு ஒப்ப உள. 51

எருது உடையான் வேளாளன்; ஏலாதான் பார்ப்பான்,
ஒரு தொடையான் வெல்வது கோழி; உருவோடு
அறிவு உடையாள் இல்வாழ்க்கைப் பெண்என்ப; சேனைச்
செறிவு உடையான் சேனுபதி. 52

யானை உடையார் கதன் உவப்பர்; மன்னர்
கடும் பரி மாக் காதலித்து ஊர்வர்; கொடுங் குழை
நல்லாரை நல்லவர் நாண் உவப்பர்; அல்லாரை
அல்லார் உவப்பது கேடு. 53

கண்ணின் சிறந்த உறுப்பு இல்லை; கொண்டானின்
துன்னிய கேளிர் பிறர் இல்லை; மக்களின்
ஒண்மைய வாய் சான்ற பொருள் இல்லை; ஈன்றாளின்
என்ன கடவுளும் இல். 54

கற்றன்னர், கற்றாரைக் காதலர்; கண்ணோடார்
செற்றன்னர்; செற்றாரைச் சேர்ந்தவர், தெற்றென
உற்றது உரையாதார்; உள் கரந்து பாம்பு உறையும்
புற்று அன்னர், புல்லறிவினார். 55

மாண்டவர் மாண்ட வினை பெறுப; வேண்டாதார்
வேண்டா வினையும் பெறுபவே; யாண்டும்,
பிறப்பால் பிறப்பார் அறன் இன்புறுவர்;
துறப்பார், துறக்கத்தவர். 56

என்றும் உளவாகும், நாளும், இரு சுடரும்;
என்றும், பிணியும், தொழில், ஒக்கும்; என்றும்
கொடுப்பாரும் கொள்வாரும் அன்னர்; பிறப்பாரும்
சாவாரும் என்றும் உளர். 57

இனிது உண்பான் என்பான் உயிர் கொல்லாது உண்பான்;
முனிதக்கான் என்பான் முகன் ஒழிந்து வாழ்வான்;
தனியன் எனப்படுவான் செய்த நன்று இல்லான்;
இனியன் எனப்படுவான் யார் யார்க்கேயானும்
முனியா ஒழுக்கத்தவன். 58

ஈத்து உண்பான் என்பான் இசை நடுவான்; மற்று அவன்
கைத்து உண்பான் காங்கி எனப்படுவான்; தெற்ற
நகை ஆகும், நண்ணார்முன் சேறல்; பகை ஆகும்,
பாடு அறியாதானை இரவு. 59

நெய் விதிர்ப்ப, நந்தும், நெருப்பு அழல்; சேர்ந்து
வழுத்த, வரம் கொடுப்பர், நாகர்; தொழுத்து இறந்து
கன்று ஊட்ட, நந்தும், கறவை; கலம் பரப்பி
நன்று ஊட்ட, நந்தும், விருந்து. 60

பழி இன்மை மக்களால் காண்க! ஒருவன்
கெழி இன்மை கேட்டால் அறிக! பொருளின்
நிகழ்ச்சியான், ஆக்கம் அறிக! புகழ்ச்சியான்,
போற்றுதார் போற்றப்படும். 61

கண்ணுள்ளும் காண்புழிக் காதற்றும்; பெண்ணுள்
உரு இன்றி மாண்ட உளவாம்; ஒருவழி,
நாட்டுள்ளும் நல்ல பதி உள; பாட்டுள்ளும்
பாடு எய்தும் பாட்டே உள. 62

திரி அழல் காணின், தொழுப; விறகின்
எரி அழல் காணின், இகழ்ப; ஒரு குடியில்
கல்லாது மூத்தானைக் கைவிட்டு, கற்றான்
இளமை பாராட்டும், உலகு. 63

கைத்து உடையான் காமுற்றது உண்டாகும்; வித்தின்
முளைக் குழாம் நீர் உண்டேல், உண்டாம்; திருக் குழாம்
ஒண் செய்யாள் பார்த்துறின், உண்டாகும்; மற்று அவள்
துன்புறுவாள்ஆகின், கெடும். 64

ஊன் உண்டு உழுவை நிறம் பெறூஉம்; நீர் நிலத்துப்
புல்லினான் இன்புறூஉம், காலேயம்; நெல்லின்
அரிசியான் இன்புறூஉம், கீழ் எல்லாம்; தம்தம்
வரிசையான் இன்புறூஉம், மேல். 65

பின்னவாம், பின் அதிர்க்கும் செய்வினை; என் பெறினும்
முன்னவாம், முன்னம் அறிந்தார்கட்கு; என்னும்
அவா ஆம், அடைந்தார்கட்கு உள்ளம்; தவாவாம்,
அவா இல்லார் செய்யும் வினை. 66

கைத்து இல்லார் நல்லவர், கைத்து உண்டாய்க் காப்பாரின்;
வைத்தாரின் நல்லர், வறியவர்; பைத்து எழுந்து
வைதாரின் நல்லர், பொறுப்பவர்; செய்தாரின்
நல்லர், சிதையாதவர். 67

மகன் உரைக்கும், தந்தை நலத்தை; ஒருவன்
முகன் உரைக்கும், உள் நின்ற வேட்கை; அகல் நீர்ப்
பிலத்து இயல்பு புக்கான் உரைக்கும்; நிலத்து இயல்பு
வானம் உரைத்துவிடும். 68

பதி நன்று, பல்லார் உறையின்; ஒருவன்
மதி நன்று, மாசு அறக் கற்பின்; நுதி மருப்பின்
ஏற்முன் வீறு எய்தும், இன நிரை; தான் கொடுக்கும்
சோற்ருன் வீறு எய்தும், குடி. 69

ஊர்ந்தான் வகைய, கலின மா; நேர்ந்து ஒருவன்
ஆற்றல் வகைய, அறம் செயல்; தோட்ட
குளத்து அனைய, தூம்பின் அகலங்கள்; தம்தம்
வளத்து அனைய, வாழ்வார் வழக்கு. 70

ஊழியும் யாண்டு எண்ணி யாத்தன; யாமமும்
நாழிகையானே நடந்தன; தாழீயா,
தெற்றென்ருர்கண்ணே தெளிந்தனர்; வெட்கென்ருர்
வெஞ் சொலால் இன்புறுவார். 71

கற்ருன் தளரின், எழுந்திருக்கும்; கல்லாத
பேதையான் வீழ்வானேல், கால் முரியும்; எல்லாம்
ஒருமைத் தான் செய்த கருவி; தெரியின், மெய்
பொய்யா வித்து ஆகிவிடும். 72

தேவர் அனையர், புலவரும்; தேவர்
தமர் அனையர், ஓர் ஊர் உறைவார்; தமருள்ளும்
பெற்றன்னர், பேணி வழிபடுவார்; கற்றன்னர்,
கற்ருரைக் காதலவர். 73

தூர்ந்து ஒழியும், பொய் பிறந்த போழ்தே; மருத்துவன்,
'சொல்' என்ற போழ்தே, பிணி உரைக்கும்; நல்லார்,
'விடுக!' என்ற போழ்தே விடுக! அதற்கு உரியான்,
'தா' எனின், தாயம் வகுத்து! 74

நாக்கின் அறிப, இனியவை; மூக்கினுன்
மோந்து அறிப, எல்லா மலர்களும்; நோக்குள்ளும்
கண்ணினுன் காண்ப, அணியவற்றை; தொக்கு இருந்து,
எண்ணினுன் எண்ணப்படும். 75

சாவாத இல்லை, பிறந்த உயிர் எல்லாம்;
தாவாத இல்லை, வலிகளும்; மூவா
இளமை இயைந்தாரும் இல்லை; வளமையில்
கேடு இன்றிச் சென்ருரும் இல். 76

சொல்லான் அறிப, ஒருவனை; மெல்லென்ற
நீரான் அறிப, மடுவினை; யார்கண்ணும்
ஒப்புரவினான் அறிப, சான்றாண்மை; மெய்க்கண்
மகிழான் அறிப, நறா. 77

நா அன்றோ, நட்பு அறுக்கும்? தேற்றம் இல் பேதை
விடும் அன்றோ, வீங்கப் பிணிப்பின்? அவாஅப்
படும் அன்றோ, பல் நூல் வலையில்? அடும் அன்றோ,
மாறு உள் நிறுக்கும் துணிபு? 78

கொடுப்பின், அசனம் கொடுக்க! விடுப்பின்,
உயிர் இடையீட்டை விடுக்க! எடுப்பின்,
கிளையுள் அழிந்தார் எடுக்க! கெடுப்பின்,
வெகுளி கெடுத்துவிடல்! 79

நலனும் இளமையும் நல்குரவின்கீழ்ச் சாம்;
குலனும் குடிமையும் கல்லாமைக்கீழ்ச் சாம்;
வளம் இல் குளத்தின்கீழ் நெல் சாம்; பரம் அல்லாப்
பண்டத்தின்கீழ்ச் சாம், பகடு. 80

நல்லார்க்கும் தம் ஊர் என்று ஊர் இல்லை; நன்னெறிச்
செல்வார்க்கும் தம் ஊர் என்று ஊர் இல்லை; அல்லாக்
கடைகட்கும் தம் ஊர் என்று ஊர் இல்லை; தம் கைத்து
உடையார்க்கும் எவ் ஊரும் ஊர். 81

கல்லா ஒருவர்க்குத் தம் வாயில் சொல் கூற்றம்;
மெல் இலை வாழைக்குத் தான் ஈன்ற காய் கூற்றம்;
அல்லவை செய்வார்க்கு அறம் கூற்றம்; கூற்றமே,
இல் இருந்து தீங்கு ஒழுகுவாள். 82

நீரான் வீறு எய்தும், விளை நிலம்; நீர் வழங்கும்
பண்டத்தால் பாடு எய்தும், பட்டினம்; கொண்டு ஆளும்
நாட்டான் வீறு எய்துவர், மன்னவர்; கூத்து ஒருவன்
பாடலான் பாடு பெறும். 83

ஒன்று ஊக்கல், பெண்டிர் தொழில் நலம்; என்றும்
அறன் ஊக்கல், அந்தணர் உள்ளம்; பிறன் ஆளும்
நாடு ஊக்கல், மன்னர் தொழில் நலம்; கேடு ஊக்கல்,
கேளிர் ஒரீஇவிடல். 84

கள்ளாமை வேண்டும், கடிய வருதலான்;
தள்ளாமை வேண்டும், தகுதி உடையன;
நள்ளாமை வேண்டும், சிறியரோடு; யார்மாட்டும்
கொள்ளாமை வேண்டும், பகை. 85

பெருக்குக, நட்டாரை நன்றின்பால் உய்த்து!
தருக்குக, ஒட்டாரைக் காலம் அறிந்தே!
அருக்குக, யார்மாட்டும் உண்டி! சுருக்குக,
செல்லா இடத்துச் சினம்! 86

மடிமை கெடுவார்கண் நிற்கும்; கொடுமைதான்
பேணுமை செய்வார்கண் நிற்குமாம்; பேணிய
நாணின் வரை நிற்பர், நற் பெண்டிர்; நட்டு அமைந்த
தூணின்கண் நிற்கும், களிறு. 87

மறை அறிப, அந்தண் புலவர்; முறையொடு
வென்றி அறிப, அரசர்கள்; என்றும்
வணங்கல் அணிகலம், சான்ருேர்க்கு; அஃது அன்றி,
அணங்கல் வணங்கின்று, பெண். 88

பட்டாங்கே பட்டு ஒழுகும், பண்பு உடையாள்; காப்பினும்,
பெட்டாங்கு ஒழுகும், பிணையிலி; முட்டினும்,
சென்ருங்கே சென்று ஒழுகும், காமம்; கரப்பினும்,
கொன்ருன்மேல் நிற்கும், கொலே. 89

வன்கண் பெருகின், வலி பெருகும்; பால்மொழியார்
இன்கண் பெருகின், இனம் பெருகும்; சீர் சான்ற
மென்கண் பெருகின், அறம் பெருகும்; வன்கண்
கயம் பெருகின், பாவம் பெரிது. 90

இளமைப் பருவத்துக் கல்லாமை குற்றம்;
வளம் இலாப் போழ்தத்து வள்ளன்மை குற்றம்
கிளேஞர் இல் போழ்தில், சினம் குற்றம்; குற்றம்,
தமர் அல்லார் கையகத்து ஊண். 91

எல்லா இடத்தும் கொலே தீது; மக்களேக்
கல்லா வளரவிடல் தீது; நல்லார்
நலம் தீது, நாண் அற்று நிற்பின்; குலம் தீது,
கொள்கை அழிந்தக்கடை. 92

ஆசாரம் என்பது கல்வி: அறம் சேர்ந்த
போகம் உடைமை பொருள் ஆட்சி; யார்கண்ணும்
கண்ணோட்டம் இன்மை முறைமை; தெரிந்து ஆள்வான்
உள் நாட்டம் இன்மையும் இல். 93

கள்ளின் இடும்பை களி அறியும்; நீர் இடும்பை
புள்ளினுள் ஓங்கல் அறியும்; நிரப்பு இடும்பை
பல் பெண்டிராளன் அறியும்; கரப்பு இடும்பை
கள்வன் அறிந்துவிடும். 94

வடுச் சொல் நயம் இல்லார் வாய்த் தோன்றும்; கற்றார் வாய்ச்
சாயினும் தோன்றா, கரப்புச் சொல்; தீய
பரப்புச் சொல் சான்றோர் வாய்த் தோன்றா; கரப்புச் சொல்
கீழ்கள் வாய்த் தோன்றிவிடும். 95

வாலிழையார் முன்னர் வனப்பு இலான் பாடு இலன்;
சாலும் அவைப்படின், கல்லாதான் பாடு இலன்:
கற்றான் ஒருவனும் பாடு இலனே, கல்லாதார்,
பேதையார், முன்னர்ப்படின். 96

மாசு படினும், மணி தன் சீர் குன்றாதாம்;
பூசிக் கொளினும், இரும்பின்கண் மாசு ஒட்டும்;
பாசத்துள் இட்டு, விளக்கினும், கீழ் தன்னை
மாசுடைமை காட்டிவிடும். 97

எண் ஒக்கும், சான்றோர் மரீஇயாரின் தீராமை;
புண் ஒக்கும், போற்றார் உடனுறைவு; பண்ணிய
யாழ் ஒக்கும், நட்டார் கழறும் சொல்; பாழ் ஒக்கும்,
பண்பு உடையாள் இல்லா மனை. 98

ஏரி சிறிதுஆயின், நீர் ஊரும்; இல்லத்து
வாரி சிறிதுஆயின், பெண் ஊரும்; மேலைத்
தவம் சிறிதுஆயின், வினை ஊரும்; ஊரும்,
உரன் சிறிதுஆயின், பகை. 99

அலைப்பான், பிறிது உயிரை ஆக்கலும் குற்றம்;
விலைப்பாலின் கொண்டு, ஊன் மிசைதலும் குற்றம்;
சொலற்பால அல்லாத சொல்லுதலும் குற்றம்;
கொலைப்பாலும் குற்றமே ஆம். 100

மனைக்கு விளக்கம் மடவாள்; மடவாள்-
தனக்குத் தகை சால் புதல்வர்; மனக்கு இனிய
காதல் புதல்வர்க்குக் கல்வியே; கல்விக்கும்,
ஓதின், புகழ் சால் உணர்வு. 101

## மிகைப் பாடல்

[குமாரசுவாமிப் பிள்ளை அவர்கள் வெளியிட்ட யாழ்ப்பாணப் பதிப்பில் மட்டும் 'புகை வித்தாப்' என்னும் 30-ஆம் செய்யுளின் பின் இப் பாடல் காணப்பெறுகிறது.]

முனியார், அரிய முயல்வார்; அவரின்
முனியார், அறம் காமுறுவார்; இனிய
இரங்கார், இசைவேண்டும் ஆடவர்; அன்பிற்கு
உயங்கார், அறிவுஉடையார்.

# திரிகடுகம்

திரிகடுகம், சிறுபஞ்சமூலம், ஏலாதி என்னும் மூன்று கீழ்க்கணக்கு நூல்களும், பெயர் அமைந்துள்ள வகையிலும், நீதிப் பொருள்களைப் பாடல்களில் வகுத்துள்ள முறையிலும், பெரிதும் ஒப்புமை உடையன. இம் மூன்றும் நோய் நீக்கி உடல் நலம் பேணும் மருந்துச் சரக்கின் பெயர்களாகும். இந் நூல்கள் செய்யுள்தோறும் முறையே மூன்றும், ஐந்தும், ஆறும் ஆகிய பொருள்களை அமைத்துக்கொண்டுள்ளன.

திரிகடுகம் என்பது சுக்கு, மிளகு, திப்பிலி, என்னும் மூன்று மருந்துப் பொருளை யும் குறிக்கும்.

திரிகடுகம் சுக்கு மிளகு திப்பிலி (XII, 31)

என்பது திவாகரம். வடமொழியிலுள்ள சுச்ருதம், அஷ்டாங்க ஹ்ருதயம் என்னும் மருத்துவ நூல்களிலும் திரிகடுகத்தின் தன்மை விளக்கப்பட்டுள்ளது. மூன்று மருந்துப் பண்டங்களால் ஆகிய திரிகடுகம் என்னும் மருந்து உடல் நலம் பேணு வதை ஒத்து, இந் நூற் செய்யுட்களில் மும்மூன்றாக உரைக்கப்பெற்ற அறங்களும் உயிர் நலம் பேணுவனவாம். இந்த ஒப்புமை கருதியே இந் நூல் திரிகடுகம் என்னும் பெயர் பெற்றுள்ளது. இக் கருத்தை,

> உலகில், கடுகம் உடலின் நோய் மாற்றும்:
> அலகு இல் அக நோய் அகற்றும்—நிலை கொள்
> திரிகடுகம் என்னும் திகழ் தமிழ்ச் சங்கம்
> மருவு நல்லாதன் மருந்து.

என வரும் பாயிரச் செய்யுளும் உணர்த்துகின்றது.

இந் நூலில் ஒவ்வொரு பாடலிலும் மும்மூன்று செய்திகளை ஒரு பொதுக் கருத்தோடு இணைத்துக் கூறும் முறை போற்றுதற்கு உரித்து. பொதுக் கருத்துக்கள் ஈற்றடியில் வற்புறுத்தப்படுகின்றன. மூன்றாம் அடியின் ஈற்றில், இம் மூன்றும், இவை மூன்றும் (66, 67, 80, 86, 93, 95), இம் மூவர், இவர் மூவர் (51, 79, 96), என மூவர் (13) என்னும் எண்ணுத்தொகைச் சொற்களில் ஒன்றை அமைத்துள்ளார். இவற்றுள் இம் மூன்றும், இம் மூவர் என்பனவே மிகுதியாகப் பயின்றுள்ளன. பெரும் பான்மையான பாடல்களில் மூன்று பொருள்களும் எண்ணும்மைகளால் இணைக்கப் பெற்றுள்ளன; ஒரு சிலவற்றில் உம்மை இன்றிக் கோக்கப்பட்டுள்ளன; இன்னும் சிலவற்றில் தனித்தனி வாக்கியங்களாக உம்மை இன்றி அமைந்துள்ளன. எவ் வகையில் மூன்று பொருள்களைக் கோத்த போதிலும், இறுதியில் தொகைச் சொல்லுட னேயே பொதுக் கருத்து சுட்டப் பெறுகிறது. இங்ஙனமாக, இந் நூலின் அமைப்பு ஒரு குறித்த வரையறையுடன் அமைந்துள்ளது ஒரு தனிச் சிறப்பாகும்.

திருக்குறள், நாலடியார், நான்மணிக்கடிகை என்னும் நூல்களின் கருத்துக்களை இந் நூல் பின்பற்றியுள்ளது. இந் நூற்கருத்துக்களை இனியவை நாற்பது பெரிதும் தழுவியுள்ளது. இதனால், இந்த இரு நூல்களுக்கும் ஒப்புமை மிகுதியாகக் காணப் படுகிறது. நூல் வழக்கிலும் உலக வழக்கிலும் பயின்ற பழமொழிகள் சிலவற்றை யும் இந் நூல் எடுத்தாண்டுள்ளது. 'உமிக் குற்றுக் கைவருந்துவார்' (28), 'தம் நெய்யில் தாம் பொரியுமாறு' (65), 'துஞ்சு ஊமன் கண்ட கனா' (7), 'தூண்டிலி னுள் பொதிந்த தேரை' (24), 'தூற்றின்கண் தூவிய வித்து' (80) என வருவன பழமொழிகளாகும். இந் நூலில் காணும் சொல்லாட்சிகளும் கருத்துக் கோவைகளும் நல்ல கட்டுக்கோப்புடையனவாய் உள்ளன.

திரிகடுகம் செய்தவர் **நல்லாதனர்**. 'ஆதனர்' என்பதுவே பெயர். 'ஆதனும் பூதனும்' என்ற சூத்திரத்தில் தொல்காப்பியரும் இப் பெயரைக் குறித்துள்ளார் (எழுத். புள்ளி. 53). நல்லச்சுதனர், நல்லழிசியார், நல்லுருத்திரனர் என்னும் புலவர் பெயர்களிற்போல, 'நல்' என்பது அடைமொழியாகும். கடவுள் வாழ்த்துச் செய்யுள் இவர் வைணவ சமயத்தைச் சார்ந்தவர் என்பதைப் புலப்படுத்துகின்றது. இவரைக் குறித்த சிறப்புப் பாயிரச் செய்யுள் ஒன்றினல், இவர் 'திருத்து' என்னும் ஊரினர் என்பது தெரியவருகிறது. 'திருத்து' என்னும் ஊர் திருநெல்வேலித் தாலூக்காவில் உள்ளது. மேலும், இவரைச் 'செரு அடு தோள் நல்லாதன்' என்றும் பாயிரப் பாடல் குறிப்பதால், போர்த் திறமையிலும் இவர் சிறந்து விளங்கியவராதல் வேண்டும்.

இந் நூலுள் கடவுள் வாழ்த்து நீங்கலாக நூறு செய்யுட்கள் உள்ளன. 'திரிகடுகம் ஐ-இருபது ஆகும்' என்று பிரபந்த தீபிகையும் தொன்றுதொட்டு வரும் செய்யுள்-தொகையைக் குறிக்கின்றது. புறத்திரட்டில் வரும் 'பொருள் இல் ஒருவற்கு இளமையும்' (1228) என்ற பாடல் திரிகடுகப் பிரதிகளில் காணப்பெறவில்லை. 'கரப்பவர் நீர்மைத்தாய்' (1222) என்று புறத்திரட்டில் காணும் செய்யுள் பிரதிகள் சிலவற்றில் காணப்பெற்றாலும், நூறு என்னும் பேரெல்லையானும். உரைப் பிரதிகளில் இச் செய்யுள் இன்மையானும், இதனையும் நூலகத்துத் தரவில்லை. புறத்திரட்டில் கண்ட இந்த இரண்டு செய்யுட்களும் நூல் இறுதியில் மிகைப் பாடல்கள் என்னும் தலைப்பில் அமைக்கப் பெற்றுள்ளன. திரிகடுகத்தின் அமைப்பை ஒத்து இந்நூற் பிரதிகள் ஒரு சிலவற்றில் சேர்த்து எழுதப் பெற்ற வேறு இரண்டு பாடல்களும் மிகைப்பாடல் பகுதியில் உடன் இணைக்கப் பெற்றுள்ளன. இதனை அடுத்து, இந் நூலைப் பற்றிய சிறப்புப் பாயிரச் செய்யுட்கள் இரண்டு அமைக்கப் பெற்றுள்ளன.

இந் நூல் முழுமைக்கும் பழைய உரை அமைந்துள்ளது. இது நூற்பொருளைத் தெளிவாக விளக்கி எழுதப் பெற்ற பொழிப்புரை ஆகும்.

# திரிகடுகம்

(நல்லாதனூர்)

## கடவுள் வாழ்த்து

கண் அகல் ஞாலம் அளந்ததூஉம், காமரு சீர்த்
தண் நறும் பூங் குருந்தம் சாய்த்ததூஉம், நண்ணிய
மாயச் சகடம் உதைத்ததூஉம்,—இம் மூன்றும்
பூவைப் பூ வண்ணன் அடி.

## நூல்

அருந்ததிக் கற்பினர் தோளும், திருந்திய
தொல் குடியில் மாண்டார் தொடர்ச்சியும், சொல்லின்
அரில் அகற்றும் கேள்வியார் நட்பும்,—இம் மூன்றும்
திரிகடுகம் போலும் மருந்து. 1

தம் குணம் குன்றாத் தகைமையும், தா இல் சீர்
இன் குணத்தார் ஏவின செய்தலும், நன்கு உணர்வின்
நான்மறையாளர் வழிச் செலவும்,—இம் மூன்றும்
மேல் முறையாளர் தொழில். 2

கல்லார்க்கு இனனா ஒழுகலும், காழ்க் கொண்ட
இல்லாளைக் கோலால் புடைத்தலும், இல்லம்
சிறியாரைக் கொண்டு புகலும்,—இம் மூன்றும்
அறியாமையான் வரும் கேடு. 3

பகை முன்னர் வாழ்க்கை செயலும், தொகை நின்ற
பெற்றத்துள் கோல் இன்றிச் சேறலும், முன் தன்னைக்
காய்வானைக் கை வாங்கிக் கோடலும்,—இம் மூன்றும்
சாவ உறுவான் தொழில். 4

வழங்காத் துறை இழிந்து நீர்ப் போக்கும், ஒப்ப
விழைவு இலாப் பெண்டிர் தோள் சேர்வும், உழந்து
விருந்தினனாய் வேற்றூர் புகலும்,—இம் மூன்றும்
அருந் துயரம் காட்டும் நெறி. 5

பிறர் தன்னைப் பேணுங்கால் நாணலும், பேணார்
திறன் வேறு கூறின் பொறையும், அற வினையைக்
கார் ஆண்மை போல ஒழுகலும்,—இம் மூன்றும்
ஊராண்மை என்னும் செருக்கு. 6

வாளை மீன் உள்ளல் தலைப்படலும், ஆள் அல்லான்
செல்வக் குடியுள் பிறத்தலும், பல் சவையின்
அஞ்சுவான் கற்ற அரு நூலும்,—இம் மூன்றும்
துஞ்சு ஊமன் கண்ட கனா. 7

தொல் அவையுள் தோன்றும் குடிமையும், தொக்கு இருந்த
நல் அவையுள் மேம்பட்ட கல்வியும், வெல் சமத்து
வேந்து உவப்ப அட்டு ஆர்த்த வென்றியும்,—இம் மூன்றும்
தாம் தம்மைக் கூறாப் பொருள். 8

பெருமை உடையார் இனத்தின் அகறல்,
உரிமை இல் பெண்டிரைக் காமுற்று வாழ்தல்,
விழுமிய அல்ல துணிதல்,—இம் மூன்றும்
முழுமக்கள் காதலவை. 9

கணக்காயர் இல்லாத ஊரும், பிணக்கு அறுக்கும்
மூத்தோரை இல்லா அவைக் களனும், பாத்து உண்ணாத்
தன்மையிலாளர் அயல் இருப்பும்,—இம் மூன்றும்
நன்மை பயத்தல் இல. 10

விளியாதான் கூத்தாட்டுக் காண்டலும், வீழக்
களியாதான் காவாது உரையும், தெளியாதான்
கூரையுள் பல் காலும் சேறலும்,—இம் மூன்றும்
ஊர் எலாம் நோவது உடைத்து. 11

தாளாளன் என்பான் கடன் படா வாழ்பவன்;
வேளாளன் என்பான் விருந்து இருக்க உண்ணாதான்;
கோளாளன் என்பான் மறவாதான்;—இம் மூவர்
கேள் ஆக வாழ்தல் இனிது. 12

சீலம் அறிவான் இளங்கிளை; சாலக்
குடி ஓம்ப வல்லான் அரசன்; வடு இன்றி
மாண்ட குணத்தான் தவசி;—என மூவர்
யாண்டும் பெறற்கு அரியார். 13

இழுக்கல் இயல்பிற்று, இளமை; பழித்தவை
சொல்லுதல் வற்ருகும், பேதைமை; யாண்டும்
செறுவோடு நிற்கும், சிறுமை;—இம் மூன்றும்
குறுகார், அறிவுடையார். 14

பொய் வழங்கி வாழும் பொறியறையும், கை திரிந்து
தாழ்விடத்து நேர் கருதும் தட்டையும், ஊழினல்
ஒட்டி வினை நலம் பார்ப்பானும்,—இம் மூவர்
நட்கப் படாஅதவர். 15

மண்ணின்மேல் வான் புகழ் நட்டானும், மாசு இல் சீர்ப்
பெண்ணினுள் கற்புடையாள்-பெற்ருனும், உண்ணு நீர்க்
கூவல் குறை இன்றித் தொட்டானும்,—இம் மூவர்
சாவா உடம்பு எய்தினர். 16

மூப்பின்கண் நன்மைக்கு அகன்ருனும், கற்புடையாள்
பூப்பின்கண் சாராத் தலைமகனும், வாய்ப் பகையுள்
சொல் வென்றி வேண்டும் இலிங்கியும்,—இம் மூவர்
கல்விப் புணை கைவிட்டார். 17

ஒருதலையான் வந்துறூஉம் மூப்பும், புணர்ந்தார்க்கு
இரு தலையும் இன்னுப் பிரிவும், உருவினை
உள் உருக்கித் தின்னும் பெரும் பிணியும்,—இம் மூன்றும்
கள்வரின் அஞ்சப்படும். 18

கொல் யானைக்கு ஓடும் குணமிலியும், எல்லில்
பிறன் கடை நின்று ஒழுகுவானும், மறம் தெரியாது
ஆடும் பாம்பு ஆட்டும் அறிவிலியும்,—இம் மூவர்,
நாடுங்கால், தூங்குபவர். 19

ஆசை பிறன்கண் படுதலும், பாசம்
பசிப்ப மடியைக் கொளலும், கதித்து ஒருவன்
கல்லான் என்று எள்ளப்படுதலும்,—இம் மூன்றும்
எல்லார்க்கும் இன்னுதன. 20

வருவாயுள் கால் வழங்கி வாழ்தல், செரு வாய்ப்பச்
செய்தமை நாடாச் சிறப்புடைமை, எய்தப்
பல நாடி நல்லவை கற்றல்,—இம் மூன்றும்
நல மாட்சி நல்லவர் கோள். 21

பற்று என்னும் பாசத் தளையும்; பல வழியும்
பற்று அறாது ஓடும் அவாத் தேரும், தெற்றெனப்
பொய்த்துரை என்னும் புகை இருளும்,—இம் மூன்றும்
வித்து; அற, வீடும் பிறப்பு. 22

தானம் கொடுக்கும் தகைமையும், மானத்தால்
குற்றம் கடிந்த ஒழுக்கமும், தெற்றெனப்
பல் பொருள் நீங்கிய சிந்தையும்,—இம் மூன்றும்
நல் வினை ஆர்க்கும் கயிறு. 23

காண் தகு மென் தோள் கணிகை வாய் இன் சொல்லும்,
தூண்டிலினுள் பொதிந்த தேரையும், மாண்ட சீர்,
காழ்த்த பகைவர் வணக்கமும்,—இம் மூன்றும்
ஆழ்ச்சிப் படுக்கும், அளறு. 24

செருக்கினால் வாழும் சிறியவனும், பைத்து அகன்ற
அல்குல் விலை பகரும் ஆய்தொடியும், நல்லவர்க்கு
வைத்த அறப்புறம் கொண்டானும்,—இம் மூவர்
கைத்து உண்ணார், கற்றறிந்தார். 25

ஒல்வது அறியும் விருந்தினனும், ஆர் உயிரைக்
கொல்வது இடை நீக்கி வாழ்வானும், வல்லிதின்
சீலம் இனிது உடைய ஆசானும்,—இம் மூவர்
ஞாலம் எனப் படுவார். 26

உண் பொழுது நீராடி உண்டலும், என் பெறினும்
பால் பற்றிச் சொல்லா விடுதலும், தோல் வற்றிச்
சாயினும் சான்றாண்மை குன்றாமை,—இம் மூன்றும்
தூஉயம் என்பார் தொழில். 27

வெல்வது வேண்டி வெகுண்டு உரைக்கும் நோன்பியும்,
இல்லது காமுற்று இருப்பானும், கல்விச்
செவிக் குற்றம் பார்த்திருப்பானும்,—இம் மூவர்
உமிக் குற்றுக் கை வருந்துவார். 28

பெண் விழைந்து பின் செலினும், தன் செலவில் குன்றாமை;
கண் விழைந்து கையுறினும், காதல் பொருட்கு இன்மை;
மண் விழைந்து, வாழ் நாள் மதியாமை;—இம் மூன்றும்
நுண் விழைந்த நூலவர் நோக்கு. 29

தன் நச்சிச் சென்றுரை எள்ளா ஒருவனும்,
மன்னிய செல்வத்துப் பொச்சாப்பு நீத்தானும்,
என்றும் அழுக்காறு இகந்தானும்,—இம் மூவர்
நின்ற புகழ் உடையார். 30

பல்லவையுள் நல்லவை கற்றலும், பாத்து உண்டு ஆங்கு
இல்லறம் முட்டாது இயற்றலும், வல்லிதின்
தாளின் ஒரு பொருள் ஆக்கலும்,—இம் மூன்றும்
கேள்வியுள் எல்லாம் தலை. 31

நுண் மொழி நோக்கிப் பொருள் கொளலும், நூற்கு ஏலா
வெண் மொழி வேண்டினும் சொல்லாமை, நல் மொழியைச்
சிற்றினம் அல்லார்கண் சொல்லலும்,—இம் மூன்றும்
கற்றறிந்தார் பூண்ட கடன். 32

கோல் அஞ்சி வாழும் குடியும், குடி தழீஇ
ஆலம் வீழ் போலும் அமைச்சனும், வேலின்
கடை மணிபோல் திண்ணியான் காப்பும்,—இம் மூன்றும்
படை வேந்தன் பற்று விடல்! 33

மூன்று கடன் கழித்த பார்ப்பானும், ஓர்ந்து
முறை நிலை கோடா அரசும், சிறைநின்று
அலவலை அல்லாக் குடியும்,—இம் மூவர்
உலகம் எனப்படுவார். 34

முந்நீர்த் திரையின் எழுந்து இயங்கா மேதையும்,
நுண் நூல் பெருங் கேள்வி நூல் கரை கண்டானும்,
மைந் நீர்மை இன்றி மயல் அறுப்பான்,—இம் மூவர்
மெய்ந் நீர்மைமேல் நிற்பவர். 35

ஊன் உண்டு, 'உயிர்கட்கு அருளுடையெம்!' என்பானும்,
'தான் உடன்பாடு இன்றி வினை ஆக்கும்' என்பானும்,
காமுறு வேள்வியில் கொல்வானும்,—இம் மூவர்
தாம் அறிவர், தாம் கண்டவாறு. 36

குறளையுள் நட்பு அளவு தோன்றும்; உறல் இனிய
சால்பினில் தோன்றும், குடிமையும்; பால் போலும்
தூய்மையுள் தோன்றும் பிரமாணம்;—இம் மூன்றும்
வாய்மை உடையார் வழக்கு. 37

தன்னை வியந்து தருக்கலும், தாழ்வு இன்றிக்
கொன்னே வெகுளி பெருக்கலும், முன்னிய
பல் பொருள் வெஃகும் சிறுமையும்,—இம் மூன்றும்
செல்வம் உடைக்கும் படை. 38

புலை மயக்கம் வேண்டிப் பொருட்பெண்டிர்த் தோய்தல்,
கலம் மயக்கம் கள் உண்டு வாழ்தல், சொலை முனிந்து
பொய்ம் மயக்கம் சூதின்கண் தங்குதல்,—இம் மூன்றும்
நன்மை இலாளர் தொழில். 39

வெகுளி நுணுக்கும் விறலும், மகளிர்கட்கு
ஒத்த ஒழுக்கம் உடைமையும், பாத்து உண்ணும்
நல் அறிவாண்மை தலைப்படலும்,—இம் மூன்றும்
தொல் அறிவாளர் தொழில். 40

அலந்தார்க்கு ஒன்று ஈந்த புகழும், துளங்கினும்
தன் குடிமை குன்றாத் தகைமையும், அன்பு ஓடி
நாள் நாளும் நட்டார்ப் பெருக்கலும்,—இம் மூன்றும்
கேள்வியுள் எல்லாம் தலை. 41

கழகத்தால் வந்த பொருள் காமுறாமை,
பழகினும் பார்ப்பாரைத் தீப்போல் ஒழுகல்,
உழவின்கண் காமுற்று வாழ்தல்,—இம் மூன்றும்
அழகு என்ப வேளாண் குடிக்கு. 42

வாயின் அடங்குதல் துப்புரவு ஆம்; மாசு அற்ற
செய்கை அடங்குதல் திப்பியம் ஆம்; பொய் இன்றி
நெஞ்சம் அடங்குதல் வீடு ஆகும்;—இம் மூன்றும்
வஞ்சத்தின் தீர்ந்த பொருள். 43

விருந்து இன்றி உண்ட பகலும், திருந்திழையார்
புல்லப் புடை பெயராக் கங்குலும், இல்லார்க்கு ஒன்று
ஈயாது ஒழிந்தகன்ற காலையும்,—இம் மூன்றும்
நோயே, உரன் உடையார்க்கு. 44

ஆற்றானை, 'ஆற்று' என்று அலைப்பானும்; அன்பு இன்றி,
ஏற்றார்க்கு, இயைவ கரப்பானும்; கூற்றம்
வரவு உண்மை சிந்தியாதானும்;—இம் மூவர்
நிரயத்துச் சென்று வீழ்வார். 45

கால் தூய்மை இல்லாக் கலி மாவும், காழ் கடிந்து
மேல் தூய்மை இல்லாத வெங் களிறும், சீறிக்
கறுவி வெகுண்டு உரைப்பான் பள்ளி,—இம் மூன்றும்
குறுகார், அறிவுடையார். 46

சில் சொல், பெருந் தோள், மகளிரும்; பல் வகையும்
தாளினல் தந்த விழு நிதியும்; நாள்தொறும்
நாத் தளிர்ப்ப ஆக்கிய உண்டியும்;—இம் மூன்றும்
காப்பு இகழல் ஆகாப் பொருள். 47

வைததனை இன் சொல்லாக் கொள்வானும், நெய் பெய்த
சோறு என்று கூழை மதிப்பானும், ஊறிய
கைப்பதனைக் கட்டி என்று உண்பானும்,—இம் மூவர்
மெய்ப் பொருள் கண்டு வாழ்வார். 48

ஏவியது மாற்றும் இளங் கிளையும், காவாது
வைது எள்ளிச் சொல்லும் தலைமகனும், பொய் தெள்ளி
அம் மனை தேய்க்கும் மனையாளும்,—இம் மூவர்
இம்மைக்கு உறுதி இலார். 49

கொள் பொருள் வெஃகிக் குடி அலைக்கும் வேந்தனும்,
உள் பொருள் சொல்லாச் சல மொழி மாந்தரும்,
இல் இருந்து எல்லை கடப்பாளும்,—இம் மூவர்
வல்லே மழை அருக்கும் கோள். 50

தூர்ந்து ஒழுகிக்கண்ணும், துணைகள் துணைகளே;
சார்ந்து ஒழுகிக்கண்ணும், சலவர் சலவரே;
ஈர்ந்த கல் இன்னர் கயவர்;—இவர் மூவர்,
தேர்ந்தக்கால், தோன்றும் பொருள். 51

கண்ணுக்கு அணிகலம் கண்ணோட்டம்; காமுற்ற
பெண்ணுக்கு அணிகலம் நாண் உடைமை; நண்ணும்
மறுமைக்கு அணிகலம் கல்வி;—இம் மூன்றும்
குறியுடையார்கண்ணே உள. 52

குருடன் மனையாள் அழகும், இருள் தீரக்
கற்று அறிவில்லான் கதழ்ந்துரையும், பற்றிய
பண்ணின் தெரியாதான் யாழ் கேட்பும்,—இம் மூன்றும்
எண்ணின், தெரியாப் பொருள். 53

தன் பயம் தூக்காரைச் சார்தலும், தான் பயவா
நன் பயம் காய்வின்கண் கூறலும், பின் பயவாக்
குற்றம் பிறர் மேல் உரைத்தலும்,—இம் மூன்றும்
தெற்றனவு இல்லார் தொழில். 54

அரு மறை காவாத நட்பும், பெருமையை
வேண்டாது விட்டு ஒழிந்த பெண்பாலும், யாண்டானும்
செற்றம் கொண்டாடும் சிறு தொழும்பும்,—இம் மூவர்
ஒற்றுள் எனப்படுவார். 55

முந்தை எழுத்தின் வரவு உணர்ந்து, பிற்பாடு
தந்தையும் தாயும் வழிபட்டு, வந்த
ஒழுக்கம் பெரு நெறி சேர்தல்,—இம் மூன்றும்
விழுப்ப நெறி தூராவாறு. 56

கொட்டி அளந்து அமையாப் பாடலும், தட்டித்துப்
பிச்சை புக்கு உண்பான் பிளிற்றலும், துச்சிருந்தான்
நாளும் கலாம் காமுறுதலும்,—இம் மூன்றும்
கேள்வியுள் இன்னாதன. 57

பழமையை நோக்கி, அளித்தல், கிழமையால்
கேளிர் உவப்பத் தழுவுதல், கேளிராத்
துன்னிய சொல்லால் இனம் திரட்டல்,—இம் மூன்றும்
மன்னற்கு இளையான் தொழில். 58

கிளைஞர்க்கு உதவாதான் செல்வமும், பைங் கூழ்
விளைவின்கண் போற்றான் உழவும், இளையனாய்க்
கள் உண்டு வாழ்வான் குடிமையும்,—இம் மூன்றும்
உள்ளன போலக் கெடும். 59

பேஎய்ப் பிறப்பில் பெரும் பசியும், பாஅய்
விலங்கின் பிறப்பின் வெரூஉம், புலம் தெரியா
மக்கட் பிறப்பின் நிரப்பு இடும்பை,—இம் மூன்றும்
துக்கப் பிறப்பாய்விடும், 60

ஐஅறிவும் தம்மை அடைய ஒழுகுதல்,
எய்துவது எய்தாமை முன் காத்தல், வைகலும்
மாறு ஏற்கும் மன்னர் நிலை அறிதல்,—இம் மூன்றும்
வீறு சால் பேர் அமைச்சர் கோள். 61

நன்றிப் பயன் தூக்கா நாண் இலியும், சான்றூர் முன்
மன்றில் கொடும்பாடு உரைப்பானும், நன்று இன்றி
வைத்த அடைக்கலம் கொள்வானும்,—இம் மூவர்
எச்சம் இழந்து வாழ்வார். 62

நேர்வு அஞ்சாதாரொடு நட்பும், விருந்து அஞ்சும்
ஈர்வளையை இல்லத்து இருத்தலும், சீர் பயவாத்
தன்மையிலாளர் அயல் இருப்பும்,—இம் மூன்றும்
நன்மை பயத்தல் இல. 63

நல் விருந்து ஓம்பலின், நட்டாளாம்; வைகலும்
இல் புறஞ் செய்தலின், ஈன்ற தாய்; தொல் குடியின்
மக்கள் பெறலின், மனைக் கிழத்தி;—இம் மூன்றும்
கற்புடையாள் பூண்ட கடன். 64

அச்சம் அலை கடலின் தோன்றலும், ஆர்வு உற்ற
விட்டகலகில்லாத வேட்கையும், கட்டிய
மெய்ந் நிலை காணு வெகுளியும்,—இம் மூன்றும்
தம் நெய்யில் தாம் பொரியுமாறு. 65

கொழுநனை இல்லாள் கறையும், வழி நிற்கும்
சிற்றூள் இல்லாதான் கைம் மோதிரமும்; பற்றிய
கோல் கோடி வாழும் அரசும்,—இவை மூன்றும்
சால்போடு பட்டது இல. 66

எதிர்நிற்கும் பெண்ணும், இயல்பு இல் தொழும்பும்,
செயிர் நிற்கும் சுற்றமும், ஆகி, மயிர் நரைப்ப,
முந்தைப் பழ வினையாய்த் தின்னும்;—இவை மூன்றும்
நொந்தார் செயக் கிடந்தது இல். 67

இல்லார்க்கு ஒன்று ஈயும் உடைமையும், இவ் உலகின்
நில்லாமை உள்ளும் நெறிப்பாடும், எவ் உயிர்க்கும்
துன்புறுவ செய்யாத தூய்மையும்,—இம் மூன்றும்
நன்று அறியும் மாந்தர்க்கு உள. 68

அருந் தொழில் ஆற்றும் பகடும், திருந்திய
மெய்ந் நிறைந்து நீடு இருந்த கன்னியும், நொந்து
நெறி மாறி வந்த விருந்தும்,—இம் மூன்றும்
பெறுமாறு அரிய பொருள். 69

காவோடு அறக் குளம் தொட்டானும், நாவினல்
வேதம் கரை கண்ட பார்ப்பானும், தீது இகந்து
ஒல்வது பாத்து உண்ணும் ஒருவனும்,—இம் மூவர்
செல்வர் எனப்படுவார். 70

உடுத்தாடை இல்லாது நீராட்டும், பெண்டிர்
தொடுத்தாண்டு அவைப் போர் புகலும், கொடுத்து அளிக்கும்
ஆண்மை உடையவர் நல்குரவும்,—இம் மூன்றும்
காண அரிய, என் கண். 71

நிறை நெஞ்சு உடையானை நல்குரவு அஞ்சும்;
அறனை நினைப்பானை அல் பொருள் அஞ்சும்;
மறவனை எவ் உயிரும் அஞ்சும்;—இம் மூன்றும்
திறவதின் தீர்ந்த பொருள். 72

'இரந்துகொண்டு ஒண் பொருள் செய்வல்!' என்பானும்,
பரந்து ஒழுகும் பெண்பாலைப் பாசம் என்பானும்,
விரி கடலூடு செல்வானும்,—இம் மூவர்
அரிய துணிந்து ஒழுகுவார். 73

கொலைநின்று தின்று ஒழுகுவானும், பெரியவர்
புல்லுங்கால் தான் புல்லும் பேதையும், 'இல் எனக்கு ஒன்று;
ஈக!' என்பவனை நகுவானும்,—இம் மூவர்
யாதும் கடைப்பிடியாதார். 74

வள்ளன்மை பூண்டான்கண் செல்வமும், உள்ளத்து
உணர்வுடையான் ஓதிய நூலும், புணர்வின்கண்
தக்கது அறியும் தலைமகனும்,—இம் மூவர்
பொத்து இன்றிக் காழ்த்த மரம். 75

மாரி நாள் வந்த விருந்தும், மனம் பிறிதாக்
காரியத்தில் குன்றுக் கணிகையும், வீரியத்து
மாற்றம் மறுத்து உரைக்கும் சேவகனும்,—இம் மூவர்
போற்றற்கு அரியார், புரிந்து. 76

கயவரைக் கையிகந்து வாழ்தல், நயவரை
நள் இருளும் கைவிடா நட்டு ஒழுகல், தெள்ளி
வடுவான வாராமல் காத்தல்,—இம் மூன்றும்
குடி மாசு இலார்க்கே உள. 77

தூய்மை உடைமை துணிவு ஆம்; தொழில் அகற்று
வாய்மை உடைமை வனப்பு ஆகும்; தீமை
மனத்தினும் வாயினும் சொல்லாமை;—மூன்றும்
தவத்தின் தருக்கினர் கோள். 78

பழி அஞ்சான் வாழும் பசுவும், அழிவினல்
கொண்ட அருந் தவம் விட்டானும், கொண்டிருந்து
இல் அஞ்சி வாழும் எருதும்,—இவர் மூவர்
நெல் உண்டல் நெஞ்சிற்கு ஓர் நோய். 79

முறை செய்யான் பெற்ற தலைமையும், நெஞ்சின்
நிறை இல்லான் கொண்ட தவமும், நிறை ஒழுக்கம்
தேற்றாதான் பெற்ற வனப்பும்,—இவை மூன்றும்
தூற்றின்கண் தூவிய வித்து. 80

தோள் வழங்கி வாழும் துறைபோல் கணிகையும்,
நாள் கழகம் பார்க்கும் நயம் இலாச் சூதனும்,
வாசி கொண்டு ஒண் பொருள் செய்வானும்,—இம் மூவர்
ஆசைக் கடலுள் ஆழ்வார். 81

சான்றாருள் சான்றான் எனப்படுதல், எஞ் ஞான்றும்
தோய்ந்தாருள் தோய்ந்தான் எனப்படுதல், பாய்ந்து எழுந்து
கொள்ளாருள் கொள்ளாத கூறாமை,—இம் மூன்றும்
நல் ஆள் வழங்கும் நெறி. 82

உப்பின் பெருங் குப்பை, நீர் படின், இல்லாகும்;
நட்பின் கொழு முளை, பொய் வழங்கின், இல்லாகும்;
செப்பம் உடையார் மழை அனையர்;—இம் மூன்றும்
செப்ப நெறி தூராவாறு. 83

வாய் நன்கு அமையாக் குளனும், வயிறு ஆரத்
தாய் முலை உண்ணாக் குழவியும், சேய் மரபின்
கல்வி மாண்பு இல்லாத மாந்தரும்,—இம் மூவர்
நல்குரவு சேரப்பட்டார். 84

எள்ளப்படும் மரபிற்று ஆகலும், உள் பொருளைக்
கேட்டு மறவாத கூர்மையும், முட்டு இன்றி
உள் பொருள் சொல்லும் உணர்ச்சியும்,—இம் மூன்றும்
ஒள்ளிய ஒற்றாள் குணம். 85

அற்புப் பெருந் தளை யாப்பு நெகிழ்ந்து ஒழிதல்,
கற்புப் பெரும் புணை காதலின் கைவிடுதல்,
நட்பின் நய நீர்மை நீங்கல்,—இவை மூன்றும்
குற்றம் தரூஉம் பகை. 86

கொல்வது தான் அஞ்சான் வேண்டலும், கல்விக்கு
அகன்ற இனம் புகுவானும், இருந்து
விழு நிதி குன்றுவிப்பானும்,—இம் மூவர்
முழுமக்கள் ஆகற்பாலார். 87

பிணி தன்னைத் தின்னுங்கால் தான் வருந்துமாறும்,
தணிவு இல் பெருங் கூற்று உயிர் உண்ணுமாறும்,
பிணைச் செல்வம் மாண்பு இன்று இயங்கல்,—இம் மூன்றும்
புணை இல் நிலை கலக்குமாறு. 88

அருளினை நெஞ்சத்து அடைகொடாதானும்,
பொருளினைத் துவ்வான் புதைத்து வைப்பானும்,
இறந்து இன்னா சொல்லகிற்பானும்,—இம் மூவர்
பிறந்தும் பிறந்திலாதார். 89

ஈதற்குச் செய்க, பொருளை! அற நெறி
சேர்தற்குச் செய்க, பெரு நூலை! யாதும்
அருள் புரிந்து சொல்லுக, சொல்லை!—இம் மூன்றும்
இருள் உலகம் சேராத ஆறு. 90

பெறுதிக்கண் பொச்சாந்து உரைத்தல், உயிரை
இறுதிக்கண் யாம் இழந்தேம் என்றல், மறுவந்து
தன் உடம்பு கன்றுங்கால் நாணுதல்,—இம் மூன்றும்
மன்னா உடம்பின் தொழில். 91

விழுத் திணைத் தோன்றாதவனும், எழுத்தினை
ஒன்றும் உணராத ஏழையும், என்றும்
இறந்துரை காமுறுவானும்,—இம் மூவர்
பிறந்தும் பிறவாதவர். 92

இருளாய்க் கழியும் உலகமும், யாதும்
தெருளாது உரைக்கும் வெகுள்வும், பொருள் அல்ல
காதற்படுக்கும் விழைவும்,—இவை மூன்றும்
பேதைமை, வாழும் உயிர்க்கு. 93

நண்பு இலார்மாட்டு நசைக் கிழமை செய்வானும்,
பெண்பாலைக் காப்பு இகழும் பேதையும், பண்பு இல்
இழுக்கு ஆய சொல்லாடுவானும்,—இம் மூவர்
ஒழுக்கம் கடைப்பிடியாதார். 94

அறிவு அழுங்கத் தின்னும் பசி நோயும், மாந்தர்
செறிவு அழுங்கத் தோன்றும் விழைவும், செறுநரின்
வெவ் உரை நோனு வெகுள்வும்,—இவை மூன்றும்
நல் வினை நீக்கும் படை. 95

கொண்டான் குறிப்பு அறிவாள் பெண்டாட்டி; கொண்டன
செய் வகை செய்வான் தவசி; கொடிது ஒரீஇ,
நல்லவை செய்வான் அரசன்;—இவர் மூவர்,
'பெய்' எனப் பெய்யும் மழை. 96

ஐங் குரவர் ஆணை மறுத்தலும், ஆர்வு உற்ற
எஞ்சாத நட்பினுள் பொய் வழக்கும், நெஞ்சு அமர்ந்த
கற்பு உடையாளைத் துறத்தலும்,—இம் மூன்றும்
நற் புடையிலாளர் தொழில். 97

செந் தீ முதல்வர் அறம் நினைந்து வாழ்தலும்,
வெஞ் சின வேந்தன் முறை நெறியால் சேர்தலும்,
பெண்பால் கொழுநன் வழிச் செலவும்,—இம் மூன்றும்
திங்கள் மும் மாரிக்கு வித்து. 98

கற்றாரைக் கைவிட்டு வாழ்தலும், காமுற்ற
பெட்டாங்கு செய்து ஒழுகும் பேதையும், முட்டு இன்றி
அல்லவை செய்யும் அலவலையும்,—இம் மூவர்
நல் உலகம் சேராதவர். 99

பத்திமை சான்ற படையும், பலர் தொகினும்
எத் திசையும் அஞ்சா எயில்-அரணும், வைத்து அமைந்த
எண்ணின் உலவா இரு நிதியும்,—இம் மூன்றும்
மண் ஆளும் வேந்தர்க்கு உறுப்பு. 100

## மிகைப் பாடல்கள்

கரப்பவர் நீர்மைத்தாய் நண்பகலில் தோன்றல்,
இரப்பவர்கண் தேய்வேபோல் தோன்றல், இரப்பவர்க்கு ஒன்று
ஈவார் முகம்போல் ஒளிவிடுதல்,—இம் மூன்றும்
ஓவாதே திங்கட்கு உள. (புறத்திரட்டு. 1222) 1

பொருள் இல் ஒருவற்கு இளமையும், போற்றும்
அருள் இல் ஒருவற்கு அறனும், தெருளான்
திரிந்து ஆளும் நெஞ்சினன் கல்வியும்,—மூன்றும்
பரிந்தாலும் செய்யா பயன். (புறத்திரட்டு. 1228) 2

சால் நெறிப் பாரா உழவனும், தன் மனையில்
மானம் ஒன்று இல்லா மனையாளும், சேனை
உடன்கொண்டு மீளா அரசும்,—இம் மூன்றும்
கடன் கொண்டார் நெஞ்சில் கனு. 3

ஏர்க் குற்றம் பாரா உழவனும், இன் அடிசில்
பாத்திட்டு ஊட்டாத பைந்தொடியும், ஊர்க்கு
வரும் குற்றம் பாராத மன்னும்,—இம் மூவர்
இருந்திட்டு என்? போய் என், இவர்? 4

## சிறப்புப் பாயிரம்

உலகில் கடுகம் உடலின் நோய் மாற்றும்;
அலகு இல் அக நோய் அகற்றும், நிலை கொள்
திரிகடுகம் என்னும் திகழ் தமிழ்ச் சங்கம்
மருவு நல்லாதன் மருந்து. 1

செல்வத் திருத்துளார் செம்மல் ,செரு அடு தோள்
நல்லாதன் என்னும் பெயரானே—பல்லார்
பரிவொடு நோய் அவியப் பன்னி ஆராய்ந்து,
திரிகடுகம் செய்த மகன். 2

# சிறுபஞ்சமூலம்

சிறுபஞ்சமூலம் என்னும் தொடர் ஐந்து சிறிய வேர்கள் என்று பொருள்படும். அவையாவன சிறுவழுதுணை வேர், நெருஞ்சி வேர், சிறுமல்லி வேர், பெருமல்லி வேர், கண்டங்கத்தரி வேர் என்பனவாம்.

சிறிய வழுதுணைவேர், சின்னெருஞ்சி மூலம்,
சிறுமலி, கண்டங்கத்தரிவேர், நறிய
பெருமலி, ஓர் ஐந்தும் பேசு பல் நோய் தீர்க்கும்
அரிய சிறுபஞ்சமூலம் (495)

என்பது பதார்த்த குண சிந்தாமணி. பொருட்டொகை நிகண்டும்,

சிறுபஞ்சமூலம் கண்டங்கத்தரி,
சிறுவழுதுணை, சிறுமல்லி, பெருமல்லி,
நெருஞ்சி இவற்றின் வேராகும்மே (867)

என்று உரைக்கின்றது. இது போன்றே வில்வம், பெருங் குமிழ், தழுதாழை, பாதிரி, வாகை, இவற்றின் வேர்களைப் பெரும் பஞ்சமூலம் என்று மேற்குறித்த இரு நூல்களும் தந்துள்ளன. இவைகள் எல்லாம் வேர்களிலிருந்து தயாரிக்கப் பெறும் மருந்து வகைகள். சிறுபஞ்சமூலம் ஆகிய மருந்து உடல் நலம் பேணுமாறு போல, சிறுபஞ்சமூலப் பாடல்களில் குறித்த ஐந்தைந்து பொருள்களும் உயிர் நலம் பேணுவன. இவ் வொப்புமை கருதியே இந் நூல் **சிறுபஞ்சமூலம்** என வழங்கப் பெறுவ தாயிற்று.

இந் நூலை இயற்றியவர் **காரியாசான்** என்பவர். காரி என்பதுவே இவரது இயற்பெயர். ஆசான் என்பது மதுரை வேளாசான், முக்கல் ஆசான் நல்வெள்ளையார் என்ற புலவர் பெயர்களிற்போலத் தொழில் பற்றி வந்த பெயராகலாம். இவரை மாக் காரியாசான் என்று பாயிரச் செய்யுள் 'மா' என்னும் அடை கொடுத்துச் சிறப்பிக்கின்றது. இவர் சைன சமயத்தார் என்பது இந் நூலின் காப்புச் செய்யுளால் அறியலாகும். அன்றியும், நூலுள்ளும் சைன சமயப் பெண்பாலரது ஒழுக்கமாகிய குராக் குறுங்கானம் போதலையும் (90), 'கொன்றான் கொலையை உடன்பட்டான்' (68) என்ற பாடலில் பஞ்ச மகா விரதங்களுள் ஒன்றாகிய அஹிம்ஸையின் உட்பாகு பாடுகளையும் அவற்றின் மறுதலையால் குறித்துள்ளார். பாயிரச்செய்யுளிலிருந்து இவர் மாக்காயனாரின் மாணாக்கர் என்பது தெரிய வருகிறது. இந்த மாக்காயனார் மதுரைத் தமிழாசிரியர் மாக்காயனார் எனப்படுவர். இந்த ஆசிரியரிடம் கல்வி பயின் றோருள் மற்றொருவர் ஏலாதி, திணைமாலை நூற்றைம்பது என்னும் நூல்களின் ஆசிரிய ராகிய கணிமேதாவியார். எனவே, கணிமேதாவியாரும் காரியாசானும் ஒருசாலை மாணாக்க ராவர். இவரும் மாக்காயனாரின் ஊராகிய மதுரையைச் சார்ந்தவராதல் கூடும். இவர் பஞ்ச தந்திரக் கதையுள் வரும், மைனாவுக்கும் முயலுக்கும் வழக்குத் தீர்த்த கங்கைக் கரையில் உள்ள பூனைக் கதையை, 'உறுதவ மேல் கங்கைக் கரைப் பூசை போறல் கடை (100) என்று சுட்டியுள்ளார். இதனால் பஞ்ச தந்திரம் தமிழில் பெருக வழங்கிய காலத்தை ஒட்டி இந்நூலாசிரியர் வாழ்ந்தனர் என்று எண்ணவும் இடம் உண்டு.

கவிஞனுக்கு உரிய இயல்புகளை,

செந்தமிழ் தேற்றான் கவி செயலும்
நாவகம் மேய் நாடின் நகை (10)

என்றும்,

கேட்பவன் கேடில் பெரும் புலவன் பாட்டு அவன்
சிந்தையான் ஆகும் சிறத்தல் (31)

என்றும், குறித்துள்ளார். எனவே, இவர் கவிதை உணர்ச்சியில் சிறந்தவராய், செந்தமிழில் தேர்ச்சி பெற்றவராய் விளங்கினர் என்று உணரலாகும். 'நாள் கூட்டம் மூழ்த்தம்' (42) என்ற பாடலில் சோதிட நூல் கருத்தும், 'சிக்கர், சிதடர்' (74) என்ற பாடலில் மருத்துவ நூல் கருத்தும் அமைந்துள்ளன. 'சத்தம், மெய்ஞ் ஞானம், தருக்கம், சமையமே, வித்தகர் கண்ட வீடு, உள்ளிட்டு அறிவான் தலையாய சிட்டன்' என்றும் (91), 'கணிதம், யாழ், சாந்து, எழுதல், இலை நறுக்கு, இவற்றை அறிவான் இடையாய சிட்டன்' என்றும் (92), கூறுகின்றார். இவை கொண்டு இந் நூலாசிரியர் சோதிடம், மருத்துவம் முதலிய பிற கலைகளையும் நன்கு உணர்ந்தவர் என்று கருதலாம். உதாரம் (10), இலிங்கி (40), சிட்டன் (91, 92), சிந்தி (91), சுவர்க்கம் (34, 64, 97), ஞானம் (91), சத்தம் (91), தருக்கம் (91), சமயம் (91), சேவகன் (93, 101) பண்டாரம் (38), முதலிய வடசொற்கள் இந் நூலில் பயின்றுள்ளன. வடமொழியிலுள்ள சாஸ்திரக் கருத்துக்களும், வட சொல்லாட்சியும், இவர் வட மொழியிலும் சிறந்த புலமை வாய்ந்தவர் என்பதைப் புலப்படுத்தும்.

நான்கு வரிகளிலே ஐந்து பொருள்களை அமைத்துப்பாடும் திறம் நோக்கத் தக்கது. இந்நூற் செய்யுட்களில் அமைந்துள்ள ஐந்தைந்து பொருள்களும் திரி கடுகத்தில் போலத் தெளிவுபட விளக்கமாக அமையவில்லை. ஐந்து என்னும் எண்ணுத்தொகைக் குறிப்பு பதினைந்து இடங்களிலேதான் உள்ளது (22, 39, 40, 42, 43, 47, 51, 53, 57, 60, 63, 68, 83, 91, 92). அதுவும், திரிகடுகத்தில் உள்ளது போல ஒரு முறையைப் பின்பற்றிஅமையவும் இல்லை.

திருக்குறள், நாலடியார், நான்மணிக்கடிகை, முதலிய முந்து நூல்களில் பொதிந் துள்ள கருத்துக்களில் பலவற்றை இந் நூலகத்துக் காணலாம். 'கல்லாதான்தான் காணும் நுட்பமும்' (3) என்னும் பாடல் திரிகடுகத்தின் போக்கையும், 'இடர் இன்னா நட்டார்கண்' (12) என்னும் பாடல் இன்னா நாற்பதின் அமைப்பையும் ஒத்துள்ளன. 'சிலம்பிக்குத் தன் சினை கூற்றம்' (9), 'வான் குரீஇக் கூடு' (25), 'வார் சான்ற கூந்தல் வரப்புயர' (44), 'மயிர் வனப்பும்' (35), 'பூவாது காய்க்கும் மரம் உள' (20), 'பூத்தாலும் காயா மரம் உள' (21) என வரும் பாடல்களின் கருத்துக்களில் சில முந்து நூல்களின் மரபை ஒட்டியவை. ஒரு சில, தனிப்பாடல்கள் சிலவற்றில் காணும் கருத்துக்களோடும், பிற்கால நீதி நூல்களோடும் ஒத்துள்ளன. இவைகள் எல்லாம் ஆழ்ந்து சிந்தித்தற்கு உரியன.

இந் நூலில் கடவுள் வாழ்த்து நீங்கலாக நூற்றிரண்டு பாடல்கள் உள்ளன. 85-ஆம் பாடல் தொடங்கி, 89-ஆம் பாடல் வரை உள்ள ஐந்து பாடல்கள் பிரதிகளில் காணப்பெறவில்லை. ஆனால், புறத்திரட்டில் சிறுபஞ்சமூல நூலைச் சார்ந்த மூன்று செய்யுட்கள் காணப்படுகின்றன. அவை விடுபட்ட இப் பகுதியைச் சார்ந்தனவாக இருக்கலாம். அந்தப் பாடல்களை 85, 86, 87-ஆம் எண்களுக்கு உரிய பாடல்களாகச் சென்னைப் பல்கலைக் கழகப் பதிப்பு அமைத்துள்ளது. அங்ஙனம் உறுதி செய்வ தற்கு உரிய தக்க ஆதாரங்கள் இன்மையால், இப் பதிப்பில் அவை நூல் இறுதியில், தனியாக அமைக்கப் பெற்றன.

பழைய உரையாசிரியரால் உரை வகுக்கப் பெற்ற 'ஒத்த ஒழுக்கம்' எனத் தொடங்கும் பாயிரச் செய்யுளோடு, 'மல் இவர் தோள் மாக்காயன்' என்னும் ஒரு பாயிரச் செய்யுளும் ஏடுகளில் காண்கிறது. இந்த இரண்டும் நூல் இறுதியில் சிறப்புப் பாயிரம் என்னும் தலைப்பில் தரப்பெற்றுள்ளன.

இந் நூலுக்குப் பழைய உரை உள்ளது. இந்த உரையின் உதவி இல்லையேல், இந் நூற் பாடல்களில் அமைந்த ஐந்து கருத்துக்களையும் தெளிவுற அறிதல் அருமையே. இவ் உரை பண்டை மரபுகளை அறிந்து அமைத்த சிறந்த உரையாய் உள்ளது.

# சிறுபஞ்சமூலம்

(காரியாசான்)

## கடவுள் வாழ்த்து

முழுது உணர்ந்து, மூன்று ஒழித்து, மூவாதான் பாதம்,
பழுது இன்றி, ஆற்றப் பணிந்து, முழுது ஏத்தி,
மண் பாய ஞாலத்து மாந்தர்க்கு உறுதியா,
வெண்பா உரைப்பன், சில.

## நூல்

பொருள் உடையான் கண்ணதே, போகம்; அறனும்,
அருள் உடையான் கண்ணதே ஆகும்; அருள் உடையான்
செய்யான் பழி; பாவம் சேரான்; புறமொழியும்
உய்யான், பிறர் செவிக்கு உய்த்து. 1

கற்புடைய பெண் அமிர்து; கற்று அடங்கினன் அமிர்து;
நற்பு உடைய நாடு அமிர்து; நாட்டுக்கு நற்பு உடைய
மேகமே சேர் கொடி வேந்து அமிர்து; சேவகனும்
ஆகவே செய்யின், அமிர்து. 2

கல்லாதான் தான் காணும் நுட்பமும், காது இரண்டும்
இல்லாதாள் ஏக்கழுத்தம் செய்தலும், இல்லாதான்
ஒல்லாப் பொருள் இலார்க்கு ஈத்து அறியான் என்றலும்,
நல்லார்கள் கேட்பின் நகை. 3

உடம்பு ஒழிய வேண்டின், உயர் தவம்; மற்று ஈண்டு
இடம் பொழிய வேண்டுமேல், ஈகை; மடம் பொழிய
வேண்டின், அறிமடம்; வேண்டேல், பிறர் மனை;
ஈண்டின், இயையும் திரு. 4

படைதனக்கு யானை வனப்பு ஆகும்; பெண்ணின்
இடைதனக்கு நுண்மை வனப்பு ஆம்; நடைதனக்குக்
கோடா மொழி வனப்பு; கோற்கு அதுவே; சேவகற்கு
வாடாத வன்கண் வனப்பு. 5

பற்றினன், பற்று அற்றான் நூல், தவசி; எப் பொருளும்
முற்றினன் ஆகும், முதல்வன்; நூல் பற்றினல்
பாத்து உண்பான் பார்ப்பான்; பழி உணர்வான் சான்றவன்;
காத்து உண்பான் காணன், பிணி. 6

கண் வனப்புக் கண்ணேட்டம்; கால் வனப்புச் செல்லாமை;
எண் வனப்பு, 'இத் துணை ஆம்' என்று உரைத்தல்; பண் வனப்புக்
கேட்டார், நன்று என்றல்; கிளர் வேந்தன் தன் நாடு
வாட்டான், நன்று என்றல் வனப்பு. 7

கொன்று உண்பான் நாச் சாம்; கொடுங் கரி போவான் நாச் சாம்;
நன்று உணர்வார் முன் கல்லான் நாவும் சாம்; ஒன்றனைக்
கண்டுழி, நாச் சாம்; கடவான் குடிப் பிறந்தான்
உண்டுழி, நாச் சாம், உணர்ந்து. 8

சிலம்பிக்குத் தன் சினை கூற்றம்; நீள் கோடு
விலங்கிற்குக் கூற்றம்; மயிர்தான் வலம் படா
மாவிற்குக் கூற்றம் ஆம்; ஞெண்டிற்குத் தன் பார்ப்பு:
நாவிற்கு நன்று அல் வசை. 9

நாண் இலான் சால்பும், நடை இலான் நல் நோன்பும்,
ஊண் இலான் செய்யும் உதாரமும், ஏண் இலான்
சேவகமும், செந்தமிழ் தேற்றான் கவி செயலும்,—
நாவகம் மேய் நாடின், நகை. 10

கோறலும் நஞ்சு; ஊனைத் துய்த்தல் கொடு நஞ்சு;
வேறலும் நஞ்சு, மாறு அல்லானை; தேறினல்,
நீடு ஆங்குச் செய்தலும் நஞ்சால்; இளங்கிளையை
நாடாதே, தீதுஉரையும் நஞ்சு. 11

இடர் இன்னு, நட்டார்கண்; ஈயாமை இன்னு;
தொடர் இன்னு, கள்ளர்கண்; தூயார்ப் படர்வு இன்னு;—
கண்டல் அவிர் பூங் கதுப்பினய்!—இன்னுதே,
கொண்ட விரதம் குறைவு. 12

கொண்டான் வழி ஒழுகல் பெண்; மகன் தந்தைக்குத்
தண்டான் வழி ஒழுகல்; தன் கிளை அஃது; அண்டாதே,
வேல் வழி வெம் முனை வீழாது, மன் நாடு;
கோல் வழி வாழ்தல் குணம். 13

பிழைத்த பொறுத்தல் பெருமை; சிறுமை
இழைத்த தீங்கு எண்ணி இருத்தல்; பிழைத்த,
பகை, கெட வாழ்வதும், பல் பொருளால் பல்லார்
நகை கெட வாழ்வதும், நன்று. 14

கதம் நன்று, சான்றுண்மை தீது, கழிய
மதம் நன்று, மாண்பு இலார் முன்னர்; விதம் நன்றல்,
கோய் வாயின் கீழ் உயிர்க்கு ஈ துற்று, குரைத்து எழுந்த
நாய் வாயுள் நல்ல தசை. 15

நட்டாரை ஆக்கி, பகை தணித்து, வை எயிற்றுப்
பட்டு ஆர் அணி அல்குலார்ப் படிந்து ஒட்டி,
துடங்கினர், இல்லகத்து, அன்பின் துறவாது;—
உடம்பினன் ஆய பயன். 16

பொய்யாமை பொன் பெறினும், கள்ளாமை, மெல்லியார்
வையாமை, வார் குழலார் நச்சினும் நையாமை,
ஓர்த்து உடம்பு பேரும் என்று, ஊன் அவாய் உண்ணனேல்,—
பேர்த்து உடம்பு கோடல் அரிது. 17

தேவரே, கற்றவர்; கல்லாதார் தேருங்கால்,
பூதரே; முன் பொருள் செய்யாதார் ஆதரே;
'துன்பம் இலேம், பண்டு, யாமே வனப்பு உடையேம்!'
என்பர், இரு கால் எருது. 18

கள்ளான், சூது என்றும் கழுமான், கரியாரை
நள்ளான், உயிர் அழுங்க நா ஆடான், எள்ளானய்,
ஊன் மறுத்துக் கொள்ளானேல், ஊன் உடம்பு எஞ் ஞான்றும்
தான் மறுத்துக் கொள்ளான், தளர்ந்து. 19

பூவாது காய்க்கும் மரம் உள; நன்று அறிவார்,
மூவாது மூத்தவர், நூல் வல்லார்; தாவா,
விதையாமை நாறுவ வித்து உள; மேதைக்கு
உரையாமைச் செல்லும் உணர்வு. 20

பூத்தாலும் காயா மரம் உள; நன்று அறியார்,
மூத்தாலும் மூவார், நூல் தேற்றாதார்; பாத்திப்
புதைத்தாலும் நாறாத வித்து உள; பேதைக்கு
உரைத்தாலும் செல்லாது, உணர்வு. 21

வடிவு, இளமை, வாய்த்த வனப்பு, வணங்காக்
குடி, குலம், என்று ஐந்தும் குறித்த முடியத்
துளங்கா நிலை காணுர்; தொக்கு ஈர் பசுவால்,
இளங் கால் துறவாதவர். 22

கள் உண்டல், காணின் கணவற் பிரிந்து உறைதல்,
வெள்கிலளாய்ப் பிறர் இல் சேறல், உள்ளிப்
பிறர் கருமம் ஆராய்தல், தீப் பெண் கிளைமை,—
திறவது, தீப் பெண் தொழில். 23

பெருங் குணத்தார்ச் சேர்மின்; பிறன் பொருள் வவ்வன்மின்;
கருங் குணத்தார் கேண்மை கழிமின்; ஒருங்கு உணர்ந்து,
தீச் சொல்லே காமின்; வரும் காலன், திண்ணிதே;—
வாய்ச் சொல்லே அன்று; வழக்கு. 24

வான் குரீஇக் கூடு, அரக்கு, வால் உலண்டு, நூல் புழுக்கோல்,
தேன் புரிந்தது, யார்க்கும் செயல் ஆகா;—தாம் புரீஇ,
வல்லவர் வாய்ப்பன என்னுர்; ஒரோஒருவர்க்கு
ஒல்காது, ஒரொன்று படும். 25

அறம் நட்டான் நல்-நெறிக்கண் நிற்க, அடங்காப்
புறம் நட்டான் புல்-நெறி போகாது!—புறம் நட்டான்
கண்டு எடுத்து கள், களவு, சூது, கருத்தினுல்,
பண்டு எடுத்துக் காட்டும், பயின்று. 26

ஆண் ஆக்கம் வேண்டாதான் ஆசான்; அவற்கு இயைந்த
மாணுக்கன், அன்பான், வழிபடுவான்; மாணுக்கன்
கற்பு அனைத்து மூன்றும் கடிந்தான்; கடியாதான்
நிற்பு அனைத்தும், நெஞ்சிற்கு ஓர் நோய். 27

நெய்தல் முகிழ்த் துணை ஆம், குடுமி; நேர் மயிரும்
உய்தல் ஒரு திங்கள் நாள் ஆகும்; செய்தல்,
நுணங்கு நூல் ஓதுதல், கேட்டல், மாணுக்கர்,
வணங்கல், வலம் கொண்டு வந்து. 28

ஒருவன் அறிவானும் எல்லாம், யாதொன்றும்
ஒருவன் அறியாதவனும், ஒருவன்
குணன் அடங்க, குற்றம் இலானும், ஒருவன்
கணன் அடங்கக் கற்றுனும், இல். 29

உயிர் நோய் செய்யாமை, உறு நோய் மறத்தல்,
செயிர் நோய் பிறர்கண் செய்யாமை, செயிர் நோய்
விழைவு, வெகுளி, இவை விடுவான்ஆயின்,—
இழவு அன்று, இனிது தவம். 30

வேட்டவன் பார்ப்பான்; விளங்கிழைக்குக் கற்பு உடைமை;
கேட்பவன் கேடு இல் பெரும் புலவன்;—பாட்டு, அவன்
சிந்தையான் ஆகும், சிறத்தல்; உலகினுள்
தந்தையான் ஆகும், குலம். 31

வைப்பானே வள்ளல்; வழங்குவான் வாணிகன்;
உய்ப்பானே ஆசான், உயர் கதிக்கு; உய்ப்பான்,
உடம்பின் ஆர் வேலி ஒருப்படுத்து, ஊன் ஆரத்
தொடங்கானேல், சேறல் துணிவு. 32

வைததனுன் ஆகும் வசை; வணக்கம், நன்று, ஆகச்
செய்ததனுன் ஆகும், செழுங் குலம்; முன் செய்த
பொருளினுன் ஆகும் ஆம், போகம்; நெகிழ்ந்த
அருளினுன் ஆகும் அறம். 33

இல் இயலார் நல் அறமும், ஏனைத் துறவறமும்,
நல் இயலான் நாடி உரைக்குங்கால், நல் இயல்
தானத்தான் போகம்; தவத்தான் சுவர்க்கம் ஆம்;
ஞானத்தான் வீடு ஆகும் நாட்டு! 34

மயிர் வனப்பும், கண் கவரும் மார்பின் வனப்பும்,
உகிர் வனப்பும், காதின் வனப்பும், செயிர் தீர்ந்த
பல்லின் வனப்பும், வனப்பு அல்ல; நூற்கு இயைந்த
சொல்லின் வனப்பே, வனப்பு. 35

தொழீஇ அட, உண்ணுர்; தோழர் இல் துஞ்சார்;
வழீஇப் பிறர் பொருளே வவ்வார்; கெழீஇக்
கலந்த பின் கீழ் காணுர்; காணுய், மடவாய்!
புலந்தபின், போற்ருர், புலே. 36

பொய்யாமை நன்று; பொருள் நன்று; உயிர் நோவக்
கொல்லாமை நன்று; கொழிக்குங்கால், பல்லார் முன்
பேணுமை, பேணும் தகைய; சிறிது எனினும்,
மாணுமை, மாண்டார் மனே. 37

பண்டாரம், பல் கணக்கு, கண்காணி, பாத்து, இல்லார்,
உண்டு ஆர் அடிசிலே, தோழரின் கண்டாரா,
யாக்கைக்குத் தக்க அறிவு இல்லார்க் காப்பு அடுப்பின்,—
காக்கையைக் காப்பு அடுத்த சோறு. 38

உடை இட்டார், புல் மேய்ந்தார், ஓடு நீர்ப் புக்கார்,
படை இட்டார், பற்றேனும் இன்றி நடை விட்டார்,—
இவ் வகை ஐவரையும் என்றும் அணுகாரே,
செவ் வகைச் சேவகர் சென்று. 39

பூவாதாள், பூப்புப் புறக்கொடுத்தாள், இலிங்கி,
ஓவாதாள் கோலம் ஒரு பொழுதும் காவாதாள்,
யார் யார் பிறர் மனையாள் உள்ளிட்டு,—இவ் ஐவரையும்
சாரார், பகை போல் சலித்து. 40

வருவாய்க்குத் தக்க, வழக்கு, அறிந்து, சுற்றம்
வெருவாமை, வீழ் விருந்து ஓம்பி, திரு ஆக்கும்
தெய்வத்தை எஞ் ஞான்றும் தெற்ற வழிபாடு
செய்வதே—பெண்டிர் சிறப்பு. 41

நாள் கூட்டம், மூழ்த்தம், இவற்றொடு நன்று ஆய
கோள் கூட்டம், யோகம், குணன், உணர்ந்து,—தோள் கூட்டல்
உற்றானும் அல்லானும்,—ஐந்தும் உணர்வான் நாள்
பெற்றானேல், கொள்க, பெரிது! 42

பேண், அடக்கம், பேணாப் பெருந் தகைமை, பீடு உடைமை,
நாண் ஒடுக்கம், என்று ஐந்தும் நண்ணின்றா, பூண் ஒடுக்கும்
பொன் வரைக் கோங்கு ஏர் முலைப் பூந் திருவே ஆயினும்,
தன் வரைத் தாழ்த்தல் அரிது. 43

வார் சான்ற கூந்தல்! வரம்பு உயர, வைகலும்
நீர் சான்று உயரவே, நெல் உயரும்; சீர் சான்ற
தாவாக் குடி உயர, தாங்கு அருஞ் சீர்க் கோ உயர்தல்
ஓவாது உரைக்கும் உலகு. 44

அழியாமை எத் தவமும், சார்ந்தாரை ஆக்கல்,
பழியாமைப் பாத்தல் யார்மாட்டும் ஒழியாமை,
கன்று சாவப் பால் கறவாமை, செய்யாமை
மன்று சார்வு ஆக மனை. 45

நசை கொல்லார், நச்சியார்க்கு என்றும்; கிளைஞர்
மிசை கொல்லார்; வேளாண்மை கொல்லார்; இசை கொல்லார்;
பொன் பெறும் பூஞ் சுணங்கின் மென் முலையாய்! நன்கு உணர்ந்தார்
என் பெறினும் கொல்லார், இயைந்து. 46

நீண்ட நீர், காடு, களர், நிவந்து விண் தோயும்
மாண்ட மலை, மக்கள், உள்ளிட்டு, மாண்டவர்
ஆய்ந்தன ஐந்தும், அரணு உடையானை
வேந்தனு நாட்டல் விதி. 47

பொச்சாப்புக் கேடு; பொருட் செருக்குத்தான் கேடு;
முற்றுமை கேடு; முரண் கேடு; தெற்றத்
தொழில் மகன்தன்னெடு மாறுஆயின், என்றும்
உழுமகற்குக் கேடு என்று உரை. 48

கொல்லாமை நன்று; கொலை தீது; எழுத்தினைக்
கல்லாமை தீது; கதம் தீது; நல்லார்
மொழியாமை முன்னே, முழுதும் கிளைஞர்
பழியாமை பல்லார் பதி. 49

உண்ணுமை நன்று, அவா நீக்கி; விருந்து கண்மாறு
எண்ணுமை நன்று; இகழின், தீது, எளியார்; எண்ணின்,
அரியர் ஆவார் பிறர் இல் செல்லாரே; உண்ணுர்,
பெரியர் ஆவார், பிறர் கைத்து. 50

மக்கள் பெறுதல், மடன் உடைமை, மாது உடைமை,
ஒக்க உடன் உறைதல், ஊண் அமைவு,—தொக்க
அலவலை அல்லாமை, பெண் மகளிர்க்கு—ஐந்தும்
தலைமகனைத் தாழ்க்கும் மருந்து. 51

கொண்டான் கொழுநன், உடன்பிறந்தான், தன் மாமன்,
வண்டு ஆர் பூந் தொங்கல் மகன், தந்தை,—வண் தாராய்!—
யாப்பு ஆர் பூங் கோதை அணி இழையை, நற்கு இயையக்
காப்பார், கருதும் இடத்து. 52

ஆம்—பல், வாய், கண், மனம், வார் புருவம், என்று ஐந்தும்,
தாம் பல் வாய் ஓடி, நிறை காத்தல் ஓம்பார்,
நெடுங் கழை நீள் மூங்கில் என இகழ்ந்தார், ஆட்டும்
கொடுங் குழை போல, கொளின். 53

பொன் பெறும், கற்றுன் பொருள் பெறும், நற் கவி;
என் பெறும் வாதி, இசை பெறும்; முன் பெறக்
கல்லார், கற்றூர் இனத்தர் அல்லார், பெறுபவே,
நல்லார் இனத்து நகை. 54

நல்ல வெளிப்படுத்து, தீய மறந்து ஒழிந்து,
ஒல்லை உயிர்க்கு ஊற்றங்கோல் ஆகி, ஒல்லுமேல்,
மாயம் பிறர் பொருட்கண் மாற்றி, மா மானத்தான்
ஆயின், அழிதல் அறிவு. 55

தன் நிலையும், தாழாத் தொழில் நிலையும், துப்பு எதிர்ந்தார்
இன் நிலையும், ஈடு இல் இயல் நிலையும், துன்னி,
அளந்து அறிந்து செய்வான் அரைசு; அமைச்சன் யாதும்
பிளந்து அறியும் பேர் ஆற்றலான். 56

பொருள், போகம், அஞ்சாமை, பொன்றுங்கால் போர்த்த
அருள், போகா ஆர் அறம், என்று ஐந்தும் இருள் தீரக்
கூறப்படும் குணத்தான், கூர் வேல் வல் வேந்தனுல்
தேறப்படும் குணத்தினன். 57

நன் புலத்து வை அடக்கி, நாளும் நாள் ஏர் போற்றி,
புன் புலத்தைச் செய்து, எருப் போற்றிய பின், நன் புலக்கண்
பண் கலப்பை பாற்படுப்பான் உழவன் என்பவே—
நுண் கலப்பை நூல் ஓதுவார். 58

ஏலாமை நன்று; ஈதல் தீது, பண்பு இல்லார்க்கு;
சாலாமை நன்று, நூல்; சாயினும், 'சாலாமை
நன்று; தவம் நனி செய்தல் தீது' என்பாரை
இன்றுகாறு யாம் கண்டிலம். 59

அரம் போல் கிளை, அடங்காப் பெண், அவியாத் தொண்டு,
மரம் போல் மகன், மாறு ஆய் நின்று கரம் போலக்
கள்ள நோய் காணும் அயல், ஐந்தும் ஆகுமேல்,
உள்ளம் நோய் வேண்டா, உயிர்க்கு. 60

நீர் அறம் நன்று; நிழல் நன்று; தன் இல்லுள்
பார் அறம் நன்று; பாத்து உண்பானேல், பேர் அறம்
நன்று, தளி, சாலை, நாட்டல்;—பெரும் போகம்
ஒன்றுமாம், சால உடன். 61

பிடிப் பிச்சை, பின் இறை, ஐயம், கூழ், கூற்றோடு
எடுத்து இரந்த உப்பு, இத் துணையோடு அடுத்த
சிறு பயம் என்னார், சிதவலிப்பு ஈவார்
பெறு பயன், பின், சாலப் பெரிது. 62

வெந் தீக் காண் வெண்ணெய், மெழுகு, நீர் சேர் மண், உப்பு,
அம் தண் மகற் சார்ந்த தந்தை, என்று ஐந்தினுள்,
ஒன்று போல் உள் நெகிழ்ந்து ஈயின், சிறிது எனினும்,
குன்றுபோல் கூடும், பயன். 63

குளம் தொட்டு, காவு பதித்து, வழி சீத்து,
உளம் தொட்டு உழு வயல் ஆக்கி, வளம் தொட்டுப்
பாகுபடும் கிணற்றோடு என்று இவை பாற்படுத்தான்
ஏகும் சுவர்க்கம் இனிது. 64

போர்த்தும், உரிந்திட்டும், பூசியும், நீட்டியும்,
ஓர்த்து ஒரு பால் மறைத்து, உண்பான் மேய் ஓர்த்த
அறம்; அறமேல் சொல் பொறுக்க; அன்றேல், கலிக்கண்
துறவறம் பொய்; இல்லறம் மெய் ஆம். 65

தான் பிறந்த இல் நினைந்து, தன்னைக் கடைப்பிடித்து,
தான் பிறரால் கருதற்பாடு உணர்ந்து, தான் பிறரால்,
'சாவ' என வாழான், சான்றோரால், 'பல் யாண்டும்
வாழ்க!' என வாழ்தல் நன்று. 66

நெடுக்கல், குறுக்கல், துறை நீர் நீடு ஆடல்,
வடுத் தீர் பகல்வாய் உறையே, வடுத் தீரா
ஆகும் அந் நான்கு ஒழித்து, ஐந்து அடக்குவான்ஆகில்,
வே கும்பம் வேண்டான் விடும். 67

கொன்றான், கொலையை உடன் பட்டான், கோடாது
கொன்றதனைக் கொண்டான், கொழிக்குங்கால், கொன்றதனை
அட்டான், இட உண்டான், ஐவரினும் ஆகும் என,
கட்டு எறிந்த பாவம் கருது. 68

சிறைக் கிடந்தார், செத்தார்க்கு நோற்பார், பல நாள்
உறைக் கிடந்தார், ஒன்று இடையிட்டு உண்பார், பிறைக் கிடந்து
முற்றனைத்தும் உண்ணாத் தவர்க்கு, ஈந்தார்,—மன்னராய்,
கற்று அனைத்தும் வாழ்வார், கலந்து. 69

ஈன்று எடுத்தல்; சூல் புறஞ்செய்தல்; குழவியை
ஏன்று எடுத்தல்; சூல் ஏற்ற கன்னியை, ஆன்ற
அழிந்தாளை, இல் வைத்தல்;—பேர் அறமா ஆற்ற
மொழிந்தார், முது நூலார், முன்பு. 70

வலி அழிந்தார், மூத்தார், வடக்கிருந்தார், நோயால்
நலிபு அழிந்தார், நாட்டு அறைபோய் நைந்தார்,—மெலிவு ஒழிய,
இன்னவரால் என்னுராய், ஈந்த ஒரு துற்று
மன்னவராச் செய்யும் மதித்து. 71

கலங்காமைக் காத்தல், கருப்பம் சிதைந்தால்
இலங்காமைப் பேர்த்தரல், ஈற்றம் விலங்காமைக்
கோடல், குழவி மருந்து, வெருட்டாமை,—
நாடின், அறம் பெருமை நாட்டு. 72

சூலாமை, சூலின் படும் துன்பம், ஈன்றபின்
ஏலாமை, ஏற்ப வளர்ப்பு அருமை, சால்பவை
வல்லாமை,—வாய்ப்ப அறிபவர் உண்ணுமை,
கொல்லாமை, நன்ருல், கொழித்து. 73

சிக்கர், சிதடர், சிதலைபோல் வாய் உடையார்,
துக்கர், துருநாமர், தூக்குங்கால், தொக்கு
வரு நோய்கள் முன் நாளில் தீர்த்தாரே—இந் நாள்
ஒரு நோயும் இன்றி, வாழ்வார். 74

பக்கம் படாமை, ஒருவற்குப் பாடு ஆற்றல்,
தக்கம் படாமை, தவம்; அல்லாத் தக்கார்,
இழிசினர்க்கேயானும் பசித்தார்க்கு ஊண் ஈத்தல்,
கழி சினம் காத்தல், கடன். 75

புண் பட்டார், போற்றுவார் இல்லாதார், போகு உயிரார்,
கண் கெட்டார், கால் இரண்டும் இல்லாதார், கண் கண்பட்டு
ஆழ்ந்து நெகிழ்ந்து அவர்க்கு ஈத்தார்,—கடை போக
வாழ்ந்து கழிவார், மகிழ்ந்து. 76

பஞ்சப் பொழுது பாத்து உண்பான்; கரவாதான்;
அஞ்சாது, உடை படையுள், போந்து எறிவான்; எஞ்சாதே
உண்பது முன் ஈவான்; குழவி பலி கொடுப்பான்;—
எண்பதின் மேலும் வாழ்வான். 77

வரைவு இல்லாப் பெண் வையார்; மண்ணைப் புற்று ஏரூர்;
புரைவு இல்லார் நள்ளார்; போர் வேந்தன் வரைபோல்
கடுங் களிறு விட்டுழி, செல்லார்; வழங்கார்;
கொடும் புலி கொட்கும் வழி. 78

தக்கார் வழி கெடாதாகும்; தகாதவர்
உக்க வழியராய் ஒல்குவார்; தக்க
இனத்தினன் ஆகும், பழி, புகழ்; தம் தம்
மனத்தினன் ஆகும், மதி. 79

கழிந்தவை தான் இரங்கான், கைவாரா நச்சான்,
இகழ்ந்தவை இன்புறான், இல்லார் மொழிந்தவை
மென் மொழியால், உள் நெகிழ்ந்து, ஈவானேல்,—விண்ணோரால்
இன் மொழியால் ஏத்தப்படும். 80

காடுபோல் கட்கு இனிய இல்லம், பிறர் பொருள்
ஓடுபோல், தாரம் பிறந்த தாய், ஊடு போய்க்
கோத்து இன்னா சொல்லானாய், கொல்லானேல்,—பல்லவர்
ஒத்தினால் என்ன குறை? 81

தோற் கன்று காட்டிக் கறவார்; கறந்த பால்
பாற்பட்டார் உண்ணார்; பழி, பாவம், பாற்பட்டார்,
ஏற்று அயரா, இன்புற்று வாழ்வன, ஈடு அழியக்
கூற்று அயரச் செய்யார், கொணர்ந்து. 82

நகையொடு, மந்திரம், நட்டார்க்கு வாரம்,
பகையொடு, பாட்டு உரை, என்று ஐந்தும் தொகையொடு
மூத்தார் இருந்துழி வேண்டார், முது நூலுள்
யாத்தார், அறிவினர் ஆய்ந்து. 83

வைதான் ஒருவன் இனிது ஈய வாழ்த்தியது
எய்தா உரையை அறிவானேல், நொய்தா
அறிவு அறியா ஆள் ஆண்டு என உரைப்பர்; வாயுள்
தறி எறியார், தக்காரே தாம். 84

... ... ... ... ... ... ... ... 85

... ... ... ... ... ... ... ... 86

... ... ... ... ... ... ... ... 87

... ... ... ... ... ... ... ... 88

... ... ... ... ... ... ... ... 89

[இரா-இருக்கை, ஏலாத வைகல், பனி மூழ்கல்,
குராக் கான் புகல்,] நெடிய மண், என்று, உராய்த் தனது
எவ்வம் தணிப்பான், இவை என் ஆம்? பெற்றானைத்
தெய்வமாத் தேறுமால், தேர்ந்து. 90

சத்தம், மெய்ஞ் ஞானம், தருக்கம், சமையமே,
வித்தகர் கண்ட வீடு, உள்ளிட்டு, ஆங்கு, அத்தகத்
தந்த இவ் ஐந்தும் அறிவான், தலையாய,
சிந்திப்பின், சிட்டன், சிறந்து. 91

கண்ணுங்கால் கண்ணும் கணிதமே, யாழினோடு,
எண்ணுங்கால் சாந்தே, எழுதல், இலை நறுக்கு,
இட்ட இவ் ஐந்தும் அறிவான்—இடையாய
சிட்டன் என்று எண்ணப்படும். 92

நாண் இலன் நாய்; நன்கு நள்ளாதான் நாய்; பெரியார்ப்
பேண் இலன் நாய்; பிறர் சேவகன் நாய்; ஏண் இல்
பொருத்திய பூண் முலையார் சேரி, கைத்து இல்லான்,
பருத்தி பகர்வுழி நாய். 93

நாண் எளிது, பெண்ணேல்; நகை எளிது, நட்டானேல்;
ஏண் எளிது, சேவகனேல்; பெரியார்ப் பேண் எளிது;—
கொம்பு மறைக்கும் இடாஅய்!—அவிழின்மீது
அம்பு பறத்தல் அரிது. 94

இன் சொல்லான் ஆகும், கிளைமை; இயல்பு இல்லா
வன் சொல்லான் ஆகும், பகைமை மன்; மென் சொல்லான்
ஆய்வு இல்லா ஆர் அருளாம்; அவ் அருள் நல் மனத்தான்;
வீவு இல்லா வீடு ஆய் விடும். 95

தக்கது, இளையான் தவம்; செல்வன் ஊண் மறுத்தல்
தக்கது; கற்புடையாள் வனப்புத் தக்கது;
அழல், தண்ணென் தோளாள் அறிவு இலள் ஆயின்,
நிழற்கண் முயிறு, ஆய்விடும். 96

'பொய்யான் சுவர்க்கம்; வாயான் நிரையம்; பொருள்தான்,
மை ஆர் மடந்தையர் இல் வாழ்வு, இனிது'—மெய் அன்ருல்;—
மைத் தக நீண்ட மலர்க் கண்ணுய்!—தீது அன்றே
எத் தவமானும் படல். 97

புல் அறத்தின் நன்று, மனே வாழ்க்கை; போற்று உடைத்தேல்,
நல்லறத்தாரோடும் நட்கலாம்; நல்லறத்தார்க்கு
அட்டு, இட்டு, உண்டு, ஆற்ற வாழ்ந்தார்களே, இம்மையில்
அட்டு, இட்டு, உண்டு, ஆற்ற வாழ்வார். 98

ஈவது நன்று; தீது, ஈயாமை; நல்லவர்
மேவது நன்று, மேவாதாரோடு; ஓவாது,
கேட்டுத் தலேநிற்க; கேடு இல் உயர் கதிக்கே
ஒட்டுத்தலே நிற்கும் ஊர்ந்து. 99

உண் இடத்தும், ஒன்ஞர் மெலிவு இடத்தும், மந்திரம் கொண்டு
எண் இடத்தும், செல்லாமைதான் தலேயே; எண்ணி,
உரைப் பூசல் போற்றல், உறு தவமேல் கங்கைக்
கரைப் பூசை போறல், கடை. 100

பத்தினி, சேவகன், பாத்து இல் கடுந் தவசி,
பொத்து இல் பொருள்-திறத்துச் செவ்வியான், பொத்து இன்றி
வைத்தால் வழக்கு உரைக்கும் சான்ருன்,—இவர் செம்மை
செத்தால் அறிக, சிறந்து! 101

வழிப் படர், வாய்ப்ப வருந்தாமை, வாய் அல்
குழிப் படல், தீச் சொற்களோடு, மொழிப்பட்ட
காய்ந்து விடுதல்,—களேந்து, உய்யக் கற்றவர்,
ஆய்ந்து விடுதல் அறம். 102

# புறத்திரட்டில் கண்ட பாடல்கள்

அச்சமே, ஆயுங்கால் நன்மை, அறத்தொடு,
கச்சம் இல் கைம்மாறு, அருள், ஐந்தால்—மெச்சிய
தோகை மயில் அன்ன சாயலாய்!—தூற்றுங்கால்
ஈகை வகையின் இயல்பு. (206)

கைம்மாறும், அச்சமும், காணின் பயம் இன்மை,
பொய்ம் மாறு நன்மை, சிறு பயம், மெய்ம் மாறு
அருள் கூடி ஆர் அறத்தோடு, ஐந்து இயைந்து, ஈயின்,—
பொருள் கோடி எய்தல், புகன்று. (207)

இம்மை நலன் அழிக்கும்; எச்சம் குறைபடுக்கும்;
அம்மை அரு நரகத்து ஆழ்விக்கும்; மெய்ம்மை
அறம் தேயும்; பின்னும், அலர்மகளை நீக்கும்;—
மறந்தேயும் பொய் உரைக்கும் வாய். (311)

## சிறப்புப் பாயிரம்

மல் இவர் தோள் மாக்காயன் மாணுக்கன், மா நிலத்துப்
பல்லவர் நோய் நீக்கும் பாங்கினுல், கல்லா,
மறு பஞ்சம் தீர் மழைக்கை மாக் காரியாசான்,
சிறுபஞ்சமூலம் செய்தான்.

ஒத்த ஒழுக்கம், கொலை, பொய், புலால், களவோடு,
ஒத்த இவை அல் ஒரு நால் இட்டு, ஒத்த
உறு பஞ்ச மூலம் தீர் மாரிபோல் கூறீர்—
சிறுபஞ்சமூலம் சிறந்து!

# ஆசாரக்கோவை

**ஆசாரக்கோவை** என்னும் தொடர்க்கு ஒழுக்கங்களின் தொகுதி என்பது பொருளாம். 'ஆசாரங்களினது கோவை' என்றே, 'ஆசாரங்களைத் தொகுத்த கோவை' என்றே, இத்தொடருக்குப் பொருள் கூறலாம். இப் பெயர் நூலுள் பொதிந்துள்ள பொருள் பற்றி அமைந்தது. 'அச்சமே கீழ்களது ஆசாரம்' (குறள், 1075), 'ஆசாரம் என்பது கல்வி' (நான்மணி. 93) 'அறியாத் தேயத்து ஆசாரம் பழியார்' (முதுமொழி, 3:8) எனத் திருவள்ளுவர் முதலாயினரும் ஒழுக்கம் என்ற பொருளில் ஆசாரம் என்பதை வழங்கியுள்ளனர். இந் நூலுள்ளும் 'ஆசார வித்து' (1), 'ஆசாரம் எப் பெற்றியானும் படும்' (96), 'ஆசாரம் வீடு பெற்றார்' (100) என வரும் இடங்களில், இச் சொல் மேற்குறித்த பொருளில் வந்திருத்தல் காணலாம். அன்றியும், ஒழுக்கம் (2, 21), நெறி (16, 27), முறை (11), வழி (29, 30) என்னும் சொற்களாலும் ஆசாரம் என்பதை இந் நூலாசிரியர் குறித்துள்ளார்.

'ஆசார வித்து' (1) என்று தொடங்கி, 'ஆசாரம் வீடு பெற்றார்' (100) என முடியும் நூறு செய்யுட்களில் தாம் கூறப் புகுந்த ஆசாரங்களை ஒரு நெறிப்பட ஆசிரியர் கோவை செய்துள்ள சிறப்புக் கவனித்தற்கு உரியது. பொது வகையான ஒழுக்கங்களைத் தொகுத்தது தவிர, நாள்தோறும் வாழ்க்கையில் பின்பற்றி நடக்க வேண்டும் கடமைகள் அல்லது நித்திய ஒழுக்கங்களையும் மிகுதியாக ஆசிரியர் தந்துள்ளார். அகத்தூய்மை அளிக்கும் அறங்களோடு உடல் நலம் பேணும் புறத்தூய்மையை வற்புறுத்திக் கூறும் பகுதிகளும் பலவாம். வைகறைத் துயில் எழுதல் முதல், காலைக் கடன் கழித்தல், நீராடல், உடுத்தல், உண்ணல், உறங்குதல் முதலிய பல நிகழ்ச்சிகளிலும் ஒழுகும் நெறிகள் வற்புறுத்தப்படுகின்றன. மேற்கொள்ளத் தக்கன இவை, விலக்கத் தக்கன இவை, எனச் சில ஆசாரங்களை விதித்தும், சிலவற்றை விலக்கியும் செல்லும் முறை கவனிக்கத் தக்கது.

இந் நூல் வடமொழி ஸ்மிருதிக் கருத்துக்களைப் பின்பற்றி எழுந்தது என்பது,

> ஆரிடத்துத் தான் அறிந்த மாத்திரையான், ஆசாரம்
> யாரும் அறிய, அறன் ஆய மற்றவற்றை
> ஆசாரக்கோவை எனத் தொகுத்தான்

எனவரும் சிறப்புப் பாயிரச் செய்யுட் பகுதியால் தெரியவருகிறது. இலக்கண விளக்க உரையில், அதன் ஆசிரியர் வழி நூல் வகையுள் ஒன்றாகிய மொழிபெயர்த்தலுக்கு இந் நூலை உதாரணமாகக் காட்டியுள்ளார்.

தி.செல்வக்கேசவராய முதலியார் தமது ஆசாரக்கோவைப் பதிப்பின் முகவுரையில், 'இந் நூலிற் கூறிய ஆசாரங்கள் பெரும்பான்மையாய் வட மொழியிலுள்ள சுக்ரஸ்மிருதியிலிருந்து தொகுத்தவை என வடநூற் புலவர் கூறுகின்றனர்' என்று குறித்துள்ளார். பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை தாம் ஆங்கிலத்தில் எழுதிய தமிழ் இலக்கிய வரலாற்றில், ஆபஸ்தம்ப கிருஹ்ய சூத்திரம், ஆபஸ்தம்ப தர்ம சூத்திரம், போதாயன தர்ம சூத்திரம், கௌதம சூத்திரம், விஷ்ணு தர்ம சூத்திரம், வசிஷ்ட தர்ம சூத்திரம், மனு ஸ்மிருதி, உசனஸ ஸம்ஹிதா, ஸங்க ஸ்மிருதி, லகு ஹாரித ஸ்மிருதி, ஆகியவைகள் எல்லாம் இந் நூலுக்கு அடிப்படையாய் அமைந்துள்ளவை என்கிறார்.

இங்ஙனம் உள்ள பல ஸ்மிருதிகளைப் பின்பற்றி உரைத்த ஆசாரங்களில் சில இக்காலத்திற்கு ஒவ்வாதிருக்கலாம். சிலவற்றை இன்றைய சூழ்நிலையில் பின்பற்ற முடியாமலும் இருக்கலாம். ஆயினும், இவை எல்லாம் முன்னோர் கண்ட ஒழுக்க நெறிகளே. இந் நூலாசிரியர் ஒரு சில இடங்களில், 'யாவரும் கண்ட நெறி' (16), 'மிக்கவர் கண்ட நெறி' (27), 'நல் அறிவாளர் துணிவு' (17), 'பேர் அறிவாளர் துணிவு (19), 'நூல் முறையாளர் துணிவு' (61) என்று கூறுவதிலிருந்தும் முன்னோர் மொழி பொருளை இவர் போற்றி உரைத்தல் புலனும்.

இந் நூலின் ஆசிரியரையும், இவர்தம் தந்தையார் பெயரையும், இவர் வாழ்ந்த ஊரையும், இவரது மதச் சார்பையும் சிறப்புப் பாயிரச் செய்யுள் நமக்கு அறிவிக்கின்றது. இவரது முழுப்பெயர் **கயத்தூர்ப் பெருவாயின் முள்ளியார்** என்பதாகும். முள்ளியார் என்பது இவரது இயற்பெயர். பெருவாய் என்பது இவரது தந்தையார் பெயர் போலும்! கயத்தூரின் ஒரு பகுதியாகிய பெருவாயிலில் வாழ்ந்த முள்ளியார் என்றோ, கயத்தூரை அடுத்த பெருவாயிலில் வாழ்ந்த முள்ளியார் என்றோ கொள்ளவும் இடமுண்டு. இவர் வாழ்ந்த ஊர் கயத்தூர். இவ் ஊரைத் 'திரு வாயில் ஆய திறல் வண் கயத்தூர்' என்று பாயிரப் பாடல் சிறப்பிக்கின்றது. இது கொண்டு செல்வமும், திறலும், வண்மையும் ஓங்கிய ஊர் இது என்பது விளங்கும். இவ் ஊர் எங்குள்ளது என்பது தெளிவாகத் தெரியவில்லை. 'ஆர் எயில் மூன்றும் அழித்தான் அடி ஏத்தி' என்பதனால், இவர் சைவ சமயத்தார் என்பதும் போதரும்.

இந் நூலுள் சிறப்புப் பாயிரம் நீங்கலாக நூறு செய்யுட்கள் உள்ளன. வெண்பாவின் வகையாகிய குறள் வெண்பா, சிந்தியல் வெண்பா, நேரிசை வெண்பா, இன்னிசை வெண்பா, பஃறொடை வெண்பா, சவலை வெண்பா, என்பனவெல்லாம் இதில் உள்ளன. சிறப்புப் பாயிரப் பாடல் நூல் இறுதியிலேயே ஏடுகளில் காணப் பெறுவதால், இப்பதிப்பிலும் அது நூல் இறுதியில் தரப்பெற்றுள்ளது.

இந் நூற் பாடல்கள் பத்துப்பாட்டு, சீவக சிந்தாமணி, முதலிய இலக்கிய உரைகளிலும், நன்னூல், இலக்கண விளக்கம், பிரயோக விவேகம், முதலிய இலக்கண நூல்களின் உரைகளிலும் மேற்கோளாக எடுத்தாளப் பெற்றுள்ளன. இந் நூல் முழுமைக்கும் செவ்விதின் அமைந்த பழைய பொழிப்புரை உள்ளது.

# ஆசாரக்கோவை

(பெருவாயின் முள்ளியார்)

நன்றி அறிதல், பொறையுடைமை, இன் சொல்லோடு,
இன்னாத எவ் உயிர்க்கும் செய்யாமை, கல்வியோடு,
ஒப்புரவு ஆற்ற அறிதல், அறிவுடைமை,
நல் இனத்தாரோடு நட்டல்,—இவை எட்டும்
சொல்லிய ஆசார வித்து. 1

பிறப்பு, நெடு வாழ்க்கை, செல்வம், வனப்பு,
நிலக் கிழமை, மீக்கூற்றம், கல்வி, நோய் இன்மை,
இலக்கணத்தால், இவ் வெட்டும் எய்துப—என்றும்
ஒழுக்கம் பிழையாதவர். 2

தக்கிணை, வேள்வி, தவம், கல்வி, இந் நான்கும்
முப் பால் ஒழுக்கினால் காத்து உய்க்க! உய்யாக்கால்,
எப் பாலும் ஆகா, கெடும். 3

'வைகறை யாமம் துயில் எழுந்து, தான் செய்யும்
நல் அறமும் ஒண் பொருளும் சிந்தித்து, வாய்வதின்
தந்தையும் தாயும் தொழுது எழுக!' என்பதே—
முந்தையோர் கண்ட முறை. 4

'எச்சிலார், தீண்டார்—பசு, பார்ப்பார், தீ, தேவர்,
உச்சந் தலையோடு, இவை' என்ப; யாவரும்
திட்பத்தால் தீண்டாப் பொருள். 5

எச்சிலார், நோக்கார்—புலை, திங்கள், நாய், நாயிறு,
அத்தக வீழ்மீனோடு, இவ் ஐந்தும், தெற்றென,
நன்கு அறிவார், நாளும், விரைந்து. 6

எச்சில் பலவும் உள; மற்று அவற்றுள்,
இயக்கம் இரண்டும், இணைவிழைச்சு, வாயில்-
விழைச்சு, இவை எச்சில், இந் நான்கு. 7

நால் வகை எச்சிலும் நன்கு கடைப்பிடித்து,
ஓதார், உரையார், வளராரே,—எஞ் ஞான்றும்
மேதைகள் ஆகுறுவார். 8

நாள் அந்தி, கோல் தின்று, கண் கழீஇ, தெய்வத்தைத்
தான் அறியுமாற்றால் தொழுது எழுக! அல்கு அந்தி
நின்று தொழுதல் பழி. 9

தேவர் வழிபாடு, தீக் கனா, வாலாமை,
உண்டது கான்றல், மயிர் களைதல், ஊண் பொழுது,
வைகு துயிலோடு, இணைவிழைச்சு, கீழ் மக்கள்
மெய் உறல், ஏனை மயல் உறல்,—ஈர்-ஐந்தும்
ஐயுறாது, ஆடுக, நீர்! 10

உடுத்து அலால் நீர் ஆடார்; ஒன்று உடுத்து உண்ணார்;
உடுத்த ஆடை நீருள் பிழியார்; விழுத்தக்கார்
ஒன்று உடுத்து என்றும் அவை புகார்;—என்பதே
முந்தையோர் கண்ட முறை. 11

தலை உரைத்த எண்ணெயால் எவ் உறுப்பும் தீண்டார்;
பிறர் உடுத்த மாசுணியும் தீண்டார்; செருப்பு,
குறை எனினும், கொள்ளார், இரந்து. 12

நீருள் நிழல் புரிந்து நோக்கார்; நிலம் இரா,
கிளார்; இரா மரமும் சேரார்; இடர் எனினும்,
நீர் தொடாது, எண்ணெய் உரையார்; உரைத்த பின்,
நீர் தொடார், நோக்கார், புலை. 13

நீராடும் போழ்தில், நெறிப் பட்டார், எஞ் ஞான்றும்,—
நீந்தார்; உமியார்; திளையார்; விளையாடார்;
காய்ந்தது எனினும், தலை ஒழிந்து ஆடாரே,
ஆய்ந்த அறிவினவர். 14

ஐம் பூதம், பார்ப்பார், பசு, திங்கள், நாயிறு,
தம் பூதம் எண்ணாது இகழ்வானேல், தம் மெய்க்கண்
ஐம் பூதம் அன்றே கெடும். 15

'அரசன், உவாத்தியான், தாய், தந்தை, தம்முன்,
நிகர் இல் குரவர் இவ் ஐவர்; இவர் இவரைத்
தேவரைப் போலத் தொழுது எழுக!' என்பதே—
யாவரும் கண்ட நெறி. 16

'குரவர் உரை இகந்து செய்யார்; விரதம்
குறையுடையார் தீர மறவார்; நிறை உவா
மெல் கோலும் தின்னார்; மரம் குறையார்' என்பதே—
நல் அறிவாளர் துணிவு. 17

நீராடி, கால் கழுவி, வாய் பூசி, மண்டலம் செய்து,
உண்டாரே உண்டார் எனப்படுவார்; அல்லாதார்
உண்டார்போல் வாய் பூசிச் செல்வர்; அது எடுத்துக்
கொண்டார், அரக்கர், குறித்து. 18

'காலின் நீர் நீங்காமை உண்டிடுக! பள்ளியும்
ஈரம் புலராமை ஏறற்க!' என்பதே—
பேர் அறிவாளர் துணிவு. 19

உண்ணுங்கால் நோக்கும் திசை கிழக்குக்கண் அமர்ந்து,
தூங்கான், துளங்காமை, நன்கு இரீஇ, யாண்டும்
பிறிது யாதும் நோக்கான், உரையான், தொழுது கொண்டு,
உண்க, உகாஅமை நன்கு! 20

விருந்தினர், மூத்தோர், பசு, சிறை, பிள்ளை,
இவர்க்கு ஊண் கொடுத்து அல்லால் உண்ணாரே—என்றும்
ஒழுக்கம் பிழையாதவர். 21

ஒழிந்த திசையும் வழிமுறையான் நல்ல;
முகட்டு வழி ஊண் புகழ்ந்தார்; இகழ்ந்தார்,
முகட்டு வழி கட்டில் பாடு. 22

கிடந்து உண்ணார்; நின்று உண்ணார்; வெள்ளிடையும் உண்ணார்;
சிறந்து மிக உண்ணார்; கட்டில்மேல் உண்ணார்;
இறந்து, ஒன்றும் தின்னற்க, நின்று! 23

முன் துவ்வார்; முன் எழார்; மிக்கு உறார்; ஊணின்கண்
என் பெறினும் ஆற்ற வலம் இரார்;—தம்மின்
பெரியார் தம்பால் இருந்தக்கால். 24

கைப்பன எல்லாம் கடை, தலை தித்திப்ப.
மெச்சும் வகையால் ஒழிந்த இடை ஆக,
துய்க்க, முறை வகையால், ஊண். 25

முதியவரைப் பக்கத்து வையார்; விதி முறையால்
உண்பவற்றுள் எல்லாம் சிறிய கடைப்பிடித்து,
அன்பின் திரியாமை, ஆசாரம் நீங்காமை,
பண்பினல் நீக்கல், கலம்! 26

இழியாமை நன்கு உமிழ்ந்து, எச்சில் அற வாய்
அடியோடு நன்கு துடைத்து, வடிவு உடைத்தா
முக் கால் குடித்துத் துடைத்து, முகத்து உறுப்பு
ஒத்த வகையால் விரல் உறுத்தி, வாய்பூசல்—
மிக்கவர் கண்ட நெறி. 27

இரு கையால் தண்ணீர் பருகார்; ஒரு கையால்,
கொள்ளார், கொடாஅர், குரவர்க்கு; இரு கை
சொறியார், உடம்பு மடுத்து. 28

அந்திப் பொழுது, கிடவார், நடவாரே;
உண்ணூர், வெகுளார், விளக்கு இகழார்; முன் அந்தி
அல்கு உண்டு அடங்கல் வழி. 29

கிடக்குங்கால், கை கூப்பித் தெய்வம் தொழுது,
வடக்கொடு கோணம் தலை வையார்; மீக்கோள்
உடல் கொடுத்து, சேர்தல் வழி. 30

இரு தேவர், பார்ப்பார், இடை போகார்; தும்மினும்,
மிக்கார் வழுத்தின், தொழுது எழுக! ஒப்பார்க்கு
உடன் செல்க, உள்ளம் உவந்து! 31

புல், பைங்கூழ், ஆப்பி, சுடலை, வழி, தீர்த்தம்,
தேவகுலம், நிழல், ஆன் நிலை, வெண்பலி, என்று
ஈர்-ஐந்தின்கண்ணும், உமிழ்வோடு இரு புலனும்
சோரார்—உணர்வு உடையார். 32

பகல் தெற்கு நோக்கார்; இரா வடக்கு நோக்கார்;
பகல் பெய்யார், தீயினுள் நீர். 33

பத்துத் திசையும் மனத்தால் மறைத்தபின்,
அந்தரத்து அல்லால், உமிவோடு இரு புலனும்,
இந்திர தானம் பெறினும், இகழாரே—
'தந்திரத்து வாழ்தும்!' என்பார். 34

நடைவரவு, நீரகத்து நின்று, வாய்பூசார்;
வழி, நிலை நீருள்ளும் பூசார்; மனத்தால்
வரைந்து கொண்டு அல்லது பூசார், கலத்தினுல்
பெய் பூச்சுச் சீராது எனின். 35

சுடர் இடைப் போகார்; சுவர்மேல் உமியார்;
இடர் எனினும், மாசுணி தம் கீழ் மேல் கொள்ளார்;
படை வரினும், ஆடை வளி உறைப்பப் போகார்;
பலர் இடை ஆடை உதிராரே;—என்றும்
கடன் அறி காட்சியவர். 36

பிறர் மனை, கள், களவு, சூது, கொலையோடு,
அறன் அறிந்தார், இவ் ஐந்தும் நோக்கார்—திறன் இலர் என்று
எள்ளப் படுவதூஉம் அன்றி, நிரயத்துச்
செல்வுழி உய்த்திடுதலான். 37

பொய், குறளை, வெளவல், அழுக்காறு, இவை நான்கும்
ஐயம் தீர் காட்சியார் சிந்தியார்; சிந்திப்பின்,
ஐயம் புகுவித்து, அரு நிரயத்து உய்த்திடும்;
தெய்வமும் செற்றுவிடும். 38

தமக்கு என்று உலை ஏற்ருர்; தம்பொருட்டு ஊன் கொள்ளார்;
அடுக்களை எச்சில் படாஅர்; மனைப் பலி
ஊட்டினமை கண்டு உண்க, ஊண்! 39

உயர்ந்ததின் மேல் இரார்;—உள் அழிவு செய்யார்,
இறந்து இன்ன செய்தக்கடைத்தும்;—குரவர்,
இளங் கிளைகள் உண்ணும் இடத்து. 40

கண் எச்சில் கண் ஊட்டார்; காலொடு கால் தேயார்;
புண்ணியம் ஆய தலையோடு உறுப்பு உறுத்த!—
நுண்ணிய நூல் உணர்வினர். 41

'தீண்டா நாள் முந் நாளும் நோக்கார்; நீர் ஆடியபின்,
ஈர்-ஆறு நாளும் இகவற்க!' என்பதே—
பேர் அறிவாளர் துணிவு. 42

உச்சிஅம் போழ்தோடு, இடை யாமம், ஈர்-அந்தி,
மிக்க இரு தேவர் நாளோடு, உவாத்திதி நாள்,
அட்டமியும், ஏனைப் பிறந்த நாள், இவ் அனைத்தும்
ஒட்டார்—உடன் உறைவின்கண். 43

நாழி மணைமேல் இரியார்; மணை கவிழார்;
கோடி கடையுள் விரியார்; கடைத்தலை,
ஓராது, கட்டில் படாஅர்; அறியாதார்-
தம் தலைக்கண் நில்லாவிடல்! 44

துடைப்பம், துகட் காடு, புல் இதழ், செத்தல்
கருங் கலம், கட்டில் கிழிந்ததனோடு, ஐந்தும்,
பரப்பற்க, பந்தரகத்து! 45

காட்டுக் களைந்து, கலம் கழீஇ, இல்லத்தை
ஆப்பி நீர் எங்கும் தெளித்து, சிறுகாலை,
நீர்ச் சால், கரகம், நிறைய மலர் அணிந்து,
இல்லம் பொலிய, அடுப்பினுள் தீப் பெய்க—
நல்லது உறல் வேண்டுவார்! 46

அட்டமியும், ஏனை உவாவும், பதினான்கும்,
அப் பூமி காப்பார்க்கு உறுகண்ணும், மிக்க
நிலத் துளக்கு, விண் அதிர்ப்பு, வாலாமை,—பார்ப்பார்
இலங்கு நூல் ஓதாத நாள். 47

கலியாணம், தேவர், பிதிர் விழா, வேள்வி, என்று
ஐவகை நாளும், இகழாது, அறம் செய்க!
பெய்க, விருந்திற்கும் கூழ்! 48

உடை, நடை, சொற் செலவு, வைதல், இந் நான்கும்—
நிலைமைக்கும், ஆண்மைக்கும், கல்விக்கும், தத்தம்
குடிமைக்கும், தக்க செயல்! 49

பழியார்; இழியார்; பலருள் உறங்கார்;
இசையாத நேர்ந்து கரவார்; இசைவு இன்றி,
இல்லாரை எள்ளி, இகந்து உரையார்;—தள்ளியும்,
தாங்க அருங் கேள்வியவர். 50

மின் ஒளியும், வீழ்மீனும், வேசையர்கள் கோலமும்,
தம் ஒளி வேண்டுவார் நோக்கார்; பகற் கிழவோன்
முன் ஒளியும் பின் ஒளியும் அற்று. 51

படிறும், பயனிலவும், பட்டி உரையும்,
வசையும், புறனும், உரையாரே—என்றும்
அசையாத உள்ளத்தவர். 52

தெறியொடு, கல்லேறு, வீளை, விளியே,
விகிர்தம், கதம், கரத்தல், கை புடை, தோன்ற
உறுப்புச் செகுத்தலோடு, இன்னவை எல்லாம்
பயிற்ருர்—நெறிப்பட்டவர். 53

முறுவல் இனிதுரை, கால் நீர், மணை, பாய்,
கிடக்கையோடு, இவ் ஐந்தும் என்ப—தலைச் சென்ருர்க்கு
ஊணொடு செய்யும் சிறப்பு. 54

கறுத்த பகை முனையும், கள்ளாட்டுக்கண்ணும்
நிறுத்த மனம் இல்லார் சேரியகத்தும்,
குணம் நோக்கிக் கொண்டவர் கோள் விட்டுழியும்,—
நிகர் இல் அறிவினர் வேண்டார்—பலர் தொகு
நீர்க்கரையும், நீடு நிலை. 55

முளி புல்லும், கானமும், சேரார்; தீக்கு ஊட்டார்;
துளி விழ, கால் பரப்பி ஓடார்; தெளிவு இலாக்
கானம், தமியர், இயங்கார்; துளி அஃகி,
நல்குரவு ஆற்றப் பெருகினும், செய்யாரே,
தொல் வரவின் தீர்ந்த தொழில். 56

பாழ் மனையும், தேவ குலனும், சுடுகாடும்,
ஊர் இல் வழி எழுந்த ஒற்றை முது மரனும்,
தாமே தமியர் புகாஅர்; பகல் வளரார்;—
நோய் இன்மை வேண்டுபவர். 57

எழுச்சிக்கண், பின் கூவார், தும்மார்; வழுக்கியும்,
'எங்கு உற்றுச் சேறிரோ?' என்ருரே; முன் புக்கு,
எதிர் முகமா நின்றும் உரையார்; இரு சார்வும்;
கொள்வர், குரவர் வலம். 58

'உடம்பு நன்று!' என்று உரையார்; ஊதார், விளக்கும்;
அடுப்பினுள் தீ நந்தக் கொள்ளார்; அதனைப்
படக் காயார், தம்மேல் குறித்து. 59

யாதொன்றும், ஏருர், செருப்பு; வெயில் மறையார்;—
ஆன்று அவிந்த மூத்த விழுமியார்தம்மோடு அங்கு
ஓர் ஆறு செல்லும் இடத்து. 60

வால் முறையான் வந்த நான் மறையாளரை
மேல் முறைப் பால் தம் குரவரைப்போல் ஒழுகல்—
நூல் முறையாளர் துணிவு. 61

கால்வாய்த் தொழுவு, சமயம், எழுந்திருப்பு,
ஆசாரம் என்ப, குரவர்க்கு இவை; இவை
சாரத்தால் சொல்லிய மூன்று. 62

துறந்தாரைப் பேணலும், நாணலும், தாம் கற்ற
மறந்தும் குரவர் முன் சொல்லாமை, மூன்றும்,
திறம் கண்டார் கண்ட நெறி. 63

பார்ப்பார், தவரே, சுமந்தார், பிணிப்பட்டார்,
மூத்தார், இளையார், பசு, பெண்டிர், என்று இவர்கட்கு
ஆற்ற வழி விலங்கினரே—பிறப்பினுள்
போற்றி எனப்படுவார். 64

ஈன்றாள், மகள், தன் உடன்பிறந்தாள், ஆயினும்,
சான்றார் தமித்தா உறையற்க—ஐம் புலனும்
தாங்கற்கு அரிது ஆகலான்! 65

கடை விலக்கின், காயார்; கழி கிழமை செய்யார்;
கொடை அளிக்கண் பொச்சாவார்; கோலம் நேர் செய்யார்;
இடை அறுத்துப் போகி, பிறன் ஒருவற் சேரார்;—
'கடைபோக வாழ்தும்!' என்பார். 66

தமக்கு உற்ற கட்டுரையும், தம்மின் பெரியார்
உரைத்ததற்கு உற்ற உரையும், அஃது அன்றிப்
பிறர்க்கு உற்ற கட்டுரையும், சொல்லற்க! சொல்லின்,
வடுக் குற்றம் ஆகிவிடும். 67

பெரியார் உவப்பன தாம் உவவார்; இல்லம்
சிறியாரைக் கொண்டு புகாஅர்; அறிவு அறியாப்
பிள்ளையேயானும் இழித்து உரையார், தம்மோடு
அளவளாவு இல்லா இடத்து. 68

முனியார்; துனியார்; முகத்து எதிர் நில்லார்;
தனிமை இடத்துக்கண் தம் கருமம் சொல்லார்;
'இனியவை யாம் அறிதும்!' என்னார்; கசிவு இன்று,
காக்கை வெள்ளென்னும் எனின். 69

உமிவும், உயர்ந்துழி ஏறலும், பாக்கும்,
வகை இல் உரையும், வளர்ச்சியும், ஐந்தும்
புணரார்—பெரியாரகத்து. 70

இறைவர் முன், செல்வமும், கல்வியும், தேசும்,
குணனும், குலம் உடையார் கூறுர்—பகைவர்போல்
பாரித்து, பல் கால் பயின்று. 71

பெரியார் மனையகத்தும் தேவகுலத்தும்,—
வணங்கார்—குரவரையும் கண்டால்; அணங்கொடு
நேர் பெரியார் செல்லும் இடத்து. 72

நகையொடு, கொட்டாவி, காறிப்பு, தும்மல்,
இவையும் பெரியார் முன் செய்யாரே; செய்யின்,
அசையாது, நிற்கும் பழி. 73

நின்றக்கால், நிற்க, அடக்கத்தால்! என்றும்
இருந்தக்கால், ஏவாமை ஏகார்; பெருந்தக்கார்
சொல்லின், செவி கொடுத்துக் கேட்டீக! மீட்டும்
வினுவற்க, சொல் ஒழிந்தக்கால்! 74

உடுக்கை இகவார், செவி சொறண்டார்; கை மேல்-
எடுத்து உரையார்; பெண்டிர்மேல் நோக்கார்; செவிச் சொல்லும்
கொள்ளார்;—பெரியார் அகத்து. 75

விரைந்து உரையார்; மேன்மேல் உரையார்; பொய் ஆய
பரந்து உரையார்; பாரித்து உரையார்;—ஒருங்கு எனைத்தும்
சில் எழுத்தினுனே, பொருள் அடங்க, காலத்தால்
சொல்லுக, செவ்வி அறிந்து! 76

தம் மேனி நோக்கார்; தலை உளரார்; கைந் நொடியார்,
எம் மேனி ஆயினும் நோக்கார், தலைமகன்-
தன் மேனி அல்லால் பிற. 77

பிறரொடு மந்திரம் கொள்ளார்; இறைவனைச்
சாரார்; செவி ஓரார்; சாரின், பிறிது ஒன்று
தேர்வார்போல் நிற்க, திரிந்து! 78

துன்பத்துள் துன்புற்று வாழ்தலும், இன்பத்துள்
இன்ப வகையான் ஒழுகலும், அன்பின்
செறப்பட்டார் இல்லம் புகாமை,—இம் மூன்றும்
திறப்பட்டார் கண்ணே உள. 79

தெறுவந்தும் தம் குரவர் பேர் உரையார்; இல்லத்து
உறுமி நெடிதும் இரார்அர்; பெரியாரை
என்றும் முறை கொண்டு கூறுர்; புலையரையும்
நன்கு அறிவார் கூறுர், முறை. 80

புழைக்கடைப் பின் புகார்; கோட்டி, உரிமை,
இவற்றுக்கண் செவ்வியார், நோக்காரே, அவ்வத்
தொழிற்கு உரியர் அல்லாதவர். 81

வண்ணமகளிர் இடத்தொடு தம் இடம்,
ஒள்ளியம் என்பார், இடம் கொள்ளார்; தெள்ளி,
மிகக் கிழமை உண்டுஎனினும், வேண்டாவே;—பெண்டிர்க்கு
உவப்பன வேருய்விடும். 82

நிரல்படச் செல்லார்; நிழல் மிதித்து நில்லார்;
உரையிடை ஆய்ந்து உரையார், ஊர் முனிவ செய்யார்;
அரசர் படை அளவும் சொல்லாரே;—என்றும்,
'கடைபோக வாழ்தும்!' என்பார். 83

அளை உறை பாம்பும், அரசும், நெருப்பும்,
முழை உறை சீயமும், என்று இவை நான்கும்,
இளைய, எளிய, பயின்றன, என்று எண்ணி,
இகழின், இழுக்கம் தரும். 84

அறத்தொடு, கல்யாணம், ஆள்வினை, கூரை,
இறப்பப் பெருகியக்கண்ணும், திறப்பட்டார்
மன்னரின் மேம்படச் செய்யற்க! செய்பவேல்,
மன்னிய செல்வம் கெடும். 85

உண்டது கேளார், குரவரை, மிக்காரை,
கண்டுழி; கண்டால், முகம் திரியார், புல்லரையும்
உண்டது கேளார் விடல்! 86

கிடந்தாரைக் கால் கழுவார்; பூப்பெய்யார்; சாந்தம்
மறந்தானும் எஞ் ஞான்றும் பூசார்; கிடந்தார்கண்
நில்லார், தாம்—கட்டில்மிசை. 87

உதவிப் பயன் உரையார்; உண்டி பழியார்;
அறத்தொடு தாம் நோற்ற நோன்பு வியவார்;—
'திறத்துளி வாழ்தும்!' என்பார். 88

எய்தாத வேண்டார்; இரங்கார், இழந்ததற்கு;
கைவாரா வந்த இடுக்கண் மனம் அழுங்கார்;—
மெய்யாய காட்சியவர். 89

தலைக்கு இட்ட பூ மேவார்; மோந்த பூச் சூடார்;
பசுக் கொடுப்பின், பார்ப்பார் கைக் கொள்ளாரே; என்றும்.
புலைக்கு எச்சில் நீட்டார்; விடல்! 90

மோட்டுடைப் போர்வையோடு, ஏக்கழுத்தம், தாள் இசைப்பு,
காட்டுளேயானும், பழித்தார்—மரம் தம்மின்
மூத்த உள, ஆகலான். 91

தலைஇய நற் கருமம் செய்யுங்கால், என்றும்,
புலையர்வாய் நாள் கேட்டுச் செய்யார்; தொலைவு இல்லா
அந்தணர்வாய் நாள் கேட்டுச் செய்க—அவர் வாய்ச்சொல்
என்றும் பிழைப்பது இல! 92

மன்றத்து நின்று உஞற்றூர்; மாசு திமிர்ந்து இயங்கார்;
என்றும் கடுஞ் சொல் உரையார்; இருவராய்
நின்றுழியும் செல்லார்;—விடல்! 93

கை சுட்டிக் கட்டுரையார்; கால்மேல் எழுத்து இடார்.
மெய் சுட்டி, இல்லாரை உள்ளாரோடு ஒப்பு உரையார்;
கையில் குரவர் கொடுப்ப, இருந்து ஏலார்;—
ஐயம் இல் காட்சியவர். 94

தன் உடம்பு, தாரம், அடைக்கலம், தன் உயிர்க்கு என்று
உன்னித்து வைத்த பொருளோடு, இவை நான்கும்,
பொன்னினைப்போல் போற்றிக் காத்து, உய்க்க! உய்க்காக்கால்,
மன்னிய ஏதம் தரும். 95

நந்து எறும்பு, தூக்கணம்புள், காக்கை, என்று இவைபோல்,
தம் கருமம் நல்ல கடைப்பிடித்து, தம் கருமம்
அப் பெற்றியாக முயல்பவர்க்கு ஆசாரம்
எப் பெற்றியானும் படும். 96

தொழுதானும், வாய் புதைத்தானும், அஃது அன்றி,
பெரியார்முன் யாதும் உரையார்; பழி அவர்-
கண்ணுளே நோக்கி உரை! 97

சூதர் கழகம், அரவம் அருக் களம்,
பேதைகள் அல்லார் புகாஅர்; புகுபவேல்,
ஏதம் பலவும் தரும். 98

உரற் களத்தும், அட்டிலும், பெண்டிர்கள் மேலும்,—
நடுக்கு அற்ற காட்சியார்—நோக்கார், எடுத்து இசையார்,
இல்லம் புகாஅர்; விடல்! 99

அறியாத தேயத்தான், ஆதுலன், மூத்தான்,
இளேயான், உயிர் இழந்தான், அஞ்சினன், உண்பான்,
அரசர் தொழில் தலைவைத்தான், மணாளன், என்று
ஒன்பதின்மர் கண்டீர்—உரைக்குங்கால் மெய்யான்
ஆசாரம் வீடு பெற்றார். 100

## சிறப்புப் பாயிரம்

ஆர் எயில் மூன்றும் அழித்தான் அடி ஏத்தி,
ஆரிடத்துத் தான் அறிந்த மாத்திரையான், ஆசாரம்
யாரும் அறிய, அறன் ஆய மற்றவற்றை
ஆசாரக்கோவை எனத் தொகுத்தான்—தீராத்
திரு வாயில் ஆய, திறல் வண், கயத்தூர்ப்
பெருவாயின் முள்ளி என்பான்.

# ஏலாதி

ஏலம் ஆதியான ஆறு பொருள்கள் சேர்ந்த ஒரு வகைச் சூர்ணம் 'ஏலாதி' என மருத்துவ நூல்களில் கூறப்பெறும். ஏலம் ஒரு பங்கு, இலவங்கப்பட்டை இரண்டு பங்கு, நாககேசரம் மூன்று பங்கு, மிளகு நாலு பங்கு, திப்பிலி ஐந்து பங்கு, சுக்கு ஆறு பங்கு, என்ற அளவுப்படி சேர்த்து இம் மருந்தை ஆக்குவர். ஏலாதி நூலும் ஒவ்வொரு பாடலிலும் ஆறு பொருள்களைப் பெற்று, உயிருக்கு உறு துணையான அற நெறியை விளக்கி உரைக்கும் ஒப்புமை நீர்மையால் இப் பெயரைப் பெற்றுள்ளது.

ஏலாதியின் தன்மை குறித்துத் தமிழ் நூல்களில் விளக்கம் காணப்படவில்லை. வட மொழியில், 'ஏலாதி கிருதம், ஏலாதி சூர்ணம், ஏலாதி கணம்' என மூவகை ஏலாதிகள் பேசப் பெறுகின்றன. இவற்றுள் ஏலாதி சூர்ணம் என்பதுவே இந் நூற் பொருளுக்கு மிகவும் இயைந்ததாகும்.

மருந்துப் பெயர் பெற்ற கீழ்க்கணக்கு நூல்கள் மூன்றனுள் ஏலாதி சிறுபஞ்ச மூலத்தோடு பெரிதும் ஒற்றுமையுடையது. சிறுபஞ்சமூலம் ஐந்து பொருள்களை உரைக்க, இது ஆறு பொருள்களைச் சுட்டுகின்றது. மேலும், சிறுபஞ்சமூலத்தின் கருத்துச் சொற்பொருள்களை இந் நூல் பல இடங்களில் அடியொற்றியுள்ளது. இரு நூல்களின் ஆசிரியரும் ஒரே காலத்தில் வாழ்ந்தவர். இருவரும் மாக்காயனார் என்ப வரிடம் தமிழ் ஓதியவரே. வட சொல்லாட்சி சிறுபஞ்சமூலத்தைப் போன்றே இந் நூலிலும் சற்று மிகுதியே.

இந் நூலின் ஆசிரியர் **கணிமேதாவியார்.** கணிமேதை என்றும் இவர் வழங்கப் பெறுவர். கணிமேதை என்பது கொண்டு சோதிட நூற் புலமை மிக்கார் இவர் என்று கொள்வாரும் உண்டு. நூலின் முதற்கண் அருகக் கடவுளுக்கு இவர் வாழ்த்துக் கூறியுள்ளமையினாலும், நூலுள் சமண சமயத்தின் சிறப்பு அறங்கள் சுட்டப் பெறுதலி னாலும், இவரைச் சைன சமயத்தவர் என்று கொள்ளலாம். இவர் சைனரில் ஒரு சிலரைப் போலத் துறவறத்தையே வற்புறுத்தாது,

> மனைவாழ்க்கை மா தவம் என்றிரண்டும் மாண்ட
> வினைவாழ்க்கையாக விழைப (73)

என இல்லற துறவறங்களை ஒரு நிகராகப் போற்றியுள்ளமையும் நோக்கத் தக்கது. இவர் மதுரைத் தமிழாசிரியர் மாக்காயனாரின் மாணாக்கர் என்பது முன்பே கண்டோம். திணைமாலை நூற்றைம்பதின் ஆசிரியரும் இவரே.

இவரது நூல் இல்லற நூலாயும், துறவற நூலாயும், வீட்டு நெறி நூலாயும் உள்ளது என்று சிறப்புப் பாயிரச் செய்யுள் புகழ்கிறது. 'பொய் தீர் புலவர்' எனத் தொடங்கும் 66-ஆம் பாடல்,

> பொய் இல் புலவர் புரிந்து உறையும் மேல் உலகம்
> ஐயம் ஒன்று இன்றி அறிந்து உரைப்பின், வெய்ய
> பகல் இன்று, இரவு இன்று, பற்று இன்று, துற்று இன்று,
> இகல் இன்று, இளிவரவும் இன்று

என வரும் புறப்பொருள் வெண்பாமாலைப் பாடலோடு (பொதுவியல் 4) பெரிதும் ஒப்புமையுடையது. வடமொழி ஸ்மிருதி நூல்களில் வழங்கும் துவாதச புத்திரர்

களைப் பற்றி, 'மாண்டவர் மாண்ட' (30), 'மத்த மயில் அன்ன' (31) என வரும் இரண்டு பாடல்களிலும் உரைத்துள்ளார். வடமொழியாளரின் பழக்க வழக்கங்களை உணர்த்தும் இச் செய்தியை ஆசிரியர் கூறியுள்ளமையால், வடமொழிக் கலப்பு மிகுதிப்பட்ட பிற்காலத்தே இந் நூல் தோன்றியதாதல் கூடும் என்று ஊகிக்கலாம்.

இந் நூலில் கடவுள் வாழ்த்து நீங்கலாக எண்பது பாடல்கள் உள்ளன. சிறுபஞ்சமூலப் பாடல்களினும் இந்நூற் பாடல்கள் பொருள் தெளிவின்றியுள்ளன. ஆறு பொருள்களை நான்கு அடிப் பாடலில் அடக்கும் இந் நூலிலும் மகடூஉ முன்னிலைகளைச் சிற்சில பாடல்களில் ஆசிரியர் மேற்கொள்ளுதல் பொருளை மேலும் குறுக்கிவிடுகிறது. இந் நூலைப் பற்றிய சிறப்புப் பாயிரப் பாடல் ஒன்று உள்ளது. இப் பாடல் நூலின் இறுதியில் தரப் பெற்றிருக்கிறது.

இந் நூலுக்குப் பழைய உரை உண்டு. இவ் உரை முதலில் எட்டுப் பாடல்களுக்கும் பின்னரும் இடையிடையே சிற்சில பாடல்களுக்கும் கிடைக்கவில்லை. அப் பகுதிகள் சிதைவுபட்டிருக்கலாம். உரையின் துணை கொண்டே இந் நூற் பாடல்களில் அமைந்துள்ள ஆறு பொருள்களையும் தெளிவுறத் தெரியலாம். இங்ஙனம் நூற் பொருளை அறிதற்குக் கருவியாய்த் துணைபுரிவது இப் பழைய உரை.

# ஏலாதி

(கணிமேதாவியார்)

## கடவுள் வாழ்த்து

அறு நால்வர் ஆய் புகழ்ச் சேவடி ஆற்றப்
பெறு நால்வர் பேணி வழங்கிப் பெறும் நான்-
மறை புரிந்து வாழுமேல், மண் ஒழிந்து, விண்ணோர்க்கு
இறை புரிந்து வாழ்தல் இயல்பு.

## நூல்

சென்ற புகழ், செல்வம், மீக்கூற்றம், சேவகம்
நின்ற நிலை, கல்வி, வள்ளன்மை,—என்றும்
அளி வந்து ஆர் பூங் கோதாய்!—ஆறும் மறையின்
வழிவந்தார்கண்ணே வனப்பு. 1

கொலை புரியான், கொல்லான், புலால் மயங்கான், கூர்த்த
அலைபுரியான், வஞ்சியான், யாதும் நிலை திரியான்,
மண்ணவர்க்கும் அன்றி,—மது மலி பூங் கோதாய்!—
விண்ணவர்க்கும் மேலாய்விடும். 2

தவம் எளிது; தானம் அரிது; தக்கார்க்கேல்,
அவம் அரிது; ஆதல் எளிதால்; அவம் இலா
இன்பம் பிறழின், இயைவு எளிது; மற்று அதன்
துன்பம் துடைத்தல் அரிது. 3

இடர் தீர்த்தல், எள்ளாமை, கீழ் இனம் சேராமை,
படர் தீர்த்தல் யார்க்கும், பழிப்பின் நடை தீர்த்தல்,
கண்டவர் காமுறும் சொல்,—காணின், கலவியின்கண்
விண்டவர் நூல் வேண்டாவிடும். 4

தனக்கு என்றும், ஓர் பாங்கன், பொய்யான்; மெய் ஆக்கும்;
எனக்கு என்று இயையான், யாது ஒன்றும்; புனக் கொன்றை
போலும் இழையார் சொல் தேறான்; களியானேல்;—
சாலும், பிற நூலின் சால்பு. 5

நிறை உடைமை, நீர்மை உடைமை, கொடையே,
பொறை உடைமை, பொய்ம்மை, புலாற்கண் மறை உடைமை,—
வேய் அன்ன தோளாய்!—இவை உடையான் பல் உயிர்க்கும்
தாய் அன்னன் என்னத் தகும். 6

இன்சொல், அளாவல், இடம், இனிது ஊண், யாவர்க்கும்
வன்சொல் களைந்து, வகுப்பானேல் மென் சொல்,—
முருந்து ஏய்க்கும் முள் போல் எயிற்றினாய்!—நாளும்
விருந்து ஏற்பர், விண்ணோர் விரைந்து. 7

உடன்படான், கொல்லான், உடன்றார் நோய் தீர்த்து,
மடம் படான், மாண்டார் நூல் மாண்ட இடம் பட
நோக்கும் வாய் நோக்கி, நுழைவானேல்,—மற்று அவனை
யாக்குமவர் யாக்கும், அணைந்து. 8

கற்றாரைக் கற்றது உணரார் என மதியார்,
உற்றாரை அன்னணம் ஓராமல், அற்றார்கட்கு
உண்டி, உறையுள், உடுக்கை, இவை ஈந்தார்—
பண்டிதராய் வாழ்வார், பயின்று. 9

செங் கோலான், கீழ்க் குடிகள், செல்வமும்; சீர் இலா
வெங் கோலான், கீழ்க் குடிகள், வீந்து உகவும்; வெங் கோல்
அமைச்சர், தொழிலும், அறியலம்—ஒன்று ஆற்ற
எனைத்தும் அறியாமையான். 10

அவா அறுக்கல் உற்றான் தளரான்; அவ் ஐந்தின்
அவா அறுப்பின், ஆற்ற அமையும்; அவா அறான்-
ஆகும் அவனாயின், ஐங் களிற்றின் ஆட்டுண்டு,
போகும், புழையுள் புலந்து. 11

கொலைக் களம், வார் குத்து, சூது ஆடும் எல்லை,
அலைக் களம், போர் யானை ஆக்கும் நிலைக்களம்,
முச் சாரிகை ஒதுங்கும் ஓர் இடத்தும்,—இன்னவை
நச்சாமை, நோக்காமை, நன்று. 12

விளையாமை, உண்ணாமை, ஆடாமை, ஆற்ற
உளையாமை, உட்குடைத்தா வேறல், களையாமை,—
நூல் பட்டு ஆர் பூங்கோதாய்!—நோக்கின், இவை ஆறும்
பாற்பட்டார் கொண்டு ஒழுகும் பண்பு. 13

பொய்யான், புலாலொடு கள் போக்கி, தீயன
செய்யான், சிறியார் இனம் சேரான், வையான்,—
கயல் இயல் உண் கண்ணாய்!—கருதுங்கால், என்றும்
அயல, அயலவர் நூல். 14

கண் போல்வார்க் காயாமை; கற்றார், இனம், சேர்தல்;
பண் போல் கிளவியார்ப் பற்றாமை; பண் போலும்
சொல்லார்க்கு அரு மறை சோராமை; சிறிது எனினும்
இல்லார்க்கு இடர் தீர்த்தல்,—நன்று. 15

துறந்தார்கண் துன்னி, துறவார்க்கு இடுதல்,
இறந்தார்க்கு இனிய இசைத்தல், இறந்தார்,
மறுதலை, சுற்றம், மதித்து ஓம்புவானேல்,
இறுதல் இல் வாழ்வே இனிது. 16

குடி ஓம்பல், வன்கண்மை, நூல் வன்மை, கூடம்,
மடி ஓம்பும் ஆற்றல் உடைமை, முடி ஓம்பி,
நாற்றம் சுவை கேள்வி நல்லார் இனம் சேர்தல்
தேற்றானேல், தேறும் அமைச்சு. 17

போகம், பொருள் கேடு, மான் வேட்டம், பொல்லாக் கள்,
சோகம் படும் சூதே, சொல்வன்மை, சோகக்
கடுங் கதத்துத் தண்டம், அடங்காமை, காப்பின்,
அடும் கதம் இல், ஏனை அரசு. 18

கொல்லான், கொலை புரியான், பொய்யான், பிறர் பொருள்மேல்
செல்லான், சிறியார் இனம் சேரான், சொல்லும்
மறையில் செவி இலன், தீச் சொற்கண் மூங்கை,—
இறையில் பெரியாற்கு இவை. 19

மின் நேர் இடையார் சொல் தேறான், விழைவு ஓரான்,
கொன்னே வெகுளான், கொலை புரியான்,—பொன்னே!—
உறுப்பு அறுத்தன்ன கொடை உவப்பான், தன்னின்
வெறுப்பு அறுத்தான்,—விண்ணகத்தும் இல். 20

இளமை கழியும்; பிணி, மூப்பு, இயையும்;
வளமை, வலி, இவை வாடும்; உள நாளால்,
பாடே புரியாது,—பால் போலும் சொல்லினாய்!—
வீடே புரிதல் விதி. 21

வாள் அஞ்சான், வன்கண்மை அஞ்சான், வனப்பு அஞ்சான்,
ஆள் அஞ்சான், ஆய் பொருள்தான் அஞ்சான்; நாள் எஞ்சாக்
காலன் வரவு ஒழிதல் காணின், வீடு எய்திய
பாலின் நூல் எய்தப்படும். 22

குணம் நோக்கான்; கூழ் நோக்கான்; கோலமும் நோக்கான்;
மனம் நோக்கான், மங்கலமும் நோக்கான்; கணம் நோக்கான்;—
கால் காப்பு வேண்டான்,—பெரியார் நூல் காலற்கு
வாய் காப்புக் கோடல் வனப்பு. 23

பிணி, பிறப்பு, மூப்பொடு, சாக்காடு, துன்பம்,
தணிவு இல் நிரப்பு, இவை தாழா அணியின்,
அரங்கின்மேல் ஆடுநர்போல் ஆகாமல் நன்று ஆம்,
நிரம்புமேல், வீட்டு நெறி. 24

பாடு அகம் சாராமை; பாத்திலார்தாம் விழையும்
நாடகம் சாராமை; நாடுங்கால், நாடகம்
சேர்ந்தால், பகை, பழி, தீச்சொல்லே, சாக்காடே,
தீர்ந்தாற்போல் தீரா வரும். 25

மாண்டு அமைந்தார் ஆய்ந்த மதி வனப்பே, வன்கண்மை,
ஆண்டு அமைந்த கல்வியே, சொல் ஆற்றல், பூண்டு அமைந்த
காலம் அறிதல், கருதுங்கால்,—தூதுவர்க்கு
ஞாலம் அறிந்த புகழ். 26

அஃகு, நீ, செய்யல், என அறிந்து, ஆராய்ந்தும்,
வெஃகல், வெகுடலே, தீக் காட்சி, வெஃகுமான்,
கள்ளத்த அல்ல கருதின், இவை மூன்றும்
உள்ளத்த ஆக உணர்! 27

மை ஏர் தடங் கண் மயில் அன்ன சாயலாய்!—
மெய்யே உணர்ந்தார் மிக உரைப்பர்; பொய்யே,
குறளை, கடுஞ் சொல், பயன் இல் சொல், நான்கும்
மறலையின் வாயினவாம், மற்று. 28

நிலை அளவில் நின்ற நெடியவர்தாம் நேரா,
கொலை, களவு, காமத் தீ வாழ்க்கை;—அலை அளவி,
மை என நீள் கண்ணாய்!—மறுதலைய இம் மூன்றும்
மெய் அளவு ஆக விதி! 29

மாண்டவர் மாண்ட அறிவினுல், மக்களைப்
பூண்டு அவர்ப் போற்றிப் புரக்குங்கால்,—பூண்ட
ஔரதனே, கேத்திரசன், கானீனன், கூடன்,
கிரிதன், பௌநற்பவன், பேர். 30

மத்த மயில் அன்ன சாயலாய்! மன்னிய சீர்த்
தத்தன், சகோடன், கிருத்திரமன், புத்திரி
புத்ரன், அபவித்தனெடு, பொய் இல் உபகிருதன்,
இத் திறத்த,—எஞ்சினுர் பேர். 31

உரையான், குலன், குடிமை; ஊனம் பிறரை
உரையான்; பொருளொடு, வாழ்வு, ஆயு, உரையானுய்,—
பூ ஆதி வண்டு தேர்ந்து உண் குழலாய்!—ஈத்து உண்பான்
தேவாதி தேவனுத் தேறு! 32

பொய் உரையான், வையான், புறங்கூருன் யாவரையும்,
மெய் உரையான், உள்ளனவும் விட்டு உரையான், எய் உரையான்,—
கூந்தல் மயில் அன்னுய்!—குழீஇய வான் விண்ணோர்க்கு
வேந்தனும், இவ் உலகம் விட்டு. 33

சிதை உரையான், செற்றம் உரையான், சீறு இல்லான்,
இயல்பு உரையான், ஈனம் உரையான், நசையவர்க்குக்
கூடுவது ஈவானே,—கொவ்வைபோல் செவ் வாயாய்!—
நாடுவர், விண்ணோர், நயந்து. 34

துறந்தார், துறவாதார், துப்பு இலார், தோன்ருது
இறந்தார், ஈடு அற்ருர், இனையர், சிறந்தவர்க்கும்,—
பண் ஆளும் சொல்லாய்!—பழி இல் ஊன் பாற்படுத்தான்,
மண் ஆளும், மன்னனுய் மற்று. 35

கால் இல்லார், கண் இல்லார், நா இல்லார், யாரையும்
பால் இல்லார், பற்றிய நூல் இல்லார், சாலவும்
ஆழப் படும் ஊண் அமைத்தார், இமையவரால்
வீழப்படுவார், விரைந்து. 36

அழப் போகான், அஞ்சான், அலறினுல் கேளான்,
எழப் போகான், ஈடு அற்ருர் என்றும் தொழப் போகான்,
என்னே, இக் காலன்! நீடு ஓரான், தவம் முயலான்,
கொன்னே இருத்தல் குறை. 37

எழுத்தினுல் நீங்காது, எண்ணுல் ஒழியாது, ஏத்தி
வழுத்தினுல் மாருது, மாண்ட ஒழுக்கினுல்,
நேராமை சால உணர்வார் பெருந் தவம்
போகாமை, சாலப் புலே. 38

சாவது எளிது; அரிது, சான்ருண்மை; நல்லது
மேவல் எளிது; அரிது, மெய் போற்றல்; ஆவதன்கண்
சேறல் எளிது; நிலே அரிது; தெள்ளியர் ஆய்
வேறல் எளிது; அரிது, சொல். 39

உலேயாமை, உற்றதற்கு ஓடி உயிரை
அலேயாமை, ஐயப்படாமை, நிலேயாமை
தீர்க்கும் வாய் தேர்ந்து, பசி உண்டி நீக்குவான்,
நோக்கும் வாய் விண்ணின் உயர்வு. 40

குறுகான், சிறியாரை; கொள்ளான், புலால்; பொய்
மறுகான்; பிறர் பொருள் வெளவான்; இறுகானுய்,
ஈடு அற்றவர்க்கு ஈவான்ஆயின், நெறி நூல்கள்
பாடு இறப்ப, பன்னும் இடத்து. 41

கொல்லான், உடன்படான், கொல்வார் இனம் சேரான்,
புல்லான் பிறர் பால், புலால் மயங்கல் செல்லான்,
குடிப் படுத்துக் கூழ் ஈந்தான்,—கொல் யானே ஏறி
அடிப் படுப்பான், மண் ஆண்டு அரசு. 42

சூது உவவான், பேரான், சுலா உரையான், யார்திறத்தும்
வாது உவவான், மாதரார் சொல் தேருன்,—காது தாழ்
வான் மகர வார் குழையாய்!—மா தவர்க்கு ஊண் ஈந்தான்-
தான் மகர வாய் மாடத்தான். 43

பொய்யான், பொய் மேவான், புலால் உண்ணுன், யாவரையும்
வையான், வழி சித்து, வால் அடிசில் நையாதே
ஈத்து, உண்பான் ஆகும்—இருங் கடல் சூழ் மண் அரசாய்ப்
பாத்து உண்பான், ஏத்து உண்பான், பாடு. 44

இழுக்கான், இயல் நெறி; இன்ஞத வெஃகான்;
வழுக்கான், மனே; பொருள் வெளவான்; ஒழுக்கத்தால்
செல்வான்; செயிர் இல் ஊண் ஈவான்;—அரசு ஆண்டு
வெல்வான் விடுப்பான் விரைந்து. 45

களியான், கள் உண்ணுன், களிப்பாரைக் காணுன்,
ஒளியான் விருந்திற்கு, உலையான், எளியாரை
எள்ளான், ஈத்து உண்பானேல், ஏதம் இல் மண் ஆண்டு
கொள்வான், குடி வாழ்வான், கூர்ந்து. 46

பெரியார் சொல் பேணி, பிறழாது நின்று,
பரியா அடியார்ப் பறியான், கரியார் சொல்
தேருன், இயையான், தெளிந்து அடிசில் ஈத்து உண்பான்—
மாருன், மண் ஆளுமாம் மற்று. 47

வேற்று அரவம் சேரான், விருந்து ஒளியான், தன் இல்லுள்
சோற்று அரவம் சொல்லி உண்பான்ஆயின், மாற்று அரவம்
கேளான், கிளை ஓம்பின், கேடு இல் அரசனுய்,
வாளால் மண் ஆண்டு வரும். 48

யானை, குதிரை, பொன், கன்னியே, ஆனிரையோடு,
ஏனை ஒழிந்த இவை எல்லாம், ஆன் நெய்யால்
எண்ணன் ஆய், மா தவர்க்கு ஊண் ஈந்தான்—வைசிர-
வண்ணன் ஆய் வாழ்வான் வகுத்து. 49

எள்ளே, பருத்தியே, எண்ணெய், உடுத்தாடை,
வள்ளே, துணியே, இவற்ருெடு, கொள் என,
அன்புற்று, அசனம் கொடுத்தான்—துணையிஞேடு
இன்புற்று வாழ்வான், இயைந்து. 50

உண் நீர் வளம், குளம், கூவல், வழிப் புரை,
தண்ணீரே, அம்பலம், தான் பாற்படுத்தான்—பண் நீர
பாடலொடு ஆடல் பயின்று, உயர் செல்வனுய்,
கூடலொடு ஊடல் உளான், கூர்ந்து. 51

இல் இழந்தார், கண் இழந்தார், ஈண்டிய செல்வம் இழந்தார்,
நெல் இழந்தார், ஆன் நிரைதான் இழந்தார்க்கு, எல் உழந்து,
பண்ணி ஊண் ஈய்ந்தவர்—பல் யானை மன்னராய்,
எண்ணி ஊண் ஆர்வார், இயைந்து. 52

கடம் பட்டார், காப்பு இல்லார், கைத்து இல்லார், தம் கால்
முடம் பட்டார், மூத்தார், மூப்பு இல்லார்க்கு உடம்பட்டு,
உடையராய் இல்லுள் ஊண் ஈத்து, உண்பார்—மண்மேல்
படையராய் வாழ்வார், பயின்று. 53

பார்ப்பார், பசித்தார், தவசிகள், பாலர்கள்,
கார்ப்பார், தமை யாதும் காப்பு இலார், தூப் பால
நீண்டாரால் எண்ணுது நீத்தவர்—மண் ஆண்டு,
பண்டாரம் பற்ற வாழ்வார். 54

'ஈன்ருர், ஈன்கால் தளர்வார், சூலார், குழவிகள்,
மான்ருர், வளியால் மயங்கினுர்க்கு, ஆனுர்!' என்று,
ஊண் ஈய்த்து, உறு நோய் களைந்தார்—பெருஞ் செல்வம்-
காண் ஈய்த்து வாழ்வார், கலந்து. 55

தளையாளர், தாப்பாளர், தாழ்ந்தவர், பெண்டிர்,
உளையாளர், ஊண் ஒன்றும் இல்லார், கிளைஞராய்—
மா அலந்த நோக்கினுய்!—ஊண் ஈய்ந்தார், மாக் கடல் சூழ்
நாவலம்தீவு ஆள்வாரே, நன்கு. 56

கருஞ் சிரங்கு, வெண் தொழு நோய், கல், வளி, காயும்
பெருஞ் சிரங்கு, பேர் வயிற்றுத் தீயார்க்கு, அருஞ் சிரமம்
ஆற்றி, ஊண் ஈத்து, அவை தீர்த்தார்—அரசராய்ப்
போற்றி ஊண் உண்பார், புரந்து. 57

காமடார், காமியார், கல்லார்இனம் சேரார்,
ஆம் ஆடார், ஆய்ந்தார் நெறி நின்று, தாம் ஆடாது,
ஏற்ருரை இன்புற ஈய்ந்தார், முன், இம்மையான்
மாற்ருரை மாற்றி வாழ்வார். 58

வணங்கி, வழி ஒழுகி, மாண்டார் சொல் கொண்டு,
நுணங்கிய நூல் நோக்கி, நுழையா, இணங்கிய
பால் நோக்கி வாழ்வான்—பழி இல்லா மன்னனுய்,
நூல் நோக்கி வாழ்வான், நுனித்து. 59

பெருமை, புகழ், அறம், பேணுமை சீற்றம்,
அருமை நூல், சால்பு, இல்லார்ச் சாரின், இருமைக்கும்,
பாவம், பழி, பகை, சாக்காடே, கேடு, அச்சம்,
சாபம்போல் சாரும், சலித்து. 60

ஆர்வமே, செற்றம், கதமே, அறையுங்கால்,
ஓர்வமே, செய்யும் உலோபமே, சீர் சாலா
மானமே, மாய உயிர்க்கு ஊனம் என்னுமே—
ஊனமே தீர்ந்தவர் ஒத்து. 61

கூத்தும், விழவும், மணமும், கொலைக் களமும்,
ஆர்த்த முனையுள்ளும், வேறு இடத்தும், ஒத்தும்
ஒழுக்கும் உடையவர் செல்லாரே; செல்லின்,
இழுக்கும் இழவும் தரும். 62

ஊணொடு, கூறை, எழுத்தாணி, புத்தகம்,
பேணொடும் எண்ணும், எழுத்து, இவை மாணொடு
கேட்டு எழுதி, ஓதி, வாழ்வார்க்கு ஈய்ந்தார்—இம்மையான்
வேட்டு எழுத வாழ்வார், விரிந்து. 63

உயர்ந்தான் தலைவன் என்று ஒப்புடைத்தா நோக்கி,
உயர்ந்தான் நூல் ஓதி ஒடுங்கி, உயர்ந்தான்
அருந் தவம் ஆற்றச் செயின், வீடு ஆம் என்றார்—
பெருந் தவம் செய்தார், பெரிது. 64

காலனார் ஈடு அறுத்தல் காண்குறின், முற்று உணர்ந்தி
பாலனார் நூல் அமர்ந்து, பாராது, வாலிதா,
ஊறுபாடு இல்லா உயர் தவம் தான் புரியின்,
ஏறுமாம், மேல் உலகம் ஓர்ந்து. 65

பொய் தீர் புலவர் பொருள் புரிந்து ஆராய்ந்த
மை தீர் உயர் கதியின் மாண்பு உரைப்பின்,—மை தீர்
சுடர் இன்று; சொல் இன்று; மாறு இன்று; சோர்வு இன்று;
இடர் இன்று; இனி துயிலும் இன்று. 66

கூர் அம்பு, வெம் மணல், ஈர் மணி, தூங்கலும்,
ஈரும் புகை, இருளோடு, இருள், நூல் ஆராய்ந்து,
அழி கதி, இம் முறையான், ஆன்றார் அறைந்தார்—
இழி கதி, இம் முறையான் ஏழு. 67

சாதல், பொருள் கொடுத்தல், இன்சொல், புணர்வு உவத்தல்,
நோதல், பிரிவில் கவறலே, ஓதலின்
அன்புடையார்க்கு உள்ளன ஆறு குணம் ஆக,
மென் புடையார் வைத்தார், விரித்து. 68

எடுத்தல், முடக்கல், நிமிர்த்தல், நிலையே,
படுத்தலோடு, ஆடல், பகரின், அடுத்து உயிர்
ஆறு தொழில் என்று அறைந்தார், உயர்ந்தவர்—
வேறு தொழிலாய் விரித்து. 69

ஐயமே, பிச்சை, அருந் தவர்க்கு ஊண், ஆடை,
ஐயமே இன்றி அறிந்து ஈந்தான், வையமும்
வானும் வரிசையால்தான் ஆளும்—நாளுமே,
ஈனமே இன்றி இனிது. 70

நடப்பார்க்கு ஊண், நல்ல பொறை தாங்கினுர்க்கு ஊண்,
கிடப்பார்க்கு ஊண், கேளிர்க்கு ஊண், கேடு இன்று உடல் சார்ந்த
வானகத்தார்க்கு ஊணே, மறுதலையார்க்கு ஊண், அமைத்தான்-
தான் அகத்தே வாழ்வான், தக. 71

உணராமையால் குற்றம்; ஒத்தான் வினை ஆம்;
உணரான் வினைப் பிறப்புச் செய்யும்; உணராத
தொண்டு இருந் துன்பம் தொடரும்; பிறப்பினுன்
மண்டிலமும் ஆகும்; மதி. 72

மனை வாழ்க்கை, மா தவம், என்று இரண்டும், மாண்ட
வினை வாழ்க்கை ஆக விழைப; மனை வாழ்க்கை
பற்றுதல்; இன்றி விடுதல், முன் சொல்லும்; மேல்
பற்றுதல், பாத்து இல் தவம். 73

இடை வனப்பும், தோள் வனப்பும், ஈடின் வனப்பும்,
நடை வனப்பும், நாணின் வனப்பும், புடை சால்
கழுத்தின் வனப்பும், வனப்பு அல்ல; எண்ணேடு
எழுத்தின் வனப்பே வனப்பு. 74

அறுவர் தம் நூலும் அறிந்து, உணர்வு பற்றி,
மறு வரவு மாறு ஆய நீக்கி, மறு வரவின்
மா சாரியனு, மறுதலைச் சொல் மாற்றுதலே—
ஆசாரியனது அமைவு. 75

ஒல்லுவ, நல்ல உருவ, வேல் கண்ணினுய்!
வல்லுவ நாடி, வகையினுல், சொல்லின்,
கொடையினுல் போகம்; சுவர்க்கம், தவத்தால்;
அடையாத் தவத்தினுல் வீடு. 76

நாற் கதியும் துன்பம் நவை தீர்த்தல் வேண்டுவான்,
பாற்கதியின் பாற்பட ஆராய்ந்து, நூற் கதியின்
எல்லை உயர்ந்தார் தவம் முயலின், மூன்று, ஐந்து, ஏழ்,
வல்லை வீடு ஆகும்; வகு! 77

தாய் இழந்த பிள்ளை, தலை இழந்த பெண்டாட்டி,
வாய் இழந்த வாழ்வினுர், வாணிகம் போய் இழந்தார்,
கைத்து ஊண் பொருள் இழந்தார், கண்ணிலவர்க்கு, ஈய்ந்தார்;—
வைத்து வழங்கி வாழ்வார். 78

சாக்காடு, கேடு, பகை, துன்பம், இன்பமே,
நாக்கு ஆடு நாட்டு அறைபோக்கும், என நாக் காட்ட,
நட்டார்க்கு இயையின், தமக்கு இயைந்த கூறு, உடம்பு
அட்டார்வாய்ப் பட்டது பண்பு. 79

புலையாளர், புண்பட்டார், கண் கெட்டார், போக்கு இல்
நிலையாளர், நீர்மை இழந்தார், தலையாளர்க்கு
ஊண் கொடுத்து, ஊற்ருய் உதவினுர்—மன்னராய்க்-
காண் கொடுத்து வாழ்வார், கலந்து. 80

## சிறப்புப் பாயிரம்

இல்லற நூல்; ஏற்ற துறவற நூல்; ஏயுங்கால்,
சொல் அற நூல்; சோர்வு இன்றித் தொக்கு உரைத்து, நல்ல
அணி மேதைஆய், நல்ல வீட்டு நெறியும்
கணிமேதை செய்தான், கலந்து.

# இன்னா நாற்பது

நாற்பது என்னும் எண்தொகையால் குறிக்கப்பெறும் நான்கு நூல்கள் கீழ்க் கணக்கில் உள்ளன. அவற்றுள் கார்நாற்பதும், களவழி நாற்பதும் முறையே அகம், புறம் என்னும் பொருள் பற்றிப் பாடப் பெற்றவை. எஞ்சிய இன்னா நாற்பதும் இனியவை நாற்பதும் அறம் உரைப்பன. இவ் இரண்டும் முறையே துன்பம் தரும் நிகழ்ச்சிகளும் இன்பம் தரும் செயல்களும் இன்னின்ன எனத் தொகுத்து உரைக் கின்றன. நூலுக்குப் புறம்பான கடவுள் வாழ்த்திலுங்கூட, 'இன்னா', 'இனிதே' என்னும் சொற்கள் அமைந்துள்ளன.

நானூற்பது குறித்து இலக்கண விளக்கப் பாட்டியலில்,

காலம் இடம் பொருள் கருதி நாற்பான்
சால உரைத்தல் நானூற்பதுவே (91)

என்னும் ஒரு சூத்திரம் உளது. இதன் உரையில், 'காலம் பற்றி வருவது கார்நாற்பது; இடம் பற்றி வருவது களவழி நாற்பது; பொருள் பற்றி வருவன இன்னா நாற்பது இனிய நாற்பதாம் இன்னலாக்குதலை இன்னா என்றும், இனிமையாக்குதலை இனிய என்றும் கூறினர்' என்று விளக்கம் தரப்பட்டுள்ளது. தண்டியலங்கார உரையிலும் (5) இடம் பற்றியும் காலம் பற்றியும் தொகுத்த நூல்களுக்குக் களவழி நாற்பதும், கார் நாற்பதும் உதாரணமாகக் காட்டப்பெற்றுள்ளன.

வீர சோழிய உரைகாரர் நால்-நாற்பது நூல்களைப் 'பின் மொழி எண் தொகை' என்பர். அவர் உரைப் பகுதி வருமாறு:

'இன்னா என்னும் சொல்லினையுடைய நாற்பது கவி யாதொரு நூலின் உண்டு, அந்நூல் இன்னா நாற்பது எனவும், இவ்வண்ணம் இனிய நாற்பது, கார் நாற்பது, களவழி நாற்பது எனவும் வருவன பின் மொழிகள் எண்மொழிகள் ஆதலால், பின்மொழி எண்தொகை.' இவ் உரைகாரர் இன்னா நாற்பதை முதலில் கூறி, அதன் பெயர்க்கு விளக்கம் கூறுதலின், இது இனியவை நாற்பதிற்கு முன்னர்த் தோன்றியது என்று கருதலாம். ஏட்டுப் பிரதிகளில் இன்னா நாற்பதின் பின்னரே இனியவை நாற்பது எழுதப் பெற்றிருத்தலும் இக் கருத்தை ஒரு வகையில் வலியுறுத்து கின்றது.

இன்னா நாற்பதில் கடவுள் வாழ்த்து நீங்கலாக நாற்பது பாடல்கள் உள்ளன. நூல் அமைப்பில் இனியவை நாற்பதினும் இது செவ்விய முறையை மேற்கொண்டுள்ளது என்னலாம். ஒவ்வொரு பாடலிலும் நந்நான்கு கருத்துக்களைக்கொண்டு நான்மணிக் கடிகையைப் போன்று இந் நூல் அமைந்த போதிலும், ஒவ்வொன்றையும் 'இன்னா' என எடுத்துக் கூறுதலின், இது '**இன்னா நாற்பது**' என்னும் சிறப்பைப் பெற்றுள்ளது. சிற்சில பொருள்களை இவ்வாசிரியர் மீண்டும் எடுத்துக் கூறுதல் அந்த அறங்களை வற்புறுத்தி உணர்த்துதற் பொருட்டே யாதல் வேண்டும்.

இந் நூலை இயற்றியவர் **கபில தேவர்**. தமிழுலகில் கபிலர் என்ற பெயருடையார் பலர் உள்ளனர். இவர்களில் முக்கியமாக ஐவரைக் குறிப்பிடலாம். முதலாமவ ராகக் கூறத்தக்கவர் சங்க காலத்தில் பாரிக்கு உற்ற நண்பராய் விளங்கிய அந்தண ராகிய கபிலர். இவருக்குப்பின் கூறத்தக்கவர் இன்னா நாற்பது செய்த பிற்சான் றோராகிய கபிலர். அடுத்து, பதினோராந் திருமுறையில் வரும் கபிலதேவ நாயனார்

என்பவரைக் குறிக்கலாம். பன்னிருபாட்டியல் என்னும் இலக்கண நூலில் கபிலர் பெயரால் அமைந்த சூத்திரங்கள் உள்ளன. 'கபிலர் அகவல்' என்னும் நூலை இயற்றிய கபிலர் ஒருவரும் உள்ளனர். இவர்களுள் பன்னிருபாட்டியலில் குறிக்கப் பெறுபவரையும் இன்னா நாற்பது செய்தவரையும், மொழியின் இயல்பைக் கொண்டு, ஒருவராகத் துணியலாம் என்பர் சிலர். மேற் குறித்த ஒவ்வொருவரும் புகுந்துள்ள துறை வேறுவேறாக இருத்தலையும், அந் நூல்களின் காலம் குறித்து வெவ்வேறு கருத்துக்கள் ஆராய்ச்சியாளர்களிடையே நிலவுவதையும் நோக்கின், ஐவரும் கபிலர் என்ற பெயரில் வேறுவேறு காலத்தில் வாழ்ந்த புலவர் எனக் கொள்ளுதலே தகும்.

இன்னா நாற்பதின் ஆசிரியர் தமது கடவுள் வாழ்த்தில் சிவபெருமான், பலராமன், திருமால், முருகன் ஆகியோரைக் குறித்துள்ளார். இதனால், இவர் சமயப் பொது நோக்கு உடையார் என்று எண்ண இடமுண்டு. புறநானூறு 56-ஆம் பாடலில் இந் நால்வரும் இம் முறையே கூறப்பட்டுள்ளனர். சிலப்பதிகாரத்திலும் நால்வரும் அடுத்தடுத்துக் குறிக்கப் பெற்றாலும், சிவபெருமானைத் தவிர ஏனையோரைச் சுட்டும் வரிசையில் சிறிது மாறுபாடுள்ளது (5, 169-172; 14, 7-10). இவற்றால் இந் நாற் பெருந் தெய்வங்களையும் ஒரு சேரப் போற்றும் வழக்கம் அக்காலத்து இருந்ததுபோலும்!

இந் நூலுக்குப் பழைய உரை ஒன்று உள்ளது. முன் நூல்களையும் மரபுகளையும் நன்கு துருவி உணர்ந்து யாத்த சிறந்ததோர் உரையாய் இது அமைந்துள்ளது.

# இன்னா நாற்பது

(கபில தேவர்)

## கடவுள் வாழ்த்து

முக் கட் பகவன் அடி தொழாதார்க்கு இன்னா;
பொற்பனை வெள்ளையை உள்ளாது ஒழுகு இன்னா;
சக்கரத்தானை மறப்பு இன்னா; ஆங்கு இன்னா,
சத்தியான் தாள் தொழாதார்க்கு.

## நூல்

பந்தம் இல்லாத மனையின் வனப்பு இன்னா;
தந்தை இல்லாத புதல்வன் அழகு இன்னா;
அந்தணர் இல் இருந்து ஊண் இன்னா; ஆங்கு இன்னா,
மந்திரம் வாயா விடின். 1

பார்ப்பார் இல் கோழியும் நாயும் புகல் இன்னா;
ஆர்த்த மனைவி அடங்காமை நற்கு இன்னா;
பாத்து இல் புடைவை உடை இன்னா; ஆங்கு இன்னா,
காப்பு ஆற்றா வேந்தன் உலகு. 2

கொடுங் கோல் மற மன்னர் கீழ் வாழ்தல் இன்னா;
நெடுநீர் புணை இன்றி நீந்துதல் இன்னா;
கடு மொழியாளர் தொடர்பு இன்னா; இன்னா,
தடுமாறி வாழ்தல் உயிர்க்கு. 3

எருது இல் உழவர்க்குப் போகு ஈரம் இன்னா;
கருவிகள் மாறிப் புறங்கொடுத்தல் இன்னா;
திருவுடையாரைச் செறல் இன்னா; இன்னா,
பெரு வலியார்க்கு இன்னா செயல். 4

சிறை இல் கரும்பினைக் காத்து ஓம்பல் இன்னா;
உறை சோர் பழங் கூரை சேர்ந்து ஒழுகல் இன்னா;
முறை இன்றி ஆளும் அரசு இன்னா; இன்னா,
மறை இன்றிச் செய்யும் வினை. 5

அற மனத்தார் கூறும் கடு மொழி இன்னா;
மற மனத்தார் ஞாட்பில் மடிந்து ஒழுகல் இன்னா;
இடும்பை உடையார் கொடை இன்னா; இன்னா,
கொடும்பாடு உடையார் வாய்ச் சொல். 6

ஆற்றல் இலாதான் பிடித்த படை இன்னா;
நாற்றம் இலாத மலரின் அழகு இன்னா;
தேற்றம் இலாதான் துணிவு இன்னா; ஆங்கு இன்னா,
மாற்றம் அறியான் உரை. 7

பகல் போலும் நெஞ்சத்தார் பண்பு இன்மை இன்னா;
நகை ஆய நண்பினார் நார் இன்மை இன்னா;
இகலின் எழுந்தவர் ஓட்டு இன்னா; இன்னா,
நயம் இல் மனத்தவர் நட்பு. 8

கள் இல்லா மூதூர் களிகட்கு நற்கு இன்னா;
வள்ளல்கள் இன்மை பரிசிலர்க்கு முன் இன்னா;
வண்மை இலாளர் வனப்பு இன்னா; ஆங்கு இன்னா,
பண் இல் புரவிப் பரிப்பு. 9

பொருள் உணர்வார் இல்வழிப் பாட்டு உரைத்தல் இன்னா;
இருள் கூர் சிறு நெறி தாம் தனிப்போக்கு இன்னா;
அருள் இல்லார்தம்கண் செலவு இன்னா; இன்னா,
பொருள் இல்லார் வண்மை புரிவு. 10

உடம்பாடு இலாத மனைவி தோள் இன்னா;
இடன் இல் சிறியாரோடு யாத்த நண்பு இன்னா;
இடங்கழியாளர் தொடர்பு இன்னா; இன்னா,
கடன் உடையார் காணப் புகல். 11

தலை தண்டமாகச் சுரம் போதல் இன்னா;
வலை சுமந்து உண்பான் பெருமிதம் இன்னா;
புலை உள்ளி வாழ்தல் உயிர்க்கு இன்னா; இன்னா,
முலை இல்லாள் பெண்மை விழைவு. 12

மணி இலாக் குஞ்சரம் வேந்து ஊர்தல் இன்னா;
துணிவு இல்லார் சொல்லும் தறுகண்மை இன்னா;
பணியாத மன்னர் பணிவு இன்னா; இன்னா,
பிணி அன்னார் வாழும் மனை. 13

வணர் ஒலி ஐம்பாலார் வஞ்சித்தல் இன்னு;
துணர் தூங்கு மாவின் படு பழம் இன்னு;
புணர் பாவை அன்னுர் பிரிவு இன்னு; இன்னு,
உணர்வார் உணராக்கடை. 14

புல் ஆர் புரவி மணி இன்றி ஊர்வு இன்னு;
கல்லார் உரைக்கும் கருமப் பொருள் இன்னு;
இல்லாதார் நல்ல விழைவு இன்னு; ஆங்கு இன்னு,
பல்லாருள் நாணுப் படல். 15

உண்ணுது வைக்கும் பெரும் பொருள் வைப்பு இன்னு;
நண்ணுப் பகைவர் புணர்ச்சி நனி இன்னு;
கண் இல் ஒருவன் வனப்பு இன்னு; ஆங்கு இன்னு,
எண் இலான் செய்யும் கணக்கு. 16

ஆன்று அவிந்த சான்ருேருள் பேதை புகல் இன்னு;
மான்று இருண்ட போழ்தின் வழங்கல் பெரிது இன்னு;
நோன்று அவிந்து வாழாதார் நோன்பு இன்னு; ஆங்கு இன்னு,
ஈன்ருளை ஓம்பா விடல். 17

உரன் உடையான் உள்ளம் மடிந்திருத்தல் இன்னு;
மறன் உடையான் ஆடையால் மார்பு ஆர்த்தல் இன்னு;
சுரம் அரிய கானம் செலவு இன்னு; இன்னு,
மன வறியாளர் தொடர்பு. 18

குலத்துப் பிறந்தவன் கல்லாமை இன்னு;
நிலத்து இட்ட நல் வித்து நாருமை இன்னு;
நலத்தகையார் நாணுமை இன்னு; ஆங்கு இன்னு,
கலத்தல் குலம் இல் வழி. 19

மாரி நாள் கூவும் குயிலின் குரல் இன்னு;
ஈரம் இலாளர் கடு மொழிக் கூற்று இன்னு;
மாரி வளம் பொய்ப்பின், ஊர்க்கு இன்னு; ஆங்கு இன்னு,
மூரி எருத்தால் உழவு. 20

ஈத்த வகையால் உவவாதார்க்கு ஈப்பு இன்னு;
பாத்து உணல் இல்லாருழைச் சென்று உணல் இன்னு;
மூத்த இடத்துப் பிணி இன்னு; ஆங்கு இன்னு,
ஒத்து இலாப் பார்ப்பான் உரை. 21

யானை இல் மன்னரைக் காண்டல் நனி இன்னா;
ஊனைத் தின்று ஊனைப் பெருக்குதல் முன் இன்னா;
தேன் நெய் புளிப்பின் சுவை இன்னா; ஆங்கு இன்னா,
கான் யாறு இடையிட்ட ஊர். 22

சிறை இல்லா மூதூரின் வாயில் காப்பு இன்னா;
துறை இருந்து ஆடை கழுவுதல் இன்னா;
அறை பறை அன்னர் சொல் இன்னா; இன்னா,
நிறை இலான் கொண்ட தவம். 23

ஏமம் இல் மூதூர் இருத்தல் மிக இன்னா;
தீமை உடையார் அயல் இருத்தல் நற்கு இன்னா;
காமம் முதிரின் உயிர்க்கு இன்னா; ஆங்கு இன்னா,
யாம் என்பவரோடு நட்பு. 24

நட்டார் இடுக்கண்கள் காண்டல் நனி இன்னா;
ஒட்டார் பெருமிதம் காண்டல் பெரிது இன்னா;
கட்டு இலா மூதூர் உறைவு இன்னா; ஆங்கு இன்னா,
நட்ட கவற்றினால் சூது. 25

பெரியாரோடு யாத்த தொடர் விடுதல் இன்னா;
'அரியவை செய்தும்!' என உரைத்தல் இன்னா;
பரியார்க்குத் தாம் உற்ற கூற்று இன்னா; இன்னா,
பெரியார்க்குத் தீய செயல். 26

பெருமை உடையாரைப் பீடு அழித்தல் இன்னா;
கிழமை உடையாரைக் கீழ்ந்திடுதல் இன்னா;
வளமை இலாளர் வனப்பு இன்னா; இன்னா,
இளமையுள் மூப்புப் புகல். 27

கல்லாதான் ஊரும் கலிமாப் பரிப்பு இன்னா;
வல்லாதான் சொல்லும் உரையின் பயன் இன்னா;
இல்லார் வாய்ச் சொல்லின் நயம் இன்னா; ஆங்கு இன்னா,
கல்லாதான் கோட்டி கொளல். 28

குறி அறியான் மா நாகம் ஆட்டுவித்தல் இன்னா;
தறி அறியான் கீழ் நீர்ப் பாய்ந்தாடுதல் இன்னா;
அறிவு அறியா மக்கள் பெறல் இன்னா; இன்னா,
செறிவு இலான் கேட்ட மறை. 29

நெடு மரம் நீள் கோட்டு உயர் பாய்தல் இன்னா;
கடுஞ் சின வேழத்து எதிர் சேறல் இன்னா;
ஒடுங்கி அரவு உறையும் இல் இன்னா; இன்னா,
கடும் புலி வாழும் அதர். 30

பண் அமையா யாழின்கீழ்ப் பாடல் பெரிது இன்னா;
எண் அறியா மாந்தர் ஒழுக்கு நாள் கூற்று இன்னா;
மண் இல் முழவின் ஒலி இன்னா; ஆங்கு இன்னா,
தன்மை இலாளர் பகை. 31

தன்னைத் தான் போற்றாது ஒழுகுதல் நன்கு இன்னா;
முன்னை உரையார் புறமொழிக் கூற்று இன்னா;
தன்மை இலாளர் தொடர்பு இன்னா; ஆங்கு இன்னா,
தொன்மை உடையார் கெடல். 32

கள் உண்பான் கூறும் கருமப் பொருள் இன்னா;
முள்ளுடைக் காட்டில் நடத்தல் நனி இன்னா;
வெள்ளம் படு மாக் கொலை இன்னா; ஆங்கு இன்னா,
கள்ள மனத்தார் தொடர்பு. 33

ஒழுக்கம் இலாளர்க்கு உறவு உரைத்தல் இன்னா;
விழுத்தகு நூலும் விழையாதார்க்கு இன்னா;
இழித்த தொழிலவர் நட்பு இன்னா; இன்னா,
கழிப்பு வாய் மண்டிலம் கொட்பு. 34

எழிலி உறை நீங்கின், ஈண்டையார்க்கு இன்னா;
குழல் இல் இயமரத்து ஓசை நற்கு இன்னா;
குழவிகள் உற்ற பிணி இன்னா; இன்னா,
அழகுடையான் பேதை எனல். 35

பொருள் இலான் வேளாண்மை காமுறுதல் இன்னா;
நெடு மாட நீள் நகர்க் கைத்து இன்மை இன்னா;
அடு மனை பார்த்திருந்து ஊண் இன்னா; இன்னா,
கெடும் இடம் கைவிடுவார் நட்பு. 36

நறிய மலர் பெரிதும் நாறாமை இன்னா;
துறை அறியான் நீர் இழிந்து போகுதல் இன்னா;
அறியான் வினாப்படுதல் இன்னா; ஆங்கு இன்னா,
சிறியார்மேல் செற்றம் கொளல். 37

பிறன் மனையாள் பின் நோக்கும் பேதைமை இன்னா;
மறம் இலா மன்னர் செருப் புகுதல் இன்னா;
வெறும் புறம் வெம் புரவி ஏற்று இன்னா; இன்னா,
திறன் இலான் செய்யும் வினை. 38

கொடுக்கும் பொருள் இல்லான் வள்ளன்மை இன்னா;
கடித்து அமைந்த பாக்கினுள் கல் படுதல் இன்னா;
கொடுத்து விடாமை கவிக்கு இன்னா; இன்னா,
மடுத்துழிப் பாடா விடல். 39

அடக்கம் உடையவன் மீளிமை இன்னா;
தொடக்கம் இலாதவன் தற்செருக்கு இன்னா;
அடைக்கலம் வவ்வுதல் இன்னா; ஆங்கு இன்னா,
அடக்க, அடங்காதார் சொல். 40

# இனியவை நாற்பது

இனியவை நாற்பது இன்னா நாற்பதோடு பெயர் ஒற்றுமை உடையது. இந் நூலாசிரியரும் கடவுள் வாழ்த்தில் கபில தேவரைப் போன்றே சிவபெருமானை முற் படக் குறிக்கின்றார். கபில தேவர் இன்னா என்று சுட்டியதை ஒப்ப, இவரும் தாம் கூறும் அறங்களை இனிது என்னும் சொல்லால் குறிக்கின்றார். இனிய பொருள் களை நாற்பது பாடல்களில் இவர் தொகுத்துக் கூறியுள்ளமையால் இவரது நூல் 'இனியவை நாற்பது' என வழங்கப் பெறுவதாயிற்று.

எனினும், இன்னா நாற்பது போன்ற கட்டுக்கோப்பு இந் நூலகத்து இல்லை. இன்னா நாற்பதில் ஒவ்வொரு பாடலிலும் நான்கு இன்னாத பொருள்கள் கூறப்படுகின் றன. இந் நூலில் நான்கு இனிய பொருள்களை எடுத்துக் கூறும் பாடல்கள் நான்கே நான்குதான் உள்ளன (1,3, 4, 5). எஞ்சிய எல்லாம் மும்மூன்று இனிய பொருள்களையே சுட்டியுள்ளன; இவற்றில் எல்லாம் முன் இரண்டு அடிகளில் இரு பொருள்களும், பின் இரண்டு அடிகளில் ஒரு பொருளுமாக அமைந்துள்ளமை கவனித்தற்கு உரியது.

மூன்று இனிய பொருள்களை மிகுதியும் எடுத்துக்கூறும் இந் நூல் திரிகடுகத் தோடு ஒத்த பண்பு உடையது என்று கொள்ளலாம். அன்றியும் திரிகடுகத்தில் எடுத்தாளப் பெறும் சொற்பொருளமைதிகளை இனியவை நாற்பது பெரிதும் அடி யொற்றிச் செல்லுகிறது. இவற்றை நோக்கினால், பொருளமைப்பில் திரிகடுகத்தை யும், நூல் அமைப்பில் இன்னா நாற்பதையும் இந்த ஆசிரியர் மேற்கொண்டனராதல் வேண்டும். திரிகடுகத்தை இளம்பூரணர் முதலிய பழைய உரைகாரர்கள் எடுத்தாளு தலினாலும், இந் நூலை எவரும் எடுத்தாளாமையினாலும், இந்நூல் திரிகடுகத்திற்குப் பிற்பட்டது என்று கருத இடமுண்டு.

இந் நூலின் பெயரை 'இனியது நாற்பது' என்றும், 'இனியவை நாற்பது' என்றும், 'இனிது நாற்பது' என்றும், 'இனிய நாற்பது' என்றும், பதிப்பாசிரியர்கள் முதலியோர் குறித்துள்ளனர். 'இன்னா நாற்பது' என்பதைப் போல 'இனியவை நாற்பது' என இந் நூற் பெயரைக் கொள்ளுதல் நலம்.

இந் நூலின் ஆசிரியர், மதுரைத் தமிழாசிரியர் மகனார் பூதஞ் சேந்தனார். இப் பெயரில் சேந்தனார் என்பது இயற் பெயர். பூதன் என்பது இவர் தந்தையார் பெயர். இவர் தந்தையார் மதுரையில் தமிழாசிரியராய்ச் சிறந்து விளங்கியமை குறித்து, மதுரைத் தமிழாசிரியர் என்னும் சிறப்புப் பெயருடன் வழங்கப்பெற்றார். சேந்தன் என்பது முருகனுக்கு உரிய பெயர்களில் ஒன்று ஆகும். பதினோராந் திருமுறையில் திருப்பல்லாண்டு பாடியவர் சேந்தனார் என்பதும், திவாகரம் செய் வித்தவன் சேந்தன் என்னும் பெயர் பெற்றிருத்தலும் ஈண்டுச் சிந்தித்தற்குரியன.

பூதஞ் சேந்தனார் சிவனை முதலிலும், அடுத்துத் திருமாலையும், பின்னர்ப் பிரமதேவனையும் தமது கடவுள் வாழ்த்தில் குறிப்பிடுகின்றார்.

பிரமதேவன் வணக்கம் பின் சளுக்கியர் காலத்திலேதான் பிரபலமாகக் காணப் படுகிறது. கி.பி. 9-ஆம் நூற்றூண்டில் இவ் வணக்கம் தமிழ் நாட்டில் புகுந்திருக்க லாம் என ஆராய்ச்சியாளர் சிலர் கருதுகின்றனர். 'பொலிசை' என இவர் ஆளும் சொல் (39) இலக்கிய வழக்கிலோ சாசன வழக்கிலோ, இக் காலத்திற்கு முன்னர்க் காணப்பெறவில்லை. சீவக சிந்தாமணியிலேதான் (2546) இச் சொல் வழக்கு உள்ளது. எனவே, சீவக சிந்தாமணி தோன்றிய காலப் பகுதியில் இனியவை நாற்பதும் தோன்றியிருக்கலாம்.

கடவுள் வாழ்த்து நீங்கலாக நாற்பது பாடல்கள் இந் நூலில் உள்ளன. இவற்றுள், 'ஊரும் கலிமா' எனத் தொடங்கும் பாடல் ஒன்றுமே (8) பஃறொடை வெண்பா. ஏனைய எல்லாம் நாலடி கொண்ட அளவியல் வெண்பாக்கள். இந் நூல் முழுமைக்கும் செம்மையாய் அமைந்த பழைய உரை உள்ளது.

# இனியவை நாற்பது

(பூதஞ் சேந்தனர்)

## கடவுள் வாழ்த்து

கண் மூன்று உடையான் தாள் சேர்தல் கடிது இனிதே;
தொல் மாண் துழாய் மாலையானைத் தொழல் இனிதே;
முந்துறப் பேணி முகம் நான்கு உடையானைச்
சென்று அமர்ந்து ஏத்தல் இனிது.

## நூல்

பிச்சை புக்குஆயினும் கற்றல் மிக இனிதே;
நல் சவையில் கைக்கொடுத்தல் சாலவும் முன் இனிதே;
முத்து ஏர் முறுவலார் சொல் இனிது; ஆங்கு இனிதே,
தெற்றவும் மேலாயார்ச் சேர்வு. 1

உடையான் வழக்கு இனிது; ஒப்ப முடிந்தால்,
மனை வாழ்க்கை முன் இனிது; மாணுதாம்ஆயின்,
நிலையாமை நோக்கி, நெடியார், துறத்தல்
தலையாகத்தான் இனிது நன்கு. 2

ஏவது மாறு இளங் கிளைமை முன் இனிதே;
நாளும் நவை போகான் கற்றல் மிக இனிதே;
ஏருடையான் வேளாண்மைதான் இனிது; ஆங்கு இனிதே,
தேரின், கோள் நட்புத் திசைக்கு. 3

யானையுடைப் படை காண்டல் மிக இனிதே;
ஊனைத் தின்று, ஊனைப் பெருக்காமை முன் இனிதே;
கான் யாற்று அடை கரை ஊர் இனிது; ஆங்கு இனிதே,
மானம் உடையார் மதிப்பு. 4

கொல்லாமை முன் இனிது; கோல் கோடி, மா ராயன்,
செய்யாமை முன் இனிது; செங்கோலன் ஆகுதல்,
எய்தும் திறத்தால், இனிது என்ப; யார் மாட்டும்
பொல்லாங்கு உரையாமை நன்கு. 5

ஆற்றும் துணையால் அறம் செய்கை முன் இனிதே;
பாற்பட்டார் கூறும் பயமொழி மாண்பு இனிதே;
வாய்ப்பு உடையராகி, வலவைகள் அல்லாரைக்
காப்பு அடையக் கோடல் இனிது. 6

அந்தணர் ஒத்துடைமை ஆற்ற மிக இனிதே;
பந்தம் உடையான் படையாண்மை முன் இனிதே;
தந்தையே ஆயினும், தான் அடங்கான் ஆகுமேல்,
கொண்டு அடையான் ஆகல் இனிது. 7

ஊரும் கலி மா உரன் உடைமை முன் இனிதே;
தார் புனை மன்னர் தமக்கு உற்ற வெஞ்சமத்துக்
கார் வரைபோல் யானைக் கதம் காண்டல் முன் இனிதே;
ஆர்வம் உடையவர் ஆற்றவும் நல்லவை,
பேதுறார், கேட்டல் இனிது. 8

தங்கண் அமர்பு உடையார் தாம் வாழ்தல் முன் இனிதே;
அம் கண் விசும்பின் அகல் நிலாக் காண்பு இனிதே;
பங்கம் இல் செய்கையர் ஆகி, பரிந்து, யார்க்கும்
அன்புடையர் ஆதல் இனிது. 9

கடம் உண்டு வாழாமை காண்டல் இனிதே;
நிறை மாண்பு இல் பெண்டிரை நீக்கல் இனிதே;
மன மாண்பு இலாதவரை அஞ்சி அகறல்
எனை மாண்பும் தான் இனிது நன்கு. 10

அதர் சென்று வாழாமை ஆற்ற இனிதே;
குதர் சென்று கொள்ளாத கூர்மை இனிதே;
உயிர் சென்று தாம் படினும், உண்ணார் கைத்து உண்ணாப்
பெருமைபோல் பீடு உடையது இல். 11

குழவி பிணி இன்றி வாழ்தல் இனிதே;
கழறும் அவை அஞ்சான் கல்வி இனிதே;
மயரிகள் அல்லராய், மாண்புடையார்ச் சேரும்
திருவும், தீர்வு இன்றேல், இனிது. 12

மானம் அழிந்தபின், வாழாமை முன் இனிதே;
தானம் அழியாமைத் தான் அடங்கி, வாழ்வு இனிதே;
ஊனம் ஒன்று இன்றி, உயர்ந்த பொருள் உடைமை
மானிடவர்க்கு எல்லாம் இனிது. 13

குழவி தளர் நடை காண்டல் இனிதே;
அவர் மழலை கேட்டல் அமிழ்தின் இனிதே;
வினையுடையான் வந்து அடைந்து வெய்து உறும் போழ்து,
மனன் அஞ்சான் ஆகல் இனிது. 14

பிறன் மனைப் பின் நோக்காப் பீடு இனிது ஆற்ற;
வறன் உழக்கும் பைங் கூழ்க்கு வான் சோர்வு இனிதே;
மற மன்னர் தம் கடையுள், மா மலைபோல் யானை
மத முழக்கம் கேட்டல் இனிது. 15

கற்றார் முன் கல்வி உரைத்தல் மிக இனிதே;
மிக்காரைச் சேர்தல் மிக மாண முன் இனிதே;
எள்துணையானும் இரவாது தான் ஈதல்
எத்துணையும் ஆற்ற இனிது. 16

நட்டார்க்கு நல்ல செயல் இனிது; எத்துணையும்
ஒட்டாரை ஒட்டிக் கொளல் அதனின் முன் இனிதே;
பற்பல தானியத்ததாகி, பலர் உடையும்
மெய்த் துணையும் சேரல் இனிது. 17

மன்றில் முதுமக்கள் வாழும் பதி இனிதே;
தந்திரத்தின் வாழும் தவசிகள் மாண்பு இனிதே;
எஞ்சா விழுச் சீர் இரு முதுமக்களைக்
கண்டு எழுதல் காலை இனிது. 18

நட்டார்ப் புறங்கூறான் வாழ்தல் நனி இனிதே;
பட்டாங்கு பேணிப் பணிந்து ஒழுகல் முன் இனிதே;
முட்டு இல் பெரும் பொருள் ஆக்கியக்கால், மற்றுஅது
தக்குழி ஈதல் இனிது. 19

சலவரைச் சாரா விடுதல் இனிதே;
புலவர்தம் வாய்மொழி போற்றல் இனிதே;
மலர்தலை ஞாலத்து மன்னுயிர்க்கு எல்லாம்
தகுதியால் வாழ்தல் இனிது. 20

பிறன்கைப் பொருள் வௌவான் வாழ்தல் இனிதே;
அறம் புரிந்து, அல்லவை நீக்கல் இனிதே;
மறந்தேயும் மாணா மயரிகள் சேராத்
திறம் தெரிந்து வாழ்தல் இனிது. 21

வருவாய் அறிந்து வழங்கல் இனிதே;
ஒருவர் பாங்கு ஆகாத ஊக்கம் இனிதே;
பெரு வகைத்துஆயினும், பெட்டவை செய்யார்,
திரிபு இன்றி வாழ்தல் இனிது. 22

காவோடு அறக் குளம் தொட்டல் மிக இனிதே;
ஆவோடு பொன் ஈதல் அந்தணர்க்கு முன் இனிதே
பாவமும் அஞ்சாராய், பற்றும் தொழில் மொழிச்
சூதரைச் சோர்தல் இனிது. 23

வெல்வது வேண்டி வெகுளாதான் நோன்பு இனிதே;
ஒல்லும் துணையும் ஒன்று உய்ப்பான் பொறை இனிதே;
இல்லது காமுற்று, இரங்கி இடர்ப்படார்
செய்வது செய்தல் இனிது. 24

ஐ வாய வேட்கை அவா அடக்கல் முன் இனிதே;
கைவாய்ப் பொருள் பெறினும், கல்லார்கண் தீர்வு இனிதே;
நில்லாத காட்சி நிறை இல் மனிதரைப்
புல்லா விடுதல் இனிது. 25

நச்சித் தற் சென்றார் நசை கொல்லா மாண்பு இனிதே;
உட்கு இல்வழி, வாழா ஊக்கம் மிக இனிதே;
எத் திறத்தானும் இயைவ கரவாத
பற்றினில் பாங்கு இனியது இல். 26

தானம் கொடுப்பான் தகை ஆண்மை முன் இனிதே;
மானம் பட வரின், வாழாமை முன் இனிதே;
ஊனம் கொண்டாடார், உறுதி உடையவை
கோள் முறையால் கோடல் இனிது. 27

ஆற்றானை, 'ஆற்று!' என்று அலையாமை முன் இனிதே;
கூற்றம் வரவு உண்மை சிந்தித்து வாழ்வு இனிதே;
ஆக்கம் அழியினும், அல்லவை கூறாத
தேர்ச்சியில் தேர்வு இனியது இல். 28

கயவரைக் கை இகந்து வாழ்தல் இனிதே;
உயர்வு உள்ளி ஊக்கம் பிறத்தல் இனிதே;
'எளியர், இவர்!' என்று இகழ்ந்து உரையாராகி,
ஒளி பட வாழ்தல் இனிது. 29

நன்றிப் பயன் தூக்கி வாழ்தல் நனி இனிதே;
மன்றில் கொடும்பாடு உரையாத மாண்பு இனிதே;
'அன்று அறிவார் யார்?' என்று அடைக்கலம் வெளவாத
நன்றியின், நன்கு இனியது இல். 30

அடைந்தார் துயர் கூரா ஆற்றல் இனிதே;
கடன் கொண்டும் செய்வன செய்தல் இனிதே;
சிறந்து அமைந்த கேள்வியர் ஆயினும், ஆராய்ந்து
அறிந்து உரைத்தல் ஆற்ற இனிது. 31

கற்று அறிந்தார் கூறும் கருமப் பொருள் இனிதே;
பற்று அமையா வேந்தன்கீழ் வாழாமை முன் இனிதே;
தெற்றெனவு இன்றித் தெளிந்தாரைத் தீங்கு ஊக்காப்
பத்திமையின் பாங்கு இனியது இல். 32

ஊர் முனியா செய்து ஒழுகும் ஊக்கம் மிக இனிதே;
தானே மடிந்து இராத் தாளாண்மை முன் இனிதே;
வாள் மயங்கு மண்டு அமருள் மாருத மா மன்னர்
தானை தடுத்தல் இனிது. 33

எல்லிப் பொழுது வழங்காமை முன் இனிதே;
சொல்லுங்கால் சோர்வு இன்றிச் சொல்லுதல் மாண்பு இனிதே;
புல்லிக் கொளினும் பொருள் அல்லார்தம் கேண்மை
கொள்ளா விடுதல் இனிது. 34

ஒற்றினன் ஒற்றிப் பொருள் தெரியும் மாண்பு இனிதே;
முன்தான் தெரிந்து முறை செய்தல் முன் இனிதே;
பற்று இலனாய்ப் பல்லுயிர்க்கும் பார்த்துஉற்றுப் பாங்கு அறிதல்
வெற்ற வேல் வேந்தர்க்கு இனிது. 35

அவ்வித்து அழுக்காறு உரையாமை முன் இனிதே,
செவ்வியனாய்ச் செற்றுச் சினம் கடிந்து வாழ்வு இனிதே;
கவ்வித் தாம் கொண்டு, தாம் கண்டது காமுற்று,
வவ்வார் விடுதல் இனிது. 36

இளமையை மூப்பு என்று உணர்தல் இனிதே;
கிளைஞர்மாட்டு அச்சு இன்மை கேட்டல் இனிதே;
தட மென் பணைத் தோள் தளிர் இயலாரை
விடம் என்று உணர்தல் இனிது. 37

சிற்றாள் உடையான் படைக்கல மாண்பு இனிதே;
நட்டார் உடையான் பகை ஆண்மை முன் இனிதே;
எத் துணையும் ஆற்ற இனிதுஎன்ப, பால் படும்
கற்றா உடையான் விருந்து. 38

பிச்சை புக்கு உண்பான் பிளிற்றாமை முன் இனிதே;
துச்சில் இருந்து துயர் கூரா மாண்பு இனிதே;
உற்ற பொலிசை கருதி, அறன் ஒரூஉம்
ஒற்கம் இலாமை இனிது. 39

பத்துக் கொடுத்தும், பதி இருந்து, வாழ்வு இனிதே;
வித்துக் குற்று உண்ணா விழுப்பம் மிக இனிதே;
பற்பல நாளும் பழுது இன்றிப் பாங்கு உடைய
கற்றலின் காழ் இனியது இல். 40

# முதுமொழிக் காஞ்சி

முதுமொழி என்பது பழமொழி என்னும் சொற்பொருளோடு தொடர்புடையது. 'மூதுரை, முதுசொல்' என்பனவும் இப் பொருள் தருவன. காஞ்சி என்பது பல்வேறு நிலையாமைகளைக் குறித்தது என்பர் தொல்காப்பியர். மேலும், முதுசொல் (தொல். பொருள். 385), முதுமொழி (தொல், பொருள். 467, 468, 480), முதுமை (தொல். பொருள். 77) என்பவற்றிற்கு அவர் தரும் விளக்கத்திற்கும் 'முதுமொழிக் காஞ்சி' நூற் பொருளுக்கும் தொடர்பு ஒன்றும் இல்லை. ஆயினும், தொல்காப்பியரது சூத்திரக் கருத்தையும் முதுகாஞ்சி பற்றி நச்சினார்க்கினியரும் இளம்பூரணரும் எழுதிய உரைக் கருத்துக்களையும் ஒட்டியே திவாகர நிகண்டில் முதுமொழிக் காஞ்சிக்கு விளக்கம் தரப்படுகிறது.

> கழிந்தோர் ஏனை ஒழிந்தோர்க்குக் காட்டிய
> முதுமை ஆகும் முதுமொழிக்காஞ்சி (X. 107)

என்பது திவாகரம். இவ் விளக்கம் முதுமொழிக் காஞ்சி நூலுள் பொதிந்த பொருளைத் தெளிவாக உணர்த்தவில்லை.

புறப்பொருள் வெண்பாமாலையில் 'முதுமொழிக் காஞ்சி' என்று ஒரு துறை அமைந்துள்ளது. இதனை, 'மூதுரை பொருந்திய முதுமொழிக் காஞ்சி' என்று தொகைச் சூத்திரத்தில் சுட்டியதோடு, பின்னர்,

> பலர் புகழ் புலவர் பன்னினர் தெரியும்
> உலகியல் பொருள் முடிவு உணரக் கூறின்று

என்று விளக்கியும் ஆசிரியர் உரைத்துள்ளார். உலகியல் உண்மைகளைத் தெள்ளத் தெளிந்த புலவர் பெருமக்கள் எடுத்து இயம்புவது என்னும் இவ் இலக்கணம் 'முதுமொழிக் காஞ்சி' என்னும் நூற்பொருளுக்குப் பொருந்துவதாகும்.

முதுமொழிக் காஞ்சித் துறை பற்றிப் புறநானூற்றில் ஐந்து பாடல்கள் உள்ளன (18, 27, 28, 29, 74). இந் நூலின் உரைகாரர் புறப்பொருள் வெண்பாமாலையைப் பின்பற்றியே துறைக்குறிப்பும் விளக்கமும் (18, 74, உரை) தந்துள்ளார். இவர் தரும் விளக்கமும் முதுமொழிக் காஞ்சியின் இயல்போடு பொருந்தும்.

காஞ்சி என்பது மகளிர் இடையில் அணியும் ஒருவகை அணிகலக் கோவையையும் குறிக்கும். பல மணிகள் கோத்த காஞ்சி அணி போல முதுமொழிகள் பல கோத்த நூல் முதுமொழிக் காஞ்சி எனப் பெயர் பெற்றது என்று கருதுவாரும் உண்டு. அங்ஙனம் கொள்ளின், முதுமொழிக் காஞ்சி என்பது அறிவுரைக் கோவை என்னும் பொருள் பயந்து நிற்கும்.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களைத் தொகுத்து உரைக்கும் வெண்பாவில் 'காஞ்சி' என்னும் பெயரே காண்கிறது. இதில் குறித்த காஞ்சி முதுமொழிக் காஞ்சி என்பதே சான்றோர் கொள்கை. 'இன்னிலைய காஞ்சி' என்று அடைமொழி கொடுத்து இப்பாடல் உரைப்பது, நூலின் தெளிவு முதலியன கருதிப் போலும்!

இந் நூலை ஆக்கியவர் **மதுரைக் கூடலூர் கிழார்.** கூடலூர் இவர் பிறந்த ஊராயும், மதுரை பின்பு புகுந்து வாழ்ந்த ஊராயும் இருத்தல் கூடும். கிழார் என்னும் குறிப்பினால் இவரை வேளாண் மரபினர் என்று கொள்ளலாம். தொல் காப்பிய மரபியலில்,

ஊரும் பேரும் உடைத் தொழிற் கருவியும்
யாரும் சார்த்தி அவை அவை பெறுமே.

என்ற சூத்திர உரையில் 'அம்பர்கிழான் நாகன், வல்லங்கிழான் மாறன் என்பன வேளாளர்க்கு உரியன' என வரும் குறிப்பு மேற்கூறிய கருத்தை வலியுறுத்தும். தொல்காப்பியச் சொல்லதிகாரத்தில் உடைமைப் பெயர்க்கு உதாரணமாக 'அம்பர் கிழான், பேரூர் கிழான்' என்பவை காட்டப்பட்டுள்ளன. இது கொண்டு கூடலூரைத் தம் உடைமையாகக் கொண்டவர் கூடலூர் கிழார் என்றும் ஊகிக்கலாம். அரிசில் கிழார், ஆலூர் கிழார், காரி கிழார், கோவூர் கிழார், என்று இவ்வாறு கிழார் என்னும் சிறப்புடன் புலவர் பலர் சங்க நூல்களிலும் காணப்படுகின்றனர்.

சங்க நூல்களில் குறிக்கப்பெறும் கூடலூர் கிழாரும் இவரும் ஒருவர் அல்லர். சங்கப் புலவர் 'புலத்துறை முற்றிய கூடலூர் கிழார்' என்று குறிக்கப் பெறுகிறார். இவ் இருவரையும் குறிக்கும் அடைமொழி வேறுபாடே இருவரும் வேறு வேறு புலவர் என்பதைப் புலப்படுத்தும். மேலும், முதுமொழிக் காஞ்சியில் வரும் விழைச்சு, சொன்மலை, மீப்பு முதலிய பிற்காலச் சொல்லாட்சிகளும் இவர் சங்கப் புலவர் காலத்திற்குப் பிற்பட்டவர் என்பதைத் தெளிவுபடுத்தும். டாக்டர் உ.வே. சாமிநாதையர் புறநானூற்றில் தாம் எழுதிய பாடினோர் வரலாற்றில், 'முதுமொழிக் காஞ்சியை இயற்றிய மதுரைக் கூடலூர் கிழார் வேறு; இவர் வேறு' என்று குறித்துள்ளார்.

தொண்டை மண்டல சதகமுடையார், ' . . . முதுமொழிக் காஞ்சி சொற்ற, வார் ஆர் புரிசைக் கிழவோனும் வாழ் தொண்டை மண்டலமே' (66) என்று தொண்டை நாட்டுப் புரிசை என்னும் ஊரினராக இவரைக் கூறிக்கொள்ளுதல் உண்மையொடு பட்டதன்று.

இந் நூலுள் பத்துப் பத்துக்களும் ஒவ்வொரு பத்திலும் பத்து முதுமொழிகளும் உள்ளன. ஒவ்வொரு செய்யுளின் முதல் அடியும், 'ஆர்கலி உலகத்து மக்கட்கு எல்லாம்' என்றே தொடங்குகின்றமையால் இந் நூல் நூறு குறள் வெண் செந்துறை யாலானது எனலாம். எல்லா அடிகளிலும் பயின்று வரும் சொற் குறிப்பைக் கொண்டு, ஒவ்வொன்றும் சிறந்த பத்து, அறிவுப் பத்து என்று பெயர் பெற்றுள்ளது. ஒரு பிரதியில் 'முதுமொழிக் காஞ்சிப் பத்து' என்றே பெயர் குறிக்கப் பெற்றிருந்தது. பத்துப் பத்துக்களைக் கொண்டமையால், இவ்வாறு பெயர் குறித்தார் போலும்.

நூறதாம் சிறுபஞ்ச மூலம்; நூறு
சேர் முதுமொழிக் காஞ்சி.

எனவரும் பிரபந்த தீபிகைக் குறிப்பினால் முதுமொழிக்காஞ்சி நூறு எண்ணிக்கை உடையதாகக் கருதப் பெறுதலும் விளங்கும்.

இந் நூலை நச்சினார்க்கினியர் முதலிய பழைய உரையாசிரியர்கள் மேற்கோளாக எடுத்தாண்டுள்ளார்கள். இந் நூல் முழுமைக்கும் தெளிவான பழைய பொழிப்புரை உள்ளது.

# முதுமொழிக் காஞ்சி

(மதுரைக் கூடலூர் கிழார்)

## 1. சிறந்த பத்து

ஆர்கலி உலகத்து மக்கட்கு எல்லாம்—
ஓதலின் சிறந்தன்று, ஒழுக்கம் உடைமை. 1

காதலின் சிறந்தன்று, கண் அஞ்சப்படுதல். 2

மேதையின் சிறந்தன்று, கற்றது மறவாமை. 3

வண்மையின் சிறந்தன்று, வாய்மை உடைமை. 4

இளமையின் சிறந்தன்று, மெய் பிணி இன்மை. 5

நலன் உடைமையின் நாணுச் சிறந்தன்று. 6

குலன் உடைமையின் கற்புச் சிறந்தன்று. 7

கற்றலின் கற்றாரை வழிபடுதல் சிறந்தன்று. 8

செற்றாரைச் செறுத்தலின் தற் செய்கை சிறந்தன்று. 9

முன் பெருகலின் பின் சிறுகாமை சிறந்தன்று. 10

## 2. அறிவுப் பத்து

ஆர்கலி உலகத்து மக்கட்கு எல்லாம்—
பேர் இல் பிறந்தமை ஈரத்தின் அறிப. 1

ஈரம் உடைமை ஈகையின் அறிப. 2

சோரா நல் நட்பு உதவியின் அறிப. 3

கற்றது உடைமை காட்சியின் அறிப. 4

ஏற்றம் உடைமை எதிர்கோளின் அறிப. 5

சிற்றில் பிறந்தமை பெருமிதத்தின் அறிப. 6

குத்திரம் செய்தலின், கள்வன் ஆதல் அறிப. 7

சொற்சோர்வு உடைமையின், எச் சோர்வும் அறிப. 8

அறிவு சோர்வு உடைமையின், பிறிது சோர்வும் அறிப. 9

சீர் உடை ஆண்மை செய்கையின் அறிப. 10

### 3. பழியாப் பத்து

ஆர்கலி உலகத்து மக்கட்கு எல்லாம்—
யாப்பு இலோரை இயல்பு குணம் பழியார். 1
மீப்பு இலோரை மீக் குணம் பழியார். 2
நிறையச் செய்யாக் குறை வினை பழியார். 3
முறை இல் அரசர் நாட்டு இருந்து பழியார். 4
பெருமை உடையதன் அருமை பழியார். 5
அருமை உடையதன் பெருமை பழியார். 6
செயத்தக்க நற் கேளிர் செய்யாமை பழியார். 7
அறியாத தேசத்து, ஆசாரம் பழியார். 8
வறியோன் வள்ளியன் அன்மை பழியார். 9
சிறியார் ஒழுக்கம் சிறந்தோரும் பழியார். 10

### 4. துவ்வாப் பத்து

ஆர்கலி உலகத்து மக்கட்கு எல்லாம்—
பழியோர் செல்வம் வறுமையின் துவ்வாது. 1
கழி தறுகண்மை பேடியின் துவ்வாது. 2
நாண் இல் வாழ்க்கை பசித்தலின் துவ்வாது. 3
பேண் இல் ஈகை மாற்றலின் துவ்வாது. 4
செய்யாமை மேற்கோள் சிதடியின் துவ்வாது. 5
பொய் வேளாண்மை புலைமையின் துவ்வாது. 6
கொண்டு கண்மாறல் கொடுமையின் துவ்வாது. 7
அறிவு இலி துணைப்பாடு தனிமையின் துவ்வாது. 8
இழிவுடை மூப்புக் கதத்தின் துவ்வாது. 9
தான் ஓர் இன்புறல் தனிமையின் துவ்வாது. 10

### 5. அல்ல பத்து

ஆர்கலி உலகத்து மக்கட்கு எல்லாம்—
நீர் அறிந்து ஒழுகாதாள் தாரம் அல்லள். 1
தாரம் மாணாதது வாழ்க்கை அன்று. 2
ஈரம் அல்லாதது கிளை நட்பு அன்று. 3
சோரக் கையன் சொல்மலை அல்லன். 4
நேரா நெஞ்சத்தோன் நட்டோன் அல்லன். 5
தேராமல் கற்றது கல்வி அன்று. 6
வாழாமல் வருந்தியது வருத்தம் அன்று. 7
அறத்து ஆற்றின் ஈயாதது ஈகை அன்று. 8
திறத்து ஆற்றின் நோலாதது நோன்பு அன்று. 9
மறு பிறப்பு அறியாதது மூப்பு அன்று. 10

## 6. இல்லைப் பத்து

ஆர்கலி உலகத்து மக்கட்கு எல்லாம்—
மக்கட் பேற்றின் பெறும் பேறு இல்லை. 1
ஒப்புரவு அறிதலின் தகு வரவு இல்லை. 2
வாய்ப்புடை வழக்கின் நல் வழக்கு இல்லை. 3
வாயா வழக்கின் தீ வழக்கு இல்லை. 4
இயைவது கரத்தலின் கொடுமை இல்லை. 5
உரை இலன் ஆதலின் சாக்காடு இல்லை. 6
நசையின் பெரியது ஓர் நல்குரவு இல்லை. 7
இசையின் பெரியது ஓர் எச்சம் இல்லை. 8
இரத்தலினூஉங்கு இளிவரவு இல்லை. 9
இரப்போர்க்கு ஈதலின் எய்தும் சிறப்பு இல்லை 10

## 7. பொய்ப் பத்து

ஆர்கலி உலகத்து மக்கட்கு எல்லாம்—
பேர் அறிவினோன் இனிது வாழாமை பொய். 1
பெருஞ் சீரோன்தன் வெகுளி இன்மை பொய். 2
கள் உண்போன் சோர்வு இன்மை பொய். 3
காலம் அறியாதோன் கையுறல் பொய். 4
மேல் வரவு அறியாதோன் தற் காத்தல் பொய். 5
உறு வினை காய்வோன் உயர்வு வேண்டல் பொய். 6
சிறுமை நோனுதோன் பெருமை வேண்டல் பொய். 7
பெருமை நோனுதோன் சிறுமை வேண்டல் பொய். 8
பொருள் நசை வேட்கையோன் முறை செயல் பொய். 9
வாலியன் அல்லாதோன் தவம் செய்தல் பொய். 10

## 8. எளிய பத்து

ஆர்கலி உலகத்து மக்கட்கு எல்லாம்—
புகழ் வெய்யோர்க்குப் புத்தேள் நாடு எளிது. 1
உறழ் வெய்யோருக்கு உறு செரு எளிது. 2
ஈரம் வெய்யோர்க்கு நசை கொடை எளிது. 3
குறளை வெய்யோர்க்கு மறை விரி எளிது. 4
துன்பம் வெய்யோர்க்கு இன்பம் எளிது. 5
இன்பம் வெய்யோர்க்குத் துன்பம் எளிது. 6
உண்டி வெய்யோர்க்கு உறு பிணி எளிது. 7
பெண்டிர் வெய்யோர்க்குப் படு பழி எளிது. 8
பாரம் வெய்யோர்க்குப் பாத்தூண் எளிது. 9
சார்பு இலோருக்கு உறு கொலை எளிது. 10

## 9. நல்கூர்ந்த பத்து

ஆர்கலி உலகத்து மக்கட்கு எல்லாம்—
முறை இல் அரசன் நாடு நல்கூர்ந்தன்று. 1
மிக மூத்தோன் காமம் நல்கூர்ந்தன்று. 2
செற்று உடன் உறைவோனைச் சேர்தல் நல்கூர்ந்தன்று. 3
பிணி கிடந்தோன் பெற்ற இன்பம் நல்கூர்ந்தன்று. 4
தற் போற்றுவழிப் புலவி நல்கூர்ந்தன்று. 5
முதிர்வு உடையோன் மேனி அணி நல்கூர்ந்தன்று. 6
சொல் செல்லாவழிச் சொலவு நல்கூர்ந்தன்று. 7
அகம் வறியோன் நண்ணல் நல்கூர்ந்தன்று. 8
உட்கு இல்வழிச் சினம் நல்கூர்ந்தன்று. 9
நட்பு இல்வழிச் சேறல் நல்கூர்ந்தன்று. 10

## 10. தண்டாப் பத்து

ஆர்கலி உலகத்து மக்கட்கு எல்லாம்—
ஓங்கல் வேண்டுவோன் உயர் மொழி தண்டான். 1
வீங்கல் வேண்டுவோன் பல புகழ் தண்டான். 2
கற்றல் வேண்டுவோன் வழிபாடு தண்டான். 3
நிற்றல் வேண்டுவோன் தவம் செயல் தண்டான். 4
வாழ்க்கை வேண்டுவோன் சூழ்ச்சி தண்டான். 5
மிகுதி வேண்டுவோன் தகுதி தண்டான். 6
இன்பம் வேண்டுவோன் துன்பம் தண்டான். 7
துன்பம் வேண்டுவோன் இன்பம் தண்டான். 8
ஏமம் வேண்டுவோன் முறை செயல் தண்டான். 9
காமம் வேண்டுவோன் குறிப்புச் செயல் தண்டான். 10

# திணைமாலை நூற்றைம்பது

கீழ்க்கணக்கு வரிசையில் அகப்பொருள் நூல்கள் ஆறு. அவற்றுள் இரண்டு நூல்கள் 'திணை' என்றும், வேறு இரண்டு 'ஐந்திணை' என்றும் பெயர் பெறுவன. இவற்றை 'நால் ஐந்திணை' என்றும் குறிப்பர். இந் நூல்கள் நற்றிணை நானூறு, அகநானூறு என வரும் சங்க நூல்களை ஒப்ப, பாடல்-தொகை அளவையும் உடன் கூட்டி வழங்கப் பெறுகின்றன.

திணை என்பது நிலம், ஒழுக்கம் முதலிய பலபொருள் படுவதோர் சொல். இங்கே குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐந் நிலம் பற்றி, அவ்வந் நிலத்திற்குரிய புணர்தல், பிரிதல், முதலிய ஒழுக்கங்கள் சிறப்பித்துப் பாடப் பெறுகின்றன. எனவே, இவற்றைத் 'திணை' என்றும், 'ஐந்திணை' என்றும் குறித்துள்ளனர்.

ஐந்திணை ஒழுக்கங்களைக் கோவையாக அமைத்து மாலை போலத் தந்துள்ளமையின் 'திணைமாலை' என்றும், பாடல் அளவினால் 'திணைமாலை நூற்றைம்பது' என்றும், இந் நூல் பெயர் பெற்றுள்ளது. கீழ்க்கணக்கில் அமைந்த ஐந்திணை நூல்களில் அளவால் பெரியது இதுவே. குறிஞ்சி, நெய்தல், பாலை, முல்லை, மருதம், என்னும் வரிசையில் ஐந்திணைகளை இந் நூல் முறைப்படுத்தியுள்ளது. நூற்றைம்பது என்னும் எண் வரையறைக்கு ஏற்ப, திணை ஒவ்வொன்றும் 30 பாடல்களைக் கொண்டிருத்தலே முறை. அங்ஙனமாகவும், குறிஞ்சி, நெய்தல், முல்லைத் திணைகள் மூன்றும் 31 பாடல்களைப் பெற்றுள்ளன. இதனால், இந் நூலுள் 153 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. மிகுதியான மூன்று பாடல்களுக்கும் பழைய உரை உள்ளது. எனவே, உரைகாரர் காலத்திற்கு முன்பே இப் பாடல்கள் நூலகத்து உள்ளமை தெளிவு. ஏனைய திணைமொழி ஐம்பது, ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது என்னும் நூல்கள் எல்லாம் குறித்த பாடல் அளவுக்கு விஞ்சாமல் அமைவுற்றிருக்க, இந் நூலில் மட்டும் மூன்று பாடல்கள் மிகுதியாகக் காணப்பெறுதல் ஐயுறத் தக்கது ஒன்றே.

இந் நூலின் ஆசிரியர் ஏலாதியை இயற்றிய கணிமேதாவியாரே. இவர் சமண சமயத்தைச் சார்ந்தவர் என்பதும், மதுரைத் தமிழாசிரியர் மாக்காயனாரின் மாணாக்கர் என்பதும், பிறவும் ஏலாதி முகவுரையில் காணலாகும். 'கோடாப் புகழ் மாறன் கூடல் அனையாள்' (4) என்று கூறுதலின், இவர் பாண்டியனிடத்தும், அவன் கோநகரமாகிய கூடலிடத்தும் ஈடுபாடுள்ளவர் என்று கருதலாம். கணிமேதாவியார் என்ற பெயருக்கு ஏற்ப, நல்ல நாள் நோக்கி வினை புரிதலை இந் நூலுள் பல இடங்களில் (46, 52, 54) கூறியுள்ளமை நோக்கத்தக்கது.

இவர் கடலுக்கும் கானல் சேர் வெண் மணலுக்கும் மாயவனையும் பலராமனையும் உவமை கூறுவர்.

> மாயவனும் தம்முனும் போலே, மறி கடலும்
> கானலும் சேர் வெண் மணலும் காணாயோ? (58)

என இவர் கூறிய கருத்தை ஒத்த வருணனைகள் பிற நூல்களிலும் காணப்படுகின்றன. இருளுக்கும் நிலவுக்கும் மாயவனையும் பலராமனையும் இந் நூலகத்து வேறோர் இடத்தும் உவமை காட்டுதல் (96, 97) காணலாம்.

> இம்மையால் செய்ததை இம்மையே ஆம் போலும்;
> உம்மையே ஆம் என்பார் ஓரார்காண் (123)

என்ற கருத்து, 'செற்றொருவரைச் செய்த தீமைகள் இம்மையே வரும் திண்ணமே' (7 : 35 : 4) என்னும் சுந்தரர் தேவாரப் பகுதியோடு ஒத்துள்ளது.

> வெஞ்சுடர் அன்னானை யான் கண்டேன்; கண்டாளாம்,
> தண்சுடர் அன்னாளைத் தான் (89)

என்ற இந் நூற் கருத்தை அடியொற்றியே,

ஆண்டான் அரு வரை ஆளியன்னுனைக் கண்டேன்; அயலே
தூண்டா விளக்கு அனையாய்! என்னையோ, அன்னை சொல்லியதே?

என்னும் திருக்கோவையார்ச் செய்யுட்பகுதி (244) அமைந்துள்ளது.

எண்ணுது, சாவார் சான்றுண்மை சலித்திலா மற்று இவனைக்
காவார் கயிறுரீஇவிட்டார் (47)

என்னும் திணைமாலைக் கருத்தும்,

வண்டு அலர் கோதை வாட் கண் வனமுலை வளர்த்த தாயர்
கண்டு உயிர் உண்ணும் கூற்றம் கயிறுரீஇக் காட்டிவிட்டார்

என்னும் சீவகசிந்தாமணிக் (இலக்கணை. 80) கருத்தும் ஒப்புமையுடையன. இரு நூல்களிலும், 'கயிறுரீஇவிடுதல்' என்னும் மரபுத் தொடர் பயின்று வருதலும் நோக்கத்தக்கது. இங்ஙனமாக, இடைக்கால நூல்களோடு ஒத்த பகுதிகள் சிலசில காணப்பெறுதலின், இதுவும் இடைக்காலத்து எழுந்த நூல் என்றே கொள்ளலாம்.

திருக்குறளில் பயின்றுள்ள செம்பாகம் (குறள் 1092: திணைமாலை 69), ஒருவந்தம் (குறள் 563, 593: திணைமாலை 103) என்ற சொல் வழக்குக்கள் இந் நூலிலும் உள்ளன.

நிரை திமில் களிறு ஆக, திரை ஒலி பறை ஆக,
கரை சேர் புள்ளினத்து அம் சிறை படை ஆக,
அரைசு கால்கிளர்ந்தன்ன உரவுநீர்ச் சேர்ப்ப! கேள்:

என்னும் கலித்தொகையின் (149) தரவுப் பகுதியை அடியொற்றி, இந் நூலின் 52, 53-ஆம் பாடல்கள் அமைந்துள்ளன. அன்றியும், கலித்தொகையில் வரும் வயந்தகம் (கலி. 79: திணைமாலை 128), வந்தையா (கலி. 63: திணைமாலை 138) என்னும் சொற்கள் இரு நூல்களிலும் உள்ளன. இவற்றுல் திணைமாலை நூற்றைம்பது, திருக்குறள், கலித்தொகை நூல்களுக்குப் பின்னர்த் தோன்றியது என ஆராய்ச்சியாளருள் சிலர் கருதுகின்றனர்.

மேலும், காம வேளின் ஐந்து அம்புகளைப் பற்றிய குறிப்பு ஒரு பாடலில் உள்ளது (8). இந் நூலிற் காணும் 'தாரா' (திணைமாலை 139: கைந்நிலை 40) என்னும் பறவை பழந் தமிழ் நூல்களில் காணப்பெறுதது. 'விருத்தி' என்னும் சொல் சாசனங்களில் வழங்கும் பொருளில் இந் நூலில் பயின்றுள்ளது (121). 'ஆடா அடகு' (4) 'தீத் தீண்டு கையார்' (5) என்னும் குறிப்பு மொழிகளும் இந் நூலுள் இடம் பெற்றுள்ளன. தவிரவும், அளகம் (2), வகுளம் (24), பாவிகை, சாலிகை (51), சுவர்க்கம் (62), அலங்காரம் (127) நாய்கர் (134), ஆட்டை (141), சிரம் (144) என வரும் பிற்காலச் சொற்களும் வடசொற்களும் இதில் பயின்று வந்துள்ளன. இவைகள் எல்லாம், இந் நூல் சங்க காலத்திற்குப் பிற்பட்டு, தேவாரம், சிந்தாமணி முதலிய இடைக் கால நூல்களின் காலத்தை ஒட்டித் தோன்றியதே என்பதைப் புலப்படுத்துவனவாம்.

இந் நூலைக் குறித்துப் பாடப்பெற்ற 'முனிந்தார் முனிவு ஒழிய' என்னும் சிறப்புப் பாயிரச் செய்யுளை நூல் இறுதியில் காணலாம். இப்பாடல் அகப்பொருளை வெறுத்த சிலர் விரும்பி ஏற்றுக் கற்றுப் புலமை எய்தும் வண்ணம் ஆசிரியர் இந் நூலை ஆக்கினுர் என்பதைத் தெரிவிக்கிறது. பிற்காலத்து எழுந்த அகப்பொருள் நூல்களுள் இது சிறப்பு வாய்ந்தது. சங்க நூல்களில் விரிவாகச் சிறப்பித்துப் பாடப் பெறுகின்ற அகப்பொருள் நிகழ்ச்சிகளை எல்லாம், சுருக்கமாய் எளிய வெண்பாக்களில் இந் நூல் அமைத்துள்ளது. ஐந்திணை இயற்கைக் காட்சிகளை எடுத்துக் கூறுவதில் இவ் ஆசிரியர் வல்லவர். அக் காலப் பழக்கவழக்கங்கள் சிலவும் இந் நூலால் தெரிய வருகின்றன.

இளம்பூரணர், நச்சினுர்க்கினியர், முதலியோர் தம் உரையுள் இந் நூற் பாடல்களை மிகுதியாக மேற்கோள் காட்டியுள்ளனர். இந் நூலின் 127-ஆம் பாடல் வரையே பழைய உரை உள்ளது. அதற்கு மேலுள்ள பகுதிக்கு உரை கிடைக்கவில்லை. உரையுள்ள பகுதி வரையில் எல்லாப் பாடல்களுக்கும் பழைய துறைக் குறிப்புக்களும் காணப்படுகின்றன.

# திணைமாலை நூற்றைம்பது

(கணிமேதாவியார்)

## 1. குறிஞ்சி

தலைமகளும் தோழியும் ஒருங்கு இருந்தவழிச் சென்று, தலைமகன் தோழியை மதியுடம்படுத்தது

நறை படர் சாந்தம் அற எறிந்து, நாளால்
உறை எதிர்ந்து வித்திய ஊழ் ஏனல்,—பிறை எதிர்ந்த
தாமரைபோல் வாள் முகத்துத் தாழ்குழலீர்!—காணீரோ,
ஏ மரை போந்தன ஈண்டு? 1

தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது

சுள்ளி, சுனை நீலம், சோபாலிகை, செயலை,
அள்ளி அளகத்தின்மேல் ஆய்ந்து, தெள்ளி,
இதனால் கடி ஒடுங்கா ஈர்ங் கடா யானை
உதனால் கடிந்தான் உளன். 2

பகற்குறிக்கண் வந்த தலைமகனைக் கண்டு, தோழி செறிப்பு அறிவுறீஇயது

சாந்தம் எறிந்து உழுத சாரல், சிறு தினை,
சாந்தம் எறிந்த இதண் மிசை, சாந்தம்
கமழக் கிளி கடியும் கார் மயில் அன்னாள்
இமிழ, கிளி எழா, ஆர்த்து. 3

தலைமகள் இற்செறிந்த காலத்து, புனத்தின்கண் வந்த தலைமகன் தலைமகளைக் காணாது ஆற்றாது பெயர்கின்றான் சொல்லியது

கோடாப் புகழ் மாறன் கூடல் அனையாளை
ஆடா அடகினும் காணேன்; போர் வாடாக்
கருங் கொல் வேல் மன்னர் கலம் புக்க கொல்லோ,
மருங்குல் கொம்பு அன்னாள் மயிர்? 4

தலைமகன் சிறைப்புறத்தானாக, தலைமகட்குச் சொல்லுவாளாய், தோழி செறிப்பு அறிவுறீஇயது

வினை விளையச் செல்வம் விளைவதுபோல் நீடாப்
பனை விளைவு நாம் எண்ண, பாத்தித் தினை விளைய,—
மை ஆர் தடங் கண் மயில் அன்னாய்!—தீத் தீண்டு
கையார் பிரிவித்தல் காண்! 5

இரவுக்குறி வேண்டிய தலைமகற்குத் தோழி மறுத்துச் சொல்லியது

மால் நீலம் மாண்ட துகில் உமிழ்வது ஒத்து, அருவி
மால் நீல மால் வரை நாட! கேள்: மா நீலம்
காயும் வேற் கண்ணுள், கனை இருளில் நீ வர,
ஆயுமோ? மன்ற, நீ ஆய்! 6

கறி வளர் பூஞ் சாரல், கைந்நாகம் பார்த்து,
நெறி வளர் நீள் வேங்கை கொட்டும்,—முறி வளர்
நல் மலை நாட!—இர வரின், வாழாளால்,
நல் மலை நாடன் மகள். 7

பின்னிலை முனியாது நின்ற தலைமகன் தோழியை மதி உடம்படுத்தது

அவட்குஆயின், ஐவனம் காவல் அமைந்தது;
இவட்குஆயின், செந் தினை கார் ஏனல்; இவட்குஆயின்,
எண் உளவால், ஐந்து; இரண்டு ஈத்தான்கொல்? என் ஆம்கொல்?
கண் உளவால், காமன் கணை! 8

பாங்கற்குத் தலைமகன் தலைமகளைக் கண்ட வகை கூறி, தன்
ஆற்றாமை மிகுதி சொல்லியது

வஞ்சமே என்னும் வகைத்தால்; ஓர் மா வினாய்,
தஞ்சம் தமியனாய்ச் சென்றேன்; என் நெஞ்சை
நலம் கொண்டு ஆர் பூங் குழலாள், நன்று ஆயத்து, அன்று, என்
வலம் கொண்டாள், கொண்டாள் இடம். 9

தோழி நெறி விலக்கியது

கரு விரல், செம் முக, வெண் பல், சூல், மந்தி
பரு விரலால் பைஞ் சுனை நீர் தூஉய், பெரு வரைமேல்
தேன் தேவர்க்கு ஒக்கும் மலை நாட! வாரலோ,
வான் தேவர் கொட்கும் வழி! 10

கரவு இல் வள மலைக் கல் அருவி நாட!
உர வில் வலியாய், ஒரு நீ, இரவின்,
வழிகள்தாம் சால வர அரிய; வாரல்,
இழி கடா யானை, எதிர்! 11

வெறி விலக்கி, தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது

வேலனர் போக; மறி வ்டுக்க; வேரியும்
பாலனர்க்கு ஈக;—பழியிலாள் பாலால்
கடும் புனலின் நீந்தி, கரை வைத்தாற்கு அல்லால்,
நெடும் பணைபோல் தோள் நேராள், நின்று. 12

நெறியினது அருமை கூறி, தோழி இரவுக்குறி மறுத்தது

ஒரு வரைபோல் எங்கும் பல வரையும் சூழ்ந்த
அரு வரை உள்ளதாம் சீறூர்; வரு வரையுள்
ஐ வாய நாகம்; புறம் எல்லாம், ஆயுங்கால்,
கை வாய நாகம் சேர் காடு. 13

செவிலிக்குத் தோழி அறத்தொடு நின்றது

வருக்கை வள மலையுள், மாதரும் யானும்,
இருக்கை இதண் மேலேம் ஆக, பருக் கைக்
கடாஅம் மால் யானை கடிந்தானை அல்லால்,
தொடாஅவால், என் தோழி தோள். 14

தலைமகன் சான்றோரை வரைவு வேண்டி விடுத்த இடத்து, தலைமகள் தந்தைக்கும் தமையன்மார்க்கும் நற்றாய் அறத்தொடு நின்றது

வாடாத சான்றோர் வரவு எதிர்கொண்டிராய்க்
கோடாது நீர் கொடுப்பின் அல்லது, கோடா
எழிலும் முலையும் இரண்டிற்கும் முந்நீர்ப்
பொழிலும் விலை ஆமோ, போந்து? 15

தோழி சேட்படுத்த இடத்து, தலைமகன் தனது ஆற்றாமையால் சொல்லியது

'நாள் நாகம் நாறும் நனை குழலாள் நல்கி, தன்
பூண் ஆகம் நேர்வு அளவும் போகாது, பூண் ஆகம்'
என்றேன்; இரண்டாவது உண்டோ? மடல் மாமேல்,
நின்றேன், மறுகிடையே நேர்ந்து. 16

'நின்னால் சொல்லப்பட்டவளை அறியேனாலோ' என்ற தோழிக்குத் தலைமகன் அறிய உரைத்தது

அறிகு அவளை; ஐய இடை, மடவாய்! ஆய,
சிறிது அவள் செல்லாள், இறும் என்று அஞ்சிச் சிறிது, அவள்
நல்கும்வாய் காணுது, நைந்து உருகி, என் நெஞ்சம்
ஒல்கும்வாய் ஒல்கல் உறும். 17

பகற்குறிக்கண், தலைமகன் சிறைப்புறத்தானாக, தோழி
செறிப்பு அறிவுறீஇ வரைவு கடாயது

என் ஆம் கொல்?—ஈடு இல் இள வேங்கை நாள் உரைப்ப,
பொன் ஆம், போர் வேலவர்தாம் புரிந்தது; என்னே!
மருவி ஆம், மாலை மலை நாடன் கேண்மை;
இருவியாம், ஏனல் இனி. 18

பின்னின்ற தலைமகன் தோழி குறை மறாமல் தனது ஆற்றாமை மிகுதி சொல்லியது

பால் ஒத்த வெள் அருவி பாய்ந்து ஆடி, பல் பூப் பெய்-
தாலொத்த ஐவனம் காப்பாள் கண் வேல் ஒத்து, என்
நெஞ்சம் வாய்ப் புக்கு ஒழிவு காண்பானே, காண் கொடா?
அம் சாயற்கே நோவல் யான். 19

கையுறை மறை

நாள் வேங்கை பொன் விளையும் நல் மலை நல் நாட!
கோள் வேங்கைபோல்கொடியார் என் ஐயன்மார்; கோள் வேங்கை
அன்னையால் நீயும்; அருந் தழை யாம் ஏலாமைக்கு
என்னையோ? நாளை எளிது. 20

ஆற்றாய தலைமகனைத் தோழி ஏன்றுகொண்டு கையுறை எதிர்ந்தது

'பொன் மெலியும் மேனியாள் பூஞ் சுணங்கு மென் முலைகள்
என் மெலிய வீங்கினவே, பாவம்!' என்று, என் மெலிவிற்கு?
அண் கண்ணி வாடாமை, யான், 'நல்ல' என்றால், தான்
உண்கண்ணி வாடாள் உடன்று. 21

பகற்குறிக்கண் தலைமகள் குறிப்பு இன்றிச் சார்லொத தலைமகன்
தனது ஆற்றாமை சொல்லியது

கொல் யானை வெண் மருப்பும், கொல் வல் புலி அதளும்,
நல் யானை நின் ஐயர் கூட்டுண்டு செல்வார்தாம்
ஓர் அம்பினான் எய்து போக்குவர்; யான் போகாமல்,
ஈர் அம்பினால் எய்தாய், இன்று. 22

'நின்னால் குறிக்கப்பட்டானை யான் அறியேன்' என்ற தோழிக்குத்
தலைமகன் கூறியது; பாங்கற்குக் கூறியதூஉம் ஆம்

பெரு மலை தாம் நாடி, தேன் துய்த்து, பேணாது
அரு மலை மாய்க்குமவர் தங்கை திரு முலைக்கு
நாண் அழிந்து, நல்ல நலன் அழிந்து, நைந்து உருகி,
ஏண் அழிதற்கு யாம் ஏயினம். 23

தோழி குறை மறுமல் தலைமகன் தனது ஆற்றாமை மிகுதி சொல்லியது

நறுந் தண் தகரம், வகுளம், இவற்றை
வெறும் புதல்போல் வேண்டாது, வேண்டி, எறிந்து உழுது,
செந் தினை வித்துவார் தங்கை பிறர் நோய்க்கு
நொந்து இனைய வல்லளோ? நோக்கு! 24

தோழி தலைமகனை நெறி விலக்கி, வரைவு கடாயது

கொல் இயல் வேழம், குயவரி கோட் பிழைத்து,
நல் இயல் தம் இனம் நாடுவபோல், நல் இயல்
நா்ம வேற் கண்ணுள் நடுநடுப்ப வாரலோ,
ஏம வேல் ஏந்தி, இரா! 25

கருங் கால் இள வேங்கை கான்ற பூக் கல்மேல்
இருங் கால் வய வேங்கை ஏய்க்கும் மருங்கால்
மழை வளரும் சாரல் இர வரின், வாழாள்,
இழை வளரும் சாயல் இனி. 26

தோழி படைத்து மொழி கிளவியான் வரைவு கடாயது

பனி வரை நீள் வேங்கைப் பய மலை நல் நாட!
'இனி வரையாய்' என்று எண்ணிச் சொல்வேன்; முனி வரையுள்
நின்றான் வலியாக நீ வர, யாய் கண்டாள்;
ஒன்றாள், காப்பு ஈயும், உடன்று. 27

தலைமகன் சொன்ன குறிவழியே சென்று, தலைமகளைக் கண்டு, பாங்கன் சொல்லியது

மேகம் தோய் சாந்தம், விசை, திமிசு, காழ் அகில்,
நாகம் தோய் நாகம், என இவற்றைப் போக
எறிந்து, உழுவார் தங்கை இருந் தடங் கண் கண்டும்,
மறிந்து உழல்வானோ, இம் மலை? 28

பகற்குறிக்கண் இடம் காட்டியது

பலா எழுந்தபால் வருக்கைப் பாத்தி அதன் நேர்
நிலா எழுந்த வார் மணல் நீடி, சுலா எழுந்து,
கான் யாறு கால் சித்த காந்தள் அம் பூந் தண் பொதும்பர்-
தான் நாறத் தாழ்ந்த இடம். 29

பாங்கற்குத் தலைமகன் கூறியது

திங்களுள் வில் எழுதி, தேராது, வேல் விலக்கி,
தங்கள் உளாள் என்னும் தாழ்வினால், இங்கண்,
புனம் காக்க வைத்தார்போல் பூங்குழலைப் போந்து, என்
மனம் காக்க வைத்தார், மருண்டு. 30

தோழி தலைமகளை மெலிதாகச் சொல்லி, குறை நயப்பக் கூறியது

தன் குறை இது என்னான், தழை கொணரும் தண் சிலம்பன்
நின் குறை என்னும் நினைப்பினனாய், பொன் குறையும்
நாள் வேங்கை நீழலுள் நண்ணான்; எவன்கொலோ,
கோள் வேங்கை அன்னான் குறிப்பு? 31

## 2. நெய்தல்

பாங்கற்குச் சொல்லியது

பானல்அம் தண் கழிப் பாடு அறிந்து, தன்னைமார்
நூல் நல நுண் வலையால் நொண்டு எடுத்த கானல்
படு புலால் காப்பாள் படை நெடுங் கண் நோக்கம்
கடிபு ஒல்லா; என்னையே காப்பு. 32

பெருங் கடல் வெண் சங்கு காரணமா, பேணாது
இருங் கடல் மூழ்குவார் தங்கை, இருங் கடலுள்
முத்து அன்ன, வெண் முறுவல் கண்டு உருகி, நைவார்க்கே
ஒத்தனம், யாமே உளம். 33

புணர்ந்து நீங்கும் தலைமகனைக் கண்ணுற்று நின்ற தோழி வரைவு கடாயது

தாமரைதான் முகமா, தண் அடை ஈர் மா நீலம்
காமர் கண் ஆக, கழி துயிற்றும் காமரு சீர்த்
தண் பரப்ப! பாய் இருள் நீ வரின், தாழ் கோதையாள்
கண் பரப்ப, காண், நீர் கசிந்து. 34

'இரவும் பகலும் வாரல்' என்று தலைமகனைத் தோழி வரைவு கடாயது

புலால் அகற்றும் பூம் புன்னைப் பொங்கு நீர்ச் சேர்ப்ப!
நிலா அகற்றும் வெண் மணல் தண் கானல், சுலா அகற்றி,
கங்குல் நீ வாரல்; பகல் வரின், மாக் கவ்வை ஆம்,
மங்குல் நீர் வெண் திரையின்மாட்டு. 35

தோழி வரைவு கடாயது

'முருகு வாய் முள் தாழை நீள் முகை பார்ப்பு' என்றே
குருகு வாய்ப் பெய்து, இரை கொள்ளாது, உருகி மிக
இன்னு வெயில் சிறகால் மறைக்கும் சேர்ப்ப! நீ
மன்னு வரவு மற! 36

ஓத நீர் வேலி உரை கடியாப் பாக்கத்தார்,
காதல், நீர் வாராமை கண் நோக்கி, ஓத நீர்
அன்று அறியும்; ஆதலால், வாராது, அலர் ஒழிய,
மன்று அறியக் கொள்ளீர், வரைந்து. 37

காமம் மிக்க கழிபடர் கிளவி

மாக் கடல் சேர் வெண் மணல் தண் கானல் பாய் திரை சேர்
மாக் கடல் சேர் தண் பரப்பன் மார்பு அணங்கா மாக் கடலே!
என் போலத் துஞ்சாய்; இது செய்தார் யார்—உரையாய்!—
என் போலும் துன்பம் நினக்கு? 38

நொதுமலர் வரைந்து புகுந்த பருவத்து, தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது

தந்தார்க்கே ஆமால், தட மென் தோள்—இன்ன நாள்
வந்தார்க்கே ஆம் என்பார் வாய் காண்பாம்;—வந்தார்க்கே
காவா இள மணல் தண் கழிக் கானல்வாய்ப்
பூவா இள ஞாழல் போது. 39

வலிதாகச் சொல்லிக் குறை நயப்பித்தது

தன் துணையோடு ஆடும் அலவனையும் தான் நோக்கா,
'இன் துணையோடு ஆட இயையுமோ? இன் துணையோடு
ஆடினுய் நீ ஆயின், அந் நோய்க்கு என் நொந்து?' என்று
போயினுன் சென்முன், புரிந்து. 40

தலைமகன் சிறைப்புறத்தானுகத் தோழியால் சொல் எடுக்கப்பட்டு,
தலைமகள் தனது ஆற்றுமையால் சொல்லியது

உருகுமால் உள்ளம், ஒரு நாளும் அன்றுல்;
பெருகுமால், நம் அலர் பேண,—பெருகா
ஒருங்கு வால் மின்னேடு, உரும் உடைத்தாய், பெய்வான்,
நெருங்கு வான் போல, நெகிழ்ந்து. 41

நயப்பு; கையுறையும் ஆம்

கவளக் களிப்பு இயல் மால் யானை, சிற்றாளி
தவழ, தான் நில்லாததுபோல், பவளக்
கடிகையிடை முத்தம் காண்தொறும், நில்லா—
தொடி கையிடை முத்தம் தொக்கு. 42

தலைமகனைத் தோழி வரைவு கடாயது

கடற் கோடு இரு மருப்பு, கால் பாகன் ஆக,
அடற் கோட்டு யானை திரையா, உடற்றி,
கரை பாய் நீள் சேர்ப்ப! கனை இருள் வாரல்!
வரைவாய், நீ, ஆகவே வா!! 43

பகற்குறியிடம் காட்டியது

கடும் புலால் புன்னை கடியும் துறைவ!
படும் புலால் புள் கடிவான் புக்க, தடம் புல் ஆம்
தாழை, மா ஞாழல், ததைந்து உயர்ந்த தாழ் பொழில்,
ஏழை மான் நோக்கி இடம். 44

தலைமகன் சொல்லிய குறி வழி அறிந்து, தலைமகளைக் கண்ட பாங்கன் தலைமகனை வியந்து சொல்லியது

தாழை தவழ்ந்து உலாம் வெண் மணல் தண் கானல்,
மாழை நுளையர் மட மகள், ஏழை,
இணை நாடில் இல்லா, இருந் தடங் கண் கண்டும்,
துணை நாடினன்; தோம் இலன்! 45

தோழி நெறி விலக்கி, வரைவு கடாயது

தந்து, ஆயல் வேண்டா; ஓர் நாள் கேட்டு, தாழாது
வந்தால், நீ எய்துதல் வாயால் மற்று; எந்தாய்!
மறி மகர வார் குழையாள் வாழாள்; நீ வாரல்,
எறி மகரம் கொட்கும் இரா. 46

பாங்கன் தலைமகளைக் கண்டு, தலைமகனை வியந்து சொல்லியது

பண்ணாது, பண்மேல் தேன் பாடும் கழிக் கானல்,
எண்ணாது கண்டார்க்கே ஏர் அணங்கால்; எண்ணாது
சாவார் சான்றாண்மை சலித்திலா மற்று இவளைக்
காவார், கயிறுரீஇவிட்டார். 47

தலைமகற்கு இரவுக்குறி மறுத்தது

திரை மேல் போந்து எஞ்சிய தெண் கழிக் கானல்
விரை மேவும் பாக்கம் விளக்கா, கரைமேல்,
விடுவாய்ப் பசும் புற இப்பி கால் முத்தம்
படு வாய் இருள் அகற்றும், பாத்து. 48

எங்கு வருதி, இருங் கழித் தண் சேர்ப்ப!—
பொங்கு திரை உதைப்பப் போந்து ஒழிந்த சங்கு
நரன்று உயிர்த்த நித்திலம் நள் இருள் கால் சிக்கும்;
வரன்று உயிர்த்த பாக்கத்து வந்து? 49

தோழி வரைவு கடாயது

திமில் களிறு ஆக, திரை பறையா, பல் புள்
துயில் கெடத் தோன்றும் படையா, துயில்போல்
குறியா வரவு ஒழிந்து, கோல நீர்ச் சேர்ப்ப!
நெறியால் நீ கொள்வது நேர். 50

தலைமகற்குத் தோழி குறை நேர்ந்து, பகற்குறியிடம் அறியச் சொல்லியது

கடும் புலால் வெண் மணல் கானல் உறு மீன்கண்
படும் புலால் பார்த்தும்; பகர்தும்; அடும்பு எலாம்—
சாலிகைபோல் வலை சாலப் பல உணங்கும்;—
பாலிகை பூக்கும் பயின்று. 51

தலைமகனைத் தோழி வரைவு கடாயது

திரை பாகன் ஆக, திமில் களிறு ஆக,
கரை சேர்ந்த கானல் படையா, விரையாது—
வேந்து கிளர்ந்தன்ன வேலை நீர்ச் சேர்ப்ப!—நாள்
ஆய்ந்து, வரைதல் அறம். 52

பாறு புரவியா, பல் களிறு நீள் திமிலா,
தேறு திரை பறையா, புள் படையா, தேருத
மன் கிளர்ந்த போலும் கடல் சேர்ப்ப! மற்று எமர்-
முன் கிளர்ந்து எய்தல் முடி! 53

வாராய்; வரின், நீர்க் கழிக் கானல் நுண் மணல்மேல்
தேரின் மா கால் ஆழும் தீமைத்தே; ஓர் இலோர்.
கோள் நாடல் வேண்டா; குறி அறிவார்க் கூஉய்க் கொண்டு, ஓர்
நாள் நாடி, நல்குதல் நன்று. 54

கண் பரப்ப காணாய், கடும் பனி; கால் வல் தேர்
மண் பரக்கும் மா இருள் மேற்கொண்டு, மண் பரக்கு-
மாறு, நீர் வேலே! நீ வாரல்! வரின், ஆற்றாள்,
ஏறு நீர் வேலே எதிர். 55

தலைமகற்கு இரவுக்குறி நேர்ந்த தோழி, இடம் காட்டியது

கடற் கானல் சேர்ப்ப! கழி உலாஅய் நீண்ட
அடல் கானல் புன்னை, தாழ்ந்து, ஆற்ற, மடற் கானல்,
அன்றில் அகவும் அணி நெடும் பெண்ணைத்து—எம்
முன்றில் இள மணல்மேல் மொய்த்து. 56

தோழி வரைவு கடாயது

வரு திரை தான் உலாம் வார் மணல் கானல்,
ஒரு திரை ஓடா அளவை, இரு திரை
முன் வீழும் கானல், முழங்கு கடல் சேர்ப்ப!
என் வீழல் வேண்டா, இனி. 57

தலைமகற்குத் தோழி பகற்குறி நேர்ந்து, இடம் காட்டியது

மாயவனும் தம்முனும் போலே, மறி கடலும்
கானலும் சேர் வெண் மணலும் காணாயோ—கானல்
இடை எலாம், ஞாழலும் தாழையும்; ஆர்ந்த
புடை எலாம், புன்னை;—புகன்று? 58

'இப்பொழுது வாரல்!' என்று, வரைவு கடாயது

பகல் வரின், கவ்வை பல ஆம்; பரியாது,
இர வரின், ஏதமும் அன்ன; புக அரிய
தாழை துவளும் தரங்க நீர்ச் சேர்ப்பிற்றே,
ஏழை நுளையர் இடம். 59

பாங்கற்குத் தலைமகன் கூறியது

திரை அலறிப் பேரத் தெழியாத் திரியா,
கரை அலவன் காலினால் காணா, கரை அருகே
நெய்தல் மலர் கொய்யும் நீள் நெடுங் கண்ணினாள்,
மையல், நுளையர் மகள். 60

தலைமகற்குத் தோழி இரவுக்குறி மறுத்தது

அறிகு அரிது, யார்க்கும்—அரவ நீர்ச் சேர்ப்ப!
நெறி, திரிவார் இன்மையால், இல்லை—முறி திரிந்த
கண்டல், அம் தண் தில்லை கலந்து, கழி சூழ்ந்த
மிண்டல், அம் தண் தாழை, இணைந்து. 61

தலைமகளை ஒருநாள் கோலம் செய்து, அடியிற் கொண்டு முடிகாறும் நோக்கி, 'இவட்குத் தக்கான் யாவனாவன் கொல்லோ?' என்று ஆராய்ந்த செவிலிக்குத் தோழி அறத்தொடு நின்றது

வில்லார் விழவினும், வேல் ஆழி சூழ் உலகில்
நல்லார் விழவகத்தும், நாம் காணேம்;—நல்லாய்!—
உவர்க்கத்து ஒரோ உதவிச் சேர்ப்பன் ஒப்பாரைச்
சுவர்க்கத்து உளராயின், சூழ். 62

## 3. பாலை

தலைமகளைத் தோழி பருவம் காட்டி, வற்புறீஇயது

எரி நிற நீள் பிண்டி இணர்இனம் எல்லாம்
வரி நிற நீள் வண்டர் பாட, புரி நிற நீள்
பொன் அணிந்த, கோங்கம்;—புணர் முலையாய்!—பூந்தொடித் தோள்
என் அணிந்த, ஈடு இல் பசப்பு? 63

'பேணாய், இதன் திறத்து!' என்றாலும், பேணாதே
நாண் ஆய நல் வளையாய்! நாண் இன்மை காணாய்;
எரி சிதறி விட்டன்ன, ஈர் முருக்கு; ஈடு இல்
பொரி சிதறி விட்டன்ன, புன்கு. 64

சுரத்திடைச் சென்ற செவிலித்தாய் குரவொடு புலம்பியது

தான் தாயாக் கோங்கம் தளர்ந்து முலை கொடுப்ப,
ஈன்றாய் நீ பாவை, இருங் குரவே! ஈன்றாள்
மொழி காட்டாய்ஆயினும், முள் எயிற்றாள் சென்ற
வழி காட்டாய், 'ஈது' என்று, வந்து. 65

தோழி பருவம் காட்டி வற்புறுத்தியது

வல் வரும்; காணாய்—வயங்கி, முருக்கு எல்லாம்,
செல்வர் சிறார்க்குப் பொற்கொல்லர்போல், நல்ல
பவளக் கொழுந்தின்மேல் பொன்-தாலி பாஅய்த்
திகழக் கான்றிட்டன, தேர்ந்து! 66

பருவம் கண்டு ஆற்றாளாகிய தலைமகள் தோழிக்குச் சொல்லியது

வெறுக்கைக்குச் சென்றார், விளங்கிழாய்! தோன்றார்;
'பொறுக்க!' என்றால், பொறுக்கலாமோ?—ஒறுப்பபோல்
பொன்னுள் உறு பவளம் போன்ற, புணர் முருக்கம்;
என் உள் உறு நோய் பெரிது! 67

பொருள் வலித்த நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லிச் செலவு அழுங்கியது

சென்றக்கால், செல்லும் வாய் என்னோ?—இருஞ் சுரத்து
நின்றக்கால், நீடி ஒளி விடா,—நின்ற
இழைக்கு அமர்ந்த ஏய் ஏர் இளமுலையாள் ஈடு இல்
குழைக்கு அமர்ந்த நோக்கின் குறிப்பு! 68

இடைச் சுரத்துக் கண்டார் செலவு விலக்கியது

அத்தம் நெடிய; அழற் கதிரோன் செம்பாகம்
அத்தம் மறைந்தான்; இவ் அணியிழையோடு, ஒத்த
தகையினால், எம் சீறூர்த் தங்கினிராய், நாளை
வகையினிராய்ச் சேறல் வனப்பு. 69

புணர்ந்து உடன் போய தலைமகன், தலைமகளை ஆற்றுவித்துக்
கொண்டு போவான், சொல்லியது

நின் நோக்கம் கொண்ட மான், தண் குரவ நீழல், காண்;
பொன் நோக்கம் கொண்ட பூங் கோங்கம் காண்:—பொன் நோக்கம்
கொண்ட சுணங்கு அணி மென் முலைக் கொம்பு அன்னாய்!—
வண்டல் அயர், மணல்மேல் வந்து! 70

சுரத்திடைச் சென்ற செவிலிக்குத் தலைமகனையும் தலைமகளையும் கண்டார்
சொல்லிய வார்த்தையைத் தாங்கள் கேட்டார்க்குச் சொல்லி ஆற்றுவித்தது

அம் சுடர் நீள் வாள் முகத்து ஆயிழையும், மாறு இலா
வெஞ் சுடர் நீள் வேலானும், போதரக் கண்டு, அஞ்சி,
'ஒரு சுடரும் இன்றி உலகு பாழாக,
இரு சுடரும் போந்தன!' என்றார். 71

சுரத்திடைச் சென்ற செவிலியைத் தலைமகளைக் கண்டார் சொல்லி ஆற்றுவித்தது

' ''முகம் தாமரை; முறுவல் ஆம்பல்; கண் நீலம்;
இகந்து ஆர் விரல் காந்தள்'' என்று என்று, உகந்து இயைந்த
மாழை மா வண்டிற்கு ஆம் நீழல், வருந்தாதே,
ஏழைதான் செல்லும், இனிது.' 72

முன்னை ஞான்று, உடன்போக்கு வலித்து, தலைமகனையும் தலைமகளையும்
உடன்படுவித்து, பின்னை அறத்தொடு நிலை மாட்சிமைப்பட்டமையால்
தலைமகளைக் கண்டு, தோழி உடன்போக்கு அழுங்குவித்தது

செவ் வாய், கரிய கண், சீறினல் கேளாதும்,
கவ்வையால் காணுதும், ஆற்றுதும், அவ் ஆயம்,
தார்த் தத்தை வாய் மொழியும், தண் கயத்து நீலமும்,
ஓர்த்து ஒழிந்தாள்—என் பேதை ஊர்ந்து. 73

காமம் மிக்க கழிபடர் கிளவி; நிலத்தான் பாலை; ஒழுக்கத்தான் நெய்தல்

புன் புறவே! சேவலோடு ஊடல் பொருள் அன்றால்;
அன்பு உறவே உடையார்ஆயினும், வன்புற்-
றது காண்! அகன்ற வழி நோக்கி, பொன் போர்த்து,
இது காண், என் வண்ணம், இனி! 74

மகட் போக்கிய தாய் சொல்லியது

எரிந்து சுடும் இரவி ஈடு இல் கதிரான்,
விரிந்து விடு கூந்தல் வெஃகா, புரிந்து
விடு கயிற்றின் மாசுணம் வீயும் நீள் அத்தம்,
அடு திறலான் பின் சென்ற ஆறு. 75

பொருள் வலித்த நெஞ்சிற்குச் சொல்லித் தலைமகன் செலவு அழுங்கியது

நெஞ்சம்! நினைப்பினும், நெல் பொரியும் நீள் அத்தம்,
'அஞ்சல்!' என ஆற்றின், அஞ்சிற்றால்; அஞ்சி,
புடை நெடுங் காது உறப் போழ்ந்து அகன்று நீண்ட
படை நெடுங் கண் கொண்ட, பனி. 76

வினை முற்றிய தலைமகன் தலைமகளை நினைந்த இடத்து, தலைமகள் வடிவு தன் முன்
நின்றாற் போல வந்து தோன்ற, அவ் வடிவை நோக்கிச் சொல்லி, ஆற்றுவிக்கின்றது

வந்தால்தான், செல்லாமோ—ஆர் இடையாய்!—வார் கதிரால்,
வெந்தால்போல் தோன்றும் நீள் வேய் அத்தம், தந்து ஆர்
தகரக் குழல் புரள, தாழ் துகில் கை ஏந்தி,
மகரக் குழை மறித்த நோக்கு? 77

'ஆற்றாள்!' எனக் கவன்ற தோழிக்கு, 'ஆற்றுவல்' என்பதுபடச் சொல்லியது

ஒரு கை, இரு மருப்பின், மும் மத, மால், யானை
பருகு நீர் பைஞ் சுனையில் காணாது, அருகல்,
வழி விலங்கி வீழும் வரை அத்தம் சென்றார்,
அழிவிலர் ஆக, அவர்! 78

பருவம் காட்டி, தலைமகளைத் தோழி வற்புறுத்தியது

சென்றார் வருதல், செறிதொடி! சேய்த்துஅன்றால்;
நின்றார் சொல் தேறாதாய், நீடு இன்றி, வென்றார்
எடுத்த கொடியின் இலங்கு அருவி தோன்றும்
கடுத்த மலை நாடு காண்! 79

உருவ வேல் கண்ணாய்! ஒரு கால் தேர்ச் செல்வன்
வெருவ, வீந்து உக்க நீள் அத்தம், வருவர்,
சிறந்து பொருள் தருவான் சேட் சென்றார் இன்றே;
இறந்து கண், ஆடும், இடம். 80

தலைமகள் இற்செறிப்புக் கண்ட பின்னை, அவள் நீங்கிய புனம் கண்டு,
ஆற்றானாய் மீள்கின்ற தலைமகன் சொல்லியது; சுரத்திடைச் சென்ற
செவிலித்தாய் சொல்லியதூஉம் ஆம்

கொன்றாய்! குருந்தே! கொடி முல்லாய்! வாடினீர்;
நின்றேன் அறிந்தேன்; நெடுங்கண்ணாள் சென்றாளுக்கு
என் உரைத்தீர்க்கு, என் உரைத்தாட்கு, என் உரைத்தீர்க்கு, என் உரைத்தாள்—
மின் நிரைத்த பூண் மிளிர விட்டு? 81

தலைமகனது செலவுக் குறிப்பு அறிந்து ஆற்றாளாய தலைமகளைத் தோழி
உலகினது இயற்கை கூறி, ஆற்றாது உடன்படுத்துவித்தது

ஆண் கடன் ஆம் ஆற்றை ஆயுங்கால், ஆடவர்க்குப்
பூண் கடனாப் போற்றிப் புரிந்தமையால், பூண் கடனாச்
செய் பொருட்குச் செல்வரால்;—சின்மொழி!—நீ சிறிது
நை பொருட்கண் செல்லாமை நன்று. 82

தலைமகன் செலவு உணர்த்திய தோழிக்குத் தலைமகள் உடன்படாது சொல்லியது

செல்பவோ? சிந்தனையும் ஆகாதால்; நெஞ்சு எரியும்;
வெல்பவோ, சென்றார் வினை முடிய?—நல்லாய்!
இதடி கரையும்; கல் மா போலத் தோன்றும்;
சிதடி கரையும், திரிந்து. 83

கள்ளிஅம் காட்ட கடமா இரிந்து ஓட,
தள்ளியும் செல்பவோ, தம்முடையார்—கொள்ளும்
பொருள் இலர்ஆயினும், பொங்கெனப் போந்து எய்யும்
அருள் இல் மறவர் அதர்? 84

தலைமகனைத் தோழி செலவு அழுங்குவித்தது

'பொருள் பொருள்' என்றார் சொல் பொன் போலப் போற்றி,
அருள் பொருள் ஆகாமை ஆக; அருளான்,
வளமை கொணரும் வகையினான், மற்று ஓர்
இளமை கொணர இசை! 85

தலைமகள் தோழிக்குச் செலவு உடன்படாது சொல்லியது

ஒல்வார் உளரேல், உரையாய்!—'ஒழியாது,
செல்வார்' என்றாய்; நீ சிறந்தாயே!—செல்லாது
அசைந்து ஒழிந்த யானை, பசியால், ஆள் பார்த்து,
மிசைந்து ஒழியும் அத்தம், விரைந்து. 86

புணர்ந்து உடன்போக்கு நயப்பித்த தோழிக்குத் தலைமகள் உடன்பட்டுச் சொல்லியது

ஒன்றானும் நாம் மொழியலாமோ—செலவு தான்
பின்றாது, பேணும் புகழான் பின்;—பின்றா
வெலற்கு அரிதாம் வில் வலான், வேல் விடலை, பாங்காச்
செலற்கு அரிதாச் சேய சுரம்? 87

புணர்ந்து உடன் போவான் ஒருப்பட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது

அல்லாத என்னையும் தீர, மற்று ஐயன்மார்
பொல்லாதது என்பது நீ பொருந்தாய், எல்லார்க்கும்,
வல்லி ஒழியின்,—வகைமை நீள் வாட் கண்ணாய்!—
புல்லி ஒழிவான், புலந்து. 88

சுரத்திடைச் சென்ற செவிலிக்குத் தலைமகனையும் தலைமகளையும் கண்டமை எதிர்ப்பட்டார் சொல்லி, ஆற்றுவித்தது

நண்ணி, நீர் சென்மின்; நமர் அவர் ஆபவேல்,
எண்ணிய எண்ணம் எளிதுஅரோ, எண்ணிய
வெஞ்சுடர் அன்னானை யான் கண்டேன்; கண்டாளாம்,
தண்சுடர் அன்னாளை, தான். 89

'தன்னும் அவனும்' என்பதனுள், 'நன்மை தீமை' என்பதனால்,
நற்றாய் படிமத்தாளை வினயது

வேறாக நின்னை வினவுவேன்; தெய்வத்தான்
கூறாயோ? கூறும் குணத்தினனாய், வேறாக—
என் மனைக்கு ஏறக் கொணருமோ?—எல்வளையைத்
தன் மனைக்கே உய்க்குமோ, தான்? 90

தலைமகன் செலவு உடன்படாத தலைமகள் தோழிக்குச் சொல்லியது

கள்ளி, சார், கார் ஓமை, நார் இல் பூ நீள் முருங்கை,
நள்ளிய வேய், வாழ்பவர் நண்ணுபவோ—புள்ளிப்
பருந்து கழுகொடு வம்பலர்ப் பார்த்து, ஆண்டு,
இருந்து உறங்கி, வீயும் இடம்? 91

செல்பவோ, தம் அடைந்தார் சீர் அழிய—சிள் துவன்றி,
கொல்பபோல் கூப்பிடும்; வெங் கதிரோன் மல்கி,
பொடி வெந்து, பொங்கி, மேல் வான் சுடும்; கீழால்
அடி வெந்து, கண் சுடும்;—ஆறு? 92

## 4. முல்லை

பருவம் கண்டு அழிந்த தலைமகள் தோழிக்கு உரைத்தது

கருங் கடல் மாந்திய வெண் தலைக் கொண்மூ
இருங் கடல் மா கொன்றான் வேல் மின்னி, பெருங் கடல்-
தன்போல் முழங்கி, தளவம் குருந்து அணைய,
என்கொல், யான் ஆற்றும் வகை? 93

பகல் பருகிப் பல் கதிர் ஞாயிறு கல் சேர,
இகல் கருதித் திங்கள் இருளை, பகல் வர
வெண் நிலாக் காலும் மருள் மாலை,—வேய்த்தோளாய்!—
உள் நிலாது, என் ஆவி ஊர்ந்து. 94

தோழி தலைமகளைப் பருவம் காட்டி வற்புறுத்தியது

மேல் நோக்கி வெங் கதிரோன் மாந்திய நீர் கீழ் நோக்கி,
கான் ஒக்கம் கொண்டு, அழகா—காண், மடவாய்! மான் நோக்கி!—
போது ஆரி வண்டு எலாம் நெட்டெழுத்தின்மேல் புரிய,
சாதாரி நின்று அறையும், சார்ந்து. 95

மாலைப் பொழுது கண்டு ஆற்றாளாய தலைமகள் தோழிக்குச் சொல்லியது

இருள் பரந்து ஆழியான்தன் நிறம்போல், தம்முன்
அருள் பரந்த ஆய் நிறம் போன்று, மருள் பரந்த
பால் போலும் வெண் நிலவும்,—பை அரவு அல்குலாய்!—
வேல் போலும், வீழ் துணை இலார்க்கு. 96

பாழிபோல் மாயவன் தன் பற்றார் களிற்று எறிந்த
ஆழிபோல் ஞாயிறு கல் சேர, தோழியோ!
மால் மாலை, தம்முன் நிறம்போல் மதி முளைப்ப,
யான், மாலை ஆற்றேன், இனைந்து. 97

'பருவம் அன்று' என்று வற்புறுத்திய தோழிக்குத் தலைமகள்
வன்புறை எதிர் அழிந்து சொல்லியது

வீயும்—வியன் புறவின் வீழ் துளியான், மாக் கடுக்கை;
நீயும் பிறரொடும் காண், நீடாதே;—ஆயும்
கழல் ஆகி, பொன் வட்டு ஆய், தார் ஆய், மடல் ஆய்,
குழல் ஆகி, கோல் சுரியாய், கூர்ந்து. 98

'பொன் வாளால் காடு இல் கரு வரை போர்த்தாலும்
என்? வாளா' என்றி;—இலங்கு எயிற்றாய்!—என் வாள்போல்
வாள் இழந்த, கண்; தோள் வனப்பு இழந்த; மெல் விரலும்,
நாள் இழந்த, எண் மிக்கு, நைந்து. 99

பருவம் கண்டு அழிந்த கிழத்தி தோழிக்குச் சொல்லியது

பண்டு இயையச் சொல்லிய சொல் பழுதால்; மாக் கடல்
கண்டு இயைய மாந்தி, கால்வீழ்த்து, இருண்டு, எண் திசையும்
கார் தோன்ற, காதலர் தேர் தோன்றாது; ஆகவே,
பீர் தோன்றி, நீர் தோன்றும், கண். 100

வண்டுஇனம் வௌவாத ஆம்பலும், வார் இதழான்
வண்டுஇனம் வாய் வீழா மாலையும், வண்டுஇனம்
ஆராத பூந் தார் அணி தேரான்தான் போத
வாராத நாளே, வரும். 101

மான் எங்கும் தம் பிணையோடு ஆட, மறி உகள,
வான் எங்கும் வாய்த்து வளம் கொடுப்ப, கான் எங்கும்
தேன் இறுத்த வண்டோடு, 'தீ, தா' என, தேராது,
யான் இறுத்தேன், ஆவி இதற்கு. 102

'பருவம் அன்று' என்று வற்புறுத்தின தோழிக்குத் தலைமகள், 'பருவமே' என்று அழிந்து சொல்லியது

ஒருவந்தம் அன்றால், உறை முதிரா நீரால்;
கருமம்தான் கண்டு அழிவுகொல்லோ?—'பருவம்தான்
பட்டின்றே' என்றி;—பணைத் தோளாய்!—கண்ணீரால்
அட்டினேன், ஆவி அதற்கு. 103

பருவம் கண்டு அழிந்த கிழத்தி கொன்றைக்குச் சொல்லுவாளாய்த் தோழி கேட்பச் சொல்லியது

ஐந்து உருவின் வில் எழுதி, நால் திசைக்கும், முந்நீரை,
இந்து உருவின், மாந்தி, இருங் கொண்மூ, முந்து உருவின்
ஒன்றாய், உரும் உடைத்தாய், பெய் வான்போல், 'பூக்கு' என்று,
கொன்றாய்! கொன்றாய், எற் குழைத்து. 104

பருவம் கண்டு அழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது

எல்லை தருவான் கதிர் பருகி ஈன்ற கார்,
கொல்லை தரு வான் கொடிகள் ஏறுவ காண்—முல்லை
பெருந் தண் தளவொடு தம் கேளிரைப்போல், காணாய்,
குருந்தம் கொடுங்கழுத்தம் கொண்டு. 105

வற்புறுத்தும் தோழிக்குத் தலைமகள் வன்புறை எதிர் அழிந்து சொல்லியது

என்னரே, ஏற்ற துணை பிரிந்தார்? 'ஆற்று' என்பார்
அன்னரே ஆவர், அவரவர்க்கு; முன்னரே
வந்து, ஆரம், தேம் கா வரு முல்லை, சேர் தீம் தேன்
கந்தாரம் பாடும், களித்து. 106

பருவம் கண்டு அழிந்த கிழத்திக்குத் தோழி சொல்லியது

கரு உற்ற காயாக் கண மயில் என்று அஞ்சி,
உரும் உற்ற பூங் கோடல் ஓடி, உரும் உற்ற
ஐந் தலை நாகம் புரையும் அணிக் கார் தான்
எம்தலையே வந்தது, இனி. 107

'பருவம் அன்று' என்று வற்புறுத்தும் தோழிக்குத் தலைமகள் ஆற்றாது சொல்லியது

கண் உளவாயின், முலை அல்லை, காணலாம்;
எண் உளவாயின், இறவாவால்; எண் உளவா,
அன்று ஒழிய, நோய் மொழிச் சார்வு ஆகாது;—உருமுடை வான்
ஒன்று ஒழிய, நோய் செய்தவாறு. 108

பருவம் கண்டு ஆற்றாளாய தலைமகள் தோழிக்குச் சொல்லியது

என்போல் இகுளை! இருங் கடல் மாந்திய கார்
பொன்போல் தார் கொன்றை புரிந்தன;—பொன்போல்
துணை பிரிந்து வாழ்கின்றார் தோன்றுவர்; தோன்றார்,
இணை பிரிந்து வாழ்வர், இனி. 109

பெரியார் பெருமை பெரிதே!—இடர்க்கண்
அரியார் எளியர் என்று, ஆற்றா, பரிவாய்,
தலை அழுங்க, தண் தளவம் தாம் நகக் கண்டு, ஆற்றா,
மலை அழுத, சால மருண்டு. 110

கானம் கடி அரங்கா, கைம்மறிப்பக் கோடலார்,
வானம் விளிப்ப, வண்டு யாழாக, வேனல்,
வளரா மயில் ஆட, வாட்கண்ணாய்! சொல்லாய்,
உளர் ஆகி, உய்யும் வகை. 111

பருவம் காட்டி, தோழி தலைமகளை வற்புறுத்தியது

தேரோன் மலை மறைய, தீம் குழல் வெய்து ஆக,
வாரான் விடுவானோ?—வாட்கண்ணாய்!—கார் ஆர்
குருந்தோடு முல்லை குலைத்தனகாண்; நாமும்
விருந்தோடு நிற்றல், விதி. 112

பருவம் கண்டு அழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது

பறி, ஓலை, மேலொடு கீழா, இடையர்
பிறியோலை பேர்த்து, விளியா, கதிப்ப,
நரி உளையும் யாமத்தும் தோன்றாரால்—அன்னாய்!—
விரி உளை மான் தேர் மேல் கொண்டார். 113

பருவம் கண்டு அழிந்த தலைமகள் கேட்ப, தோழி குருந்த மரத்திற்குச் சொல்லுவாளாய், 'பருவம் அன்று' என்று வற்புறுத்தியது

பாத்து, படு கடல் மாந்தி, பல கொண்மூ,
காத்து, கனை துளி சிந்தாமை, பூத்து,—
குருந்தே!—பருவம் குறித்து, இவளை, 'நைந்து
வருந்தே' என்றாய், நீ வரைந்து. 114

வினை முற்றி மீண்ட தலைமகன் தலைமகட்குத் தூது விடுகின்றான், தூதிற்குச் சொல்லியது

படும் தடங் கண் பல் பணைபோல் வான் முழங்கல் மேலும்,
கொடுந் தடங் கண் கூற்று மின் ஆக, நெடுந் தடங் கண்
நீர் நின்ற நோக்கின் நெடும் பணை மென் தோளாட்கு,
'தேர் நின்றது' என்னாய், திரிந்து. 115

பருவம் கண்டு, ஆற்றாளாய தலைமகள் ஆற்றல் வேண்டி, தோழி தான் ஆற்றாளாய்ச் சொல்லியது

குருந்தே! கொடி முல்லாய்! கொன்றாய்! தளவே!
முருந்து ஏய் எயிறொடு தார் பூப்பித்திருந்தே,
அரும்பு ஈர் முலையாள் அணி குழல் தாழ் வேய்த்தோள்
பெரும் பீர் பசப்பித்தீர், பேர்ந்து. 116

தலைமகளைத் தோழி பருவம் காட்டி, வற்புறுத்தியது

கத நாகம் புற்று அடையக் கார் ஏறு சீற,
மத நாகம் மாறு முழங்க, புதல் நாகம்
பொன் பயந்த, வெள்ளி புறமாக;—பூங்கோதாய்!—
என் பசந்த, மென் தோள், இனி? 117

'பருவம் அன்று' என்று, வற்புறுத்தும் தோழிக்குத் தலைமகள் வன்புறை எதிர் அழிந்து சொல்லியது

கார் தோன்றிப் பூவுற்ற காந்தள் முகை, விளக்குப்
பீர் தோன்றித் தூண்டுவாள் மெல் விரல்போல்; நீர் தோன்றி,
தன் பருவம் செய்தது கானம்;—தடங் கண்ணாய்!—
'என் பருவம் அன்று' என்றி, இன்று. 118

'உகவும் கார் அன்று' என்பார், ஊரார்; அதனைத்
தகவும் தகவு அன்று என்று ஓரேன்; தகவேகொல்?
வண் துடுப்பு ஆய், பாம்பு ஆய், விரல் ஆய், வளை முரி ஆய்,
வெண் குடை ஆம்,—தன் கோடல் வீந்து. 119

'பீடு இலார்' என்பார்கள் காணுர்கொல்?—வெங் கதிரால்
கோடு எலாம் பொன் ஆய்க் கொழுங் கடுக்கை, காடு எலாம்,
அத்தம் கதிரோன் மறைவதன்முன், வண்டொடு தேன்,
துத்தம் அறையும், தொடர்ந்து. 120

ஒருத்தி யான்; ஒன்று அல பல் பகை, என்னை
விருத்தியாக் கொண்டன—வேருப் பொருத்தின்,
மடல் அன்றில், மாலை, படு வசி, ஆம்பல்,
கடல், அன்றி, கார், ஊர், கறுத்து. 121

கானம் தலைசெய, காப்பார் குழல் தோன்ற,
ஏனம் இடந்த மணி எதிரே, வானம்
நகுவதுபோல் மின் ஆட, நாணு என் ஆவி
உகுவது போலும், உடைந்து. 122

குறித்த பருவத்தின்கண் வந்த தலைமகனைப் புணர்ந்திருந்த தலைமகள்
முன்பு தன்னை நலிந்த குழல் ஓசை அந்திமாலைப் பொழுதின்கண் கேட்டதனுல்,
துயர் உருதாளாய்த் தோழிக்குச் சொல்லியது

இம்மையால் செய்ததை இம்மையே ஆம் போலும்;
உம்மையே ஆம் என்பார் ஓரார்காண்;—நம்மை
எளியர் என நலிந்த ஈர்ங்குழலார், ஏடி!
தெளியச் சுடப்பட்டவாறு! 123

## 5. மருதம்

பாணற்குத் தலைமகள் வாயில் மறுத்தது

செவ்வழி யாழ்ப் பாண்மகனே! சீர் ஆர் தேர் கையினுல்
இவ் வகை ஈர்த்து உய்ப்பான் தோன்ருமுன்,—இவ் வழியே
ஆடினுன், ஆய் வயல் ஊரன்; மற்று எங்கையர் தோள்
கூடினுன், பின் பெரிது கூர்ந்து. 124

மாக் கோல் யாழ்ப் பாண்மகனே! மண் யானைப் பாகனுர்
தூக்கோல் துடியோடு தோன்ருமுன், தூக் கோல்
தொடி உடையார் சேரிக்குத் தோன்றுமோ,—சொல்லாய்!—
கடி உடையேன் வாயில் கடந்து? 125

விளரி யாழ்ப் பாண்மகனே! வேண்டா; அழையேல்;
முளரி மொழியாது, உளரிக் கிளரி, நீ,
பூங் கண் வயல் ஊரன் புத்தில் புகுவதன்முன்,
ஆங்கண் அறிய உரை. 126

மென் கண் கலி வயல் ஊரன்தன் மெய்ம்மையை
எங்கட்கு உரையாது, எழுந்து போய், இங்கண்
குலம் காரம் என்று அணுகான்; கூடும் கூத்து என்றே
அலங்கார நல்லார்க்கு அறை. 127

[இது முதல் துறைக் குறிப்புக்கள் ஏடுகளில் கிடைக்கப்பெறவில்லை.]

செந்தாமரைப் பூ உற நிமிர்ந்த செந்நெல்லின்
பைந் தார், புனல்வாய்ப் பாய்ந்து ஆடுவாள், அம் தார்
வயந்தகம்போல், தோன்றும் வயல் ஊரன் கேண்மை
நயந்து அகன்று, ஆற்ருமை நன்று. 128

வாடாத தாமரைமேல் செந்நெல் கதிர் வணக்கம்
ஆடா அரங்கினுள் ஆடுவாள் ஈடு ஆய
புல்லகம் ஏய்க்கும் புகழ் வயல் ஊரன்தன்
நல் அகம் சேராமை நன்று. 129

இசை உரைக்கும், என் செய்து? இர நின்று அவரை;
வசை உரைப்பச் சால வழுத்தீர்; பசை பொறை
மெய்ம் மருட்டு ஒல்லா—மிகு புனல் ஊரன்தன்
பொய்ம் மருட்டுப் பெற்ற பொழுது. 130

மடங்கு இறவு போலும் யாழ்ப் பண்பு இலாப் பாண!
தொடங்கு உறவு சொல் துணிக்க வேண்டா; முடங்கு இறவு
பூட்டுற்ற வில் ஏய்க்கும் பூம் பொய்கை ஊரன் பொய்
கேட்டு உற்ற, கீழ் நாள், கிளர்ந்து. 131

எங்கையர் இல் உள்ளானே பாண! நீ பிறர்
மங்கையர் இல் என்று மயங்கினுய்; மங்கையர் இல்
என்னுது இறவாது, இவண் நின் நி.........
பின்னுர் இல் அந்தி முடிவு. 132

பாலை யாழ்ப் பாண் மகனே! பண்டு நின் நாயகற்கு
மாலை யாழ் ஓதி வருடாயோ? காலை யாழ்
செய்யும் இடம் அறியாய்; சேர்ந்தாய்; நின் பொய்ம்மொழிக்கு
நையும் இடம் அறிந்து, நாடு. 133

கிழமை பெரியோர்க்குக் கேடு இன்மைகொல்லோ?
பழமை பயன் நோக்கிக் கொல்லோ? கிழமை
குடி நாய்கர் தாம் பல பெற்றாரின் கேளா,
அடி நாயேன் பெற்ற அருள். 134

என் கேட்டி ஏழாய்! இரு நிலத்தும் வானத்தும்,
முன் கேட்டும் கண்டும், முடிவு அறியேன்; பின் கேட்டு,
அணி இகவா நிற்க, அவன் அணங்கு மாதர்
பணி இகவான், சாலப் பணிந்து. 135

எங்கை இயல்பின் எழுவல்; யாழ்ப் பாண் மகனே!
தம் கையும் வாயும் அறியாமல், இங்கண்
உளர உளர, உவன் ஓடிச் சால,
வளர வளர்ந்த வகை. 136

கருங் கோட்டுச் செங் கண் எருமை, கழனி
இருங் கோட்டு மென் கரும்பு சாடி, வரும் கோட்டால்
ஆம்பல் மயக்கி, அணி வளை ஆர்ந்து, அழகாத்
தாம் பல் அசையின, வாய் தாழ்ந்து. 137

கன்று உள்ளிச் சோர்ந்த பால் கால் ஒற்றி, தாமரைப்பூ
அன்று உள்ளி அன்னத்தை ஆர்த்துவான், சென்று உள்ளி,
'வந்தையா!' என்னும் வகையிற்றே—மற்று இவன்
தந்தையார் தம் ஊர்த் தகை. 138

மருதோடு காஞ்சி அமர்ந்து உயர்ந்த நீழல்,
எருதோடு உழல்கின்றார் ஓதை, குருகோடு
தாராத் தோறு ஆய்ந்து எடுப்பும் தண் அம் கழனித்தே—
ஊராத் தேரான் தந்தை ஊர். 139

மண் ஆர் குலை வாழையுள் தொடுத்த தேன் நமது என்று
உண்ணப் பூந் தாமரைப் பூ உள்ளும்;—கண் ஆர்
வயல் ஊரன் வண்ணம் அறிந்து தொடுப்பாள்,
மயல் ஊர் அரவர் மகள். 140

அணிக் குரல்மேல் நல்லாரோடு ஆடினேன் என்ன,
மணிக் குரல்மேல் மாதராள் ஊடி, மணிச் சிரல்
பாட்டை இருந்து அயரும் பாய் நீர்க் கழனித்தே—
ஆட்டை இருந்து உறையும் ஊர். 141

தண் கயத்துத் தாமரை, நீள் சேவலைத் தாழ் பெடை
புண் கயத்து உள்ளும் வயல் ஊர! வண் கயம்
போலும் நின் மார்பு, புளி வேட்கைத்து ஒன்று; இவள்
மாலும் மாறு நோய் மருந்து. 142

நல் வயல் ஊரன் நறுஞ் சாந்து அணி அகலம்
புல்லி, புடை பெயரா மாத்திரைக்கண், புல்லியார்
கூட்டு முதல் உறையும் கோழி துயில் எடுப்ப,
பாட்டு முரலுமாம், பண். 143

அரத்தம் உடீஇ, அணி பழுப்பப் பூசி,
சிரத்தையால் செங்கழுநீர் சூடி, பரத்தை
நினை நோக்கிக் கூறினும், 'நீ மொழியல்' என்று,
மனை நோக்கி, மாண விடும். 144

பாட்டு அரவம், பண் அரவம், பணியாத
கோட்டு அரவம், இன்னிவை தாம் குழும, கோட்டு அரவம்
மந்திரம் கொண்டு ஓங்கல் என்ன, மகச் சுமந்து,
இந்திரன்போல் வந்தான், இடத்து. 145

மண் கிடந்த வைய . . . . மற்றுப் பெரியராய்
எண் கிடந்த நாளான் இகழ்ந்து ஒழுக, பெண் கிடந்த
தன்மை ஒழிய, தரள முலையினுள்
மென்மை செய்திட்டாள், மிக. 146

செங் கண் கருங் கோட்டு எருமை சிறுகனையா
அங்கண் கழனிப் பழனம் பாய்ந்து, அங்கண்
குவளை அம் பூவொடு செங் கயல் மீன் சூடி,
தவளையும் மேற்கொண்டு வரும். 147

இருள் நடந்தன்ன இருங் கோட்டு எருமை,
மருள் நடந்த மாப் பழனம் மாந்தி—பொருள் நடந்த
கல் பேரும் கோட்டால் கனைத்து, தம் கன்று உள்ளி,
நெல் போர்வு சூடி வரும். 148

புண் கிடந்த புண்மேல் நுன் நீத்து ஒழுகி வாழினும்,
பெண் கிடந்த தன்மை பிறிதுஅரோ; ..... கிடந்து
செய்யாத மாத்திரையே, செங் கயல்போல் கண்ணினுள்
நையாது தான் நாணுமாறு. 149

கண்ணுங்கால் என்கொல்? கலவை யாழ்ப் பாண் மகனே!
எண்ணுங்கால், மற்று இன்று; இவளொடு நேர் எண்ணின்,
கடல் வட்டத்து இல்லையால்; கல் பெயர் சேராள்;
அடல் வட்டத்தார் உளரேல் ஆம். 150

சேறு ஆடும் கிண்கிணிக் கால் செம் பொன் செய் பட்டத்து,
நீறு ஆடும் ஆயது இவன் நின் முன; வேறு ஆய
மங்கையர் இல் நாடுமோ?—மாக் கோல் யாழ்ப் பாண் மகனே!—
எங்கையர் இல் நாடலாம் இன்று. 151

முலையாலும், பூணலும், முன்கண் தாம் சேர்ந்த
விலையாலும், இட்ட குறியை உலையாது
நீர் சிதைக்கும் வாய்ப் புதல்வன் நிற்கும், முனை; முலைப்பால்
தார் சிதைக்கும்; வேண்டா, தழூஉ. 152

துனி, புலவி, ஊடலின் நோக்கேன்; தொடர்ந்த
கனி கலவி காதலினும் காணேன்; முனிவு அகலின்,
நாண நடுக்கும்; நளி வயல் ஊரனைக்
காண, எப்போதுமே, கண். 153

# சிறப்புப் பாயிரம்

முனிந்தார் முனிவு ஒழிய, செய்யுட்கண் முத்துக்
கனிந்தார் களவியல் கொள்கைக்கு அணிந்தார்—
இணை மாலை ஈடு இலா இன் தமிழால் யாத்த
திணைமாலை கைவரத் தேர்ந்து.

# ஐந்திணை எழுபது

ஐந்திணைகளில் ஒவ்வொன்றிற்கும் பதினன்கு பாடல்களேக் கொண்டு, எழுபது பாடல்களில் இந் நூல் அமைந்துள்ளமையினல், ஐந்திணை எழுபது என்னும் பெயர் பெறுவதாயிற்று. குறிஞ்சி, முல்லே, பாலே, மருதம், நெய்தல் என்ற அடைவில் திணைகள் அமைந்துள்ளன. பாலே நிலம் முல்லேயும் குறிஞ்சியும் தம் இயல்பு கெட்டுத் தோன்றுவது ஆதலானும், நான்கு திணைகளுக்கும் பொதுவாய் 'நடுவண் ஐந்திணை' என்று சிறப்பிக்கப் பெறுவதனுலும் பாலேத் திணையை இவரும் நடுநாயகமாய் அமைத்துள்ளார் போலும்!

இந் நூலே ஆக்கியவர் **மூவாதியார்**. இவரைச் சிலர் சமணர் என்று கூறுவர். அதற்குத் தக்க சான்று யாதும் இல்லே. இவரைப் பற்றி வேறு ஒன்றும் அறியக்கூடவில்லே.

நூற்பெயர் ஒற்றுமையாலும், வேறு சில குறிப்புக்களாலும் இவர் ஐந்திணை ஐம்பதை அடியொற்றியுள்ளனரோ என்று தோன்றுகிறது.

> கள்ளத்தின் ஊச்சும் சுரம் என்பர், காதலர்
> உள்ளம் படர்ந்த நெறி

என்ற ஐந்திணை ஐம்பதும் (38),

> கள்ளர் வழங்கும் சுரம் என்பர், காதலர்
> உள்ளம் படர்ந்த நெறி

என வரும் ஐந்திணை எழுபதும் (36), ஒரே அச்சில் வார்த்தால் போன்றவை.

இந் நூலின் முதலில் விநாயகரைக் குறித்த கடவுள் வணக்கப் பாடல் ஒன்று சில பிரதிகளில் காண்கிறது. இக் கடவுள் வாழ்த்து நூலுக்குப் புறம்பாதலோடு, இதற்குப் பழைய உரைகாரர் உரை எழுதாமையாலும், இச் செய்யுள் நூலாசிரியரே இயற்றியது என்று துணிந்து கூற இயலாது. இச் செய்யுளின் நடைப் போக்கும் ஏனைய பாடல்களினும் வேறுபட்டுள்ளது. ஐந்திணை நூல்களில் வேறு ஒன்றிற்கும் கடவுள் வாழ்த்துப் பாடல் இல்லாமையும் ஈண்டுச் சிந்தித்தற்கு உரியது. இச் செய்யுள் அனந்தராமையர் பதிப்பைத் தவிர (1931), அதற்கு முந்திய பதிப்புக்களில் இல்லே. எனவே, இப் பாடல் ஆசிரியர் இயற்றியது அன்று என்றே கொள்ளலாம். எனினும், அனந்தராமையர் பதிப்பில் கொடுக்கப் பெற்றுள்ளமை பற்றி, மிகைப் பாடலாக, இப் பதிப்பிலும் நூல் இறுதியில் இணைக்கப் பெற்றிருக்கிறது.

இந் நூலில் உள்ள எழுபது பாடல்களில் முல்லேத் திணையில் இரண்டு பாடல்களும் (25, 26), நெய்தல் திணையில் இரண்டு பாடல்களும் (69, 70) இறந்துபட்டன.

'முட முதிர் புன்னே' எனத் தொடங்கும் ஒரு பாடல் 69-ஆம் செய்யுளாக இலக்கண விளக்க ஆசிரியர் பரம்பரை திரு. சோமசுந்தர தேசிகர் பதிப்பில் (1926) காணப்படுகிறது. திரு. அனந்தராமையர் பதிப்பில் இது தரப்படவில்லே. இப் பதிப்பின்பொருட்டு ஒப்பு நோக்கிய ஏட்டுச்சுவடிகளிலும் இது கிடைக்கப்பெறவில்லே. தொல்காப்பிய உரையில் நச்சினர்க்கினியர் இதனேக் 'காமம் சிறத்தல்'

என்னும் துறைக்கு மேற்கோள் காட்டியுள்ளார் (தொல். பொருள். 111). ஆயினும், நூற்பெயரை அவரும் சுட்டினரல்லர். இங்ஙனமாகவே, இச் செய்யுள் இந் நூலின் பகுதியென்று உறுதியாகக் கொள்ளுதற்கு இல்லை. எனினும், முற்பதிப்பில் இருத்தல் பற்றி நூல் இறுதியில் இப் பாடலும் தனியாக இணைக்கப்பெற்றிருக்கிறது.

இந் நூல் செம்பாகமான தெள்ளிய நடையை மேற்கொண்டுள்ளது.

சான்றவர் கேண்மை சிதைவு இன்றாய், ஊன்றி;
வலி ஆகி, பின்னும் பயக்கும் (5)

பெருந் தகு தாளாண்மைக்கு ஏற்க,
அரும் பொருள் ஆகும் (29)

என்றாற் போன்ற சிறந்த கருத்துக்கள் சில அங்கங்கே உள்ளன. அக்காலப் பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், முதலியனவும் இந் நூலால் புலனாகின்றன.

இந் நூற் செய்யுட்கள் பலவற்றை இளம்பூரணர், நச்சினார்க்கினியர் முதலியோர் தத்தம் உரைகளில் எடுத்தாண்டுள்ளனர். பழைய உரையும் கிளவிக் குறிப்புக்களும் முதல் 24 பாடல்களுக்கே கிடைத்துள்ளன.

# ஐந்திணை எழுபது

(மூவாதியார்)

## 1. குறிஞ்சி

தோழி தலைமகனை வரைவு கடாயது

அவரை பொருந்திய பைங் குரல் ஏனல்
கவரி மட மா கதூஉம் படர் சாரல்
கானக நாட! மறவல், வயங்கிழைக்கு
யான் இடை நின்ற புணை. 1

கொல்லைப் புனத்த அகில் சுமந்து, கல் பாய்ந்து,
வானின் அருவி ததும்ப, கவினிய
நாடன் நயம் உடையன் என்பதனால், நீப்பினும்,
வாடல் மறந்தன, தோள். 2

தோழி தலைமகன் வரைவு மலிந்தமை தலைமகட்குச் சொல்லியது

இலை அடர் தண் குளவி வேய்ந்த பொதும்பில்,
குலையுடைக் காந்தள், இன வண்டு இமிரும்
வரையக நாடனும் வந்தான்; மற்று அன்னை
அலையும் அலை போயிற்று, இன்று. 3

தலைமகன் சிறைப்புறத்தானாக இயற்பழித்த தோழிக்குத்
தலைமகள் இயற்பட மொழிந்தது

மன்றப் பலவின் சுளை விளை தீம் பழம்
உண்டு, உவந்து, மந்தி முலை வருட, கன்று அமர்ந்து,
ஆமா சுரக்கும் அணி மலை நாடனை
யாமாப் பிரிவது இலம். 4

சான்றவர் கேண்மை சிதைவு இன்றாய், ஊன்றி,
வலி ஆகி, பின்னும் பயக்கும்; மெலிவு இல்
கயம் திகழ் சோலை மலை நாடன் கேண்மை
நயம் திகழும் என்னும், என் நெஞ்சு. 5

புணர்ந்து நீங்கும் தலைமகனைக் கண்டு தோழி வரைவு கடாயது

பொன் இணர் வேங்கை கமழும் நளிர் சோலை
நல் மலை நாட! மறவல்; வயங்கிழைக்கு
நின் அலது இல்லையால்; ஈயாயோ, கண்ணோட்டத்து
இன் உயிர் தாங்கும் மருந்து? 6

பகற்குறிக்கண் தலைமகன் சிறைப்புறத்தானாக, படைத்து மொழி கிளவியால்
தோழி வரைவு கடாயது

காய்ந்தீயல், அன்னை! இவளோ தவறு இலள்;—
ஓங்கிய செந் நீர் இழிதரும் கான் யாற்றுள்,
தேம் கலந்து வந்த அருவி குடைந்து ஆட,
தாம் சிவப்பு உற்றன, கண். 7

புணர்ந்து நீங்கும் தலைமகனைக் கண்டு தோழி வரைவு கடாயது

வெறி கமழ் தண் சுனைத் தெண்ணீர் துளும்ப,
கறி வளர் தே மா நறுங் கனி வீழும்
வெறி கமழ் தண் சோலை நாட! ஒன்று உண்டோ,
அறிவின்கண் நின்ற மடம்? 8

தலைமகன் சிறைப்புறத்தானாக, இயற்பழித்த தோழிக்குத்
தலைமகள் இயற்பட மொழிந்தது

மன்றத் துறுகல் கருங் கண் முசு உகளும்
குன்றக நாடன் தெளித்த தெளிவினை
நன்று என்று தேறித் தெளிந்தேன், தலையளி
ஒன்று; மற்று ஒன்றும் அனைத்து. 9

தோழி தலைமகனைக் கண்டு வரைவு கடாயது

பிரைசம் கொள வீழ்ந்த தீம் தேன் இறாஅல்
மரையான் குழவி குளம்பின் துகைக்கும்
வரையக நாட! வரையாய் வரின், எம்
நிரைதொடி வாழ்தல் இலள். 10

தலைமகன் சிறைப்புறத்தானாக, தலைமகள் கேட்ப, இயற்பட மொழிந்தது

கேழல் உழுத கரி புனக் கொல்லையுள்,
வாழை முது காய் கடுவன் புதைத்து அயரும்
தாழ் அருவி நாடன் தெளி கொடுத்தான், என் தோழி
நேர்வளை நெஞ்சு ஊன்று கோல். 11

தலைமகன் சிறைப்புறத்தானாக, இயற்பழித்த தோழிக்குத்
தலைமகள் இயற்பட மொழிந்தது

பெருங் கை இருங் களிறு ஐவனம் மாந்தி,
கருங் கால் மராம் பொழில் பாசடைத் துஞ்சும்,
சுரும்பு இமிர் சோலை, மலை நாடன் கேண்மை
பொருந்தினார்க்கு ஏமாப்பு உடைத்து. 12

வெறியாட்டு எடுத்துக்கொண்ட இடத்து, தோழிக்குத்
தலைமகள் அறத்தொடு நின்றது

வார் குரல் ஏனல் வளை வாய்க் கிளி கவரும்,
நீரால் தெளி திகழ், கான் நாடன் கேண்மையே
ஆர்வத்தின் ஆர முயங்கினேன்; வேலனும்
ஈர, வலித்தான், மறி. 13

தலைமகன் வரும் வழியின் ஏதத்திற்குக் கவன்ற தலைமகள் வரைவு வேட்டு,
தோழிக்குச் சொல்லியது

குறை ஒன்று உடையேன்மன்;—தோழி!—நிறை இல்லா
மன்னுயிர்க்கு ஏமம் செயல் வேண்டும்; இன்னே,
அரா வழங்கு நீள் சோலை நாடனை நம் இல்,
'இரா வாரல்' என்பது உரை. 14

## 2. முல்லை

பருவம் கண்டு அழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது

செங் கதிர்ச் செல்வன் சினம் கரந்த போழ்தினால்,
பைங் கொடி முல்லை மணம் கமழ, வண்டு இமிர,
காரோடு அலமரும் கார் வானம் காண்தொறும்
நீரோடு அலமரும், கண். 15

தட மென் பணைத் தோளி! நீத்தாரோ வாரார்;
மட நடை மஞ்ஞை அகவ, கடல் முகந்து,
மின்னோடு வந்தது எழில் வானம்; வந்து, என்னை,
'என் ஆதி?' என்பாரும் இல். 16

தண் நறுங் கோடல் துடுப்பு எடுப்ப, கார் எதிரி
விண் உயர் வானத்து உரும் உரற்ற, திண்ணிதின்
புல்லுநர் இல்லார் நடுங்க, சிறு மாலை,
கொல்லுநர் போல, வரும். 17

கதழ் உறை வானம் சிதற, இதழகத்துத்
தாது இணர்க் கொன்றை எரி வளர்ப்ப, பாஅய்
இடிப்பது போலும் எழில் வானம் நோக்கி,
துடிப்பது போலும், உயிர். 18

ஆலி விருப்புற்று அகவி, புறவு எல்லாம்
பீலி பரப்பி, மயில் ஆல, சூலி
விரிகுவது போலும் இக் கார் அதிர, ஆவி
உருகுவது போலும், எனக்கு. 19

இனத்த அருங் கலை பொங்க, புனத்த
கொடி மயங்கு முல்லை தளிர்ப்ப, இடி மயங்கி,
யானும் அவரும் வருந்த, சிறு மாலை-
தானும் புயலும் வரும். 20

காரிகை வாடத் துறந்தாரும் வாராமுன்,
கார்க் கொடி முல்லை எயிறு ஈன, காரோடு
உடன்பட்டு வந்து அலைக்கும் மாலைக்கோ, எம்மின்
மடம் பட்டு வாழ்கிற்பார் இல். 21

கொன்றைக் குழல் ஊதிக் கோவலர் பின் நிரைத்து,
கன்று அமர் ஆயம் புகுதர, இன்று
வழங்கிய வந்தன்று, மாலை; யாம் காண,
முழங்கி, வில் கோலிற்று, வான். 22

பருவம் கண்டு அழிந்த தலைமகள் சொல்லியது

தேரைத் தழங்குரல் தார் மணி வாய் அதிர்ப்ப,
ஆர் கலி வானம் பெயல் தொடங்கி, கார் கொள,
இன்று ஆற்ற வாரா விடுவார்கொல், காதலர்?
ஒன்றுலும் நில்லா, வளை. 23

கல் ஏர் புறவில் கவினி, புதல்மிசை
முல்லை தளவொடு போது அவிழ, எல்லி
அலைவு அற்று விட்டன்று வானமும்; உண்கண்,
மூலை வற்று விட்டன்று, நீர். 24

[இது முதல் துறைக்குறிப்புக்கள் கிடைக்கவில்லை.]

......... ......... ......... ......... ......... 25

......... ......... ......... ......... ......... 26

கார்ப்புடைப் பாண்டில் கமழ, புறவு எல்லாம்
ஆர்ப்பொடு இன வண்டு இமிர்ந்து ஆட, நீர்த்து அன்றி
ஒன்றாது அலைக்கும் சிறு மாலை, மால் உழந்து
நின்றாக நின்றது நீர். 27

குருந்து அலை வான் படலை சூடிச் சுரும்பு ஆர்ப்ப,
ஆயன் புகுதரும் போழ்தினான், ஆயிழாய்!
பின்னொடு நின்று . . . . படு மழை கொ . . .ல்
என்னொடு பட்ட வகை. 28

## 3. பாலை

எழுத்துடைக் கல் நிரைக்க வாயில் விழுத் தொடை
அம் மாறு அலைக்கும் சுரம் நிரைத்து, அம் மாப்
பெருந் தகு தாளாண்மைக்கு ஏற்க அரும் பொருள்
ஆகும், அவர் காதல் அவா. 29

வில் உழுது உண்பார் கடுகி அதர் அலைக்கும்
கல் சூழ் பதுக்கை ஆர் அத்தத்து இறப்பார்கொல்—
மெல் இயல் கண்ணோட்டம் இன்றி, பொருட்கு இவர்ந்து,
நில்லாத உள்ளத்தவர்? 30

பேழ் வாய் இரும் புலி குஞ்சரம் கோள் பிழைத்துப்
பாழ் ஊர்ப் பொதியில் புகாப் பார்க்கும் ஆர் இடை,
சூழாப் பொருள் நசைக்கண் சென்றார், அருள் நினைந்து,
வாழ்தியோ மற்று என் உயிர்? 31

நீர் இல் அருஞ் சுரத்து ஆமான்இனம் வழங்கும்
ஆர் இடை அத்தம் இறப்பர்கொல்?—ஆயிழாய்!—
நாணினை நீக்கி, உயிரோடு உடன் சென்று
காண, புணர்ப்பதுகொல் நெஞ்சு? 32

பொறி கிளர் சேவல் வரி மரல் குத்த,
நெறி தூர் அருஞ் சுரம் நாம் உன்னி, அறிவிட்டு
அலர் மொழிச் சென்ற கொடி அக நாட்ட,
வலன் உயர்ந்து தோன்றும் மலை. 33

பீர் இவர் கூரை மறு மனைச் சேர்ந்து அல்கி,
கூர் உகிர் எண்கின் இருங் கிளை கண்படுக்கும்,
நீர் இல், அருஞ் சுரம் முன்னி அறியார்கொல்,
ஈரம் இல் நெஞ்சினவர்? 34

சூரல் புறவின் அணில் பிளிற்றும் சூழ் படப்பை
ஊர் கெழு சேவல் இதலொடு போர் திளைக்கும்
தேரொடு கானம், தெருள் இலார் செல்வார்கொல்,
ஊர் இடு கவ்வை ஒழித்து? 35

முள்ளுடை மூங்கில் பிணங்கிய சூழ் படப்பை,
புள்ளி வெருகு தன் குட்டிக்கு இரை பார்க்கும்
கள்ளர் வழங்கும் சுரம் என்பர், காதலர்
உள்ளம் படர்ந்த நெறி. 36

பொரி புற ஓமைப் புகர் படு நீழல்,
வரி நுதல் யானை பிடியோடு உறங்கும்
எரி மயங்கு கானம் செலவு உரைப்ப, நில்லா,
அரி மயங்கு உண்கண்ணுள் நீர். 37

கோள் வல் . . . வய மாக் குழுமும்
தாள் வீ பதுக்கைய கானம் இறந்தார்கொல்—
ஆள்வினையின் ஆற்ற அகன்றவா நன்று உணரா
மீளி கொள் மொய்ம்பினவர்? 38

கொடுவரி பாயத் துணை இழந்து அஞ்சி,
கடு உணங்கு பாறைக் கடவு தெவுட்டும்
நெடு வரை அத்தம் இறப்பர்கொல், கோள் மாப்
படு பகை பார்க்கும் சுரம்? 39

மன்ற முது மரத்து ஆந்தை குரல் இயம்ப,
குன்றகம் நண்ணி, குறும்பு இறந்து சென்றவர்
உள்ளிய தன்மையர்போலும்—அடுத்து அடுத்து
ஒள்ளிய தும்மல் வரும். 40

பூங் கண் இடம் ஆடும்; கனவும் திருந்தின;
ஓங்கிய குன்றம் இறந்தாரை யாம் நினைப்ப,
வீங்கிய மென் தோள் கவினிப் பிணி தீர,
பாங்கத்துப் பல்லி படும். 41

'ஒல்லோம்!' என்று ஏங்கி, உயங்கி இருப்பவோ?
கல் இவர் அத்தம், அரி பெய் சிலம்பு ஒலிப்பக்
கொல் களிறு அன்னான்பின் செல்லும்கொல், என் பேதை
மெல் விரல் சேப்ப நடந்து? 42

## 4. மருதம்

ஆற்றல் உடையன், அரும் பொறி நல் ஊரன்,
மேற்றுச் சிறு தாய காய்வு அஞ்சி, போற்று உருவிக்
கட்டக முத்தின் புதல்வனை மார்பின்மேல்
பட்டம் சிதைப்ப வரும். 43

அகன் பணை ஊரனைத் தாமம் பிணித்தது
இகன்மை கருதி இருப்பல்;—முகன் அமரா
ஏதில் மகளிரை நோவது எவன்கொலோ,
பேதைமை கண்டு ஒழுகுவார்? 44

போத்து இல் கழுத்தின் புதல்வன் உணச் சான்றான்;
மூத்தேம் இனி யாம்; வரு முலையார் சேரியுள்,
நீத்து நீர் ஊன வாய்ப் பாண! நீ போய் மொழி;
கூத்தாடி உண்ணினும் உண். 45

உழலை முருக்கிய செந் நோக்கு எருமை
பழனம் படிந்து, செய் மாந்தி, நிழல் வதியும்
தண் துறை ஊரன் மலர் அன்ன மார்புற,
பெண்டிர்க்கு உரை—பாண!—உய்த்து. 46

தேம் கமழ் பொய்கை அக வயல் ஊரனைப்
பூங் கண் புதல்வன் மிதித்து உழக்க, ஈங்குத்
தளர் முலை பாராட்டி, என்னுடைய பாவை
வளர் முலைக்கண் ஞெமுக்குவார். 47

பேதை! புகலை; புதல்வன் துணைச் சான்றோன்
ஓதை மலி மகிழ்நற்கு யாஅம் எவன் செய்தும்?
பூ ஆர் குழல் கூந்தல் பொன் அன்னார் சேரியுள்
ஓவாது செல்—பாண!—நீ. 48

யாணர் நல் ஊரன் திறம் கிளப்பல்; என்னுடைய
பாண! இருக்க அது களை; நாண் உடையான்
தன் உற்ற எல்லாம் இருக்க; இரும் பாண!
நின் உற்றதுண்டேல், உரை. 49

ஒள் இதழ்த் தாமரைப் போது உறழும் ஊரனை
உள்ளம் கொண்டு உள்ளான் என்று யார்க்கு உரைக்கோ?—ஒள்ளிழாய்!—
அச்சுப் பணி மொழி உண்டேனோ, மேல் நாள் ஓர்
பொய்ச் சூள் என அறியாதேன்? 50

பேதையர் என்று தமரைச் செறுபவோ?
போது உறழ் தாமரைக்கண் ஊரனை நேர் நோக்கி,
வாய் மூடி இட்டும் இருப்பவோ?—மாணிழாய்!—
நோவது என்? மார்பு அறியும், இன்று. 51

காதலின் தீரக் கழிய முயங்கன்மின்;
ஓதம் துவன்றும் ஒலி புனல் ஊரனைப்
பேதைப் பட்டு ஏங்கன்மின் நீயிரும், எண் இலா
ஆசை ஒழிய உரைத்து. 52

'உள் நாட்டம் சான்றவர் தந்த நசை இற்று என்று
எண்ணார்க்குக் கண்ணோட்டம் தீர்க்குதும்' என்று எண்ணி,
வழிபாடு கொள்ளும் வள வயல் ஊரன்
பழிபாடு நின் மேலது. 53

உண் துறைப் பொய்கை வராஅல்இனம் இரியும்
தண் துறை ஊர! தகுவதோ,—ஒண்டொடியைப்
பாராய், மனை துறந்து, அச் சேரிச் செல்வதனை
ஊராண்மை ஆக்கிக்கொளல்? 54

பொய்கை நல் ஊரன் திறம் கிளத்தல்! என்னுடைய
எவ்வம் எனினும், எழுந்தீக; வைகல்
மறு இல் பொலந் தொடி வீசும், அலற்றும்,
சிறுவன் உடையேன் துணை. 55

வள வயல் ஊரன் மருள் உரைக்கு மாதர்
வளைஇய சக்கரத்து ஆழி, கொளை பிழையாது,
ஒன்று இடைஇட்டு வருமேல், நின் வாழ் நாட்கள்
ஒன்றி அனைத்தும் உளேன். 56

## 5. நெய்தல்

ஒழுகு திரைக் கரை வான் குருகின் தூவி
உழிதரும் ஊதை எடுக்கும் துறைவனைப்
பேதையான் என்று உணரும், நெஞ்சம்; இனிது உண்மை
ஊதியம் அன்றோ உயிர்க்கு? 57

என்னைகொல்? தோழி! அவர்கண்ணும் நன்கு இல்லை;
அன்னைமுகனும் அது ஆகும்; பொன் அலர்
புன்னைஅம் பூங் கானற் சேர்ப்பனை, 'தக்க தேர்;
நின் அல்லது இல்' என்று உரை. 58

இடு மணல் எக்கர் அகன் கானல் சேர்ப்பன்
கடு மான் மணி அரவம் என்று, கொடுங்குழை
புள் அரவம் கேட்டுப் பெயர்ந்தாள்—'சிறு குடியர்
உள் அரவம் நாணுவர்' என்று. 59

மணி நிற நெய்தல் இருங் கழிச் சேர்ப்பன்
அணி நலம் உண்டு அகன்றான்; என்கொல், எம்போல்
தணி மணல் எக்கர்மேல் ஓதம் பெயர,
துணி முந்நீர் துஞ்சாதது? 60

கண் திரள் முத்தம் பயக்கும் இரு முந்நீர்ப்
பண்டம் கொள் நாவாய் வழங்கும் துறைவனை
முண்டகக் கானலுள் கண்டேன் எனத் தெளிந்தேன்,
நின்ற உணர்வு இலாதேன். 61

'அடும்பு இவர் எக்கர் அலவன் வழங்கும்
கொடுங் கழிச் சேர்ப்பன் அருளான்' எனத் தெளிந்து,
கள்ள மனத்தான் அயல் நெறிச் செல்லும்கொல்,
நல் வளை சோர, நடந்து? 62

கள் நறு நெய்தல் கமழும் கொடுங் கழித்
தண்ணம் துறைவனோ தன் இலன்; ஆயிழாய்!
வள்நகைப்பட்டதனை ஆண்மை எனக் கருதி,
பண் அமைத் தேர்மேல் வரும். 63

தெண் நீர் இருங் கழி, வேண்டும் இரை மாந்தி,
பெண்ணைமேல் சேக்கும் வணர் வாய்ப் புணர் அன்றில்!
தண்ணம் துறைவற்கு உரையாய், 'மடமொழி
வண்ணம் தா' என்று தொடுத்து. 64

எறி சுறுக் குப்பை இனம் கலக்கத் தாக்கும்
எறி திரைச் சேர்ப்பன் கொடுமை அறியாகொல்—
கானகம் நண்ணி அருள் அற்றிடக் கண்டும்,
கானலுள் வாழும் குருகு? 65

நுண் ஞாண் வலையின் பரதவர் போத்தந்த
பல் மீன் உணங்கல் கவரும் துறைவனைக்
கண்ணினால் காண அமையும்கொல்? 'என் தோழி
வண்ணம் தா' என்கம், தொடுத்து. 66

இவர் திரை நீக்கியிட்டு, எக்கர் மணல்மேல்
கவர் கால் அலவன் தன பெடையோடு,
தவழும் இருங் கழிச் சேர்ப்ப! என் தோழி—
படர் பசலை பாயின்று—தோள். 67

சிறு மீன் கவுள் கொண்ட செந் தூவி நாராய்!
இறு மென் குரல நின் பிள்ளைகட்கே ஆகி,
நெறி நீர் இருங் கழிச் சேர்ப்பன் அகன்ற
நெறி அறிதி, மீன் தபு நீ. 68

. . . . . . . . . . . . . . . . . . . . 69

. . . . . . . . . . . . . . . . . . . . 70

## நூலைச் சேர்ந்ததாக ஊகிக்கும் பாடல்

முடம் முதிர் புன்னைப் படுகோட்டு இருந்த
மடமுடை நாரைக்கு உரைத்தேன்—கடன் அறிந்து
பாய்திரைச் சேர்ப்பன் பரித் தேர் வர, கண்டு,
'நீ தகாது' என்று நிறுத்து.

## மிகைப் பாடல்

### கடவுள் வாழ்த்து

எண்ணும் பொருள் இனிதே எல்லாம் முடித்து, எமக்கு
நண்ணும் கலை அனைத்தும் நல்குமால்—கண்ணுதலின்
முண்டத்தான், அண்டத்தான், மூலத்தான், ஆலம் சேர்
கண்டத்தான் ஈன்ற களிறு.

# ஐந்திணை ஐம்பது

இது முல்லை, குறிஞ்சி, மருதம், பாலை ,நெய்தல் என்ற அடைவில் ஐந்திணைக்கும் பப்பத்துப் பாடல்களைப் பெற்றுள்ள நூல் ஆதலின், இதனை **ஐந்திணை** ஐம்பது என்று குறிக்கின்றனர். இதில் உள்ள ஐந்திணை வரிசை முறை 'மாயோன் மேய காடுறை உலகமும்' எனத் தொடங்கும் தொல்காப்பியச் சூத்திர அமைப்பை (பொருள். அகத். 5) ஒத்துள்ளது. இச் சூத்திரத்துள் காணப்பெறாத பாலை, நால்வகை நிலங்களுக்கும் பொதுவாதலாலும், உரிப்பொருளில் பிரிதல் ஒழுக்கத்துக்கு உரித்தாதலாலும், அதனையும் உடன் கொண்டு ஐந்திணையாகக் கூறுதலே மரபு. பாலைத் திணையை ஈற்றயலாக வைத்து, இருத்தலுக்குரிய முல்லையில் தொடங்கி, இரங்கலுக்கு உரிய நெய்தலை ஈற்றில் அமைத்துவைத்துள்ள வரிசை முறை சிந்தித்தற் குரியது.

இந் நூற் பாடல்கள் சிறந்த நடையுடையனவாயும், கருத்து வளம் செறிந்தன வாயும் உள்ளன. இந் நூலுக்கு உரிய பாயிரம், 'ஐந்திணை ஐம்பதும் ஆர்வத்தின் ஓதாதார் செந்தமிழ் சேராதவர்' என்று கூறுகின்றது. எனவே, செந்தமிழ்ப் புலமைக்கு இந் நூற் பயிற்சி மிகவும் அவசியம் என்பது போதரும்.

இதன் ஆசிரியர் **மாறன் பொறையனார்.** இப் பெயரில் மாறன் என்பது பாண்டியனைக் குறிப்பதாயும், பொறையன் என்பது சேரனைக் குறிப்பதாயும் உள்ளன. எனவே, இவர் இந்த இரு பேரரசரோடும் தொடர்புடையராய், இவர்களுக்கு நட்பினராய் இருத்தல் கூடும். பொறையனார் என்பது இவரது இயற்பெயர் என்றும், மாறன் என்பது இவர் தந்தையார் பெயர் என்றும் கருதுமாறு இத் தொடர் அமைந் துள்ளது. எனவே, இவரை மாறன் மகனாராகிய பொறையனார் என்றும் கொள்ள லாம். இந் நூலின் முதற் செய்யுளில் உவமையாக மாயோன், முருகன், சிவன், மூவரையும் குறித்துள்ளார். இதனால் இவரை வைதிக சமயத்தவர் என்று கருத லாம். பாயிரப் பாடலில் வரும் 'வண் புள்ளி மாறன் பொறையன்' என்ற தொடரைக் கொண்டு, இவர் அரசாங்க வரவு செலவுத் தொடர்புடைய ஓர் அதிகாரியாயிருக்க லாம் என்பர் சிலர். இவர் கருத்துப்படி புள்ளி என்பதைக் 'கணக்கு' என்று கொள்ளவேண்டும். இது பழமையான பொருளாகத் தோன்றவில்லை. 'வண் புள்ளி' என்பதை வளப்பமான புள்ளி என்னும் ஊர் என்றும் கொள்ள இடமுண்டு. எனவே, இது குறித்து உறுதியாக ஒன்றும் சொல்லக் கூடவில்லை.

திருக்குறள் முதலிய சில கீழ்க்கணக்கு நூல்களில் பயின்றுள்ள சொற் பொருள் மரபுகள் சில இந் நூலகத்தும் உள்ளன.

> கொண்டுழிப் பண்டம் விலை ஒரீஇக் கொற்சேரி
> நுண் துளைத் துன்னூசி விற்பாரின்

என்ற பாடலில் (21) கூறிய கருத்து,

> 'கொற்சேரித் துன்னூசி விற்பவர் இல்'

என்ற பழமொழியை (50) மேற்கொண்டுள்ளது. இக்கருத்தை,

வைகொண்ட ஊசி கொற்சேரியின் விற்று எம் இல் வண்ணவண்ணப்
பொய்கொண்டு நிற்கலுற்றோ புலே ஆத் தின்னி போந்ததுவே?

என்ற திருக்கோவையாரிலும் (386) காணலாம்.

இந் நூற் செய்யுட்கள் 50. பாயிரச் செய்யுள் ஒன்று. பாயிரச் செய்யுள் நூல் இறுதியில் அமைக்கப் பெற்றுள்ளது. இந் நூலைப் பேராசிரியர், நச்சினார்க்கினியர், அகப்பொருள் விளக்க உரைகாரர் முதலியோர் மேற்கோளாக எடுத்தாண்டுள்ளனர். இந் நூல் முழுமைக்கும் பழைய உரையும் துறைக் குறிப்புக்களும் உள்ளன.

# ஐந்திணை ஐம்பது

(மாறன் பொறையனார்)

## 1. முல்லை

தலைமகளைத் தோழி பருவம் காட்டி வற்புறுத்தியது

மல்லர்க் கடந்தான் நிறம் போன்று இருண்டு எழுந்து,
செல்வக் கடம்பு அமர்ந்தான் வேல் மின்னி,—நல்லாய்!—
இயங்கு எயில் எய்தவன் தார் பூப்ப, ஈதோ
மயங்கி வலன் ஏரும், கார்! 1

பருவம் கண்டு அழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது

அணி நிற மஞ்ஞை அகவ, இரங்கி,
மணி நிற மா மலைமேல் தாழ்ந்து,—பணிமொழி!—
கார் நீர்மை கொண்ட கலி வானம் காண்தொறும்,
பீர் நீர்மை கொண்டன, தோள். 2

பருவம் கண்டு அழிந்த கிழத்திக்குத் தோழி சொல்லியது

மின்னும், முழக்கும், இடியும், மற்று இன்ன
கொலைப் படை சாலப் பரப்பிய,—முல்லை
முகை வென்ற பல்லினாய்!—இல்லையோ, மற்று
நமர் சென்ற நாட்டுள் இக் கார்? 3

உள்ளார்கொல் காதலர்—ஒண்டொடி!—நம் திறம்?
வள் வார் முரசின் குரல்போல் இடித்து உரறி,
நல்லார் மனம் கவரத் தோன்றி, பணிமொழியைக்
கொல்வாங்குக் கூர்ந்தது, இக் கார். 4

கோடு உயர் தோற்ற மலைமேல் இருங் கொண்மூக்
கூடி நிரந்து தலை பிணங்கி, ஓடி,
வளி கலந்து, வந்து உறைக்கும் வானம் காண்தோறும்,
துளி கலந்து வீழ்தரும், கண். 5

முல்லை நறு மலர் ஊதி, இருந் தும்பி
செல்சார்வு உடையார்க்கு இனியவாய்,—நல்லாய்!—மற்று
யாரும் இல் நெஞ்சினேம் ஆகி உறைவேமை
ஈரும், இருள் மாலை வந்து. 6

தேரோன் மலை மறைந்த செக்கர் கொள் புன் மாலை
ஊர் ஆன்பின் ஆயன் உவந்து ஊதும், சீர்சால்,
சிறு குழல் ஓசை,—செறிதொடி!—வேல் கொண்டு
எறிவது போலும் எனக்கு. 7

பிரிந்தவர் மேனிபோல் புல்லென்ற வள்ளி,
பொருந்தினர் மேனிபோல், பொற்ப,—திருந்திழாய்!—
வானம் பொழியவும் வாரார்கொல், இன்னாத
கானம் கடந்து சென்றார்? 8

'பருவம்' என்று அழிந்த கிழத்தியைத் தோழி, 'பருவம் அன்று' என்று வற்புறுத்தியது

வருவர்—வயங்கிழாய்!—வாள் ஒண் கண் நீர் கொண்டு,
உருகி, உடன்று அழிய வேண்டா; தெரிதியேல்,
பைங் கொடி முல்லை அவிழ் அரும்பு ஈன்றன,
வம்ப மழை உரறக் கேட்டு. 9

வினை முற்றிய தலைமகன் தேர்ப்பாகன் கேட்பச் சொல்லியது

நூல் நவின்ற பாக! தேர் நொவ்விதாச் சென்றீக!
தேன் நவின்ற கானத்து எழில் நோக்கி, தான் நவின்ற
கற்புத் தாள் வீழ்த்து, கவுள்மிசைக் கை ஊன்றி,
நிற்பாள் நிலை உணர்கம் யாம். 10

## 2. குறிஞ்சி

பகற்குறிக்கண் தலைமகன் சிறைப்புறத்தானாக, தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய், செறிப்பு அறிவுறீஇயது

பொன் இணர் வேங்கை கவினிய பூம் பொழிலுள்
நன் மலை நாடன் நலம் புனைய,—மென்முலையாய்!—
போயின, சில் நாள் புனத்து மறையினால்
ஏயினர் இன்றி, இனிது. 11

பகற்குறி வந்து பெயர்கின்ற தலைமகனைக் கண்ணுற்றுத் தோழி செறிப்பு அறிவுறீஇயது

மால் வரை வெற்ப! வணங்கு குரல் ஏனல்
காவல் இயற்கை ஒழிந்தேம், யாம்; தூ அருவி
பூக் கண் கழூஉம் புறவிற்றாய், பொன் விளையும்
பாக்கம் இது, எம் இடம். 12

சிறைப்புறத்தானாகத் தலைமகனை இயற்பழித்த தோழிக்குத் தலைமகள் இயற்பட மொழிந்தது

'கானக நாடன் கலவான் என் தோள்!' என்று,—
மான் அமர் கண்ணாய்!—மயங்கல் நீ! நானம்
கலந்து இழியும் நல் மலைமேல் வால் அருவி ஆட,
புலம்பும் அகன்று நில்லா! 13

தோழி தலைமகட்கு மெலிதாகச் சொல்லி, குறை நயப்புக் கூறியது

புனை பூந் தழை அல்குல் பொன் அன்னாய்! சாரல்
தினை காத்து இருந்தேம் யாம் ஆக, வினை வாய்த்து
மா வினவுவார் போல வந்தவர் நம்மாட்டுத்
தாம் வினவல் உற்றது ஒன்று உண்டு. 14

பகற்குறிக்கண் தலைமகன் சிறைப்புறத்தானாக, தோழி தாய் கேட்டதற்கு மறு மாற்றம் சொல்லுவாள் போலப் படைத்து மொழி கிளவியான் வரைவு கடாயது

வேங்கை நறு மலர் வெற்பிடை யாம் கொய்து,
மாந் தளிர் மேனி வியர்ப்ப, மற்று ஆங்கு எனைத்தும்
பாய்ந்து அருவி ஆடினேம் ஆக, பணிமொழிக்குச்
சேந்தனவாம், சேயரிக் கண்தாம். 15

இரவுக்குறி வந்து பெயரும் தலைமகனைக் கண்ணுற்று நின்ற தோழி வரைவு கடாயது

கொடு வரி வேங்கை பிழைத்து, கோட்பட்டு,—
மடி செவி வேழம்—இரீஇ, அடி ஓசை
அஞ்சி, ஒதுங்கும் அதர் உள்ளி, ஆர் இருள்
துஞ்சா, சுடர்த்தொடி கண். 16

'மஞ்சு இவர் சோலை வள மலை நல் நாட!
எஞ்சாது நீ வருதி' என்று எண்ணி, அஞ்சி,
திரு ஒடுங்கும் மென் சாயல் தேம் கோதை மாதர்
உரு ஒடுங்கும், உள் உருகி நின்று. 17

தோழி செறிப்பு அறிவுறீஇ, தலைமகனை வரைவு கடாயது

எறிந்து, எமர்தாம் உழுத ஈர்ங் குரல் ஏனல்,
மறந்தும், கிளி இனமும் வாரா;—கறங்கு அருவி
மா மலை நாட!—மடமொழிதன் கேண்மை
நீ மறவல் நெஞ்சத்துக் கொண்டு. 18

தோழி இரவுக்குறியின்கண் நெறி விலக்கி, வரைவு கடாயது

நெடு மலை நல் நாட! நீள் வேல் துணையா,
கடு விசை வால் அருவி நீந்தி, நடு இருள்,
இன்னா அதர் வர, 'ஈர்ங் கோதை மாதராள்
என்னாவாள்!' என்னும், என் நெஞ்சு. 19

தலைமகள் தோழிக்கு அறத்தொடு நின்று வெறி விலக்கவேண்டும்
உள்ளத்தாளாய்ச் சொல்லியது

வெறி கமழ் வெற்பன் என் மெய்ந் நீர்மை கொண்டது
அறியாள், மற்று அன்னோ! 'அணங்கு அணங்கிற்று!' என்று,
மறி ஈர்த்து உதிரம் தூய், வேலன்-தரீஇ,
வெறியோடு அலம்வரும், யாய். 20

## 3. மருதம்

பாணற்குத் தலைமகள் வாயில் மறுத்தது

கொண்டுழிப் பண்டம் விலை ஒரீஇக் கொற்சேரி
நுண் துளைத் துன்னூசி விற்பாரின், ஒன்றானும்
வேறு அல்லை,—பாண!—வியல் ஊரன் வாய்மொழியைத்
தேற, எமக்கு உரைப்பாய், நீ. 21

போது ஆர் வண்டு ஊதும் புனல் வயல் ஊரற்குத்
தூதாய்த் திரிதரும் பாண் மகனே! நீதான்
அறிவு அயர்ந்து, எம் இல்லுள் என் செய்ய வந்தாய்?
நெறி அதுகாண், எங்கையர் இற்கு. 22

யாணர் அகல் வயல் ஊரன் அருளுதல்,—
பாண!—பரிந்து உரைக்க வேண்டுமோ? நாண
அறிவது அறியும் அறிவினர் கேண்மை
நெறியே உரையாதோ மற்று? 23

கோலச் சிறு குருகின் குத்து அஞ்சி, ஈர் வாளை
நீலத்துப் புக்கு ஒளிக்கும் ஊரற்கு, மேல் எல்லாம்,
சார்தற்குச் சந்தனச் சாந்து ஆயினேம்; இப் பருவம்
காரத்தின் வெய்ய, என் தோள்! 24

வாயில் வேண்டிச் சென்றார்க்குத் தலைமகள் வாயில் மறுத்தது

அழல் அவிழ் தாமரை ஆய் வயல் ஊரன்
விழைதகு மார்பம் உறும், நோய்—விழையின்,
குழலும் குடுமி என் பாலகன் கூறும்
மழலை வாய்க் கட்டுரையால். 25

புதல்வனை முனிந்து, தலைமகள் மறுத்தாளைப் போல, தோழிக்கு வாயில் நேர்ந்தது

பெய் வளைக் கையாய்! பெரு நகை ஆகின்றே—
செய் வயல் ஊரன் வதுவை விழவு இயம்ப,
கை புனை தேர் ஏறிச் செல்வானைச் சென்று இவன்
எய்தி, இடர் உற்றவாறு! 26

வாயில் வேண்டிச் சென்றார்க்குத் தலைமகள் வாயில் மறுத்தது

தண் வயல் ஊரற் புலக்கும் தகையமோ?—
நுண் அறல் போல நுணங்கிய ஐங் கூந்தல்,
வெண் மரல் போல நிறம் திரிந்து, வேறாய
வண்ணம் உடையேம், மற்று யாம். 27

தலைமகள் தோழிக்கு வாயில் மறுத்தது

ஒல்லென்று ஒலிக்கும் ஒலி புனல் ஊரற்கு
வல்லென்றது என் நெஞ்சம்—வாட்கண்ணாய்!—'நில்' என்னாது,
ஏக்கற்று ஆங்கு என் மகன்தான் நிற்ப, என்னானும்
நோக்கான், தேர் ஊர்ந்தது கண்டு. 28

ஆற்றாமையே வாயிலாகப் புக்க தலைமகன் புணர்ந்து நீங்கிய பின்பு,
சென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது

'ஒல்லென் ஒலி புனல் ஊரன் வியல் மார்பம்
புல்லேன் யான்' என்பேன்;—புனையிழையாய்!—புல்லேன்
எனக்கு ஓர் குறிப்பும் உடையேனோ, ஊரன்-
தனக்கு ஏவல் செய்து ஒழுகுவேன்? 29

குளிரும் பருவத்தேஆயினும், தென்றல்
வளி எறியின், மெய்யிற்கு இனிதாம்;—ஒளியிழாய்!—
ஊடி இருப்பினும், ஊரன் நறு மேனி
கூடல் இனிது ஆம், எனக்கு. 30

## 4. பாலை

பருவம் கண்டு அழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது

உதிரம் துவரிய வேங்கை உகிர்போல்,
எதிரி முருக்கு அரும்ப, ஈர்ந் தண் கார் நீங்க, எதிருநர்க்கு
இன்பம் பயந்த இளவேனில் காண்தொறும்,
துன்பம் கலந்து அழியும், நெஞ்சு. 31

தலைமகனது பிரிவுக் குறிப்பு அறிந்து ஆற்றுளாய தலைமகளைத் தோழி ஆற்றுவித்தது

விலங்கல்; விளங்கிழாய்! செல்வாரோ அல்லர்
அழல் பட்டு அசைந்த பிடியை, எழில் களிறு,
கல் சுனைச் சேற்றிடைச் சின்னீரைக் கையால் கொண்டு,
உச்சி ஒழுக்கும் சுரம். 32

மகட் போக்கிய நற்றுய் கவன்று சொல்லியது

பாவையும், பந்தும், பவளவாய்ப் பைங் கிளியும்,
ஆயமும், ஒன்றும், இவை நினையாள்; பால் போலும்
ஆய்ந்த மொழியினுள் செல்லும்கொல், காதலன்பின்,
காய்ந்து கதிர் தெறூஉம் காடு? 33

தோழி தலைமகனைச் செலவு அழுங்கியது

கோட்டு அமை வல் வில் கொலை பிரியா வன்கண்ணர்
ஆட்டிவிட்டு ஆறு அலைக்கும் அத்தம் பல நீந்தி,
வேட்ட முனைவயின் சேறிரோ—ஐய!—நீர்
வாள் தடங் கண் மாதரை நீத்து? 34

தலைமகன் பொருள்வயின் பிரிந்த காலத்து, 'ஆற்றுள்!' எனக் கவன்ற தோழிக்குத் தலைமகள், 'ஆற்றுவல்' என்பதுபட மொழிந்தது

கொடு வில் எயினர் தம் கொல் படையால் வீழ்த்த
தடி நிணம் மாந்திய பேஎய், நடுகல்
விரி நிழல், கண்படுக்கும் வெங் கானம் என்பர்,
பொருள் புரிந்தார் போய சுரம். 35

பிரிவு உணர்த்திய தோழிக்குத் தலைமகள் உடன்படாது சொல்லியது

கடிது ஓடும் வெண்தேரை, 'நீர் ஆம்' என்று எண்ணி,
பிடியோடு ஒருங்கு ஓடி, தாள் பிணங்கி, வீழும்
வெடி ஓடும் வெங் கானம் சேர்வார்கொல்,—நல்லாய்!—
தொடி ஒடி வீழத் துறந்து? 36

உடன் போய தலைமகட்கு நற்றாய் கவன்று உரைத்தது

தோழியர் சூழத் துறை முன்றில் ஆடுங்கால்,
வீழ்பவள் போலத் தளரும் கால், தாழாது,
கல் அதர் அத்தத்தைக் காதலன்பின் போதல்
வல்லவோ, மாதர் நடை? 37

பிரிவின்கண் ஆற்றாளாயின தலைமகளைத் தோழி ஆற்றுவித்தது

சுனை வாய்ச் சிறு நீரை, 'எய்தாது' என்று எண்ணி,
பிணை மான் இனிது உண்ண வேண்டி, கலைமா தன்
கள்ளத்தின் ஊச்சும் சுரம் என்பர், காதலர்
உள்ளம் படர்ந்த நெறி. 38

தலைமகன் பொருள் வலித்த நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கியது

மடவைகாண்;—நல் நெஞ்சே!—மாண் பொருள்மாட்டு ஓட,
புடைபெயர் போழ்தத்தும் ஆற்றாள், படர் கூர்ந்து
விம்மி உயிர்க்கும் விளங்கிழையாள் ஆற்றுமோ,
நம்மின் பிரிந்த இடத்து? 39

இன்று அல்கல் ஈர்ம் படையுள் ஈர்ங்கோதை தோள் துணையா
நன்கு வதிந்தனை;—நல் நெஞ்சே!—நாளை நாம்
குன்று அதர் அத்தம் இறந்து, தமியமாய்,
என்கொலோ சேக்கும் இடம்? 40

## 5. நெய்தல்

அல்லகுறிப்பட்ட தலைமகற்குச் சொல்லுவாளாய், தோழி தலைமகட்குச் சொல்லியது

தெண் கடற் சேர்ப்பன் பிரிய, புலம்பு அடைந்து,
ஒண் தடங் கண் துஞ்சற்க!—ஒள்ளிழாய்!—நண்பு அடைந்த
சேவலும் தன் அருகில் சேக்குமால்; என்கொலோ,
பூந் தலை அன்றில் புலம்பு? 41

காமம் மிக்க கழிபடர் கிளவி

கொடுந் தாள் அலவ! குறை யாம் இரப்பேம்;
ஒடுங்கா ஒலி கடற் சேர்ப்பன் நெடுந் தேர்
கடந்த வழியை எம் கண் ஆரக் காண,
நடந்து சிதையாதி, நீ! 42

பொரிப் புறப் பல்லிச் சினை ஈன்ற புன்னை
வரிப் புற வார் மணல்மேல் ஏறி, தெரிப்புறத்
தாழ் கடல் தண் சேர்ப்பன் தார் அகலம் நல்குமேல்,
ஆழியால் காணுமோ, யாம்! 43

பகற்குறிக்கண் தலைமகன் சிறைப்புறத்தானாக, படைத்து மொழி கிளவியால்
தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய், செறிப்பு அறிவுறீஇ, வரைவு கடாயது

கொண்கன் பிரிந்த குளிர் பூம் பொழில் நோக்கி,
உண்கண் சிவப்ப அழுதேன் ஒளி முகம்
கண்டு, அன்னை, 'எவ்வம் யாது?' என்ன, 'கடல் வந்து என்
வண்டல் சிதைத்தது' என்றேன். 44

தலைமகனைத் தோழி வரைவு கடாதற்பொருட்டுத் தலைமகள்
வரைவு வேட்டுச் சொல்லியது

ஈர்ந் தண் பொழிலுள், இருங் கழித் தண் சேர்ப்பன்
சேர்ந்து, என் செறி வளைத் தோள் பற்றித் தெளித்தமை,—
மாந் தளிர் மேனியாய்!—மன்ற விடுவனவோ,
பூந் தண் பொழிலுள் குருகு? 45

பகற்குறி வந்து புணர்ந்து நீங்கும் தலைமகனைக் கண்ணுற்று நின்று
தோழி வரைவு கடாயது

ஓதம் தொகுத்த ஒலி கடல் தண் முத்தம்
பேதை மடவார் தம் வண்டல் விளக்கு அயரும்
கானல் அம் சேர்ப்ப! தகுவதோ, என் தோழி
தோள் நலம் தோற்பித்தல் நீ? 46

தோழிக்குத் தலைமகன் சொல்லியது; தோழற்குச் சொல்லியதூஉம் ஆம்

பெருங் கடல் உள் கலங்க, நுண் வலை வீசி,
ஒருங்குடன் தன்னைமார் தந்த கொழு மீன்
உணங்கல் புள் ஒப்பும் ஒளி இழை மாதர்
அணங்கு ஆகும், ஆற்ற எமக்கு. 47

தலைமகனைத் தோழி வரைவு கடாயது

எக்கர் இடு மணல்மேல் ஓதம் தர வந்த
நித்திலம் நின்று இமைக்கும் நீள் கழித் தண் சேர்ப்ப!
மிக்க மிகு புகழ் தாங்குபவோ, தற் சேர்ந்தார்
ஒற்கம் கடைப்பிடியாதார்? **48**

அல்லகுறிப்பட்டுப் பெயர்ந்தமை அறிய, தலைமகன் சிறைப்புறத்தானாக,
தோழி சொல்லியது

கொடு முள் மடல் தாழைக் கூம்பு அவிழ்ந்த ஒண் பூ
இடையுள் இழுது ஒப்பத் தோன்றி, புடை எலாம்
தெய்வம் கமழும் தெளி கடல் தண் சேர்ப்பன்
செய்தான், தெளியாக் குறி. **49**

அணி கடல் தண் சேர்ப்பன் தேர்ப் பரிமாப் பூண்ட
மணி அரவம் என்று, எழுந்து போந்தேன்; கனி விரும்பும்
புள் அரவம் கேட்டுப் பெயர்ந்தேன்,—ஒளியிழாய்!—
உள் உருகு நெஞ்சினேன் ஆய். **50**

## சிறப்புப் பாயிரம்

பண்பு உள்ளி நின்ற பெரியார் பயன் தெரிய,
வண் புள்ளி மாறன் பொறையன் புணர்த்து யாத்த
ஐந்திணை ஐம்பதும் ஆர்வத்தின் ஓதாதார்,
செந்தமிழ் சேராதவர்.

# திணைமொழி ஐம்பது

ஐந்திணை ஐம்பதைப் போன்று ஒவ்வொரு திணைக்கும் பப்பத்துப் பாடல்களைப் பெற்றுள்ளது இந் நூல். அந் நூலோடு வேறுபாடு தெரியத் திணைமொழி ஐம்பது என்று பெயர் குறித்தனர் போலும்! இரண்டும் ஒரே வகையான அமைப்பு உடைமையினாலே, இவற்றுள் ஏதேனும் ஒன்று ஒன்றற்கு வழிகாட்டியாய் இருந்திருக்கலாம். எது எதற்கு முன் மாதிரியாய் அமைந்தது என்பது உறுதியாகச் சொல்லக்கூடவில்லை.

இந் நூலில் குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்னும் அடைவில் ஐந்திணைகளும் அமைந்துள்ளன. இம்முறை அகப்பொருள் நிகழ்ச்சிகளின் போக்கிற்கு ஒத்ததாகும்.

புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல்,
ஊடல், இவற்றின் நிமித்தம் என்றிவை
தேருங்காலைத் திணைக்குரிப் பொருளே

என ஆசிரியர் தொல்காப்பியர் (தொல். பொருள். 14) உரிப் பொருளை வகுத்துள்ள முறையை இது பெரிதும் பின்பற்றியுள்ளது. தொல்காப்பியர் இரங்கல், ஊடல், என்று கூற, இந் நூல் ஊடல், இரங்கல், என்று கொள்கிறது. இது ஒன்று தவிர, மற்றைய திணைகளின் அமைப்பு பொருளின் போக்கிற்கு ஒத்த முறைவைப்பு ஆகும்.

இந் நூலை இயற்றியவர் கண்ணஞ் சேந்தனார். இவர் சாத்தந்தையாரின் புதல்வர். இவரது பெயரைக் கொண்டே இவர் வைதிக சமயச் சார்பினர் என்று கருதலாம். புறநானூற்றில் சோழன் போர்வைக்கோப் பெருநற்கிள்ளியைப் பாடிய சாத்தந்தையார் (புறம். 80-82, 287) என்னும் புலவரே கண்ணன் சேந்தனாரின் தந்தையார் என்று டாக்டர். உ.வே.சாமிநாதையர் அவர்கள் அந் நூலின் பாடினோர் வரலாற்றில் குறித்துள்ளார். இங்ஙனம் கொள்ளுதற்குப் பெயர் ஒற்றுமை தவிர வேறு ஒன்றும் இல்லை. இது கொண்டு இருவரும் ஒருவரே என்று துணிதல் இயலாது. கண்ணஞ் சேந்தனார் சங்கச் சான்றோர்க்குப் பின் வாழ்ந்த பிற்சான்றோர் ஆதலின், புறநானூற்றில் காணும் சாத்தந்தையார் இவர் தந்தையார் ஆகார். கார் நாற்பதின் ஆசிரியர் கண்ணங் கூத்தனார் என்று கூறப்படுதலின், சேந்தனாரும் கூத்தனாரும் ஒருகால் உடன் பிறந்தோராயிருத்தல் கூடும் என்று ஊகிக்க இடம் உண்டு.

இந் நூலில் உள்ள பாடல்கள் 50. இவை ஏனைய திணை நூல்களைப் போலவே பொருள் வளம் மிக்கவை.

யாழும் குழலும் முழவும் இயைந்தென
வீழும் அருவி விறல் மலை நல் நாட!
மாழை மான் நோக்கியும் ஆற்றாள்; இரவரின்,
ஊர் அறி கௌவை தரும்

என்ற பாடலின் (7) ஈற்றடியை ஒப்ப, 'குடத்து விளக்கேபோல்' என்று தொடங்கும் முத்தொள்ளாயிரப் பாடலின் ஈற்றடியும், 'நாடு அறி கௌவை தரும்' என்று உள்ளது. நச்சினார்க்கினியர் முதலியோர் இந் நூற் பாடல்கள் பலவற்றை மேற்கோளாகக் காட்டியுள்ளனர்.

இந் நூலுக்குப் பழைய பொழிப்புரை ஒன்று உள்ளது. வேறு சில உரைகளிற் போலப் பதசாரம், உள்ளுறைப் பொருள், இலக்கண விளக்கங்கள் என்னும் இன்னோரன்னவற்றை எடுத்துக் காட்டாவிடினும், பாடலின் பொருளைத் தெளிவாக இவ் உரை உணர்த்துகின்றது. பாடல்களுக்குப் பழைய துறைக் குறிப்புக்களும் அமைந்துள்ளன.

# திணைமொழி ஐம்பது

(கண்ணஞ் சேந்தனார்)

## 1. குறிஞ்சி

அஞ்சி அச்சுறுத்துவது

புகழ் மிகு சாந்து எறிந்து, புல் எரி ஊட்டி,
புகை கொடுக்கப் பெற்ற புலவோர் துகள் பொழியும்
வான் உயர் வெற்ப! இரவின் வரல் வேண்டா,
யானை உடைய சுரம். 1

செறிப்பு அறிவுறீஇ வரைவு கடாயது

கண முகை கை எனக் காந்தள் கவின,
'மண முகை' என்று எண்ணி, மந்தி கொண்டாடும்
விறல் மலை நாட! வரவு அரிதாம்கொல்லோ?
புனமும் அடங்கின காப்பு. 2

தலைமகன் சிறைப்புறத்தானாக, தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது

ஓங்கல் இறு வரைமேல் காந்தள் கடி கவின,
பாம்பு என ஓடி, உரும் இடிப்ப, கண்டு இரங்கும்
பூங் குன்ற நாடன் புணர்ந்த அந் நாள் போலா,
ஈங்கு நெகிழ்ந்த, வளை. 3

தலைமகனைத் தோழி இரவுக்குறி நயப்பித்தது

ஏனம் இடந்திட்ட ஈர் மணி கொண்டு, எல்லிடை,
கானவர் மக்கள் கனல் எனக் கை காய்த்தும்
வான் உயர் வெற்பன் வருவான்கொல், என் தோழி
மேனி பசப்புக் கெட? 4

பின்னின்ற தலைமகனைக் காவல் மிகுதி சொல்லிச் சேட்படுத்தது

விரை கமழ் சாரல் விளை புனம் காப்பார்
வரையிடை வாரன்மின்;—ஐய!—உரை கடியர்;
வில்லினர்; வேலர்; விரைந்து செல் அம்பினர்;
கல்லிடை வாழ்நர் எமர். 5

யானை உழலும் அணி கிளர் நீள் வரைக்
கானக வாழ்க்கைக் குறவா மகளிரேம்;
ஏனலுள்,—ஐய!—வரவு மற்று என்னைகொல்?
காணினும், காய்வர் எமர். 6

இரவுக்குறி விலக்கி வரைவு கடாயது

யாழும் குழலும் முழவும் இயைந்தென
வீழும் அருவி விறல் மலை நல் நாட!
மாழை மான் நோக்கியும் ஆற்றாள்; இர வரின்,
ஊர் அறி கௌவை தரும். 7

(சேட்) படை

வேங்கை மலர, வெறி கமழ் தண் சிலம்பின்
வாங்கு அமை மென் தோள் குறவர் மகளிரேம்;
சோர்ந்து குருதி ஒழுக, மற்று இப் புறம்
போந்தது இல்,—ஐய!—களிறு. 8

தோழி தலைமகனை இரவுக்குறி நயப்பித்தது

பிணி நிறம் தீர்ந்து, பெரும் பணைத்தோள் வீங்க,
மணி மலை நாடன் வருவான்கொல்,—தோழி!—
கணி நிற வேங்கை மலர்ந்து, வண்டு ஆர்க்கும்
மணி நிற மாலைப் பொழுது? 9

தலைமகன் சிறைப்புறத்தானாக, படைத்து மொழி கிளவியால்,
தோழி வரைவு கடாயது

பலவின் பழம் பெற்ற பைங் கண் கடுவன்,
'எல!' என்று இணை பயிரும் ஏகல் சூழ் வெற்பன்
புலவும்கொல்?—தோழி!—புணர்வு அறிந்து, அன்னை
செலவும் கடிந்தாள், புனத்து. 10

## 2. பாலை

தலைமகனது செலவு உணர்ந்து, வேண்டாத மனத்தாளாய், தலைமகள்
தோழிக்குச் சொல்லியது

கழுநீர் மலர்க் கண்ணாய்! கௌவையோ நிற்க,
பொருள் நீரார் காதலர் பொய்த்தனர், நீத்தார்—
அழி நீர ஆகி, அரித்து எழுந்து தோன்றி,
வழி நீர் அறுத்த சுரம். 11

'யான் பிரியத் தலைமகள் ஆற்றுமோ? நீ அறிவாயாக!' என்ற தலைமகற்குத் தோழி சொல்லியது

முரி பரல ஆகி, முரண் அழிந்து தோன்றி,
எரி பரந்த கானம் இவை பொருட்குப் போவீர்;
அரி பரந்த உண்கண்ணாள் ஆற்றுமை நும்மின்
தெரிவார் யார், தேரும் இடத்து? 12

பருவம் கண்டு அழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது

ஓங்கு குருந்தோடு அரும்பு ஈன்று பாங்கர்
மராஅ மலர்ந்தன, தோன்றி; விராஅய்க்
கலந்தனர் சென்றார் வலந்த சொல் எல்லாம்—
பொலந்தொடீஇ!—பொய்த்த குயில். 13

புன்கு பொரி மலரும் பூந் தண் பொழில் எல்லாம்
செங் கண் குயில் அகவும் போழ்து கண்டும்,
பொருள் நசை உள்ளம் துரப்ப, துறந்தார்
வரு நசை பார்க்கும், என் நெஞ்சு. 14

'ஆற்றாள்!' எனக் கவன்ற தோழிக்கு, 'ஆற்றுவல்' என்பதுபடச் சொல்லியது

சிறு புன் புறவொடு சிற்றெழால் சீறும்
நெறி அரு நீள் சுரத்து அல்குவர்கொல்,—தோழி!—
முறி எழில் மேனி பசப்ப, அருள் ஒழிந்து,
ஆர் பொருள் வேட்கையவர்? 15

புணர்ந்து உடன்போகிய தலைமகன் தலைமகளை ஆற்றுவித்துக் கொண்டு சொல்லியது

கருங் கால் மராஅ நுணவோடு அலர,
இருஞ் சிறை வண்டுஇனம் பாலை முரல,—
அரும்பிய முள் எயிற்று அம் சொல் மடவாய்!—
விரும்பு, நாம் செல்லும் இடம். 16

'ஆற்றாள்!' எனக் கவன்ற தோழிக்கு, 'ஆற்றுவல்' என்பதுபடச் சொல்லியது

கல் அதர் வாயில், கடுந் துடிகள் பம்பும்
வில் உழுது வாழ்நர் குறும்புள்ளும், போவர்கொல்—
எல் வளை மென் தோள் நெகிழ, பொருள் நசைஇ,
நல்காத் துறந்த நமர்? 17

செலவுக் குறிப்பு அறிந்த தலைமகள் உடன்படாது சொல்லியது

கதிர் சுட, கண் உடைந்து, முத்தம் சொரியும்
வெதிர் பிணங்கும் சோலை வியன் கானம் செல்வார்க்கு
எதிர்வன போலிதே? எல் வளையோ, கொன்னே
உதிர்வன போல உள! 18

'ஆற்றாள்!' எனக் கவன்ற தோழிக்கு, 'ஆற்றுவல்' என்பதுபடச் சொல்லியது

கலையொடு மான் இரங்கு கல் அதர் அத்த
நிலை அஞ்சி, நீள் சுரத்து அல்குவர்கொல் ?—தோழி!—
முலையொடு சோர்கின்ற, பொன் வண்ணம்; அன்னோ!
வளையொடு சோரும், என் தோள். 19

மகட் போக்கிய நற்றாய் சொல்லியது

ஏற்றிய வில்லின் எயினர் கடுஞ் சுரம்,
பாற்றினம் சேரப் படுநிழல் கண்டு அஞ்சி,
கூற்று அன வல் வில் விடலையோடு என் மகள்
ஆற்றும்கொல், ஐய நடந்து? 20

## 3. முல்லை

தலைமகன் வரைவு மலிந்தது தோழி தலைமகட்குச் சொல்லியது

அஞ்சனம் காயா மலர, குருகிலை
ஒண் தொடி நல்லார் முறுவல் கவின் கொள,
தண் கமழ் கோடல் துடுப்பு ஈன, காதலர்
வந்தார்; திகழ்க, நின் தோள்! 21

தோழி பருவம் காட்டி, தலைமகளை வற்புறுத்தியது

மென் முலைமேல் ஊர்ந்த பசலை மற்று என் ஆம்கொல்?—
நல் நுதல் மாதராய்!—ஈதோ நமர் வருவர்;
பல் நிற முல்லை அரும்ப, பருவம் செய்து,
இன் நிறம் கொண்டது, இக் கார். 22

சென்றார் வருவர்; செறிதொடீஇ! கார் இஃதோ,
வெஞ் சின வேந்தர் முரசின் இடித்து உரறி,
தண் கடல் நீத்தம் பருகி, தலைசிறந்து,
இன்றையின் நாளை மிகும். 23

செஞ் சுணங்கின் மென் முலையாய்! சேர் பசலை தீர்; இஃதோ
வஞ்சினம் சொல்லி வலித்தார் வரு குறியால்;
வெஞ் சினம் பொங்கி, இடித்து உரறிக் கார் வானம்
தண் பெயல் கான்ற, புறவு. 24

கரு இயல் கார் மழை கால் கலந்து ஏந்த,
உருகு மட மான் பிணையோடு உகளும்;—
உருவ முலையாய்!—நம் காதலர் இன்னே
வருவர்; வலிக்கும் பொழுது. 25

இருங் கடல் மாந்திய ஏர் கொள் எழிலி
கருங் கொடி முல்லை கவின முழங்கி,
பெரும் பெயல் தாழ, பெயர் குறி செய்தார்;
பொருந்த நமக்கு உரைத்த போழ்து. 26

ஆயர் இனம் பெயர்த்து, ஆம்பல் அடைதர,
பாய முழங்கி, படு கடலுள் நீர் முகந்து,
மா இரு ஞாலம் இருள் கூர் மருள் மாலை—
சேயவர், செய்த குறி. 27

பருவம் காட்டிய தோழி வற்புறுத்தியது

அதிர் குரல் ஏறோடு அலை கடல் மாந்தி,
முதிர் மணி நாகம் அனுங்க முழங்கி,
கதிர் மறை மாலை, கனை பெயல் தாழ,
பிதிரும் முலைமேல், சுணங்கு. 28

கோடல்அம் கூர் முகை கோள் அரா நேர் கருத,
காடு எலாம் கார் செய்து, முல்லை அரும்பு ஈன,
ஆறு எலாம் நுண் அறல் வார, அணியிழாய்!
போதராய்; காண்பாம், புறவு. 29

அருவி அதிர, குருகிலை பூப்ப,
தெரி ஆ இனநிரை தீம் பால் பிலிற்ற,—
வரி வளைத் தோளி!—வருவார் நமர்கொல்?
பெரிய மலர்ந்தது இக் கார். 30

## 4. மருதம்

தலைமகள் வாயில் மறுத்தது

பழனம் படிந்த படு கோட்டு எருமை
கழனி வினைஞர்க்கு எறிந்த பறை கேட்டு,
உரன் அழிந்து, ஓடும் ஒலி புனல் ஊரன்
கிழமை உடையன், என் தோட்கு. 31

கணைக் கால் நெடு மருது கான்ற நறுந் தாது
இணைக் கால நீலத்து இதழ்மேல் சொரியும்
பணைத் தாட் கதிர்ச் செந்நெல் பாய் வயல் ஊரன்
இணைத்தான், எமக்கும் ஓர் நோய். 32

தோழி வாயில் மறுத்தது

கடையாயார் நட்பேபோல், காஞ்சி நல் ஊர!
உடைய இள நலம் உண்டாய்; கடை, அக்
கதிர் முலை ஆகத்துக் கண் அன்னார் சேரி
எதிர் நலம் ஏன்று நின்றாய். 33

தலைமகள் பாணற்கு வாயில் மறுத்தது

செந்நெல் விளை வயல் ஊரன், சில பகல்,
தன் நலம் என் அலார்க்கு ஈயான்; எழு—பாண!—
பாரித்த அல்குல் பணைத்தோளார் சேரியுள்,
வாரிக்குப் புக்கு, நின்று, ஆய்! 34

வேனில் பருவத்து எதிர் மலர் ஏற்று ஊதும்
கூனி வண்டு அன்ன குளிர் வயல் நல் ஊரன்
மாண் இழை நல்லார் இள நலம் உண்டு, அவர்
மேனி ஒழியவிடும். 35

தோழி வாயில் நேர்வாள் கூறியது

செந்தாமரை மலரும் செய் வயல் நல் ஊர!
நொந்தால் மற்று உன்னைச் செயப்படுவது என் உண்டாம்—
தந்தாயும் நீயே; தர வந்த நல் நலம்
கொண்டாயும் நீ ஆயக்கால்? 36

பாணற்குத் தலைமகள் வாயில் மறுத்தது

பல் காலும் வந்து பயின்று உரையல்!— பாண!—கேள்:
நெல் சேர் வள வயல் ஊரன் புணர்ந்த நாள்,
எல் வளையம்; மென் தோளேம்; எங்கையர்தம் போல
நல்லவருள் நாட்டம் இலேம். 37

நல் வயல் ஊரன் நலம் உரைத்து, நீ—பாண!—
சொல்லின் பயின்று உரைக்க வேண்டா; ஒழிதி, நீ!
எல்லு நல் முல்லைத் தார் சேர்ந்த இருங்கூந்தல்
சொல்லும், அவர் வண்ணம் சோர்வு. 38

வாயில் வேண்டிச் சென்றார்க்குத் தலைமகள் வாயில் மறுத்தது

கருங் கயத்து ஆங்கண் கழுமிய நீலம்
பெரும் புற வாளைப் பெடை கதூஉம் ஊரன்
விரும்பு நாள் போலான்; வியல் நலம் உண்டான்;
கரும்பின் கோது ஆயினேம் யாம். 39

'இந் நிலத்தின்கண் இன்ன டெற்றியால் வருவாயாக!' எனச் சொல்லியது

ஆம்பல் அணித் தழை ஆரம் துயல்வரும்
தீம் புனல் ஊரன் மகள் இவள்; ஆய்ந்த நறுந்
தே மலர் நீலம் பிணையல்; செறி மலர்த்
தாமரை, தன்னையர் பூ. 40

## 5. நெய்தல்

அல்லகுறிப்பட்டுப் பெயர்ந்த தோழி, தலைமகன் சிறைப்புறத்தானாக, தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது

நெய்தல் படப்பை நிறை கழித் தண் சேர்ப்பன்
கைதை சூழ் கானலுள் கண்ட நாள்போல் ஆனான்;
செய்த குறியும் பொய் ஆயின;—ஆயிழையாய்!—
இதுகொல், ஆன்றார் தொடர்பு? 41

தோழி வரைவு கடாயது

முத்தம் அரும்பும் முடத் தாள் முது புன்னை
தத்தும் திரை தயங்கும் தண் அம் கடற் சேர்ப்ப!
சித்திரப் பூங் கொடி அன்னாட்கு அருளீயாய்,
வித்தகப் பைம் பூண் நின் மார்பு! 42

அல்லகுறிப்பட்டுப் பெயர்ந்த தோழி, தலைமகன் சிறைப்புறத்தானாக, தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது

எறி சுறா நீள் கடல் ஓதம் உலாவ,
நெறி இறாக் கொட்கும் நிமிர் கழிச் சேர்ப்பன்,—
அறிவு அறா இன் சொல் அணியிழையாய்!—நின் இல்
செறிவு அறா, செய்த குறி. 43

தலைமகனைக் கண்ணுற்று நின்ற தோழி வரைவு கடாயது

இன மீன் இருங் கழி ஓதம் உலாவ,
மணி நீர் பரக்கும் துறைவ! தகுமோ—
குண நீர்மை குன்றாக் கொடி அன்னாள் பக்கம்
நினை நீர்மை இல்லா ஒழிவு? 44

கடல் கொழித்திட்ட கதிர் மணி முத்தம்
படம் அணி அல்குல் பரதர் மகளிர்
தொடலை சேர்த்து ஆடும் துறைவ! என் தோழி
உடலும், உறு நோய் உரைத்து. 45

முருகு இயல் கானல் அகன் கரை ஆங்கண்
குருகுஇனம் ஆர்க்கும் கொடுங் கழிச் சேர்ப்ப!
மருவி வரலுற வேண்டும், என் தோழி
உரு அழி உள் நோய் கெட. 46

தலைமகன் சிறைப்புறத்தானாக, தோழியால் சொல் எடுப்பப்பட்டு, தலைமகள் சொல்லியது

அணி பூங் கழிக் கானல், அற்றை நாள் போலான்;
மணி எழில் மேனி மலர் பசப்பு ஊர,
துணி கடற் சேர்ப்பன் துறந்தான்கொல்?—தோழி!—
தணியும், என் மென் தோள் வளை. 47

தோழி தலைமகளை இரவுக்குறி நயப்பித்தது

கறங்கு மணி நெடுந் தேர் கண் வாள் அறுப்ப,
பிறங்கு மணல்மேல் அலவன் பரப்ப,
வறம் கூர் கடுங் கதிர் வல் விரைந்து நீங்க,
நிறம் கூரும் மாலை வரும். 48

தலைமகன் பாங்கற்குச் சொல்லியது

மயில்கொல்? மடவாள்கொல்? மாநீர்த் திரையுள்
பயில்வதோர் தெய்வம்கொல்?—கேளீர்!—குயில் பயிரும்
கன்னி இள ஞாழல் பூம் பொழில் நோக்கிய
கண்ணின் வருந்தும், என் நெஞ்சு. 49

பகற்குறிக்கண் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய், தோழி வரைவு கடாயது

பவழமும் முத்தும் பளிங்கும் விரைஇ,
புகழக் கொணர்ந்து, புறவு அடுக்கும் முன்றில்,
தவழ் திரைச் சேர்ப்பன் வருவான்கொல்?—தோழி!—
திகழும், திரு அமர் மார்பு. 50

# கைந்நிலை

'கை' என்பது இங்கே ஒழுக்கம் என்று பொருள்படும். எனவே, கைந்நிலை என்பதற்கு ஒழுகலாறு பற்றியது என்று பொருள் உரைக்கலாம். ஐந்திணை ஒழுக்கம் பற்றியதே இந் நூலும். ஒவ்வொரு திணைக்கும் பன்னிரண்டு பாடலாக அறுபது பாடல்கள் இந் நூலில் உள்ளன. பாடல் அளவைக் கொண்டும், நூற் பொருளை ஒட்டியும் இதனை 'ஐந்திணை அறுபது' என்று வழங்குதல் பொருத்தமாகலாம். ஆயினும், இவ்வாறு இதனை வழங்குவது இல்லை. 'கைந்நிலையும் ஆம் கீழ்க்கணக்கு' எனப் பதினென் கீழ்க்கணக்கு நூல்களைத் தொகுத்து உரைக்கும் பழம் பாடலிலும், 'சிறு கைந்நிலை அறுபது ஆகும்' என்று பிரபந்த தீபிகையிலும், இந் நூல் சுட்டப் பெறுகிறது. ஐந்திணை பற்றிய வெண்பா நூல்கள் வேறு இருத்தலின், அவற்றினும் வேற்றுமை தெரிதற்பொருட்டு, ஆசிரியரே 'கைந்நிலை' என்று இந் நூற்குப் பெயர் சூட்டியும் இருக்கலாம்.

இந் நூலில் குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல், என்ற வரிசை முறையில் ஐந்திணைகளும் அமைந்துள்ளன. திணைமொழி ஐம்பதும் இவ் வகை வரிசை முறையிலே அமைந்திருத்தல் கவனித்தற்கு உரியது. இந் நூற் செய்யுட்களில் 18 பாடல்கள் சிதைந்துள்ளன (1, 8, 14-17, 20, 26-35, 38). இவற்றுள் மூன்று பாடல்கள் ஒரு சொல் அளவில் சிதைவுபட்டவை. ஏனைய பதினைந்தும் அடிகளும் சொற்களும் பல வேறு வகையில் சிதைந்து காண்கின்றன. எவ்வகையான சிதைவும் இன்றி உள்ளவை இறுதியிலுள்ள நெய்தல் திணைப் பகுதியில் அமைந்துள்ள பாடல்களே.

இந் நூலைச் செய்தவர் **மாறோக்கத்து முள்ளிநாட்டு நல்லூர்க் காவிதியார் மகனார் புல்லங்காடனார்** என்பது நூல் இறுதிக் குறிப்பில் காண்கிறது. எனவே, நூலாசிரியர் பெயர் புல்லங்காடனார் என்பதாம். இவர் தந்தையார் காவிதியார் எனப்படுதலின், அரசனால் 'காவிதி' என்னும் சிறப்புப் பெயர் அளிக்கப் பெற்றவர்போலும்! மாறோக்கம் என்பது கொற்கையைச் சூழ்ந்துள்ள பகுதியைக் குறிக்கும். எனவே, இவர் கொற்கையை அடுத்த முள்ளி நாட்டு நல்லூரில் வாழ்ந்தவராவர்.

> பொன்னம் பசலையும் தீர்ந்தது;—பூங்கொடி!—
> தென்னவன் கொற்கைக் குருகு இரிய, மன்னரை
> ஓடு புறங்கண்ட ஒண் தாரான் தேர் இதோ,
> கூடல் அணைய வரவு

என்ற இந் நூல் இறுதிப் பாடலில் (60) பாண்டியனையும் கொற்கை நகரையும் இவர் குறிப்பிடுவதும் சிந்தித்தற்குரியது.

இந் நூற் பாடல்களும் பிற அகப் பொருள் நூற் பாடல்களை ஒத்த சிறப்புடையனவே. திணைமாலை நூற்றைம்பதில் போலத் 'தாரா' (40) என்ற பறவைப் பெயர் வந்துள்ளது. பாசம் (3), ஆசை (3), இரசம் (5), கேசம் (12), இடபம் (36), உத்தரம் (48), முதலிய வடசொற்களையும் இதன்கண் காணலாம். ஐந்திணை அடை

வில் இது திணைமொழி ஐம்பதை ஒத்துள்ளது. அறுபது பாடல்களையுடைய இந் நூலும் திணைமொழி ஐம்பது முதலிய அகப் பொருள் நூல்களின் காலத்தை அடுத்துத் தோன்றியதாதல் கூடும்.

இந் நூற் செய்யுட்களை இளம்பூரணர் முதலிய பழைய உரைகாரர் எடுத்தாண்டுள்ளனர். நூல் முழுமைக்கும் பழைய உரை கிடைக்கவில்லை. 18 முதல் 26 வரையிலும், 35 முதல் 43 வரையிலும், 53 முதல் 60 வரையிலும் உள்ள பாடல்களுக்கு உரிய உரைப் பகுதியே கிடைத்துள்ளது. இப் பகுதியிலுங்கூட ஒரு சில பாடல்களின் உரைப்பகுதி அங்கங்கே சிதைவுற்றுள்ளது. உரையுள்ள பாடல்களில் பெரும்பாலனவற்றிற்குக் கிளவிக் குறிப்புக்களும் கிடைத்துள்ளன.



# கைந்நிலை

(புல்லங்காடனார்)

## 1. குறிஞ்சி

[1 முதல் 17 வரை துறைக்குறிப்புக்கள் கிடைக்கப்பெறவில்லை]

நுகர்தல் இவரும் கிளி கடி ஏனல்
நிகர் இல் மட மான் நெரியும் மம . . . சாரல்
கானக நாடன் கலந்தான்இலன் என்று,
மேனி சிதையும், பசந்து. 1

வெந்த புனத்துக்கு வாசம் உடைத்தாகச்
சந்தனம் ஏந்தி, அருவி கொணர்ந்திடூஉம்
வஞ்ச மலை நாடன் வாரான்கொல்?—தோழி!—என்
நெஞ்சம் நடுங்கி வரும்! 2

பாசிப் பசுஞ் சுனைப் பாங்கர், அழி முது நீர்
காய் சின மந்தி பயின்று, கனி சுவைக்கும்,
பாசம் பட்டு ஓடும் படு கல் மலை நாடற்கு
ஆசையின் தேம்பும், என் நெஞ்சு. 3

ஓங்கல் விழுப் பலவின் இன்பம் கொளீஇய
தீம் கனி மாவின் முசுப் பாய் மலை நாடன்
தான் கலந்து உள்ளாத் தகையனோ,—நேரிழாய்!—
தேம் கலந்த சொல்லின் தெளித்து? 4

இரசம் கொண்டு இன் தேன் இரைக்கும் குரலைப்
பிரசை இரும் பிடி பேணி வரூஉம்
முரசு அருவி ஆர்க்கும் மலை நாடற்கு, என் தோள்
நிரையம் எனக் கிடந்தவாறு! 5

மரையா உகளும் மரம் பயில் சோலை,
உரை சால் மட மந்தி ஒடி உகளும்
புரை தீர் மலை நாடன் பூண் ஏந்து அகலம்
உரையா வழங்கும், என் நெஞ்சு. 6

கல் வரை ஏறி, கடுவன், கனி வாழை
எல் உறு போழ்தின் இனிய பழம் கவுள் கொண்டு,
ஒல்லென ஓடும் மலை நாடன் தன் கேண்மை
சொல்ல, சொரியும், வளை. 7

கருங் கைக் கத வேழம், கார்ப் பாம்புக் குப்பங்
கி. . . க் கொண். . . . . . . . . . . . . . . . . . கரும்
பெருங் கல் மலை நாடன் பேணி வரினே,
சுருங்கும், இவள் உற்ற நோய். 8

காந்தள் அரும் பகை என்று, கத வேழம்
ஏந்தல் மருப்பிடைக் கை வைத்து, இனன் நோக்கி,
பாய்ந்து எழுந்து ஓடும் பய மலை நல் நாடன்
காய்ந்தான்கொல், நம்கண் கலப்பு? 9

பொன் இணர் வேங்கைப் புனம் சூழ் மலை நாடன்,
மின்னின் அனைய வேல் ஏந்தி, இரவினுள்
இன்னே வரும்கண்டாய்—தோழி!—இடை யாமத்து
என்னை இமை பொருமாறு? 10

எறி கிளர் கேழல் கிளைத்திட்ட பூழி
பொறி கிளர் மஞ்ஞை புகன்று குடையும்
முறி கிளர் நல் மலை நாடன் வருமே—
அறி துறைத்து, இவ் அல்லில் நமக்கு. 11

நாக நறு மலர், நாள் வேங்கைப் பூ, விரவி,
கேசம் அணிந்த கிளர் எழிலோள் ஆக,
'முடியும்கொல்?' என்று முனிவான் ஒருவன்
வடி வேல் கை ஏந்தி, வரும். 12

## 2. பாலை

கடுகி அதர் அலைக்கும் கல் சூழ் பதுக்கை
விடு வில் எயினர்தம் விளி ஓர்த்து ஓடும்
நெடு இடை அத்தம் செலவு உரைப்பக் கேட்டே,
நடுவிடை மெல்கின, கண். 13

கத நாய் துரப்ப,.... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... ... ... ... ...யவிழும்
புதல் மாறு வெங் கானம் போக்கு உரைப்ப, நில்லா,
முதன்... ... ... ... 14

... ... ... ... ... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... ... ... ... ... ...
கடுங் கதிர் வெங் கானம் பல் பொருட்கண் சென்றூர்,
கொடுங் கல் மலை... ... ... ... ... ... ... 15

... ... ...வுறையும் மெல்லென் கடத்து, ... ... ...
கடுஞ் சின வேங்கை கதழ் வேழம் சாய்க்கு
... ... ... ... ... ... ... ... ... ... ... ...
... ... ... ... ...நமர். 16

கடமா இரிந்தோடும் கல் அதர் அத்தம்,
மட மா இரும்பிடி வேழ மரு... ... ... ... ... ...
... ... ...ண்ட வுண் கண்ணுள் நீர்... ... ... ...
... ... ... ... ... ... ... 17

பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது

ஆமா சிலைக்கும் அணி வரை ஆரிடை,
ஏ மாண் சிலையார்க்கு இன மா இரிந்து ஓடும்
தாம் மாண்பு இல் வெஞ் சுரம் சென்றூர் வரக் கண்டு,
வாய் மாண்ட பல்லி படும். 18

[19, 20-ஆம் பாடல்களின் துறைக் குறிப்புக்கள் மறைந்துபட்டன.]

அரக்கு ஆர்ந்த ஓமை அரி படு நீழல்,
செருக்கு இல் கடுங் களிறு சென்று உறங்கி நிற்கும்,
பரல் கானம் பல் பொருட்குச் சென்றூர் வருவர்;
நுதற்கு இவர்ந்து ஏறும், ஒளி. 19

... ... ... ... ... ... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... ... ... ... ...விழ்க்கும்
ஓவாத வெங் கானம் சென்றூர்... ... ... ... ...
... ... ...வார் வருவார், நமர். 20

பிரிவிடை ஆற்ருத தலைவி தோழிக்குச் சொல்லியது

ஆந்தை குறுங்கலி கொள்ள, நம் ஆடவர்
காய்ந்து கதிர் தெறூஉம் கானம் கடந்தார் பின்,—
ஏந்தல் இள முலை ஈர் எயிற்ருய்!—என் நெஞ்சு
நீந்தும், நெடு இடைச் சென்று. 21

பிரிவிடை வேறுபட்ட கிழத்தியைத் தோழி வற்புறுத்தியது

கள்வர் திரிதரூஉம் கானம் கடந்தவர்
உள்ளம் பிரிந்தமை நீ அறிதி;— ஒள்ளிழாய்!—
தொல்லை விடரகம் நீந்திப் பெயர்ந்து, அவர்
வல்லை நாம் காணும் வரவு. 22

'ஆற்ருள்!' எனக் கவன்ற தோழிக்கு, 'ஆற்றுவல்' என்பதுபடச் சொல்லியது

சிலை ஒலி வெங் கணையர், சிந்தியா நெஞ்சின்
கொலை புரி வில்லொடு கூற்றுப்போல், ஓடும்
இலை ஒலி வெங் கானத்து, இப் பருவம் சென்ருர்
தொலைவு இலர்கொல்—தோழி!—நமர்? 23

வெஞ் சுரம் தேர் ஓட வெஃகி நின்று, அத்த மாச்
சிந்தையால் நீர் என்று செத்து, தவா ஓடும்
பண்பு இல் அருஞ் சுரம் என்பவால்—ஆய்தொடி!—
நண்பு இலார் சென்ற நெறி. 24

## 3. முல்லை

தலைமகளைத் தோழி பருவம் காட்டி வற்புறுத்தியது

கார் செய் புறவில் கவினிக் கொடி முல்லை
கூர் எயிறு ஈன, குருந்து அரும்ப, ஒரும்
வருவர் நம் காதலர்;—வாள் தடங் கண்ணய்!—
பருவரல், பைதல் நோய் கொண்டு! 25

[26 முதல் 36 வரை துறைக் குறிப்புக்கள் இறந்துபட்டன.]

குருதி மலர்த் தோன்றி கூர் முகை ஈன,
... ...சேவல் எனப் பிடவம் ஏறி,
பொரு தீ என வெருளும்;—பொன் நேர் நிறத்தாய்!—
அரிது, அவர் வாராவிடல். 26

... ... ... ... ... ... ... ... ...
... ... ... ... ... ஒல்கப் புகுதரு
கார் தரு மாலை கலந்தார் வரவு உள்ளி,
ஊர்தரும், மேனி பசப்பு. 27

... ... ... ... ... ... ... ... ...
... ...பெய்த புறவில் கடுமான் தேர்
ஒல்லைக் கடாவார்; இவர்காணின் காதலர்;
சில்... ... ... ... ... 28

... ... ... ... ...குருந்து அலர,
பீடு ஆர் இரலை பிணை தழுவ, காடு ஆர,
கார் வானம் வந்து முழங்... ... ...
... ... ... ... ... ... 29

... ... ... ... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... ... ... ... ...
கொன்றைக் கொடுங் குழல் ஊதிய கோவலர்
மன்றம் புகுதரும் போழ்து. 30

... ... ... ... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... ... ... ... ...
... ... ... ... வானம்
வந்து துளி வழங்கக் கண்டு. 31

கார் எதிர் வானம் கதழ் எரி சி... ...
... ... ... ... ... ... ... ... ... ...
... ... ...லக மெழு நெஞ்சே! செல்லாயால்,
கூர் எரி மாலைக் குறி. 32

தளை அவிழ் தே... ... ... ...
... ... ... ... ... ...
உளையார் கலி நன் மாப் பூட்டி வருவார்,
களையாரோ, நீ உற்ற நோய்? 33

முல்லை எயிறு ஈன, ... ... ...
... ... ... ...ன மல்கி,
கடல் முகந்து கார் பொழிய, காதலர் வந்தார்:
உடன் இயைந்த கெ ... ... 34

... ... ... ... ... ... ...
... ... ...ாடைப் பால் வாய் இடையர்
தெரிவிலர் தீம் குழல் ஊதும் பொழுதால்,
அரித ... ... ... 35

பிடவம் குருந்தொடு பிண்டி மலர,
மடவ மயில் கூவ, மந்தி மா கூர,—
தட மலர்க் கோதையாய்!—தங்கார் வருவர்,
இடபம் எனக் கொண்டு, தாம். 36

## 4. மருதம்

பாணற்குத் தலைமகள் வாயில் மறுத்தது

கழனி உழவர் கலி அஞ்சி ஓடி,
தழென மத எருமை தண் கயம் பாயும்
பழன வயல் ஊரன் பாண! எம் முன்னர்,
பொழெனப் பொய் கூறுது, ஒழி. 37

பரத்தைமாட்டுப் பயின்று வரும் தலைமகனைப் புலந்து, தலைமகள் சொல்லியது

கயல்இனம் பாயும் கழனி நல் ஊர!
நயம் இலேம்; எம் மனை இன்றேடு வாரல்;
துயில் இன் இள முலையார் தோள் நயந்து வாழ் நின்,
குயி... ... ... கொண்டு. 38

[இதன் துறைக்குறிப்பு மறைந்துபட்டது.]

முட்ட முது நீர் அடை கரை மேய்ந்து எழுந்து,
தொட்ட வரி வரால் பாயும் புனல் ஊரன்
கட்டு அலர் கண்ணிப் புதல்வனைக் கொண்டு, எம் இல்
சுட்டி அலைய வரும். 39

வாயில் வேண்டிய பாணற்குத் தோழி வாயில் மறுத்தது

தாரா இரியும் தகை வயல் ஊரனை
வாரான் எனினும், 'வரும்' என்று, சேரி
புலப்படும் சொல்லும், இப் பூங் கொடி அன்னாள்
கலப்புஅடும்; கூடும்கொல் மற்று? 40

வாயிலாகிய பாணற்குத் தலைவி வாயில் மறுத்தது

பொய்கை நல் ஊரன் திறம் கிளப்ப, என் உடையை?
அஃது அன்று எனினும், அறிந்தேம் யாம் செய்தி
நெறியின்,—இனிய சொல் நீர் வாய் மழலைச்
சிறுவன் எமக்கு உடைமையால். 41

நீத்த நீர் ஊரன் நிலைமையும், வண்ணமும்,
யார்க்கு உரைத்தி—பாண!—அதனால் யாம் என் செய்தும்?
கூத்தனைக் கொண்டு, குறை நீ உடையையேல்,
ஆட்டுவித்து உண்ணினும் உண். 42

போது அவிழ் தாமரைப் பூந் துறை ஊரனைத்
தாது அவிழ் கோதைத் தகை இயலார் தாம் புலப்பர்;
ஏதின்மை சொல்லி இருப்பர், பிறர் மகளிர்,
பேதைமை தம்மேலே கொண்டு. 43

[44 முதல் 53 வரை துறை பற்றிய குறிப்புக்கள் கிடைக்கவில்லை.]

தண் துறை ஊரன்,—தட மென் பணைத் தோளாய்!—
'வண்டு ஊது கோதை வகை நாடிக்கொண்டிருந்து,
கோல வன முலையும் புல்லினான்' என்று எடுத்து,
சாலவும் தூற்றும், அலர். 44

மூத்தேம், இனி;—பாண!—முன்னாயின், நாம் இளையேம்;
கார்த் தண் கலி வயல் ஊரன், கடிது, எமக்குப்
பாத்து இல் பய மொழி பண்பு பல கூறி,
நீத்தல் அறிந்திலேம், இன்று. 45

கய நீர்நாய் பாய்ந்து ஓடும் காஞ்சி நல் ஊரன்,
நயமே பல சொல்லி, நாணினன் போன்றான்;—
பயம் இல் யாழ்ப் பாண!—பழுது ஆய கூறாது,
எழு நீ போ, நீடாது மற்று. 46

அரக்கு ஆம்பல், தாமரை, அம் செங்கழுநீர்,
ஒருக்கு ஆர்ந்த வல்லி, ஒலித்து ஆரக் குத்தும்
செருக்கு ஆர் வள வயல் ஊரன் பொய்,—பாண!—
இருக்க, எம் இல்லுள் வரல். 47

கொக்கு ஆர் வள வயல் ஊரன் குளிர் சாந்தம்
மிக்க வன முலை புல்லான், பொலிவு உடைத்தா;—
தக்க யாழ்ப் பாண!—தளர் முலையாய் மூத்து அமைந்தார்
உத்தரம் வேண்டா; வரல். 48

## 5. நெய்தல்

நாவாய் வழங்கு நளி திரைத் தண் கடலுள்
ஓவா கலந்து ஆர்க்கும் ஒல்லென் இருக்குப்பை!
பா ஆர் அம் சேர்ப்பற்கு உரையாய்—பரியாது,
நோயால் நுணுகியவாறு. 49

நெடுங் கடல் தண் சேர்ப்ப! நின்னோடு உரையேன்;
ஒடுங்கு மடல் பெண்ணை அன்றிற்கும் சொல்லேன்;
கடுஞ் சூளின் தான் கண்டு, கானலுள் மேயும்
தடந் தாள் மட நாராய்! கேள். 50

மணி நிற நெய்தல் மலர் புரையும் கண்ணாய்!
அணி நலம் உண்டு இறந்து, (ந)ம் அருளா விட்ட
துணி முந்நீர்ச் சேர்ப்பற்குத் தூதோடு வந்த
பணி மொழிப் புள்ளே! பற. 51

அன்னையும் இல் கடிந்தாள்; யாங்கு இனி யாம் என் செய்கம்?
புன்னையங் கானலுள் புக்கு இருந்தும் நின்னை
நினையான் துறந்த நெடுங் கழிச் சேர்ப்பற்கு
உரையேனோ, பட்ட பழி? 52

அலவன் வழங்கும் அடும்பு இவர் எக்கர்
நிலவு நெடுங் கானல் நீடார் துறந்தார்;
புலவு மீன் குப்பை கவரும் துறைவன்
கலவான்கொல், தோழி! நமக்கு? 53

காமம் மிக்க கழிபடர் கிளவி

என்னையர் தந்த இற உணங்கல் யாம் கடிந்து,
புன்னையங் கானல் இருந்தேமா, பொய்த்து எம்மைச்
சொல் நலம் கூறி, நலன் உண்ட சேர்ப்பனை
என்னைகொல் யாம் காணுமாறு? 54

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழியால் சொல் எடுப்புண்ட
தலைமகள் சொல்லியது

கொக்கு ஆர் கொடுங் கழிக் கூடு நீர்த் தண் சேர்ப்பன்
நக்காங்கு அசதி நனி ஆடி,—தக்க
பொரு கயற்கண்ணினாய்!—புல்லான் விடினே,
இரு கையும் நில்லா, வளை. 55

[இதன் துறைக் குறிப்பு மறைந்து போயிற்று.]

நுரை தரும் ஓதம் கடந்து, எமர் தந்த
கருங் கரை வன்மீன் கவரும் புள் ஓப்பின்,
புகர் இல்லேம் யாம் இருப்ப, பூங் கழிச் சேர்ப்பன்
நுகர்வனன், உண்டான், நலம். 56

இரவுக் குறி . . . . .

கொடு வாய்ப் புணர் அன்றில் கொய் மடல் பெண்ணைத்
தடவுக் கிளை பயிரும்—தண் கடல் சேர்ப்பன்
நிலவுக் கொடுங் கழி நீந்தி, நம் முன்றில்
புலவுத் திரை பொருத போழ்து. 57

காமம் மிக்க கழிபடர் கிளவி

சுறு எறி குப்பை சுழலும் கழியுள்,
இறு எறி ஓதம் அலற இரைக்கும்
உறுஅ நீர்ச் சேர்ப்பனை உள்ளி இருப்பின்,
பொறுஅ, என் முன்கை வளை. 58

இரவுக்குறிக்கண் தலைமகன் சிறைப்புறத்தானாக, தலைமகட்குச் சொல்லுவாளாய், தோழி படைத்து மொழிந்தது

தாழை குருகு ஈனும் தண்ணம் துறைவனை—
மாழை மான் நோக்கின் மடமொழி!—'நூழை
நுழையும் மட மகன் யார்கொல்?' என்று, அன்னை
புழையும் அடைத்தாள், கதவு. 59

தோழி தலைவிக்குத் தலைவன் வரைவொடு புகுந்தமை சொல்லியது; வினை முற்றி மீண்ட தலைமகன் வரவு அறியச் சொல்லியதூஉம் ஆம்.

பொன் அம் பசலையும் தீர்ந்தது;—பூங்கொடி!—
தென்னவன் கொற்கைக் குருகு இரிய, மன்னரை
ஓடு புறம் கண்ட ஒண் தாரான் தேர் இதோ,
கூடல் அணைய வரவு. 60

# கார் நாற்பது

அகப்பொருள் பற்றிய கீழ்க்கணக்கு நூல்களில் சிறியது கார் நாற்பது. கார் காலத்தின் தோற்றம் ஒவ்வொரு செய்யுளிலும் கூறப்படுகின்றமையினாலும், நாற்பது செய்யுட்களை உடைமையாலும், இது **கார் நாற்பது** என்னும் பெயர் பெற்றுள்ளது. எனவே, இது காலம் பற்றிய தொகை நூலாகும்.

> காலம், இடம், பொருள், கருதி, நாற்பான்
> சால உரைத்தல் நானாற்பதுவே

என இலக்கண விளக்கப் பாட்டியலார் காலம் பற்றிய நாற்பது பாடலால் ஆகிய இந் நூலை முதற்கண் சுட்டியுள்ளார். இதனால் நானாற்பதில் இந் நூல் முந்தித் தோன்றியது என்று எண்ணவும் இடம் உண்டு.

கார்காலம் முல்லைத் திணைக்கு உரிய பெரும் பொழுது. இந் நூல் இப் பெரும் பொழுதைக் கூறும் முகத்தால், அத்திணையின் உரிப்பொருளாகிய இருத்தல் என்பதை நிலைக்களமாகக் கொண்டுள்ளது. தலைவன் பொருள் முதலியன ஏதுவாகத் தலைவியிடம், 'கார் காலத்தில் மீண்டு வருவேன்' என்று கூறிப் பிரிந்து சென்று, உரிய காலத்தில் அவன் வாராமை குறித்துத் தலைவி பிரிவு ஆற்றாது உரைத்தலும், தோழி அவளை ஆற்றுவித்தலும், சென்ற தலைமகன் கார் கண்டு தன் நெஞ்சிற்கும் பாகனுக்கும் கூறுவதும் ஆகிய செய்திகளே இந் நூலின்கண் அமைந்த பொருள். தோழி, தலைமகள், தலைமகன், பாங்கன் ஆகியோரை உறுப்பினராக அமைத்து, ஒரு நாடகம் போல அவர்களை இந் நூலில் பேச வைத்துள்ளார் ஆசிரியர். முல்லை நிலக் கருப்பொருள்களாகிய தோன்றி, பிடா, கருவிளம், முதலியவற்றையும் ஆங்காங்கே அழகுற வருணித்துள்ளார்.

இதனை இயற்றியவர் **மதுரைக் கண்ணங்கூத்தனார்**. கூத்தனார் என்பது இவரது இயற்பெயர். கண்ணன் என்பது இவர் தந்தையார் பெயர். இவர் வாழ்ந்த ஊர் மதுரை. இவர் இந் நூலின் முதற் செய்யுளில் முல்லை நிலத் தெய்வமாகிய மாயோனைக் குறித்துள்ளார்; பலராமனைப் பற்றியும் நூலுள் கூறியுள்ளார் (19). எனவே, இவர் வைணவ சமயத்தவராதல் கூடும்.

இவர் நூலுள் வேள்வித் தீயையும் (7), கார்த்திகை நாளில் நாட்டவரால் ஏற்றப்படும் விளக்கையும் (26) கூறியுள்ளார். கார்த்திகை நாளில் விளக்கு வைத்து விழாக் கொண்டாடுதல் பண்டை வழக்கமாகும்.

> குறு முயல் மறு நிறம் கிளர, மதி நிறைந்து,
> அறுமீன் சேரும் அகல் இருள் நடு நாள்,
> மறுகு விளக்குறுத்து, மாலை தூக்கி,
> பழ விறல் மூதூர்ப் பலருடன் துவன்றிய
> விழவுடன் அயர, வருகதில் அம்ம!

என்பது அகநானூறு (141 : 7-11). 'கார்த்திகைச் சாற்றில் கழி விளக்கு' என்று களவழி நாற்பதும் (17), 'குன்றில், கார்த்திகை விளக்கிட்டன்ன கடி கமழ் குவளைப் பைந் தார்' என்று சீவக சிந்தாமணியிலும்(256) இவ் விளக்கீடு குறிக்கப்பெற்றுள்ளது.

சிந்தாமணியில் மேலும் ஓரிடத்து, இப் பகுதியில் குறித்தவாறே, 'குன்றத்து உச்சிச சுடர்' (262) என்று கூறுதலால், குன்றத்தின்மேல் விளக்கு ஏற்றுதல் வழக்கமாயிருந் தது என்பதும் தெரியவருகிறது.

> வளைக் கை மடநல்லார் மா மயிலை வண் மறுகில்
> துளக்கு இல் கபாலீச்சரத்தான் தொல் கார்த்திகைநாள்
> தளத்து ஏந்து இள முலையார் தையலார் கொண்டாடும்
> விளக்கீடு காணுதே போதியோ, பூம்பாவாய்? (2 : 47 : 3)

என வரும் தேவாரப் பாடல் இதனைச் சிவபெருமானுக்கு உரிய விழா என்று குறிக் கிறது. இவ் விளக்கீட்டு விழா தேவார காலத்தில் திருக்கோயில் திருவிழாவாக வும் மாறிவிட்டமை போதரும்.

ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது முதலிய திணை நூல்களில் வரும் செய்திகளை ஒத்த பகுதிகள் இந்நூலில் உள்ளன. இந் நூற் செய்யுட்களை மயிலைநாதர் முதலியோர் மேற்கோளாக எடுத்தாண்டுள்ளனர்.

இந் நூலில் உள்ள நாற்பது பாடல்களில் 23 முதல் 38 வரையுள்ள பாடல்களுக்குப் பழைய உரை கிடைக்கவில்லை. துறை பற்றிய பழங்குறிப்பு உரையுள்ள பாடல் களுக்கு மட்டும் கிடைத்துள்ளது. 'முல்லைக் கொடி மகிழ' என்று தொடங்கும் இந் நூலின் சிறப்புப் பாயிரச் செய்யுள் நூல் இறுதியில் தரப்பட்டுள்ளது.

# கார் நாற்பது

(கண்ணங் கூத்தனார்)

தோழி தலைமகட்குப் பருவம் காட்டி வற்புறுத்தது

பொரு கடல் வண்ணன் புனை மார்பில் தார்போல்,
திருவில் விலங்கு ஊன்றி, தீம் பெயல் தாழ,
'வருதும்' என மொழிந்தார் வாரார்கொல், வானம்
கரு இருந்து ஆலிக்கும் போழ்து? 1

கடுங் கதிர் நல்கூர, கார் செல்வம் எய்த,
நெடுங் காடு நேர் சினை ஈன,—கொடுங்குழாய்!—
'இன்னே வருவர், நமர்' என்று எழில் வானம்
மின்னும், அவர் தூது உரைத்து. 2

பருவம் கண்டு அழிந்த தலைமகள் ஆற்றல் வேண்டி, தோழி தனது
ஆற்றாமை தோன்ற உரைத்தது

வரி நிறப் பாதிரி வாட, வளி போழ்ந்து
அயிர் மணல் தண் புறவின் ஆலி புரள,
உரும் இடி வானம் இழிய, எழுமே—
நெருநல், ஒருத்தி திறத்து. 3

தோழி பருவம் காட்டித் தலைமகளை வற்புறுத்தது

ஆடு மகளிரின் மஞ்ஞை அணி கொள,
காடும் கடுக்கை கவின் பெறப் பூத்தன;
பாடு வண்டு ஊதும் பருவம்,—பணைத் தோளி!—
வாடும் பசலை மருந்து. 4

இகழுநர் சொல் அஞ்சிச் சென்றார் வருதல்—
பகழிபோல் உண் கண்ணாய்!—பொய் அன்மை; ஈண்டைப்
பவழம் சிதறியவை போலக் கோபம்
தவழும் தகைய புறவு. 5

தொடி இட ஆற்று தொலைந்த தோள் நோக்கி,
வடு இடைப் போழ்ந்து அகன்ற கண்ணாய்! வருந்தல்;—
கடிது இடி வானம் உரறும், நெடு இடைச்
சென்றாரை, 'நீடன்மின்' என்று. 6

நச்சியார்க்கு ஈதலும், நண்ணார்த் தெறுதலும்,
தற் செய்வான் சென்றார்த் தரூஉம்,—தளரியலாய்!—
பொச்சாப்பு இலாத புகழ் வேள்வித் தீப் போல
எச் சாரும் மின்னும் மழை. 7

மண் இயல் ஞாலத்து. மன்னும் புகழ் வேண்டி,
பெண் இயல் நல்லாய்! பிரிந்தார் வரல் கூறும்—
கண் இயல் அஞ்சனம் தோய்ந்தபோல், காயாவும்
நுண் அரும்பு ஊழ்த்த புறவு. 8

கருவிளை கண் மலர்போல் பூத்தன, கார்க்கு ஏற்று;
எரி வனப்பு உற்றன, தோன்றி; வரி வளை
முன்கை இறப்பத் துறந்தார் வரல் கூறும்,
இன் சொல் பலவும் உரைத்து. 9

வான் ஏறு வானத்து உரற, வய முரண்
ஆன் ஏற்று ஒருத்தல் அதனோடு எதிர் செறுப்ப,
கான் யாற்று ஒலியின் கடு மான் தேர்—என் தோழி!—
மேனி தளிர்ப்ப, வரும். 10

புணர்தரு செல்வம் தருபாக்குச் சென்றார்,
வணர் ஒலி ஐம்பாலாய்! வல் வருதல் கூறும்—
அணர்த்து எழு பாம்பின் தலைபோல் புணர் கோடல்
பூங் குலை ஈன்ற புறவு. 11

மை எழில் உண் கண், மயில் அன்ன சாயலாய்!
ஐயம் தீர் காட்சி அவர் வருதல் திண்ணிதாம்;—
நெய் அணி குஞ்சரம் போல, இருங் கொண்மூ
வைகலும் ஏரும், வலம். 12

ஏந்து எழில் அல்குலாய்! ஏமார்ந்த காதலர்
கூந்தல் வனப்பின் பெயல் தாழ, வேந்தர்
களிறு எறி வாள் அரவம் போலக் கண் வௌவி,
ஒளிறுபு மின்னும், மழை. 13

செல்வம் தரல் வேண்டிச் சென்ற நம் காதலர்
வல்லே வருதல் தெளிந்தாம்;—வயங்கிழாய்!—
முல்லை இலங்கு எயிறு ஈன, நறுந் தண் கார்
மெல்ல இனிய நகும். 14

திருந்திழாய்! காதலர் தீர்குவர் அல்லர்—
குருந்தின் குவி இணர் உள் உறை ஆகத்
திருந்து இன் இளி வண்டு பாட, இருந் தும்பி
இன் குழல் ஊதும் பொழுது. 15

கருங் குயில் கையற, மா மயில் ஆல,
பெருங் கவின் வானம் உரறும்—பெருந்தோள்!
செயலை இளந் தளிர் அன்ன நின் மேனிப்
பயலை பழங்கண் கொள. 16

அறைக் கல் இறு வரைமேல் பாம்பு சவட்டி,
பறைக் குரல் ஏஉெறுடு பௌவம் பருகி,
உறைத்து இருள் கூர்ந்தன்று, வானம்; பிறைத் தகை
கொண்டன்று;—பேதை!—நுதல். 17

கல் பயில் கானம் கடந்தார் வர, ஆங்கே
நல் இசை ஏஉெறுடு வானம் நடு நிற்ப,
செல்வர் மனம்போல் கவின் ஈன்ற,—நல்கூர்ந்தார்
மேனிபோல் புல்லென்ற காடு. 18

வினை முற்றிய தலைமகன் பாகற்குச் சொல்லியது

நாஞ்சில் வலவன் நிறம் போலப் பூஞ் சினைச்
செங் கால் மராஅம் தகைந்தன; பைங் கோல்
தொடி பொலி முன் கையாள் தோள் துணையா வேண்டி,
நெடு இடைச் சென்றது, என் நெஞ்சு. 19

வீறு சால் வேந்தன் வினையும் முடிந்தன;
ஆறும் பதம் இனிய ஆயின; ஏஉெறுடு
அரு மணி நாகம் அனுங்க, செரு மன்னர்
சேனைபோல் செல்லும், மழை. 20

பொறி மாண் புனை திண் தேர் போந்த வழியே
சிறு முல்லைப் போது எல்லாம், செவ்வி நறு நுதல்,
செல்வ மழைத் தடங் கண், சில் மொழி, பேதை வாய்
முள் எயிறு ஏய்ப்ப, வடிந்து. 21

இளையரும் ஈர்ங் கட்டு அயர, உளை அணிந்து,
புல் உண் கலி மாவும் பூட்டிய; நல்லார்
இள நலம் போலக் கவினி, வளம் உடையார்
ஆக்கம்போல் பூத்தன, காடு. 22

தோழி தலைமகட்குப் பருவம் காட்டி வற்புறுத்தது

கண் திரள் முத்தம் கடுப்பப் புறவு எல்லாம்
தண் துளி ஆலி புரள, புயல் கான்று
கொண்டு, எழில் வானமும் கொண்டன்று; எவன் கொலோ,
ஒண்டொடி! ஊடும் நிலை? 23

[இது முதல் 39 வரையுள்ள செய்யுட்களுக்குத் துறைக் குறிப்புக்கள் ஏட்டுச் சுவடிகளில் இறந்துபட்டன.]

எல்லா வினையும் கிடப்ப, எழு, நெஞ்சே!
கல் ஓங்கு கானம் களிற்றின் மதம் நாறும்;
பல் இருங் கூந்தல் பனி நோனுள்; கார் வானம்
எல்லியும் தோன்றும், பெயல். 24

கருங் கால் வரகின் பொரிப்போல் அரும்பு அவிழ்ந்து,
ஈர்ந் தண் புறவில் தெறுழ் வீ மலர்ந்தன;
சேர்ந்தன செய் குறி; வாரார் அவர் என்று
கூர்ந்த, பசலை அவட்கு. 25

நலம் மிகு கார்த்திகை, நாட்டவர் இட்ட
தலை நாள் விளக்கின் தகை உடையவாகி,
புலம் எலாம் பூத்தன தோன்றி;—சிலமொழி!—
தூதொடு வந்த, மழை. 26

முருகியம்போல் வானம் முழங்கி இரங்க,
குருகிலை பூத்தன கானம்; பிரிவு எ்ண்ணி,
'உள்ளாது அகன்றார்' என்று ஊடி யாம் பாராட்ட,
பள்ளியுள் பாயும், பசப்பு. 27

இமிழ் இசை வானம் முழங்க, குமிழின் பூப்
பொன் செய் குழையின் துணர் தூங்க, தண் பதம்
செவ்வி உடைய, சுரம்—நெஞ்சே!—காதலி ஊர்
கவ்வை அழுங்கச் செலற்கு. 28

பொங்கரும் ஞாங்கர் மலர்ந்தன; தங்காத்
தகை வண்டு பாண் முரலும், கானம்; பகை கொண்டல்
எவ்வெத் திசைகளும் வந்தன்று; சேறும் நாம்,
செவ்வி உடைய சுரம். 29

வரை மல்க, வானம் சிறப்ப, உறை போழ்ந்து
இரு நிலம் தீம் பெயல் தாழ, விரை நாற,
ஊதை உளரும், நறுந் தண் கா, பேதை
பெரு மடம் நம்மாட்டு உரைத்து. 30

கார்ச் சேண் இகந்த கரை மருங்கின் நீர்ச் சேர்ந்து,
எருமை எழில் ஏறு, எறி பவர் சூடி,
செரு மிகு மள்ளரின் செம்மாக்கும் செவ்வி,
திருநுதற்கு யாம் செய் குறி. 31

கடாஅவுக, பாக! தேர் கார் ஓடக் கண்டே;
கெடாஅப் புகழ் வேட்கைச் செல்வர் மனம்போல்
படாஅ மகிழ் வண்டு பாண் முரலும், கானம்
பிடாஅப் பெருந்தகை நற்கு. 32

'கடல் நீர் முகந்த கமஞ் சூல் எழிலி
குடமலை ஆகத்து, கொள் அப்பு இறைக்கும்
இடம்' என ஆங்கே குறி செய்தேம், பேதை
மடமொழி எவ்வம் கெட. 33

விரி திரை வெள்ளம் வெறுப்பப் பருகி,
பெரு விறல் வானம் பெரு வரை சேரும்
கரு அணி காலம் குறித்தார், திரு அணிந்த
ஒள் நுதல் மாதர்திறத்து. 34

'சென்ற நம் காதலர் சேண் இகந்தார்!' என்று எண்ணி
ஒன்றிய நோயோடு இடும்பை பல கூர,
வென்றி முரசின் இரங்கி, எழில் வானம்
நின்றும் இரங்கும், இவட்கு. 35

சிரல்வாய் வனப்பின ஆகி, நிரல் ஒப்ப
ஈர்ந் தண் தளவம் தகைந்தன; சீர்த்தக்க
செல்வ மழை மதர்க் கண், சில் மொழி, பேதை ஊர்
நல் விருந்து ஆக, நமக்கு. 36

கருங் கடல் மேய்ந்த கமஞ் சூல் எழிலி
இருங் கல் இறு வரை ஏறி, உயிர்க்கும்
பெரும் பதக் காலையும் வாரார்கொல், வேந்தன்
அருந் தொழில் வாய்த்த நமர்? 37

புகர் முகம் பூழிப் புரள, உயர் நிலைய
வெஞ் சின வேழம் பிடியோடு இயைந்து ஆடும்
தண் பதக் காலையும் வாரார்; எவன் கொலோ,—
ஒண்டொடி!—ஊடும் நிலை? 38

அலவன் கண் ஏய்ப்ப அரும்பு ஈன்று அவிழ்ந்த
கருங் குரல் நொச்சிப் பசுந் தழை சூடி,
இரும் புனம் ஏர்க் கடிகொண்டார்; பெருங் கௌவை
ஆகின்று, நம் ஊர் அவர்க்கு. 39

பருவம் காட்டித் தலைமகளைத் தோழி வற்புறுத்தியது

'வந்தன செய் குறி; வாரார் அவர்' என்று
நொந்த ஒருத்திக்கு நோய் தீர் மருந்து ஆகி,
இந்தின் கரு வண்ணம் கொண்டன்று, எழில் வானம்;
நந்தும்,—மென் பேதை!—நுதல். 40

## சிறப்புப் பாயிரம்

முல்லைக் கொடி மகிழ, மொய் குழலார் உள் மகிழ,
மெல்லப் புனல் பொழியும் மின் எழில் கார்;—தொல்லை நூல்
வல்லார் உளம் மகிழ, தீம் தமிழை வார்க்குமே,
சொல் ஆய்ந்த கூத்தர் கார் சூழ்ந்து.

# களவழி நாற்பது

கீழ்க்கணக்கு நூல்களுள் புறப்பொருள் நிகழ்ச்சியாகிய போர்ச் செய்தி பற்றியது களவழி நாற்பது ஒன்றே. ஏர்க்களம் பற்றியும் போர்க்களம் பற்றியும் பாடப்பெறும் பாடல்கள் களவழி எனப்படும் என்று தொல்காப்பியர் வாகைத் திணையில் ஒரு துறை அமைத்துள்ளார்.

ஏரோர் களவழி அன்றிக் களவழித்
தேரோர் தோற்றிய வென்றியும்

என்பது தொல்காப்பியம் (புறத். 21). களவழி நாற்பது போர்க்களம் பற்றிய பாடல் தொகுதி. மேற்குறித்த தொல்காப்பியச் சூத்திர உரையில், நச்சினார்க்கினியர், 'களவழி நாற்பது புலவர் களவழியைத் தோற்றுவித்தது' என்று கூறி, 'ஓஒ உவமன்' எனத் தொடங்கும் இந் நூற் செய்யுளையும் (36) மேற்கோள் காட்டியுள்ளார். இவர்க்கு முந்திய இளம்பூரணரும் களம் பாடியதற்கு இக் களவழிச் செய்யுளையே எடுத்துக் காட்டியுள்ளார். இந் நூலகத்துள்ள பாடல்கள் எல்லாம் 'களத்து' என்ற சொல்லை இறுதியில் கொண்டு முடிதலும் கவனிக்கத் தக்கது. 'களத்து' என்று முடிவதனாலும், போர்க்கள நிகழ்ச்சிகளைச் சிறப்பித்துள்ளமையினாலும், 'களவழி' என்றும், பாடல் தொகை அளவினால், 'களவழி நாற்பது' என்றும், இந் நூல் வழங்கப் பெறுவதாயிற்று. பரணி நூல்களில் 'களம் பாடியது' என்னும் ஒரு பகுதி உண்டு. அதுவும் போர்க்களக் காட்சிகளைச் சித்திரிப்பதாகும்.

இடம் பற்றித் தொகுத்த நூலுக்குத் தண்டியலங்கார உரையில் (5) இக் களவழி நாற்பது மேற்கோள் காட்டப்பட்டிருக்கிறது. நானாற்பதில் இடம் பற்றி வந்ததற்கு இலக்கண விளக்கப் பாட்டியலில் (851) இந் நூல் எடுத்துக்காட்டாகத் தரப்பெற்றுள்ளது. எனவே, போர்க்களமாகிய இடத்தைச் சுட்டி எழுந்ததே இந் நூல் என்பது தெளிவு.

இந் நூல் தோன்றிய வரலாறு பற்றிய செய்திகள் தெளிவு இன்றிப் பற்பல ஐயப்பாடுகளை விளைவித்துள்ளன. இதனால், ஆராய்ச்சியாளர்களிடையே நேர்ந்துள்ள கருத்து வேற்றுமைகளும் பலவாம்.

களவழி நாற்பதின் இறுதியில் காணப்பெறும் குறிப்பை முதற்கண் நோக்குவோம்: 'சோழன் செங்கணானும் சேரமான் கணைக்காலிரும்பொறையும் (திருப்) போர்ப் புறத்துப் பொருது உடைந்துழி, சேரமான் கணைக்காலிரும்பொறையைப் பற்றிக்கொண்டு, சோழன் சிறை வைத்துழி, பொய்கையார் களம் பாடி, வீடு கொண்ட களவழி நாற்பது' என்னும் குறிப்பு உள்ளது. இதிலிருந்து, சோழன் செங்கணான் போர் என்னும் இடத்தில் கணைக்காலிரும்பொறையோடு போரிட்டான் என்பதும், போரில் சோழன் வெற்றி பெற்று, சேரமான் கணைக்காலிரும்பொறையைச் சிறைப் படுத்தினான் என்பதும், அப்பொழுது பொய்கையார் என்பார் சோழனது வெற்றியைப் புகழ்ந்து பாடிச் சேரனைச் சிறையிலிருந்து விடுதலை செய்தார் என்பதும் தெரிய வருகின்றன.

நூலுள் சோழனைக் குறித்து, புனல் நாடன், நீர் நாடன், காவிரி நாடன், காவிரி நீர் நாடன், செம்பியன், என்று இவ்வாறு பொதுப் படையாகச் சுட்டியுள்ளாரே யன்றி, அவனது பெயர் குறிக்கப்படவில்லை. செங்கண் மால் (4, 5, 11), செங்கண் சின மால் (15, 21, 29, 30, 40) என்பன சோழன் செங்கணன் பெயரைச் சுட்டியன ஆகா. பூவைநிலை வகையால் சோழனைச் 'சேய்' (13, 18, 34) என்று சுட்டியுள்ளது போல, இங்கும் திருமாலாகக் குறித்துள்ளார் என்றே கொள்ள வேண்டும். இங்ஙனமே சேரன் பெயரும் குறிக்கப் பெறவில்லை. பொதுவகையாக வேந்தர் என்னும் சொல்லை யும், பகைவரைக் குறிக்கும் தெவ்வர், கூடார், செற்றார், நண்ணார், மேவார், ஒன்னார், அடங்கார் என்னும் சொற்களையுமே தந்துள்ளார். ஒரே ஒரு பாடலில் 'வஞ்சிக்கோ' (39) என்பது உள்ளது. 'கொங்கரை அட்ட களத்து' (14) என்பதனால், கொங்கர் சேரனுக்குத் துணையாக வந்து போரிட்டனர் என்பது பெறப்படும். சோழன் சேரனைச் சிறை செய்தான் என்ற இறுதிக் குறிப்பிற்கு மாறாக, 'வஞ்சிக்கோ அட்ட களத்து' (39) என்று சேரனைக் கொன்றதாகவே பாடலில் உள்ளது. 'வஞ்சிக் கோவைக் கொன்ற களத்து' என்ற பழைய உரையும் கவனிக்கத் தக்கது. அடுதல் என்பதற்கு வருத்துதல், அழித்தல், கொல்லுதல், முதலிய பல பொருள்கள் உள்ளமை யினால், அட்ட என்பதற்கு வருத்திய என்று இறுதிக் குறிப்பிற்கு ஏற்பவும் பொருள் கொள்ளுதல் சாலும். போர் என்ற இடத்தைக் குறித்து நூலுள் ஒரு குறிப்பும் இல்லை. 'காவிரி நாடன் கழுமலம் கொண்ட நாள்' (36) என்று வருதலின், இந்தப் போரில் சோழன் கழுமலம் என்ற ஊரைத் தனக்கு உரித்தாக்கிக்கொண்டான் என்பது போதரும்.

பொய்கையார் களவழி நாற்பது பாடிச் சேரனைச் சிறையிலிருந்து விடுவித்தார் என்றே கலிங்கத்துப் பரணி, மூவருலா, தமிழ் விடு தூது முதலிய பின்னூல்கள் அறிவிக்கின்றன.

> களவழிக் கவிதை பொய்கை உரைசெய்ய உதியன்
> கால்வழித் தளையை வெட்டி அரசிட்ட அவனும்

என்பது கலிங்கத்துப் பரணி (182).

> மேதக்க பொய்கை கவி கொண்டு வில்லவனைப்
> பாதத் தளைவிட்ட பார்த்திவனும் (விக்கிரம.14)

> அணங்கு, படுத்துப் பொறையனைப் பொய்கைக்குப் பண்டு
> கொடுத்துக் களவழிப் பாக் கொண்டோன் (குலோத். 19-20)

> நல்லவன் பொய்கை களவழி நாற்பதுக்கு
> வில்லவன் கால் தளையை விட்டகோன் (இராச. 18)

என வருவன மூவருலாப் பகுதிகள். தமிழ் விடு தூது,

> சேரமான் தன்னடிக்கு அன்டு தளை விடுத்தாய்; ஏழ் தளை உன்
> பொன்னடிக்கு உண்டு என்பது என்ன புத்தியோ!

என்று சிலேடை நயம்படக் கூறுகிறது.

> செய்கை அரிய களவழிப் பா முன் செய்த
> பொய்கை ஒருவனால் போம் தரமோ—சைய
> மலைச் சிறை தீர் வாட்கண்டன் வெள்ளணி நாள் வாழ்த்திக்
> கொலைச் சிறை தீர் வேந்துக்குழாம்?

என வரும் ஒரு பழம்பாடலை நச்சினார்க்கினியர் மேற்கோளாக எடுத்தாண்டுள்ளார்.

இங்ஙனம் பிறநூல்களும், தனிப்பாடலும், நூல் இறுதியிலுள்ள குறிப்பை ஒத்து அமைதலின், பொய்கையார் களவழி நாற்பது பாடிச் சேரமானைச் சிறையி லிருந்து விடுவித்தார் என்ற செய்தி உண்மையொடு பட்டதாகலாம்.

இச் செய்திக்கு மாறுபட்டதொரு குறிப்பு, 'குழவி இறப்பினும் ஊன்-தடி பிறப்பினும்' எனத் தொடங்கும் புறநானூற்றுப் பாட்டின் (74) பழைய குறிப்பில் காணப்படுகிறது. அது,

> 'சேரமான் கணைக்காலிரும்பொறை சோழன் செங்கணானோடு திருப்போர்ப் புறத்துப் பொருது, பற்றுக்கோட்பட்டு, குடவாயிற் கோட்டத்துச் சிறையில் கிடந்து, ''தண்ணீர் தா'' என்று, பெறாது, பெயர்த்துப் பெற்றுக் கைக் கொண்டிருந்து, உண்ணான் சொல்லித் துஞ்சிய பாட்டு'—என்பது.

இக் குறிப்பில் பொய்கையாரைப் பற்றிய செய்தியும், சிறைவீடு கொண்ட குறிப்பும் இல்லை. களவழிக் குறிப்பிற்கு மாறாக, சேரமான் கணைக்காலிரும்பொறை சிறைக் கோட்டத்தில் கிடந்து மானத்தால் இறந்து பட்டதாகக் காணப்படுகிறது. களவழிக் குறிப்புடன் இது மாறுபட்டது அன்று என்று காட்ட முற்பட்டோரில் சிலர், 'துஞ்சிய' என்பதற்கு வேறு வகையாகப் பொருள் கூறலாயினர். டாக்டர் உ.வே. சாமிநாதையர் 74-ஆம் புறப்பாட்டின் அடிக்குறிப்பில், 'துஞ்சிய என்பதற்கு மூர்ச்சித்த என்று பொருள் கொள்ள வேண்டும் போலும்!' என்று குறித்துள்ளார். மேலும், தமது 'சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும்' என்ற நூலில் (பக். 94), 'துஞ்சிய என்ற சொல் இறந்த என்ற பொருளையே மிகுதியும் தருவதாயினும், இங்கு மூர்ச்சித்த என்று பொருள் கொள்ள வேண்டும்' என உறுதியாக எழுதியுள்ளார். இ. வை. அனந்தராமையர், 'துஞ்சிய என்பதற்கு உறங்கிய என்று பொருள் கொள்ளலாம்' என்பர். துஞ்சிய என்பது இறந்த என்னும் பொருளிலேயே மிகுதியாக வருதலின், இங்கும் இறந்த என்று பொருள் கோடலே நேரிதாம்.

புறநானூற்றுக் குறிப்பிலும் களவழி நாற்பதின் குறிப்பிலும் சேர சோழர்களது பெயரில் ஒற்றுமை இருப்பினும், முக்கியமான முடிவு நிகழ்ச்சி வேறுபட்டுள்ளது. புறநானூற்றில் இந்தப் பாட்டின் குறிப்பில் தவிர, வேறு இடங்களிலோ அல்லது சங்க நூல்கள் பிறவற்றிலோ சோழன் செங்கணானைப் பற்றியும் கணைக்காலிரும் பொறையைப் பற்றியும் ஒரு குறிப்பும் காணப் பெறாமையும் சிந்தித்தற்குரியது. புறநானூற்றில் இரண்டு பாடல்களைப் பாடிய (48, 49) பொய்கையார் என்பவர் சேரமான் கோக்கோதை மார்பனைப் பாடியுள்ளாரேயன்றி, கணைக்காலிரும் பொறையைப் பாடவில்லை. எனவே, புறநானூற்றில் காணும் செங்கணான், சேர மான் கணைக்காலிரும்பொறை, பொய்கையார் ஆகியோருக்கும், களவழி நாற்பதில் குறிக்கப் பெறுபவர்களுக்கும் தொடர்பு இருப்பதாக எண்ணக்கூடவில்லை. இவர்கள் ஒரே பெயரைக் கொண்டு வெவ்வேறு காலத்தில் வாழ்ந்தவர்கள் என்று கொள்ளுதலே இரு நூல் குறிப்புக்களுக்கும் ஒத்ததாதல் கூடும்.

தமிழ் நாவலர் சரிதையில், 'சேரன் கணைக்காலிரும்பொறை செங்கணானால் குணவாயிற் கோட்டத்துத் தளைப்பட்டபோது பொய்கையாருக்கு எழுதி விடுத்த பாட்டு' என்று குறிப்பிட்டு, 'குழவி இறப்பினும்' என மேற்குறித்த புறப்பாடலைக் (74) கொடுத்து, அதன் பின்னர், 'இது கேட்டுப் பொய்கையார் களவழி நாற்பது பாடச் செங்கணான் சிறைவிட்டு அரசளித்தான்' என்று அந் நூலைத் தொகுத்தவர் எழுதியுள்ளார். இதனால், இந் நூலாசிரியர் புறநானூற்றுக் குறிப்பையும், களவழி நாற்பதின் குறிப்பையும் ஒன்றாக இணைக்க முயன்றுள்ளார் என்பதும் புலனாம்.

இவரது குறிப்பு, மேற்குறித்த இரு நூல்களுக்கும் பின்னர் எழுந்தது என்றும், இரண்டையும் இணைப்பதற்கு இவர் செய்த ஊகம் என்றும் கொள்ளத் தக்கது.

அகநானூற்றுப்பாடல் ஒன்றில் (44),

நன்னன், ஏற்றை, நறும் பூண் அத்தி,
துன் அருங் கடுந் திறல் கங்கன், கட்டி,
பொன் அணி வல்வில் புன்றுறை, என்று ஆங்கு
அன்று அவர் குழீஇய அளப்பு அருங் கட்டூர்ப்
பருந்துபடப் பண்ணி, பழையன் பட்டென,
கண்டது நோனானாகி, திண் தேர்க்
கணையன் அகப்படக் கழுமலம் தந்த
பிணையல்அம் கண்ணிப் பெரும்பூட் சென்னி

என, சோழன் ஒருவன் கணையன் என்பானை வென்று கழுமலம் கொண்ட செய்தி வந்துள்ளது. இதன் பழைய உரை, 'நன்னன் முதலாயினார் சேரன் படைத்தலைவர்; கணையன் சேரன் படை முதலி; முன் சொன்னவர்க்குப் பிரதானி. கழுமலம் ஓர் ஊர்' என்று குறித்துள்ளது. அகம் 386ல் கணையன் என்ற பெயருடைய மல்லன் ஒருவன் குறிப்பிடப் பெறுகிறான். இந்த இரு பாடல்களிலும் சுட்டப்பெறும் கணையன் என்பானுக்கும் கணைக்காலிரும்பொறைக்கும் யாதொரு தொடர்பும் இல்லை. 'கணையன் அகப்படக் கழுமலம் தந்த' என்பது கணைக்காலிரும் பொறையோடு தொடர்புடையதுபோலக் காணப்படினும், அப் பாடலில் குறித்த செய்திகள் தெளிவின்றியிருக்கின்றன. இது களவழி நாற்பது குறிக்கும் போரைக் குறித்ததாகக் கொள்ள முடியாது.

சோழனுக்கும் சேரனுக்கும் போர் நிகழ்ந்த இடமாகிய 'போர்' என்பது பற்றித் தெரியவரும் செய்திகளை நோக்குவோம். இந்த ஊர் சோழ நாட்டில் உள்ளது எனச் சங்கப் பாடல்கள் தெரிவிக்கின்றன.

இழை அணி யானைச் சோழர் மறவன்
கழை அளந்து அறியாக் காவிரிப் படப்பைப்
புனல் மலி புதவின் போஒர் கிழவோன்
பழையன் ஒக்கிய வேல்போல்

என்று அகநானூற்றிலும் (326),

கொற்றச் சோழர் கொங்கர்ப் பணீஇயர்
வெண் கோட்டு யானைப் போஒர் கிழவோன்
பழையன் வேல் வாய்த்தன்ன

என்று நற்றிணையிலும் (10), பழையனுக்கு உரியதாகப் போர் என்ற ஊர் குறிக்கப் படுகிறது. இப் பழையன் சோழனுக்குக் கீழ்ப்பட்ட ஒரு தலைவன் ஆவன். இவனுக்கு உரியதாகக் கூறப்பெறும் போர் என்னும் ஊர் நீர் வளம் நிறைந்தது என்பதும், சோழ நாட்டில் உள்ளது என்பதும் மேற்குறித்த செய்யுட் பகுதியால் அறியலாம். திருப்போர் என்பதில் திரு என்பதை அடைமொழியாகக் கொள்ளல் வேண்டும். இங்ஙனம் கொள்ளாது திருப்போர் என்பதே ஊர்ப்பெயர் என்றும், அது திருப்பூர் என இக் காலத்து வழங்கும் கொங்கு நாட்டு ஊராக இருக்கலாம் என்றும் கருதுவாரும் உண்டு. போர் என்னும் பழையனது ஊர் நீர் வளம் செறிந்தது என்று அகநானூற்றுப் பாடல் குறிப்பதனால், அது போர் நிகழ்தற்கு ஏற்ற இடமாதல் இல்லை. எனவே, அது சேரனுக்குரித்தான ஓர் ஊராக இருத்தல் கூடும். 368-ஆம் புறப் பாட்டின் பழைய குறிப்பு, 'சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன் சோழன் வேற்

பஃறடக்கைப் பெருநற்கிள்ளியொடு போர்ப் புறத்துப் பொருது வீழ்ந்து, ஆரம் கழுத்தன்னதாக உயிர் போகாது கிடந்தானைக் கழாத்தலையார் பாடியது' என்று உள்ளது. இக் குறிப்பினுல் போர் என்னும் களம் சேர சோழ நாடுகளுக்கு இடைப் பட்டதாய், இரு பேரரசர்களும் வழிவழியாகப் போர் செய்வதற்கு மேற்கொண்ட இடமாக அமைந்திருந்தது போலும்!

புறநானூற்றுக் குறிப்பும் களவழி நூல் குறிப்பும் சரித்திர அடிப்படையை ஆதாரமாகக் கொண்டனவல்ல என்று அபிப்பிராயப்படுகிருர் ஓர் ஆராய்ச்சியாளர். குலோத்துங்க சோழன் உலாவின் பழைய உரையில், 'களவழி கொண்டோன் தஞ்சை விசயாலயன்' (19-20) என்பது குறிக்கப் பெற்றிருக்கிறது. இது உண்மை யாயிருக்கலாமோ என்று ஐயுறுவாரும் உளர். இக் கருத்துக்கள் மேலும் ஆராய்தற்கு உரியனவாம். பெருங்கதையிலும் சிந்தாமணியிலும் வரும் ஒரு சில கருத்துக்கள் இந் நூலோடு பெரிதும் ஒத்துள்ளமையும் கவனிக்கத் தக்கது. யாவற்றையும் கூர்ந்து நோக்கின், இது பிற்காலச் சோழர் காலத்தில் தோன்றிய நூலாதல் கூடும் என்று ஊகிக்கலாம்.

களவழி நாற்பது பாடியவர் **பொய்கையார்** என்பவராவர். இவரது பெயர் இயற்பெயரா, காரணப்பெயரா என்பது துணியக்கூடவில்லை. காரணப் பெயராயின், இவரைப் பொய்கை நாட்டில் தோன்றியவர் என்றோ, அல்லது பொய்கை ஊரினர் என்றோ கொள்ளலாம். சேரன்பொருட்டு இவர் களவழி நாற்பது பாடுதலின், இவரும் சேர நாட்டைச் சார்ந்தவராகலாம். சங்கத் தொகை நூல்களில் மூன்று பாடல்களைப் பாடியவரும் (புறம் 48, 49; நற். 18), சேரமான் கோக்கோதை மார் பனைப் புகழ்பவரும் ஆகிய பொய்கையார் இவருக்கு முந்தியவராதல் வேண்டும். அப் பொய்கையார் தொண்டி என்னும் ஊரைச் சார்ந்தவர்.

> கோதை மார்பின் கோதையானும் .....
> கள் நாறும்மே கானல்அம் தொண்டி,
> அஃது எம் ஊரே; அவன் எம் இறைவன்

என்பது அவர் வாக்கு (புறம் 48). அவர் பாடிய நற்றிணைப் பாடலிலும் தொண்டி யைப் பற்றிய குறிப்பு உள்ளது.

முதலாழ்வார் மூவருள் ஒருவராகிய பொய்கையாழ்வார் மேற்குறித்த இருவரி னும் வேறுபட்டவர். அவர் தொண்டை நாட்டுக் கச்சிப் பதியினர்.

> மால் அடியை அல்லால் மற்று எண்ணத்தான் ஆமோ இமை? (31)

என்றும்,

> திருமாலை அல்லது தெய்வம் என்று ஏத்தேன் (64)

என்றும்,

> மாயவனை அல்லால் இறையேனும் ஏத்தாது என் நா (94)

என்றும், திருமால் பத்தியில் அவர் விஞ்சி நிற்பவர். பதினெண் கீழ்க்கணக்கிலும் வழங்காத வடசொற்கள் பல அவரது அந்தாதியில் உள்ளன. யாப்பருங்கல விருத்தியுரையில் பொய்கையார் வாக்காகச் சில பாடல்கள் மேற்கோளாக எடுத் தாளப் பெற்றுள்ளன. பன்னிரு பாட்டியலில் பொய்கையார் பெயரால் சில சூத்திரங்கள் உள்ளன. இந்த இரு நூல்களிலும் குறிக்கப் பெற்றவர் முன் குறித்த மூவரினும் வேருனவர் என்றே கொள்ள இடமுண்டு. எனவே, பொய்கையார் என்னும் பெயருடையார் பலர் பல்வேறு காலத்தில் வாழ்ந்துள்ளமை புலனும்.

அவர்களுள் களவழி நாற்பது பாடிய பொய்கையாரை இடைக்காலத்தில், சீவக சிந்தாமணி, பெருங்கதை ஆசிரியர்களின் காலத்தை ஒட்டி வாழ்ந்தவராகக் கொள்ள லாம்.

களவழி நாற்பதில் 41 பாடல்கள் காணப்பெறுகின்றன. நூற் பெயருக்கு ஏற்ப 40 செய்யுட்கள் இருத்தலே முறை. ஒரு பாடல் மிகுந்து காண்பது ஐயத்தை விளைப்ப தொன்றும். இந்த 41 பாடல்களுக்கும் பழைய உரை இருப்பதால், அந்த உரைகாரர் காலத்திற்கு முன்பே 41 பாடல்கள் நூலுள் அமைந்துவிட்டமை புலனும். புறத்திரட்டில் 'களம்' என்ற அதிகாரத்தில் களவழி நாற்பதின் செய்யுட்களுள் பத்தினை அத் தொகைநூல் ஆசிரியர் கோத்துள்ளார். அவர் கொடுத்துள்ள பாடல்களில் 'படைப் பொலி தார் மன்னர்' (1427) என்ற பாடல் மட்டும் இப்பொழுதுள்ள களவழி நாற்பது ஏட்டுப் பிரதிகளில் இல்லை. இப் பாடலும் சேர, 42 பாடல்களாகும். இப் புறத்திரட்டுச் செய்யுள் மிகைப் பாடலாக நூல் இறுதியில் அமைக்கப் பெற்றுள்ளது.

.இந் நூற் பாடல்களில் நாலடி அளவியல் வெண்பாக்களும் (22) பஃறொடை வெண்பாக்களும் (19) காணப்படுகின்றன. ஐந்து செய்யுட்களைத் தவிர ஏனைய வெல்லாம் 'அட்ட களத்து' என்று முடிகின்றன. மூன்று செய்யுட்கள் (15, 21, 29), 'பொருத களத்து' என்றும், ஒரு செய்யுள் (40), 'கணைமாரி பெய்த களத்து' என்றும், மற்றொரு செய்யுள் (35), 'அரசுஉவா வீழ்ந்த களத்து' என்றும் முடிவு பெற்றுள்ளன. யானை, குதிரை, தேர், தானை, என்ற நால்வகைப் படைப் போரும் குறிக்கப்படினும், யானைப் போரைப் பற்றிய செய்யுட்களே மிகுதியாய் உள்ளன. சேரன் யானைப் படை மிகுதியுடையனுதல் பற்றி, அதனை மிகுதியாக வருணித்தார் போலும்! போர்க்களக் காட்சிகளை உவமை வாயிலாக ஆசிரியர் விளக்கும் திறம் மிக அழகாய் அமைந்துள்ளது. பின்னூல்கள் போர்க் களத்தை வருணித்துப் பாடுதலுக்கு இந் நூல் வழிகாட்டியாய் அமைந்தது என்று கூறலாம்.

இந் நூற் செய்யுட்கள் நச்சினர்க்கினியர் முதலிய பழைய உரைகாரர்களால் மேற்கோளாகக் காட்டப்பெறும் சிறப்பினைப் பெற்றுள்ளன. இந் நூல் முழுமைக்கும் பழைய உரை காணப்படுகிறது.

# களவழி நாற்பது

(பொய்கையார்)

நாள் ஞாயிறு உற்ற செருவிற்கு வீழ்ந்தவர்
வாள் மாய் குருதி களிறு உழக்க, தாள் மாய்ந்து,
முற்பகல் எல்லாம் குழம்பு ஆகி, பிற்பகல்
துப்புத் துகளின் கெழூஉம்—புனல் நாடன்
தப்பியார் அட்ட களத்து. 1

ஞாட்பினுள் எஞ்சிய ஞாலம் சேர் யானைக் கீழ்ப்
போர்ப்பு இல் இடி முரசின் ஊடு போம் ஒண் குருதி
கார்ப்பெயல் பெய்த பின், செங் குளக் கோட்டுக் கீழ்
நீர்த் தூம்பு நீர் உமிழ்வ போன்ற—புனல் நாடன்
ஆர்த்து அமர் அட்ட களத்து. 2

ஒழுக்கும் குருதி உழக்கித் தளர்வார்,
இழுக்கும் களிற்றுக் கோடு ஊன்றி எழுவர்—
மழைக் குரல் மா முரசின், மல்கு நீர் நாடன்
பிழைத்தாரை அட்ட களத்து. 3

உருவக் கடுந் தேர் முருக்கி, மற்று அத் தேர்ப்
பருதி சுமந்து எழுந்த யானை, இரு விசும்பில்
செல் சுடர் சேர்ந்த மலை போன்ற—செங் கண் மால்
புல்லாரை அட்ட களத்து. 4

தெரி கணை எஃகம் திறந்த வாய் எல்லாம்
குருதி படிந்து உண்ட காகம், உரு இழந்து,
குக்கில் புறத்த; சிரல் வாய—செங் கண் மால்
தப்பியார் அட்ட களத்து. 5

நால் நால்-திசையும் பிணம் பிறங்க, யானை
அடுக்குபு பெற்றிக் கிடந்த—இடித்து உரறி,
அம் கண் விசும்பின் உரும் எறிந்து, எங்கும்
பெரு மலை தூவ எறிந்தற்றே; அரு மணிப் பூண்
ஏந்து எழில் மார்பின், இயல் திண் தேர், செம்பியன்
வேந்தரை அட்ட களத்து. 6

அஞ்சனக் குன்று ஏய்க்கும் யானை அமர் உழக்கி,
இங்குலிகக் குன்றேபோல் தோன்றுமே—செங் கண்
வரி வரால் மீன் பிறழும் காவிரி நாடன்
பொருநரை அட்ட களத்து. 7

யானைமேல் யானை நெரிதர, ஆனாது
கண் நேர் கடுங் கணை மெய்ம் மாய்ப்ப, எவ்வாயும்
எண்ண அருங் குன்றில் குரீஇஇனம் போன்றவே—
பண் ஆர் இடி முரசின், பாய் புனல், நீர் நாடன்
நண்ணாரை அட்ட களத்து. 8

மேலோரைக் கீழோர் குறுகிக் குறைத்திட்ட
கால் ஆசோடு அற்ற கழற் கால், இருங்கடலுள்
நீலச் சுறுப் பிறழ்வ போன்ற—புனல் நாடன்
நேராரை அட்ட களத்து. 9

பல் கணை எவ் வாயும் பாய்தலின், செல்கலாது
ஒல்கி, உயங்கும் களிறு எல்லாம், தொல் சிறப்பின்
செவ்வல்அம் குன்றம்போல் தோன்றும்—புனல் நாடன்
தெவ்வரை அட்ட களத்து. 10

கழுமிய ஞாட்பினுள் மைந்து இழந்தார் இட்ட
ஒழி முரசம் ஒண் குருதி ஆடி, தொழில் மடிந்து,
கண் காணா யானை உதைப்ப, இழுமென
மங்குல் மழையின் அதிரும்—அதிராப் போர்ச்
செங் கண் மால் அட்ட களத்து. 11

ஓவாக் கணை பாய ஒல்கி, எழில் வேழம்
தீவாய்க் குருதி இழிதலால், செந் தலைப்
பூவல்அம் குன்றம் புயற்கு ஏற்ற போன்றனவே—
காவிரி நாடன் கடாஅய், கடிது ஆகக்
கூடாரை அட்ட களத்து. 12

நிரை கதிர் நீள் எஃகம் நீட்டி, வயவர்
வரை புரை யானைக் கை நூற, வரை மேல்
உரும் எறி பாம்பின் புரளும்—செரு மொய்ம்பின்
சேய் பொருது அட்ட களத்து. 13

கவளம் கொள் யானையின் கைகள் துணிக்க,
பவளம் சொரிதரு பை போல், திவள் ஒளிய
ஒண் செங் குருதி உமிழும்—புனல் நாடன்
கொங்கரை அட்ட களத்து. 14

கொல் யானை பாய, குடை முருக்கி, எவ்வாயும்
புக்க வாய் எல்லாம் பிணம் பிறங்க, தச்சன்
வினை படு பள்ளியின் தோன்றுமே—செங் கண்
சின மால் பொருத களத்து. 15

பரும இன மாக் கடவி, தெரி மறவர்
ஊக்கி, எடுத்த அரவத்தின் ஆர்ப்பு அஞ்சாக்
குஞ்சரக் கும்பத்துப் பாய்வன, குன்று இவரும்
வேங்கை இரும் புலி போன்ற—புனல் நாடன்
வேந்தரை அட்ட களத்து. 16

ஆர்ப்பு எழுந்த ஞாட்பினுள் ஆள் ஆள் எதிர்த்து ஓடி,
தாக்கி எறிதர, வீழ்தரும் ஒண் குருதி
கார்த்திகைச் சாற்றில் கழி விளக்குப் போன்றனவே—
போர்க் கொடித் தானை, பொரு புனல், நீர் நாடன்
ஆர்த்து அமர் அட்ட களத்து. 17

நளிந்த கடலுள் திமில் திரைபோல், எங்கும்
விளிந்தார் பிணம் குருதி ஈர்க்கும்—தெளிந்து
தடற்று இலங்கு ஒள் வாள், தளை அவிழ் தார், சேஎய்
உடற்றியார் அட்ட களத்து. 18

இடை மருப்பின் விட்டு எறிந்த எஃகம் காழ் மூழ்கி,
கடைமணி காண்வரத் தோன்றி, நடை மெலிந்து,
முக் கோட்ட போன்ற, களிறு எல்லாம்—நீர் நாடன்
புக்கு அமர் அட்ட களத்து. 19

இரு சிறகர் ஈர்க்கும் பரப்பி, எருவை
குருதி பிணம் கவரும் தோற்றம், அதிர்வு இலாச்
சீர் முழாப் பண் அமைப்பான் போன்ற—புனல் நாடன்
நேராரை அட்ட களத்து. 20

இணை வேல் எழில் மார்வத்து இங்க, புண் கூர்ந்து,
கணை அலைக்கு ஒல்கிய யானை, துணை இலவாய்,
தொல் வலியின் தீரா, துளங்கினவாய், மெல்ல
நிலம் கால் கவவு மலை போன்ற—செங் கண்
சின மால் பொருத களத்து. 21

இரு நிலம் சேர்ந்த குடைக் கீழ், வரி நுதல்
ஆடு இயல் யானைத் தடக் கை ஒளிறு வாள்
ஓடா மறவர் துணிப்ப, துணிந்தவை
கோடு கொள் ஒண் மதியை நக்கும் பாம்பு ஒக்குமே—
பாடு ஆர் இடி முரசின் பாய் புனல் நீர் நாடன்
கூடாரை அட்ட களத்து. 22

எற்றி வயவர் எறிய, நுதல் பிளந்து
நெய்த்தோர்ப் புனலுள் நிவந்த களிற்று உடம்பு,
செக்கர் கொள் வானில் கருங் கொண்மூப் போன்றனவே—
கொற்ற வேல் தானை, கொடித் திண் தேர், செம்பியன்
செற்றாரை அட்ட களத்து. 23

திண் தோள் மறவர் எறிய, திசைதோறும்
பைந் தலை பாறிப் புரள்பவை, நன்கு எனைத்தும்
பெண்ணைஅம் தோட்டம் பெரு வளி புக்கற்றே—
கண் ஆர் கமழ் தெரியல், காவிரி, நீர் நாடன்
நண்ணாரை அட்ட களத்து. 24

மலை கலங்கப் பாயும் மலைபோல் நிலை கொள்ளாக்
குஞ்சரம் பாய, கொடி எழுந்து, பொங்குபு
வானம் துடைப்பன போன்ற—புனல் நாடன்
மேவாரை அட்ட களத்து. 25

எவ் வாயும் ஓடி, வயவர் துணித்திட்ட
கை வாயில் கொண்டு, எழுந்த செஞ் செவிப் புன் சேவல்
ஐ வாய் வய நாகம் கவ்வி விசும்பு இவரும்
செவ் வாய் உவணத்தின் தோன்றும்—புனல் நாடன்
தெவ்வரை அட்ட களத்து. 26

செஞ் சேற்றுள் செல் யானை சீறி மிதித்தலால்,
ஒண் செங் குருதி தொகுபு ஈண்டி நின்றவை,
பூ நீர் வியல் மிடாப் போன்ற—புனல் நாடன்
மேவாரை அட்ட களத்து. 27

ஓடா மறவர் உருத்து, மதம் செருக்கி,
பீடுடை வாளர் பிணங்கிய ஞாட்பினுள்,
கேடகத்தோடு அற்ற தடக் கை கொண்டு ஓடி,
இகலன் வாய்த் துற்றிய தோற்றம், அயலார்க்குக்
கண்ணாடி காண்பாரின் தோன்றும்—புனல் நாடன்
நண்ணாரை அட்ட களத்து. 28

கடி காவில் காற்று உற்று எறிய, வெடி பட்டு,
வீற்று வீற்று ஓடும் மயில் இனம்போல், நால் திசையும்
கேளிர் இழந்தார் அலமருப—செங் கண்
சின மால் பொருத களத்து. 29

மடங்க எறிந்து மலை உருட்டும் நீர்போல்,
தடங் கொண்ட ஒண் குருதி கொல் களிறு ஈர்க்கும்—
மடங்கா மற மொய்ம்பின், செங் கண், சின மால்
அடங்காரை அட்ட களத்து. 30

ஓடா மறவர் எறிய, நுதல் பிளந்த
கோடு ஏந்து கொல் களிற்றின் கும்பத்து எழில் ஓடை
மின்னுக் கொடியின் மிளிரும்—புனல் நாடன்
ஒன்னாரை அட்ட களத்து. 31

மை இல் மா மேனி நிலம் என்னும் நல்லவள்
செய்யது போர்த்தாள்போல் செவ்வந்தாள்—பொய் தீர்ந்த
பூந் தார், முரசின், பொரு புனல், நீர் நாடன்
காய்ந்தாரை அட்ட களத்து. 32

பொய்கை உடைந்து புனல் பாய்ந்த வாய் எல்லாம்,
நெய்தல் இடை இடை வாளை பிறழ்வனபோல்
ஐது இலங்கு எஃகின் அவிர் ஒளி வாள் தாயினவே—
கொய் சுவல் மாவின், கொடித் திண் தேர், செம்பியன்
தெவ்வரை அட்ட களத்து. 33

இடரிய ஞாட்பினுள் ஏற்று எழுந்த மைந்தர்
சுடர் இலங்கு எஃகம் எறிய, சோர்ந்து உக்க
குடர் கொடு வாங்கும் குறு நரி, கந்தில்
தொடரொடு கோள் நாய் புரையும்—அடர் பைம் பூண்
சேய் பொருது அட்ட களத்து. 34

செவ் வரைச் சென்னி அரிமானோடு அவ் வரை
ஒல்கி உருமிற்கு உடைந்தற்றால்—மல்கிக்
கரை கொன்று இழிதரும் காவிரி நாடன்
உரை சால் உடம்பிடி மூழ்க, அரசோடு
அரசுஉவா வீழ்ந்த களத்து. 35

ஓஒ உவமன் உறழ்வு இன்றி ஒத்ததே,—
காவிரி நாடன் கழுமலம் கொண்ட நாள்,
மா உதைப்ப, மாற்றார் குடை எலாம் கீழ் மேலாய்,
ஆ உதை காளாம்பி போன்ற,—புனல் நாடன்
மேவாரை அட்ட களத்து. 36

அரசர் பிணம் கான்ற நெய்த்தோர், முரசொடு
முத்துடைக் கோட்ட களிறு ஈர்ப்ப, எத் திசையும்
பௌவம் புணர் அம்பி போன்ற—புனல் நாடன்
தெவ்வரை அட்ட களத்து. 37

பருமப் பணை எருத்தின் பல் யானை புண் கூர்ந்து
உரும் எறி பாம்பின் புரளும்—செரு மொய்ம்பின்,
பொன் ஆர மார்பின், புனை கழற் கால், செம்பியன்
துன்னுரை அட்ட களத்து. 38

மைந்து கால் யாத்து மயங்கிய ஞாட்பினுள்,
புய்ந்து கால் போகிப் புலால் முகந்த வெண்குடை
பஞ்சி பெய் தாலமே போன்ற—புனல் நாடன்
வஞ்சிக்கோ அட்ட களத்து. 39

வெள்ளி வெண் நாஞ்சிலால் ஞாலம் உழுவனபோல்,
எல்லாக் களிறும் நிலம் சேர்ந்த—பல் வேல்,
பணை முழங்கு போர்த் தானைச் செங் கண் சின மால்
கணை மாரி பெய்த களத்து. 40

வேல் நிறத்து இங்க, வயவரால் ஏறுண்டு
கால் நிலை கொள்ளாக் கலங்கி, செவி சாய்த்து,
மா, நிலம் கூறும் மறை கேட்ப போன்றவே—
பாடு ஆர் இடி முரசின், பாய் புனல், நீர் நாடன்
கூடாரை அட்ட களத்து. 41

## மிகைப் பாடல்

*படைப்பொலி தார் மன்னர் பருஉக் குடர் மாந்திக்*
*குடைப் புறத்துத் துஞ்சும் இகலன், இடைப் பொலிந்த*
*திங்களில் தோன்றும் முயல்போலும்—செம்பியன்*
*செங் கண் சிவந்த களத்து.*

# பாடல் முதற் குறிப்பு அகராதி

## திருக்குறள் (13-112)


| | |
|---|---|
| அஃகாமை செல்வத்திற்கு | 18:8 |
| அஃகி அகன்ற அறிவு | 18:5 |
| அகடு ஆரார் | 94:6 |
| அகப் பட்டி ஆவாரைக் | 108:4 |
| அகரம் முதல எழுத்து | 1:1 |
| அகலாது அணுகாது | 70:1 |
| அகழ்வாரைத் தாங்கும் | 16:1 |
| அகன் அமர்ந்து ஈதலின் | 10:2 |
| அகன் அமர்ந்து செய்யாள் | 9:4 |
| அங்கணத்துள் உக்க அமிழ்து | 72:10 |
| அச்சம் உடையார்க்கு | 54:4 |
| அச்சமே கீழ்களது | 108:5 |
| அசையியற்கு உண்டு | 110:8 |
| அஞ்சாமை அல்லால் | 50:7 |
| அஞ்சாமை ஈகை | 39:2 |
| அஞ்சும் அறியான் | 87:3 |
| அஞ்சுவது அஞ்சாமை | 43:8 |
| அஞ்சுவது ஓரும் | 37:6 |
| அடக்கம் அமரருள் | 13:1 |
| அடல்தகையும் ஆற்றலும் | 77:8 |
| அடல் வேண்டும் | 35:3 |
| அடுக்கிய கோடி | 96:4 |
| அடுக்கி வரினும் | 63:5 |
| அடுத்தது காட்டும் | 71:6 |
| அணங்கு கொல் ஆய் | 109:1 |
| அணி அன்றோ நாண் | 102:4 |
| அந்தணர் என்போர் | 3:10 |
| அந்தணர் நூற்கும் | 55:3 |
| அமரகத்து ஆற்றறுக்கும் | 82:4 |
| அமரகத்து வன்கண்ணர் | 103:7 |
| அமிழ்தினும் ஆற்ற இனிதே | 7:4 |
| அமைந்து ஆங்கு ஒழுகான் | 48:4 |
| அரங்கு இன்றி வட்டு | 41:1 |
| அரம் பொருத பொன் | 89:8 |
| அரம் போலும் | 100:7 |
| அரிதுஅரோ தேற்றம் | 116:3 |
| அரிது ஆற்றி அல்லல் | 116:10 |
| அரிய என்று ஆகாத | 54:7 |
| அரிய கற்று ஆசு | 51:3 |
| அரியவற்றுள் எல்லாம் | 45:3 |
| அருங் கேடன் என்பது | 21:10 |
| அருஞ் செவ்வி இன்னா | 57:5 |
| அருட் செல்வம் செல்வத்துள் | 25:1 |
| அரும் பயன் ஆயும் | 20:8 |
| அரு மறை சோரும் | 85:7 |
| அருமை உடைத்து என்று | 62:1 |
| அரு வினை என்ப உளவோ | 49:3 |
| அருள் அல்லது யாது | 26:4 |
| அருள் இல்லார்க்கு அவ் | 25:7 |
| அருள் என்னும் அன்பு | 76:7 |
| அருள் கருதி அன்புடையார் | 29:5 |
| அருள் சேர்ந்த | 25:3 |
| அருள் வெஃகி | 18:6 |
| அருளொடும் அன்பொடும் | 76:5 |
| அல்லல் அருள் | 25:5 |
| அல்லவை தேய அறம் | 10:6 |
| அல்லற்பட்டு ஆற்றாது | 56:5 |
| அலந்தாரை அல்லல் நோய் | 131:3 |
| அலர் எழ ஆர் | 115:1 |
| அலர் நாண ஒல்வதோ | 115:9 |
| அவ்வித்து அழுக்காறு | 17:7 |
| அவ்விய நெஞ்சத்தான் | 17:9 |
| அவர் தந்தார் என்னும் | 119:2 |
| அவர் நெஞ்சு அவர்க்கு | 130:1 |
| அவா இல்லார்க்கு இல்லாகும் | 37:8 |
| அவா என்ப எல்லா | 37:1 |
| அவாவினை ஆற்ற | 37:7 |
| அவி சொரிந்து ஆயிரம் | 26:9 |
| அவை அறிந்து | 72:1 |
| அவை அறியார் | 72:3 |
| அழக் கொண்ட | 66:9 |
| அழச் சொல்லி | 80:5 |
| அழல் போலும் மாலைக்குத் | 123:8 |
| அழிவதூஉம் ஆவதூஉம் | 47:1 |
| அழிவந்த செய்யினும் | 81:7 |
| அழிவினவை நீக்கி | 79:7 |
| அழிவு இன்று அறை | 77:4 |
| அழுக்கற்று அகன்றாரும் | 17:10 |
| அழுக்காற்றின் அல்லவை | 17:4 |
| அழுக்காறு அவா வெகுளி | 4:5 |
| அழுக்காறு உடையார்க்கு | 17:5 |
| அழுக்காறு உடையான்கண் | 14:5 |
| அழுக்காறு என ஒரு | 17:8 |
| அளவளாவு இல்லாதான் | 53:3 |
| அளவின்கண் நின்று | 29:6 |
| அளவு அல்ல செய்து | 29:9 |
| அளவு அறிந்தார் | 29:8 |
| அளவு அறிந்து வாழாதான் | 48:9 |
| அளித்து அஞ்சல் | 116:4 |
| அற்கா இயல்பிற்றுச் செல்வம் | 34:3 |
| அற்றது அறிந்து | 95:4 |
| அற்றம் மறைக்கும் | 98:10 |
| அற்றம் மறைத்தலோ | 85:6 |
| அற்றவர் என்பார் | 37:5 |
| அற்றார் அழி பசி | 23:6 |
| அற்றார்க்கு ஒன்று | 101:7 |
| அற்றாரைத் தேறுதல் | 51:6 |
| அற்றால் அளவு அறிந்து | 95:3 |
| அற்றேம் என்று | 63:6 |
| அற ஆழி அந்தணன் | 1:8 |
| அறத்தான் வருவதே | 4:9 |
| அறத்திற்கே அன்பு சார்பு | 8:6 |

அறத்தின் ஊஉங்கு 4:2
அறத்து ஆற்றின் இல்வாழ்க்கை 5:6
அறத்து ஆறு இது 4:7
அறம் கூறுன் அல்ல 19:1
அறம் சாரா நல்குரவு 105:7
அறம் சொல்லும் நெஞ்சததான் 19:5
அறம் பொருள் இன்பம் 51:1
அறவினை யாது எனின் 33:1
அறவினையும் ஆன்ற 91:9
அறன் அழீஇ 19:2
அறன் அறிந்து ஆன்று 64:5
அறன் அறிந்து மூத்த 45:1
அறன் அறிந்து வெஃகா 18:9
அறன் ஆக்கம் வேண்டாதான் 17:3
அறன் இயலான் 15:7
அறன் இழுக்காது 39:4
அறன் ஈனும் 76:4
அறன் எனப்பட்டதே 5:9
அறன்கடை நின்றுருள் 15:2
அறன் நோக்கி ஆற்றும்கொல் 19:9
அறன் வரையான் 15:10
அறிகிலார் எல்லாரும் 114:9
அறி கொன்று 64:8
அறிதோறு அறியாமை 111:10
அறிந்து ஆற்றி 52:5
அறிவினுன் ஆகுவது 32:5
அறிவினுள் எல்லாம் 21:3
அறிவு அற்றம் 43:1
அறிவு இலார் தாம் 85:3
அறிவு இலான் நெஞ்சு 85:2
அறிவு இன்மை 85:1
அறிவு உடையார் ஆவது 43:7
அறிவு உடையார் எல்லாம் 43:10
அறிவு உரு 69:4
அறுவாய் நிறைந்த 112:7
அறை பறை அன்னர் 108:6
அன்பிற்கும் உண்டோ 8:1
அன்பின் வழியது உயர்நிலை 8:10
அன்பின் விழையார் 92:1
அன்பு அகத்து இல்லா 8;8
அன்பு அறிவு ஆராய்ந்த 69:2
அன்பு அறிவு தேற்றம் 52:3
அன்பு இலன் 87:2
அன்பு இலார் எல்லாம் 8:2
அன்பு ஈனும் ஆர்வம் 8:4
அன்பு ஒரீஇ, தற் 101:9
அன்பு உடைமை ... இவ் 100:2
அன்பு உடைமை ... வேந்து 69:1
அன்பு நாண் ஒப்புரவு 99:3
அன்பும் அறனும் 5:5
அன்புற்று அமர்ந்த 8:5
அன்போடு இயைந்த வழக்கு 8:3
அன்று அறிவாம் என்னாது 4:6
அனிச்சப்பூக் கால் களையாள் 112:5
அனிச்சமும் அன்னத்தின் 112:10

ஆக்கம் அதர் வினாய்ச் 60:4
ஆக்கம் இழந்தேம் 60:3
ஆக்கம் கருதி 47:3
ஆக்கமும் கேடும் 65:2
ஆகு ஆறு அளவு 48:8
ஆகு ஊழால் தோன்றும் 38:1
ஆங்கு அமைவு 74:10
ஆ பயன் குன்றும் 56:10
ஆய்ந்து ஆய்ந்து 80:2
ஆயும் அறிவினர் 92:8
ஆரா இயற்கை 37:10
ஆவிற்கு நீர் என்று 107:6
ஆள்வினையும் ஆன்ற 103:2
ஆற்றாரும் ஆற்றி அடுப 50:3
ஆற்றின் அளவு அறிந்து ஈக 48:7
ஆற்றின் அளவு அறிந்து கற்க 73:5
ஆற்றின் ஒழுக்கி அறன் 5:8
ஆற்றின் நிலை தளர்ந்தற்றே 72:6
ஆற்றின் வருந்தா. 47:8
ஆற்றுபவர்க்கும் அரண் 75:1
ஆற்றுவார் ஆற்றல் இகழாமை 90:1
ஆற்றுவார் ஆற்றல் பசி 23:5
ஆற்றுவார் ஆற்றல் பணிதல் 99:5

இகல் எதிர் சாய்ந்து 86:5
இகல் என்ப எல்லா 86:1
இகல் என்னும் எவ்வ 86:3
இகல் காணான் ஆக்கம் 86:9
இகலான் ஆம் இன்னாத 86:10
இகலிற்கு எதிர்சாய்தல் 86:8
இகலின் மிகல் இனிது 86:6
இகழ்ச்சியின் கெட்டாரை 54:9
இகழ்ந்து எள்ளாது 106:7
இடம் எல்லாம் கொள்ளாத் 107:4
இடன் இல் பருவத்தும் 22:8
இடிக்கும் துணையாரை 45:7
இடிப்பாரை இல்லாத 45:8
இடி புரிந்து எள்ளும் 61:7
இடுக்கண் கால் 103:10
இடுக்கண் படினும் 66:4
இடுக்கண் வருங்கால் 63:1
இடும்பைக்கு இடும்பை 63:3
இடும்பைக்கே கொள்கலம் 103:9
இடை தெரிந்து 72:2
இணர் ஊழ்த்தும் நாறா 65:10
இணர் எரி தோய்வன்ன 31:8
இதனை இதனால் 52:7
இம்மைப் பிறப்பில் 132:5
இமைப்பின் கரப்பாக்கு 113:9
இமையாரின் வாழினும் 91:6
இயல்பு ஆகும் நோன்பிற்கு 35:4
இயல்பினான் இல்வாழ்க்கை 5:7
இயல்புளிக் கோல் ஓச்சும் 55:5
இயற்றலும் ஈட்டலும் 39:5
இரக்க இரத்தக்கார்க் 106:1
இரத்தலின் இன்னாது 23:9
இரத்தலும் ஈதலே 106:4
இரந்தும் உயிர் வாழ்தல் 107:2
இரப்பன் இரப்பாரை 107:7
இரப்பாரை இல்லாயின் 106:8
இரப்பான் வெகுளாமை 106:10
இரவார் இரப்பார்க்கு 104:5
இரவு உள்ள உள்ளம் 107:9
இரவு என்னும் ஏமாப்பு 107:8

இருந்து உள்ளி என் 125:3
இருந்து ஓம்பி இல் 9:1
இரு நோக்கு இவள் 110:1
இரு புனலும் 74:7
இரு மனப் பெண்டிரும் 92:10
இருமை வகை தெரிந்து 3:3
இரு வேறு உலகத்து 38:4
இருள் சேர் இரு 1:5
இருள் நீங்கி இன்பம் 36:2
இல்லது என் இல்லவள் 6:3
இல்லாரை எல்லாரும் 76:2
இல்லாள்கண் தாழ்ந்த 91:3
இல்லாளை அஞ்சுவான் 91:5
இல்லை தவறு அவர்க்கு 133:1
இல்வாழ்வான் என்பான் 5:1
இலக்கம் உடம்பு 63:7
இலங்கிழாய் இன்று மறப்பின் 127:2
இலம் என்று அசைஇ 104:10
இலம் என்று வெஃகுதல் 18:4
இலர் பலர் ஆகிய 27:10
இலன் என்று தீயவை 21:5
இலன் என்னும் எவ்வம் 23:3
இவறலும் மாண்பு 44:2
இழத்தொறூஉம் காதலிக்கும் 94:10
இழிவு அறிந்து உண்பான்கண் 95:6
இழுக்கல் உடை உழி 42:5
இழுக்காமை யார்மாட்டும் 54:6
இழைத்தது இகவாமைச் 78:9
இளித்தக்க இன்னா 129:8
இளி வரின் வாழாத 97:10
இளைதாக முள்மரம் 88:9
இளையர் இனமுறையர் 70:8
இற் பிறந்தார்கண் அல்லது 96:1
இற்பிறந்தார்கண்ணேயும் 105:4
இறந்த வெகுளியின் 54:1
இறந்தார் இறந்தார் 31:10
இறந்து அமைந்த 90:10
இறப்பே புரிந்த தொழிற்று 98:7
இறல் ஈனும் எண்ணாது 18:10
இறுதி பயப்பினும் 69:10
இறை கடியன் என்று 57:4
இறை காக்கும் வையகம் 55:7
இன்கண் உடைத்து 116:2
இன் சொல்-ஆல் ஈரம் 10:1
இன் சொல் இனிது 10:9
இன் சொலால் ஈத்து 39:7
இன்பத்துள் இன்பம் பயக்கும் 86:4
இன்பத்துள் இன்பம் விழையாதான் 63:9
இன்பம் இடையறாது 37:9
இன்பம் ஒருவற்கு 106:2
இன்பம் கடல் மற்றுக் 117:6
இன்பம் விழையான் இடும்பை 63:8
இன்பம் விழையான் வினை 62:5
இன்மை இடும்பை 107:3
இன்மை என ஒரு பாவி 105:2
இன்மை ஒருவற்கு 99:8
இன்மையின் இன்னாதது யாது 105:1
இன்மையின் இன்னாது உடைமை 56:8
இன்மையுள் இன்மை 16:3
இன்றி அமையாச் 97:1
இன்றும் வருவது 105:8
இன்னா எனத் தான் 32:6
இன்னா செய்தார்க்கும் 99:7
இன்னா செய்தாரை 32:4
இன்னாது இரக்கப்படுதல் 23:4
இன்னாது இனன் இல் 116:8
இன்னாமை இன்பம் எனக் 63:10
இனத்து ஆற்றி 57:8
இனம் போன்று 83:2
இனி அன்ன நின்னொடு 130:4
இனிய உளவாக 10:10
இனைத் துணைத்து என்பது 9:7
இனையர் இவர் எமக்கு 79:10

ஈட்டம் இவறி இசை 101:3
ஈத்து உவக்கும் 23:8
ஈதல் இசைபட 24:1
ஈர்ங் கை விதிரார் 108:7
ஈவார்கண் என் உண்டாம் 106:9
ஈன்ற பொழுதின் பெரிது 7:9
ஈன்றாள் பசி 66:6
ஈன்றாள் முகத்தேயும் 93:3

உட்கப் படாஅர் 93:1
உட்பகை அஞ்சித் தற் காக்க 89:3
உடம்பாடு இலாதவர் 89:10
உடம்பொடு உயிரிடை 113:2
உடுக்கை இழந்தவன் 79:8
உடுப்பதூஉம் உண்பதூஉம் 108:9
உடை செல்வம் ஊண் 94:9
உடைத் தம் வலி அறியார் 48:3
உடைமையுள் இன்மை 9:9
உடையர் எனப்படுவது 60:1
உடையார்முன் இல்லார்போல் 40:5
உண்டார்கண் அல்லது 109:10
உண்ணற்க கள்ளை 93:2
உண்ணாது நோற்பார் 16:10
உண்ணாமை உள்ளது 26:5
உண்ணாமை வேண்டும் 26:7
உணர்வது உடையார்முன் 72:8
உணலினும் உண்டது 133:6
உதவி வரைத்து அன்று 11:5
உப்பு அமைந்தற்றால் 131:2
உய்த்தல் அறிந்து 129:7
உயர்வு அகலம் 75:3
உயிர் உடம்பின் நீக்கியார் 33:10
உயிர்ப்ப உளர் 88:10
உரம் ஒருவற்கு உள்ள 60:10
உரன் என்னும் 3:4
உரன் நசைஇ உள்ளம் 127:3
உருவு கண்டு 67:7
உருள் ஆயம் ஓவாது 94:3
உரைப்பார் உரைப்பவை 24:2
உலகத்தார் உண்டு 85:10
உலகத்தோடு ஒட்ட ஒழுகல் 14:10
உலகம் தழீஇயது 43:5
உலைவு இடத்து ஊறு 77:2
உவக்காண் எம் காதலர் 119:5
உவந்து உறைவர் உள்ளத்துள் 113:10
உவப்பத் தலைக்கூடி 40:4

உழந்து உழந்து உள் 118:7
உழவினர் கைம்மடங்கின் 104:6
உழுது உண்டு வாழ்வாரே 104:3
உழுவார் உலகத்தார்க்கு 104:2
உழைப் பிரிந்து 53:10
உள் ஒற்றி 93:7
உள்ளக் களித்தலும் காண 129:1
உள்ளத்தார் காதலவர் 125:9
உள்ளத்தால் உள்ளலும் 29:2
உள்ளத்தால் பொய்யாது 30:4
உள்ளம் இலாதவர் 60:8
உள்ளம் உடைமை 60:2
உள்ளம் போன்று உள்வழிச் 117:10
உள்ளற்க உள்ளம் 80:8
உள்ளிய எல்லாம் உடன் 31:9
உள்ளியது எய்தல் 54:10
உள்ளினும் தீராப் பெரு 121:1
உள்ளினேன் என்றேன் 132:6
உள்ளுவது எல்லாம் 60:6
உள்ளுவன்மன் யான் உரைப்பது 119:4
உள்ளுவன்மன் யான் மறப்பின் 113:5
உளபோல் முகத்து 58:4
உளர் என்னும் 41:6
உளர் எனினும் 73:10
உள வரை தூக்காத 48:10
உற்ற நோய் நீக்கி 45:2
உற்ற நோய் நோன்றல் 27:1
உற்றவன் தீர்ப்பான் 95:10
உற்றான் அளவும் 95:9
உறங்குவது போலும் 34:9
உறல் முறையான் 89:5
உறாஅதவர்க் கண்ட 130:2
உறாஅதவர்போல் 110:6
உறாஅதோ ஊர் 115:3
உறாஅர்க்கு உறு நோய் 120:10
உறின் உயிர் அஞ்சா 78:8
உறின் நட்டு 82:2
உறுதோறு உயிர் தளிர்ப்பத் 111:6
உறுப்பு அமைந்து 77:1
உறுப்பு ஒத்தல் 100:3
உறு பசியும் ஓவாப் பிணியும் 74:4
உறு பொருளும் உல்கு 76:6
உறுவது சீர்தூக்கும் 82:3
உறை சிறியார் 68:10

ஊக்கம் உடையான் 49:6
ஊடல் உணங்க 131:10
ஊடல் உணர்தல் 111:9
ஊடலின் உண்டு ஆங்கு 131:7
ஊடலின் தோற்றவர் 133:7
ஊடலின் தோன்றும் 133:2
ஊடற்கண் சென்றேன்மன் 129:4
ஊடி இருந்தேமா 132:2
ஊடிப் பெறுகுவம்கொல்லோ 133:8
ஊடியவரை உணராமை 131:4
ஊடுக மன்னோ 133:9
ஊடுதல் காமத்திற்கு 133:10
ஊண் உடை எச்சம் 102:2
ஊதியம் என்பது 80:7
ஊரவர் கௌவை எருவாக 115:7
ஊருணி நீர் 22:5
ஊழி பெயரினும் 99:9
ஊழின் பெருவலி யா உள 38:10
ஊழையும் உப்பக்கம் 62:10
ஊறு ஒரால் 67:2
ஊனைக் குறித்த உயிர் 102:3

எச்சம் என்று 101:4
எட் பகவு அன்ன 89:9
எண் என்ப ஏனை 40:2
எண் சேர்ந்த 91:10
எண்ணித் துணிக 47:7
எண்ணிய எண்ணியாங்கு 67:6
எண்ணியார் எண்ணம் 50:4
என் பதத்தால் எய்தல் 100:1
என் பதத்தான் ஓரா 55:8
என் பொருளவாகச் 43:4
எதிரதாக் காக்கும் 43:9
எந் நன்றி கொன்றார்க்கும் 11:10
எப் பொருள் எத் 36:5
எப் பொருள் யார் யார் 43:3
எப் பொருளும் ஓரார் 70:5
எய்தற்கு அரியது 49:9
எரியான் சுடப்படினும் 90:6
எல்லாப் பொருளும் 75:6
எல்லார்க்கும் எல்லாம் 59:2
எல்லார்க்கும் நன்று ஆம் 13:5
எல்லா விளக்கும் 30:9
எல்லைக்கண் நின்றார் 81:6
எவ்வது உறைவது 43:6
எழுதுங்கால் கோல் 129:5
எழுபிறப்பும் தீயவை தீண்டா 7:2
எழுமை எழு பிறப்பும் 11:7
எள்ளாத எண்ணிச் 47:10
எள்ளாமை வேண்டுவான் 29:1
எள்ளின் இளிவாம் 130:8
எளிது என இல் 15:5
எற்றிற்கு உரியர் 108:10
எற்று என்று இரங்குவ 66:5
என்பு இலதனை வெயில் 8:7
என்றும் ஒருவுதல் 66:2
என்னை முன் 78:1
எனைத்தானும் எஞ்ஞான்றும் 32:7
எனைத்தானும் நல்லவை 42:6
எனைத் திட்பம் 67:10
எனைத்து ஒன்று இனிதே 121:2
எனைத் துணையர் ஆயினும் 15:4
எனைத்தும் குறுகுதல் 82:10
எனைத்தும் நினைப்பினும் 121:8
எனைப்பகை உற்றாரும் 21:7
எனை மாட்சித்து 75:10
எனை வகையான் 52:4

ஏதம் பெருஞ் செல்வம் 101:6
ஏதிலார் ஆர 84:7
ஏதிலார் குற்றம்போல் 19:10
ஏதிலார் போலப் 110:9
ஏந்திய கொள்கையார் 90:9
ஏமுற்றவரினும் ஏழை 88:3
ஏரின் உழாஅர் உழவர் 2:4

| | |
|---|---|
| ஏரினும் நன்ருல் | 104:8 |
| ஏவவும் செய்கலான் | 85:8 |
| ஐஉணர்வு எய்தியக் | 36:4 |
| ஐந்து அவித்தான் ஆற்றல் | 3:5 |
| ஐயத்தின் நீங்கித் | 36:3 |
| ஐயப்படாஅது அகத்தது | 71:2 |
| ஒட்டார் பின் சென்று | 97:7 |
| ஒண் பொருள் காழ்ப்ப | 76:10 |
| ஒத்தது அறிவான் | 22:4 |
| ஒப்புரவினல் வரும் கேடு | 22:10 |
| ஒருதலையான் இன்னுது | 120:6 |
| ஒரு நாள் எழு நாள் | 127:9 |
| ஒருபொழுதும் வாழ்வது | 34:7 |
| ஒருமைக்கண் தான் | 40:8 |
| ஒருமைச் செயல் | 84:5 |
| ஒருமை மகளிரே | 98:4 |
| ஒருமையுள் ஆமைபோல் | 13:6 |
| ஒல்லும் கருமம் | 82:8 |
| ஒல்லும் வகையான் | 4:3 |
| ஒல்லும் வாய் எல்லாம் | 68:3 |
| ஒல்வது அறிவது அறிந்து | 48:2 |
| ஒலித்தக்கால் என் | 77:3 |
| ஒழுக்கத்தின் எய்துவர் | 14:7 |
| ஒழுக்கத்தின் ஒல்கார் | 14:6 |
| ஒழுக்கத்து நீத்தார் | 3:1 |
| ஒழுக்கம் உடைமை குடிமை | 14:3 |
| ஒழுக்கம் உடையவர்க்கு | 14:9 |
| ஒழுக்கம் விழுப்பம் | 14:1 |
| ஒழுக்கமும் வாய்மையும் | 96:2 |
| ஒழுக்கு ஆருக் கொள்க | 17:1 |
| ஒள் நுதற்கு ஓஒ | 109:8 |
| ஒளி ஒருவற்கு உள்ள | 98:1 |
| ஒளியார்முன் | 72:4 |
| ஒற்றிஞன் ஒற்றி | 59:3 |
| ஒற்று ஒற்றித் | 59:8 |
| ஒற்று ஒற்று உணராமை | 59:9 |
| ஒற்றும் உரை | 59:1 |
| ஒறுத்தார்க்கு ஒரு நாளை | 16:6 |
| ஒறுத்தாரை ஒன்ருக | 16:5 |
| ஒறுத்தாற்றும் பண்பினுர்கண்ணும் | 58:9 |
| ஒன்ரு உலகத்து | 24:3 |
| ஒன்ருக நல்லது | 33:3 |
| ஒன்ருமை ஒன்றியார்கண் | 89:6 |
| ஒன்ருனும் தீச்சொற் | 13:8 |
| ஒன்று எய்தி நூறு | 94:2 |
| ஒன்னுர்த் தெறலும் | 27:4 |
| ஓஒ இனிதே எமக்கு | 118:6 |
| ஓதல் வேண்டும் | 66:3 |
| ஓதி உணர்ந்தும் | 84:4 |
| ஓம்பின் அமைந்தார் | 116:5 |
| ஓர்த்து உள்ளம் | 36:7 |
| ஓர்ந்து கண்ணேடாது | 55:1 |
| கடல் அன்ன காமம் | 114:7 |
| கடல் ஓடா, கால் | 50:6 |
| கடன் அறிந்து | 69:7 |
| கடன் என்ப நல்லவை | 99:1 |
| கடாஅ உருவொடு கண் | 59:5 |
| கடாஅக் களிற்றின்மேல் | 109:7 |
| கடிது ஓச்சி மெல்ல | 57:2 |
| கடிந்த கடிந்து ஒரார் | 66:8 |
| கடுஞ் சொல்லன் கண் இலன் | 57:6 |
| கடு மொழியும் கையிகந்த | 57:7 |
| கடைக் கொட்கச் | 67:3 |
| கண் உடையர் என்பவர் | 40:3 |
| கண் உள்ளார் | 113:7 |
| கண் களவு கொள்ளும் | 110:2 |
| கண்டது மன்னும் | 115:6 |
| கண்டார் உயிர் உண்ணும் | 109:4 |
| கண்டு கேட்டு உண்டு | 111:1 |
| கண்ணிற்கு அணிகலம் | 58:5 |
| கண்ணின் துனித்தே | 129:10 |
| கண்ணின் பசப்போ | 124:10 |
| கண்ணும் கொளச் சேறி | 125:4 |
| கண்ணுள்ளின் போகார் | 113:6 |
| கண்ணெடு கண் இணை | 110:10 |
| கண்ணேட்டத்து உள்ளது | 58:2 |
| கண்ணேட்டம் இல்லவர் | 58:7 |
| கண்ணேட்டம் என்னும் | 58:1 |
| கண்தாம் கலுழ்வது | 118:1 |
| கண் நிறைந்த காரிகை | 128:2 |
| கண் நின்று கண் | 19:4 |
| கணை கொடிது யாழ் கோடு | 28:9 |
| கதம் காத்து, கற்று | 13:10 |
| கதுமெனத் தாம் | 118:3 |
| கயல் உண்கண் யான் | 122:2 |
| கரத்தலும் ஆற்றேன் | 117:2 |
| கரப்பவர்க்கு யாங்கு | 107:10 |
| கரப்பினும் கையிகந்து | 128:1 |
| கரப்பு இடும்பை | 106:6 |
| கரப்பு இலா நெஞ்சின் | 106:3 |
| கரப்பு இலார் | 106:5 |
| கரவாது உவந்து ஈயும் | 107:1 |
| கருமணியின் பாவாய் | 113:3 |
| கருமத்தான் நாணுதல் | 102:1 |
| கருமம் சிதையாமல் | 58:8 |
| கருமம் செய ஒருவன் | 103:1 |
| கருவியும் காலமும் | 64:1 |
| கல்லா ஒருவன் | 41:5 |
| கல்லாத மேற்கொண்டு | 85:5 |
| கல்லாதவரின் கடை | 73:9 |
| கல்லாதவரும் நனி நல்லர் | 41:3 |
| கல்லாதான் ஒட்பம் | 41:4 |
| கல்லாதான் சொல் | 41:2 |
| கல்லார்ப் பிணிக்கும் | 57:10 |
| கல்லான் வெகுளும் | 87:10 |
| கலங்காது கண்ட | 67:8 |
| கலந்து உணர்த்தும் | 125:6 |
| கவ்வையான் கவ்விது | 115:4 |
| கவறும் கழகமும் | 94:5 |
| கழாஅக் கால் பள்ளியுள் | 84:10 |
| கள் உண்ணுப் போழ்தில் | 93:10 |
| கள்வார்க்குத் தள்ளும் | 29:10 |
| களவின்கண் கன்றிய காதல் | 29:4 |
| களவினல் ஆகிய ஆக்கம் | 29:3 |
| களவு என்னும் கார் | 29:7 |
| களித்தானைக் காரணம் | 93:9 |

களித்து அறியேன் 93:8
களித்தொறும் கள் உண்டல் 115:5
கற்க, கசடு அற 40:1
கற்றதனுல் ஆய பயன் 1:2
கற்ருர்முன் கற்ற செலச் 73:4
கற்ருருள் கற்ருர் 73:2
கற்றிலன் ஆயினும் 42:4
கற்று அறிந்தார் கல்வி 72:7
கற்று ஈண்டு 36:6
கற்று, கண் அஞ்சான் 69:6
கறுத்து இன்ன செய்த 32:2
கனவினுன் உண்டாகும் 122:4
கனவினும் இன்னுது 82:9

காக்க, பொருளா 13:2
காக்கை கரவா 53:7
காட்சிக்கு எளியன் 39:6
காண்கமன் கொண்கனைக் 127:5
காணுச் சினத்தான் 87:6
காணுதாற் காட்டுவான் 85:9
காணின் குவளை 112:4
காணுங்கால் காணேன் 129:6
காதல் அவர் இலர் ஆக 125:2
காதல காதல் அறியாமை 44:10
காதலர் இல் வழி மாலை 123:4
காதலர் தூதொடு வந்த 122:1
காதன்மை கந்தா 51:7
காமக் கடல் மன்னும் 117:4
காமக் கடும் புனல் உய்க்குமே 114:4
காமக் கடும் புனல் நீந்திக் 117:7
காமக் கணிச்சி 126:1
காமம் உழந்து 114:1
காமம் என ஒன்ருே 126:2
காமம் விடு ஒன்ருே 125:7
காமம் வெகுளி 36:10
காமமும் நாணும் உயிர் 117:3
கால் ஆழ் களரின் 50:10
காலத்தினுல் செய்த நன்றி 11:2
காலம் கருதி இருப்பர் 49:5
காலை அரும்பி; பகல் 123:7
காலைக்குச் செய்த நன்று 123:5
கான முயல் எய்த 78:2

குடம்பை தனித்து ஒழியப் 34:8
குடி ஆண்மையுள் வந்த 61:9
குடி என்னும் குன்ருு 61:1
குடி செய்வல் என்னும் 103:3
குடி செய்வார்க்கு இல்லை 103:8
குடி தழீஇக் கோல் ஓச்சும் 55:4
குடிப்பிறந்தார்கண் விளங்கும் 96:7
குடிப் பிறந்து குற்றத்தின் 51:2
குடிப் பிறந்து தன்கண் 80:4
குடி புறங்காத்து 55:9
குடி மடிந்து குற்றம் 61:4
குண நலம் சான்ருேர் 99:2
குணம் என்னும் குன்று 3:9
குணம் நாடி, 51:4
குணன் இலனுய் 87:8
குணனும் குடிமையும் 80:3
குலம் சுடும் தொள்கை 102:9

குழல் இனிது யாழ் 7:6
குற்றம் இலனுய் 103:5
குற்றமே காக்க, 44:4
குறிக்கொண்டு நோக்காமை 110:5
குறித்தது கூருமைக் 71:4
குறிப்பின் குறிப்பு உணர்வாரை 71:3
குறிப்பின் குறிப்பு உணராஆயின் 71:5
குறிப்பு அறிந்து 70:6
குன்றின் அனையாரும் 97:5
குன்று அன்னர் 90:8
குன்று ஏறி, யானைப் 76:8

கூடிய காமம் பிரிந்தார் 127:4
கூத்தாட்டு அவைக்குழாத்தற்றே 34:2
கூழும் குடியும் 56:4
கூற்றத்தைக் கையால் 90:4
கூற்றம் குதித்தலும் 27:9
கூற்றமோ கண்ணோ 109:5
கூற்று உடன்று 77:5
கூருமை நோக்கி 71:1

கெட்டார்க்கு நட்டார் 130:3
கெடல்வேண்டின் கேளாது 90:3
கெடாஅர் வழிவந்த 81:9
கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் 2:5
கெடும் காலைக் 80:9
கெடுவல் யான் என்பது 12:6
கெடுவாக வையாது 12:7

கேட்டார்ப் பிணிக்கும் 65:3
கேட்டினும் உண்டு 80:6
கேட்பினும் கேளாத் 42:8
கேடு அறியா, 74:6
கேடு இல் விழுச் 40:10
கேடும் பெருக்கமும் 12:5
கேள் இழுக்கம் 81:8

கை அறியாமை 93:5
கைம்மாறு வேண்டா 22:1
கை வேல் களிற்றெடு 78:4

கொக்கு ஒக்க கூம்பும் 49:10
கொடியார் கொடுமை உரைக்கும் 124:5
கொடியார் கொடுமையின் 117:9
கொடுத்தலும் இன்சொலும் 53:5
கொடுத்தும் கொளல் 87:7
கொடுப்பது அழுக்கறுப்பான் 17:6
கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் 101:5
கொடும் புருவம் கோடா 109:6
கொடை அளி 39:10
கொல்லா நலத்தது 99:4
கொல்லாமை மேற்கொண்டு 33:6
கொல்லான் புலாலை 26:10
கொலை மேற்கொண்டாரின் 56:1
கொலையின் கொடியாரை 55:10
கொலை வினையர் ஆகிய 33:9
கொளப்பட்டேம் என்று 70:9
கொளற்கு அரிதாய் 75:5
கொன்றன்ன இன்னு 11:9

கோட்டுப் பூச் சூடினும் 132:3
கோள் இல் பொறியின் 1:9

சமன் செய்து சீர் தூக்கும் 12:8
சலத்தால் பொருள் 66:10
சலம் பற்றிச் சால்பு 96:6

சாதலின் இன்னாதது 23:10
சாயலும் நாணும் 119:3
சார்பு உணர்ந்து சார்பு 36:9
சால்பிற்குக் கட்டளை 99:6
சான்றவர் சான்றாண்மை 99:10

சிதைவிடத்து ஒல்கார் 60:7
சிற்றின்பம் வெஃகி 18:3
சிற்றினம் அஞ்சும் 46:1
சிறப்பு அறிய ஒற்றின்கண் 59:10
சிறப்பு ஈனும் செல்வம் 32:1
சிறப்பு ஈனும் செல்வமும் 4:1
சிறப்பொடு பூசனை 2:8
சிறியார் உணர்ச்சியுள் 98:6
சிறு காப்பின் பேர் 75:4
சிறு படையான் செல் இடம் 50:8
சிறுமை நமக்கு ஒழியச் 124:1
சிறுமை பல செய்து 94:4
சிறுமையும் செல்லாத் 77:9
சிறுமையுள் நீங்கிய 10:8
சிறை காக்கும் காப்பு 6:7
சிறை நலனும் 50:9
சினத்தைப் பொருள் என்று 31:7
சினம் என்னும் சேர்ந்தாரைக் கொல்லி 31:6

சீர் இடம் காணின் 83:1
சீர்மை சிறப்பொடு 20:5
சீரினும் சீர் 97:2
சீருடைச் செல்வர் 101:10

சுடச் சுடரும் பொன்போல் 27:7
சுவை ஒளி ஊறு 3:7
சுழலும் இசை 78:7
சுழன்றும் ஏர்ப் பின்னது 104:1
சுற்றத்தால் சுற்றப்பட 53:4

சூழ்ச்சி முடிவு 68:1
சூழ்வார் கண் ஆக 45:5
சூழாமல் தானே 103:4

செப்பம் உடையவன் 12:2
செப்பின் புணர்ச்சிபோல் 89:7
செய்க பொருளை 76:9
செய்தக்க அல்ல 47:6
செய்து ஏமம் சாரா 82:5
செய்யாமல் செய்த 11:1
செய்யாமல் செற்றார்க்கும் 32:3
செய்வானை நாடி 52:6
செய்வினை செய்வான் 68:7
செயற்கு அரிய செய்வார் 3:6
செயற்கு அரிய யா உள 79:1
செயற்கை அறிந்தக்கடைத்தும் 64:7
செயற்பால செய்யாது 44:7
செயற்பாலது ஒரும் 4:10
செயிரின் தலைப்பிரிந்த 26:8
செருக்கும் சினமும் 44:1
செரு வந்த போழ்தில் 57:9
செல் இடத்துக் காப்பான் 31:1
செல்லா இடத்துச் சினம் 31:2
செல்லாமை உண்டேல் 116:1
செல்லான் கிழவன் 104:9
செல்வத்துள் செல்வம் 42:1
செல் விருந்து ஓம்பி 9:6
செவிக்கு உணவு இல்லாத 42:2
செவி கைப்பச் சொற் 39:9
செவிச் சொல்லும் 70:4
செவியின் சுவை 42:10
செவியுணவின் கேள்வி 42:3
செற்றவர்பின் சேறல் 126:6
செற்றார் எனக் கைவிடல் 125:5
செற்றார்பின் செல்லாப் 126:5
செறாஅச் சிறு சொல்லும் 110:7
செறிதொடி செய்து 128:5
செறிவு அறிந்து சீர்மை 13:3
செறுநரைக் காணின் 49:8
செறுவார்க்குச் சேண் 87:9
சென்ற இடத்தால் 43:2

சொல்ல, பயன்படுவர் 108:8
சொல்லுக சொல்லில் 20:10
சொல்லுக சொல்லை 65:5
சொல்லுதல் யார்க்கும் 67:4
சொல் வணக்கம் 83:7
சொலல் வல்லன் சோர்வு 65:7
சொற் கோட்டம் இல்லது 12:9

ஞாலம் கருதினும் 49:4

தக்காங்கு நாடி 57:1
தக்கார் இனத்தனாய் 45:6
தக்கார் தகவு இலர் 12:4
தகுதி என ஒன்று 12:1
தஞ்சம் தமர் அல்லர் 130:10
தண்ணந் துறைவன் 128:7
தணந்தமை சால 124:3
தந்தை மகற்கு ஆற்றும் 7:7
தம் இல் இருந்து 111:7
தம் நலம் பாரிப்பார் 92:6
தம் நெஞ்சத்து எம்மைக் 121:5
தம் பொருள் என்ப 7:3
தம்மின் தம் மக்கள் 7:8
தம்மின் பெரியார் 45:4
தமர் ஆகி தன்-துறந்தார் 53:9
தலைப்பட்டார் தீரத் 35:8
தலையின் இழிந்த 97:4
தவம் செய்வார் தம் 27:6
தவம் மறைந்து 28:4
தவமும் தவம் உடையார்க்கு 27:2
தவறு இலர்ஆயினும் 133:5
தள்ளா விளையுளும் 74:1
தற்காத்து, தற் கொண்டாற் பேணி 6:6
தன் உயிர்க்கு இன்னாமை 32:8
தன் உயிர் தான் 27:8

தன் உயிர் நீப்பினும் 33:7
தன் ஊன் பெருக்கற்குத் 26:1
தன் குற்றம் நீக்கி 44:6
தன் துணை இன்றால் 88:5
தன் நெஞ்சு அறிவது 30:3
தன்னை உணர்த்தினும் 132:9
தன்னைத் தான் காக்கின் 31:5
தன்னைத் தான் காதலன் 21:9
தனக்கு உவமை இல்லாதான் 1:7
தனியே இருந்து 130:6

தாம் இன்புறுவது உலகு 40:9
தாம் வீழ்வார் தம் 120:1
தாம் வீழ்வார் மென் தோள் 111:3
தாம் வேண்டின் நல்குவர் 115:10
தார் தாங்கிச் செல்வது 77:7
தாள் ஆற்றித் தந்த 22:2
தாளாண்மை இல்லாதான் 62:4
தாளாண்மை என்னும் 62:3
தானம்-தவம் இரண்டும் 2:9

திறன் அல்ல தன்-பிறர் 16:7
திறன் அறிந்து சொல்லுக 65:4
தினற் பொருட்டால் கொல்லாது 26:6
தினைத் துணை நன்றி 11:4
தினைத் துணையாம் குற்றம் 44:3
தினைத் துணையும் ஊடாமை 129:2

நீ அளவு இன்றித் 95:7
தீப் பால தான் 21:6
தீயவை செய்தார் 21:8
தீயவை தீய பயத்தலான் 21:2
தீயினால் சுட்ட புண் 13:9
தீவினையார் அஞ்சார் 21:1

துஞ்சினர் செத்தாரின் 93:6
துஞ்சுங்கால் தோள் 122:8
துணை நலம் 66:1
துப்பார்க்குத் துப்பு ஆய 2:2
துப்பின் எவன் ஆவர் 117:5
துப்புரவு இல்லார் 105:10
தும்முச் செறுப்ப 132:8
துளி இன்மை ஞாலத்திற்கு 56:7
துறந்தார்க்குத் துப்புரவு 27:3
துறந்தார்க்கும் துவ்வாதவர்க்கும் 5:2
துறந்தார் படிவத்தர் 59:6
துறந்தார் பெருமை 3:2
துறந்தாரின் தூய்மை 16:9
துறப்பார்மன் துப்புரவு 38:8
துறைவன் துறந்தமை 116:7
துன்பத்திற்கு யாரே துணை 130:9
துன்பம் உறவரினும் 67:9
துன்புறூஉம் துவ்வாமை 10:4
துன்னாத் துறந்தாரை நெஞ்சத்து 125:10
துன்னியார் குற்றமும் 19:8
துனியும் புலவியும் 131:6

தூஉய்மை என்பது 37:4
தூங்காமை கல்வி 39:3
தூங்குக தூங்கிச் செயற்பால 68:2
தூய்மை துணைமை 69:8

தெய்வத்தான் ஆகாதுஎனினும் 62:9
தெய்வம் தொழாஅள் 6:5
தெரிதலும் தேர்ந்து 64:4
தெரிந்த இனத்தொடு 47:2
தெரிந்து உணரா 118:2
தெருளாதான் மெய்ப்பொருள் 25:9
தெள் நீர் அடு புற்கை 107:5
தெளிவு இலதனைத் 47:4
தென்புலத்தார் தெய்வம் 5:3

தேரான் தெளிவும் 51:10
தேரான் பிறனைத் 51:8
தேவர் அனையர் 108:3
தேறற்க யாரையும் 51:9
தேறினும் தேறாவிடினும் 88:6

தொகச் சொல்லி 69:5
தொட்டனைத்து ஊறும் 40:6
தொடங்கற்க எவ்வினையும் 50:1
தொடலைக் குறுந்தொடி 114:5
தொடி நோக்கி மென் 128:9
தொடிப் புழுதி 104:7
தொடியொடு தோள் 124:6
தொடின் சுடின் அல்லது 116:9
தொல் வரவும் 105:3
தொழுத கையுள்ளும் 83:8

தோன்றின் புகழொடு 24:6

நகல்வல்லர் 100:9
நகுதற்பொருட்டு அன்று 79:4
நகை ஈகை இன்சொல் 96:3
நகையும் உவகையும் 31:4
நகையுள்ளும் இன்னாது 100:5
நகை வகையர் ஆகிய 82:7
நச்சப்படாதவன் செல்வம் 101:8
நசைஇயார் நல்கார் 120:9
நட்டார்க்கு நல்ல 68:9
நட்டார் குறை 91:8
நட்டார்போல் நல்லவை 83:6
நட்பிற்கு உறுப்புக் 81:2
நட்பிற்கு வீற்றிருக்கை 79:9
நடு இன்றி நன் பொருள் 18:1
நன்பு ஆற்றார் 100:8
நத்தம்போல் கேடும் 24:5
நயந்தவர்க்கு நல்காமை 119:1
நயந்தவர் நல்காமை 124:2
நயன் இல சொல்லினும் 20:7
நயன் இலன் என்பது 20:3
நயன் ஈன்று நன்றி 10:7
நயன் உடையான் 22:9
நயன் சாரா நன்மையின் 20:4
நயனொடு நன்றி 100:4
நல் ஆண்மை என்பது 1J3:6
நல் ஆற்றான் நாடி 25:2
நல் இனத்தின் ஊங்கும் 46:10
நல்குரவு என்னும் 105:5
நல்நீரை வாழி 112:1
நல்லவை எல்லாஅம் 38:5
நல்லார்கண் பட்ட 41:8
நல்லாறு எனப்படுவது 33:4

நல்லாறு எனினும் 23:2
நலக்கு உரியார் யார் 15:9
நலத்தகை நல்லவர்க்கு 131:5
நலத்தின்கண் நார் 96:8
நலம் வேண்டின் நாண் 96:10
நவில்தொறும் நூல் 79:3
நற்பொருள் நன்கு 105:6
நன்மையும் தீமையும் 52:1
நன்றிக்கு வித்து ஆகும் 14:8
நன்றி மறப்பது நன்று அன்று 11:8
நன்று அறிவாரின் 108:2
நன்று ஆகும் ஆக்கம் 33:8
நன்று ஆம் கால் 38:9
நன்று ஆற்றலுள்ளும் 47:9
நன்று என்றவற்றுள்ளும் 72:5
நன்றே தரினும் நடுவு 12:3
நனவினல் கண்டதூஉம் 122:5
நனவினன் நம் நீத்தார் 122:10
நனவினன் நல்காக் 122:7
நனவினன் நல்காதவரைக் 122:3
நனவினன் நல்காரை 122:9
நனவு என ஒன்று 122:6

நாச்செற்று விக்குள் 34:5
நாடாது நட்டலின் 80:1
நாடு என்ப 74:9
நாண் அகத்து இல்லார் 102:10
நாண் என்னும் 93:4
நாண் என ஒன்றோ 126:7
நாண் வேலி கொள்ளாது 102:6
நாணுமை நாடாமை 84:3
நாணுல் உயிரைத் 102:7
நாணும் மறந்தேன் 130;7
நாணெடு நல் ஆண்மை 114:3
நா நலம் என்னும் 65:1
நாம் காதல் கொண்டார் 120:5
நாள் என ஒன்றுபோல் 34:4
நாள்தொறும் நாடி 56:3
நாள்தோறும் நாடுக 52:10

நிணம் தீயில் இட்டன்ன 126:10
நில்லாதவற்றை நிலையின 34:1
நிலத்தில் கிடந்தமை 96:9
நிலத்து இயல்பான் 46:2
நில வரை நீள் புகழ் 24:4
நிலை அஞ்சி நீத்தாருள் 33:5
நிலை மக்கள் சால 77:10
நிலையின் திரியாது 13:4
நிழல் நீரும் 89:1
நிறை அரியர் மன் அளியர் 114:8
நிறை உடைமை நீங்காமை 16:4
நிறை உடையேன் 126:4
நிறை நீர 79:2
நிறை நெஞ்சம் 92:7
நிறை மொழி மாந்தர் 3:8
நினைத்திருந்து நோக்கினும் 132:10
நினைத்து ஒன்று சொல்லாயோ 125:1
நினைப்பவர் போன்று 121:3

நீங்கான் வெகுளி 87:4
நீங்கின் தெறூஉம் 111:4
நீர் இன்று அமையாது 2:10
நீரும் நிழலது 131:9

நுண்ணிய நூல் பல 38:3
நுண்ணியம் என்பார் 71:10
நுண் மாண் நுழை 41:7
நுணங்கிய கேள்வியர் 42:9
நுனிக் கொம்பர் ஏறினர் 48:6

நூலாருள் நூல் வல்லன் 69:3

நெஞ்சத்தார் காதலவராக 113:8
நெஞ்சின் துறவார் 28:6
நெடுங் கடலும் தன் 2:7
நெடு நீர் மறவி 61;5
நெடும் புனலுள் வெல்லும் 50:5
நெய்யால் எரி நுதுப்பேம் 115:8
நெருநல் உளன் ஒருவன் 34:6
நெருநற்றுச் சென்றார் 128:8
நெருப்பினுள் துஞ்சலும் 105:9

நோக்கினள் நோக்கி இறைஞ்சினள் 110:3
நோக்கினள் நோக்கு எதிர் 109:2
நோதல் எவன் மற்று 131:8
நோய் எல்லாம் நோய் 32:10
நோய் நாடி நோய் முதல் 95:8
நோவற்க நொந்தது 88:7
நோனு உடம்பும் 114:2

பகச் சொல்லிக் கேளிர்ப் 19:7
பகல் கருதிப் பற்ற 86:2
பகல் வெல்லும் கூகையைக் 49:1
பகுத்து உண்டு பல் உயிர் 33:2
பகை என்னும் 88:1
பகை நட்பாக் கொண்டு 88:4
பகை நட்பு ஆம் 83:10
பகை பாவம் அச்சம் 15:6
பகைமையும் கேண்மையும் 71:9
பகையகத்துச் சாவார் 73:3
பகையகத்துப் பேடி 73:7
பசக்கமன் பட்டாங்கு 119:9
பசந்தாள் இவள் என்பது 119:8
பசப்பு எனப் பேர் பெறுதல் 119:10
படல் ஆற்ற பைதல் 118:5
படி உடையார் பற்று 61:6
படு பயன் வெஃகி 18:2
படை குடி கூழ் 39:1
படை கொண்டார் 26:3
பண் என் ஆம் 58:3
பண்டு அறியேன் கூற்று 109:3
பண்பு இலான் பெற்ற 100:10
பண்பு உடையார்ப் பட்டு 100:6
பணியுமாம் என்றும் 98:8
பணிவு உடையன் 10:5
பணை நீங்கிப் பைந் தொடி 124:4
பதி மருண்டு பைதல் 123:9
பயன் இல் சொல் 20:6

பயன் இல பல்லார்முன் 20:2
பயன் தூக்கார் செய்த 11:3
பயன் தூக்கிப் பண்பு 92:2
பயன் மரம் உள்ளூர்ப் 22:6
பரிந்து அவர் நல்கார் என்று 125:8
பரிந்து ஓம்பிக் காக்க 14:2
பரிந்து ஓம்பி, பற்று 9:8
பரியது கூர்ங் கோட்டது 60:9
பரியினும் ஆகாவாம் 38:6
பருகுவார் போலினும் 82:1
பருவத்தொடு ஒட்ட 49:2
பருவரலும் பைதலும் 120:7
பல் குழுவும் 74:5
பல் மாயக் கள்வன் 126:8
பல்லவை கற்றும் 73:8
பல்லார் பகை கொளலின் 45:10
பல்லார் முனியப் பயன் 20:1
பல குடை நீழலும் 104:4
பல சொல்லக் காமுறுவர் 65:9
பல நல்ல 83:3
பழகிய செல்வமும் 94:7
பழகிய நட்பு 81:3
பழைமை எனப்படுவது 81:1
பழி அஞ்சிப் பாத்து 5:4
பழி மலைந்து 66:7
பழுது எண்ணும் 64:9
பழையம் எனக் கருதி 70:10
பற்றி விடாஅ 35:7
பற்று அற்றகண்ணும் 53:1
பற்று அற்றகண்ணே 35:9
பற்று அற்றேம் என்பார் 28:5
பற்று உள்ளம் என்னும் 44:8
பற்றுக பற்றுஅற்றான் 35:10
பனி அரும்பிப் பைதல் 123:3

பாடு பெறுதியோ நெஞ்சே 124:7
பாத்து ஊண் 23:7
பாலொடு தேன் 113:1

பிணி இன்மை 74:8
பிணிக்கு மருந்து 111:2
பிணை ஏர் மட 109:9
பிரித்தலும் பேணிக்கொளலும் 64:3
பிரிவு உரைக்கும் 116:6
பிழைத்து உணர்ந்தும் 42:7
பிறப்பு என்னும் பேதைமை 36:8
பிறப்பு ஒக்கும் 98:2
பிறர்க்கு இன்னா முற்பகல் 32:9
பிறர் நாணத்தக்கது 102:8
பிறர் பழியும் தம் 102:5
பிறவிப் பெருங் கடல் 1:10
பிறன் பழி கூறுவான் 19:6
பிறன் பொருளாள்-பெட்டு 15:1
பிறன் மனை நோக்காத 15:8

பீலி பெய் சாகாடும் 48:5

புக்கில் அமைந்தின்று 34:10
புகழ் இன்றால் புத்தேள் 97:6
புகழ்ந்தவை போற்றிச் 54:8
புகழ்பட வாழாதார் 24:7
புகழ் புரிந்த இல் 6:9
புணர்ச்சி பழகுதல் 79:5
புத்தேள் உலகத்தும் 22:3
புரந்தார் கண் நீர் மல்கச் 78:10
புல் அவையுள் 72:9
புல்லாது இராஅப் 131:1
புல்லிக் கிடந்தேன் 119:7
புல்லி விடாஅப் 133:4
புலத்தலின் புத்தேள்-நாடு 133:3
புலப்பல் எனச் சென்றேன் 126:9
புலப்பேன்கொல் புல்லுவேன் 127:7
புறத்து உறுப்பு எல்லாம் 8:9
புறம் குன்றி 28:7
புறம் கூறி, பொய்த்து 19:3
புறம் தூய்மை நீரான் 30:8
புன்கண்ணை வாழி 123:2

பெண் இயலார் எல்லாரும் 132:1
பெண் ஏவல் செய்து 91:7
பெண்ணின் பெருந்தக்க 6:4
பெண்ணினான் பெண்மை 128:10
பெயக் கண்டும் நஞ்சு 58:10
பெயல் ஆற்றா நீர் உலந்த 118:4
பெரிது ஆற்றிப் பெட்பக் 128:6
பெரிது இனிது 84:9
பெரியாரைப் பேணாது 90:2
பெருக்கத்து வேண்டும் 97:3
பெருங் கொடையான் 53:6
பெரும் பொருளான் 74:2
பெருமை உடையவர் 98:5
பெருமைக்கும் ஏனைச் 51:5
பெருமை பெருமிதம் 98:9
பெற்றாற் பெறின் 6:8
பெறாஅமை அஞ்சும் 130:5
பெறின் என் ஆம் 127:10
பெறுமவற்றுள் யாம் 7:1

பேணாது பெட்டார் 118:8
பேணாது பெட்பவே 129:3
பேணாது பெண் 91:2
பேதைப் படுக்கும் 38:2
பேதை பெருங் கெழீஇ 82:6
பேதைமை என்பது 84:1
பேதைமை ஒன்றோ 81:5
பேதைமையுள் எல்லாம் 84:2
பேர் ஆண்மை என்ப 78:3

பொச்சாப்பார்க்கு இல்லை 54:3
பொச்சாப்புக் கொல்லும் 54:2
பொது நலத்தார் 92:5
பொது நோக்கான் 53:8
பொய்படும் ஒன்றோ 84:6
பொய்ம்மையும் வாய்மை 30:2
பொய்யாமை அன்ன புகழ் 30;6
பொய்யாமை பொய்யாமை 30:7
பொருட்பெண்டிர் 92:3
பொருட்பொருளார் 92:4
பொருள் அல்லவரைப் 76:1
பொருள் அல்லவற்றைப் 36:1

பொருள் அற்ரூர் 25:8
பொருள் ஆட்சி 26:2
பொருள் என்னும் 76:3
பொருள் கருவி 68:5
பொருள் கெடுத்து, 94:8
பொருள் தீர்ந்த 20:9
பொருள் நீங்கிப் 25:6
பொருள்மாலையாளரை 123:10
பொருளான் ஆம் எல்லாம் 101:2
பொள்ளென ஆங்கே 49:7
பொறி இன்மை யார்க்கும் 62:8
பொறி வாயில் ஐந்து 1:6
பொறுத்தல் இறப்பினை 16:2
பொறை ஒருங்கு 74:3

போற்றின் அரியவை 70:3

மக்கள் மெய் தீண்டல் 7:5
மக்களே போல்வர் 108:1
மகன் தந்தைக்கு ஆற்றும் 7:10
மங்கலம் என்ப 6:10
மடல் ஊர்தல் யாமத்தும் 114:6
மடி இலா மன்னவன் 61:10
மடி உளாள் மா முகடி 62:7
மடி மடிக் கொண்டு 61:3
மடிமை குடிமைக்கண் 61:8
மடியை மடியா 61:2
மடுத்த வாய் எல்லாம் 63:4
மண்ணொடு இயைந்த 58:6
மணி நீரும் மண்ணும் 75:2
மணியுள் திகழ்தரும் 128:3
மதிநுட்பம் நூலோடு 64:6
மதியும் மடந்தை 112:6
மயிர் நீப்பின் வாழாக் 97:9
மருந்து ஆகித் தப்பா 22:7
மருந்து என வேண்டாவாம் 95:2
மருந்தோ மற்று ஊன் 97:8
மருவுக மாசு 80:10
மலர் அன்ன கண்ணாள் அருமை 115:2
மலர் அன்ன கண்ணாள் முகம் 112:9
மலர் காணின் மையாத்தி 112:2
மலர்மிசை ஏகினான் 1:3
மலரினும் மெல்லிது 129:9
மழித்தலும் நீட்டலும் 28:10
மற்றும் தொடர்ப்பாடு 35:5
மற்று யான் என் உளேன் 121:6
மறத்தல் வெகுளியை 31:3
மறந்தும் பிறன் கேடு 21:4
மறப்பின் எவன் ஆவன் 121:7
மறப்பினும் ஒத்துக் 14:4
மறம் மானம் 77:6
மறவற்க மாசு அற்ரூர் 11:6
மறைந்தவை கேட்க 59:7
மறைப்பேன்மன் காமத்தை 126:3
மறைப்பேன்மன் யான் 117:1
மறை பெறல் ஊரார்க்கு 118:10
மன் உயிர் எல்லாம் 117:8
மன் உயிர் ஓம்பி 25:4
மன்னர்க்கு மன்னுதல் 56:6
மன்னர் விழைப 70:2

மனத்தது மாசு ஆக 28:5
மனத்தான் ஆம் மாந்தர்க்கு 46:3
மனத்தின் அமையாதவரை 83:5
மனத்து உளது போலக் 46:4
மனத்துக்கண் மாசு இலன் 4:4
மனத்தொடு வாய்மை 30:5
மன நலத்தின் ஆகும் 46:9
மன நலம் நன்கு 46:8
மன நலம் மன் உயிர்க்கு 46:7
மனம் தூய்மை 46:5
மனம் தூயார்க்கு 46:6
மனம் மாணா உட்பகை 89:4
மனைத் தக்க மாண்பு 6:1
மனை மாட்சி இல்லாள்கண் 6:2
மனையாளை அஞ்சும் 91:4
மனை விழைவார் 91:1

மாதர் முகம்போல் 112:8
மாலை நோய் செய்தல் 123:6
மாலையோ அல்லை மணந்தார் 123:1
மாறுபாடு இல்லாத 95:5

மிகச் செய்து தம் 83:9
மிகல் மேவல் 86:7
மிகினும் குறையினும் 95:1
மிகுதியான் மிக்கவை 16:8

முகத்தான் அமர்ந்து இனிது 10:3
முகத்தின் இனிய 83:4
முகத்தின் முதுக்குறைந்தது 71:7
முகம் நக நட்பது 79:6
முகம் நோக்கி நிற்க 71:8
முகை மொக்குள் உள்ளது 128:4
முடிவும் இடையூறும் 68:6
முதல் இலார்க்கு ஊதியம் 45:9
முயக்கிடைத் தண் 124:9
முயங்கிய கைகளை 124:8
முயற்சி திருவினை 62:6
முரண் சேர்ந்த 50:2
முற்றியும் முற்ருது 75:7
முற்று ஆற்றி 75:8
முறி மேனி முத்தம் 112:3
முறை கோடி மன்னவன் 56:9
முறை செய்து காப்பாற்றும் 39:8
முறைப்படச் சூழ்ந்தும் 64:10
முன்னுறக் காவாது 54:5
முனை முகத்து மாற்றலர் 75:9

மேல் இருந்தும் மேல் 98:3
மேற்பிறந்தார் ஆயினும் 41:9

மையல் ஒருவன் 84:8

மோப்பக் குழையும் 9:10

யா காவார்ஆயினும் 13:7
யாண்டுச் சென்று 90:5
யாதனின் யாதனின் 35:1
யாதானும் நாடு ஆமால் 40:7
யாம் கண்ணின் காண 114:10

யாம் மெய்யாக் கண்டவற்றுள் 30:10
யாமும் உளேம்கொல் 121:4
யாரினும் காதலம் 132:4
யான் எனது என்னும் 35:6
யான் நோக்கும் காலை 110:4

வகுத்தான் வகுத்த வகை 38:7
வகை அறச் சூழாது 47:5
வகை அறிந்து தற் செய்து 88:8
வகை அறிந்து வல் அவை 73;1
வகை மாண்ட வாழ்க்கையும் 90:7
வசை இலா வண் பயன் 24:9
வசை என்ப வையத்தார்க்கு 24:8
வசை ஒழிய வாழ்வாரே 24:10
வஞ்ச மனத்தான் 28:1
வருகமன் கொண்கன் 127:6
வரும் முன்னர்க் 44:5
வரு விருந்து வைகலும் 9:3
வரைவு இலா மாண் 92:9
வலி இல் நிலைமையான் 28:3
வலியார்க்கு மாறு 87:1
வலியார்முன் தன்னை 25:10
வழங்குவது உள்வீழ்ந்தக்கண்ணும் 96:5
வழி நோக்கான் 87:5
வழுத்தினள் தும்மினேனாக 132:7
வறியார்க்கு ஒன்று ஈவதே 23:1
வன்கண் குடிகாத்தல் 64:2

வாணிகம் செய்வார்க்கு 12:10
வாய்மை எனப்படுவது 30:1
வாராக்கால் துஞ்சா வரின் 118:9
வாரி பெருக்கி வளம் 52:2
வாழ்தல் உயிர்க்கு 113:4
வாழ்வார்க்கு வானம் 120:2
வாள் அற்றுப் புற்கென்ற 127:1
வாள்போல் பகைவரை 89:2
வாளொடு என் 73:6
வான் உயர் தோற்றம் 28:2
வான் நின்று உலகம் 2:1
வான் நோக்கி வாழும் 55:2

விசும்பின் துளி வீழின் 2:6
விடாஅது சென்றாரைக் 121:10
விடு மாற்றம் 69:9
விண் இன்று பொய்ப்பின் 2:3
வித்தும் இடல்வேண்டும் 9:5
வியவற்க எஞ்ஞான்றும் 44:9
விருந்து புறத்ததாத் 9:2
விருப்பு அறாச் சுற்றம் 53:2
விரைந்து தொழில் 65:8
வில் ஏர் உழவர் 88:2
விலங்கொடு மக்கள் 41:10
விழித்த கண் 78:5
விழுப்புண் படாத நாள் 78:6
விழுப் பேற்றின் அஃது 17:2
விழைதகையான் வேண்டியிருப்பர் 81:4
விழையார் விழையப்படுப 81:10
விளக்கு அற்றம் பார்க்கும் 119:6
விளிந்தாரின் வேறு அல்லர் 15:3
விளியும் என் இன் உயிர் 121:9
வினைக்கு உரிமை 52:8
வினைக்கண் வினைகெடல் 62:2
வினைக்கண் வினையுடையான் 52:9
வினை கலந்து வென்றீக 127:8
வினை செய்வார் தம் 59:4
வினைத் திட்பம் என்பது 67:1
வினை பகை என்று 68:4
வினையான் வினை 68:8
வினை வலியும் தன் வலியும் 48:1

வீழ் நாள் படாஅமை 4:8
வீழ்வாரின் இன் சொல் 120:8
வீழப்படுவார் கெழீஇயிலர் 120:4
வீழுநர் வீழப்படுவார்க்கு 120:3
வீழும் இருவர்க்கு 111:8
வீறு எய்தி மாண்டார் 67:5

வெண்மை எனப்படுவது 85:4
வெருவந்த செய்து 57:3
வெள்ளத்து அனைய இடும்பை 63:2
வெள்ளத்து அனைய மலர் நீட்டம் 60:5

வேட்ட பொழுதின் 111:5
வேட்பத் தாம் சொல்லி 65:6
வேட்பன சொல்லி 70:7
வேண்டற்க வெஃகி ஆம் 18:7
வேண்டற்க வென்றிடினும் 94:1
வேண்டாமை அன்ன 37:3
வேண்டிய வேண்டியாங்கு 27:5
வேண்டின் உண்டாகத் 35:2
வேண்டுங்கால் வேண்டும் 37:2
வேண்டுதல் வேண்டாமை 1:4
வேல் அன்று வென்றி 55:6
வேலொடு நின்றான் 56:2

வைத்தான் வாய் சான்ற 101:1
வையத்துள் வாழ்வாங்கு 5:10


## நாலடியார் (113-168)


அக்கேபோல் அங்கை 13:3
அகத்து ஆரே வாழ்வார் 4:1
அச்சம் பெரிதால் 9:1
அடுக்கல் மலை நாட 21:3
அடைந்தார்ப் பிரிவும் 18:3
அத்து இட்ட கூறை 29:1
அம் கண் விசும்பின் அகல் 16:1
அம் கண் விசும்பின் அமரர் 38:3
அம் கோட்டு அகல் 38:2
அம்பல் அயல் எடுப்ப 9:7
அம்பும் அழலும் 9:9
அரக்கு ஆம்பல் நாறும் 40:6
அருகலது ஆகிப் 27:1
அரும்பு அவிழ் தாரினான் 39:10

